உ

கணபதிதுணை.

வேலுமயிலுந்துணை.




# அறிவிப்பு.

புண்ணிய பூமியாகிய இப்பரத கண்டத்தின்கண் வழங்கிவரும புராணங்கள் பதினெட்டனுள், சைவம், பௌடிகம், மார்க்கண்டேயம், இலிங்கம், ஸ்காந்தம், வராகம், வாமனம, மச்சியம், கூர்மம், பிரமாண்டம் என்னும் பத்தும் சாத்துவிககுணயுக்தமான சிவபுராணங்கள். காருடம், நாரதீயம், வைணவம், பாகவதம் என்னும் நான்கும் தாமதகுண யுக்தமான விஷ்ணுபுராணங்கள். பிரமம், பதுமம் என்னும் இரண்டும் இராசதகுணயுக்தமான பிரம புராணங்கள். அக்கினி புராணம், சூரியபுராணம் ஆகிய இரண்டும் திரயகுணயுக்தமானவைகள். ஆதலால் அவற்றுள் சாத்துவிககுணயுக்தமான சிவபுராணங்களே சிறந்தனவாம். அவற்றுள்ளும் ஸ்காந்தபுராணம் மிகச் சிறந்ததாய்ச், சகலவேத சாரமாய், ஐம்பது கண்டங்களா லியற்றப்பட்டதாய், ஓரிலக்கங் கிரந்தமுடையதாய் விளங்குகின்றது. அது சனற்குமார சங்கிதை, சூத சங்கிதை, பிரம சங்கிதை, விஷ்ணு சங்கிதை, சங்கர சங்கிதை, சூர சங்கிதை என ஆறுசங்கிதைகளாக வகுக்கப்பட்டுள்ளது. அவற்றுள் பன்னிரண்டு கண்டங்களாக வகுக்கப்பட்டுள்ள சங்கர சங்கிதையின் முற்பட்ட கண்டம் சிவரகசியகண்டம். அக்கண்டம் சம்பவ காண்டம், அசுரகாண்டம், மகேந்திரகாண்டம், உயுத்தகாண்டம், தேவகாண்டம், தக்ஷகாண்டம், உபதேசகாண்டம் என்னும் ஏழுகாண்டங்களை யுடையதாய்ப் பெருங்கருணைப் பிழம்பாய் விளங்கும் சிவசுப்பிரமணியக் கடவுளின் திருவிளையாடல்களை உணர்த்தும். மேற்கூறிய சப்தகாண்டங்களுள் முற்பட்ட ஆறுகாண்டங்களை எம்மிறைவனு

கிய அறுமுகக் கடவுளாணையால் சித்தாந்த சைவசிகாமணியான கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் தமிழில் ௧௦,000 திருவிருத்தங்களில் அமைத்துக் கந்தபுராணம் என்னும் பெயரினால் தமிழ்நாடெங்கும் வசிக்கும் சிவனடியார்கள் ஓதியுணர்ந் துய்யும்படி திருவாய் மலர்ந்தருளினர்.

எஞ்சிய உபதேசகாண்டத்தை முத்தமிழ்க் கவிவாணரெனப் பெயர்பெற்ற கோனேரியப்ப முதலியார் மேற்படி ஆறுகாண்டங்களைப் போலவே சொல் நயமும் பொருட்பொலிவுந் தோன்ற ௪௩௪௯ திருவிருத்தங்களாகப் பாடியருளினர்.

இந்த ஏழாங்காண்டமானது சிவசின்னந் தரித்தல், சிவவிரதம் பூண்டொழுகல், சிவபுராணங் கேட்டல் முதலிய சிவத்தொண்டு புரிவதால் அடையும்பயனை விளக்குவதனால் இப்புத்தகம் முற்பட்ட ஆறுகாண்டங்களைப்போலவே நேசித்துப் பூசிக்கத்தக்கது. ஆகையால், அதை இச்சென்னைமாநகரிற் கிடைத்த காகிதத்தில் வரையப்பட்டிருந்த ஒரு பிரதியையும், மதுரை, திருநெல்வேலி, திருவாவடுதுறை முதலாய இடங்களினின்று சில சிவனேசச் செல்வர்கள் அன்புகூர்ந்தனுப்பிய ஐந்து பிரதிகளையும் உதவியாகக்கொண்டு ஒருவாறு சுத்தபாடமாகப் பரிசோதனை செய்வித்து அச்சிட்டனம். புத்திமான்கள் இதில் ஆங்காங்குப் புலப்படும் பிழைகளையேனும், சொல்நயம் பொருட்பொலிவு குறைந்துள்ள பாடபேதங்களையேனும் அறிவிப்பாராயின் அவரது பேருதவியை நன்குமதித்து இரண்டாம் பதிப்பில் அத்திருத்தங்களை அவர் பெயரோடு விளக்கக் கருதியிருக்கின்றனம்.

விய௵ } ௵. பு.
தைமீ }

சிவசண்முகன்றுணை.

# நூலாசிரியர் வரலாறு.

தொண்டைமண்டலத்திலே காஞ்சிமாநகரின் கண்ணே ஏறக்குறைய ஆயிரத்தொருநூறு வருடங்களுக்கு முன்னே செங்குந்தர் மரபிலே அவதரித்தவரும் கோனேரியப்ப முதலியார் எனப்பெயர் பெற்றவருமாகிய ஒருவர் இருந்தார். அவர் ஐந்தாம் வயதிலே வித்தியாரம்பஞ் செய்யப்பெற்று பல கலைகளிலும் வல்லவராகி, தமது நகரத்திலுள்ள குமரகோட்டத்து அருச்சகரும் சுப்பிரமணியககடவுள் வரப்பிரசாதியும் அதிதெய்விக முற்று விளங்கியிருந்த தமது குலகுருவும் ஆகிய கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் என்பவர்களிடத்தே சமயதீக்ஷை பெற்றுக்கொண்டு, தமிழிலே தேவாரந் திருவாசகம் முதலிய அருட்பாக்களையும் சமஸ்கிருதத்திலே இதிகாச புராணங்களையும் அவ்வவற்றிற்குரிய கருவிநூல்களோடு கற்று வல்லவராயினர்.

பின்பு விசேஷதீக்ஷை பெற்றுக்கொண்டு, சைவர்களுக்கு இன்றியமையாச் சிறப்பினவாகிய சமயநூல்களைக் கற்றுணர்ந்து, அந்நூலுணர்ச்சியால் சிவபெருமான் ஒருவரே பரம்பொருளென்னுந் துணிவுதோன்ற, உடனே சிவபூசை எழுந்தருளச் செய்துகொண்டு, அச்சிவபூசையினிடத்தும், அன்பு அருள் அடக்கம் முதலிய நற்குணங்களிலுஞ் சிறந்தவராயினர். சிலநாட் சென்றபின் நிருவாணதீக்ஷை பெற்றுக்கொண்டு, சிவாகமங்களையும் அவற்றின் சாரமாகிய சிவஞானபோதம் முதலிய சித்தாந்த சாத்திரங்களையும் விதிப்படி கேட்டறிந்து, அச்சாத்திரப் பொருள்களின் அனுபவப்பயனுயுள்ள தோத்திரவடிவமாகிய தேவாரம் திருவாசகம் முதலிய அருட்பாக்களினு

டைய உண்மைப்பொருளைச் சிவபெருமானது திருவருள் காட்டத் தெளிந்து, எப்பொழுதும் தியானபரராய் ஆசிரியர் சந்நிதியில் அணுகத் தொண்டராய் அமைந்திருந்தார்.

அக்காலத்திலே, பதினெண் புராணங்களுள் ஒன்றாகிய காந்தபுராணத்தின் உட்பிரிவான சனற்குமார சங்கிதை சூதசங்கிதை பிரமசங்கிதை விட்டுணுசங்கிதை சங்கரசங்கிதை சூரசங்கிதை என்னும் ஆறு சங்கிதையுள், சங்கரசங்கிதையினுடைய பன்னிரண்டு காண்டங்களுள் ஒன்றாகிய சிவரகசிய கண்டத்தின் பிரிவெனப்படும் ஏழு காண்டங்களிலே, முந்திய சம்பவகாண்டம் அசுரகாண்டம் மகேந்திரகாண்டம் யுத்தகாண்டம் தேவகாண்டம் தக்ஷகாண்டம் என்னும் ஆறுகாண்டங்களையும், தமிழிலே பாடும்படி சுப்பிரமணியக்கடவுளே "திகடசக்கரச் செம்முகமைந்துளான்" என்று அடியெடுத்துக்கொடுத்துக் கட்டளையிட்டவாறே, கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் கந்தபுராணமென்கிற பெயரினால் பன்னீராயிரஞ் செய்யுளாகப்பாடி முடித்தருளினர். பின்பு அவ்வாசிரியர் கட்டளைபெற்ற மேற்கூறிய கோனேரியப்ப நாவலர் எஞ்சிய உபதேசகாண்டத்தை தமிழ்நாடு தழைத்தோங்க சொற்சுவையோடு பொருட்பொலிவுதோன்ற அருளிச்செய்து, குமரகோட்டத்திலே சுப்பிரமணியக்கடவுள் சந்நிதியிலே வேதாகம பண்டிதர்களும் புராணவிற்பன்னர்களும் பிறரும் கேட்டுக் களிகூரும்படி ஆசிரியர்முன்னிலையில் அரங்கேற்றியபின்னர் சிவானுபவச்செல்வராய்ச் சிலகாலம் வீற்றிருந்து சிவபெருமான் திருவடி நீழலிலே இரண்டறக் கலந்தனர்.

☞ இச் சரித்திரவரலாறு ஒரு சிவனேசரிடத்திலிருந்து கிடைத்தபடி அச்சிட்டு இங்கு சேர்க்கலாயிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

கணபதி துணை.

# உபதேசகாண்டச்சருக்க

## அட்டவணை.

உ. உபதேசகாண்டச்சருக்க அட்டவணை.

உ

கணபதி துணை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உபதேசகாண்டம்.

## காப்பு.

### விநாயகவணக்கம்.

கலிநிலைத்துறை.

குழவிவெண்பிறைமிலைச்சியோற்குணித்தமாதவத்தி
னிழைதடம்புனலருவிதாழிமயமீன்றளித்த
மழைமதர்த்தகண்மரகதப்பசும்பிடிபயந்த
தழைமடற்செவித்தந்திபொற்சரணமேசரணம்.



## த னி ய ன்.

நேரிசைவெண்பா.

மூவர்தமிழ்வேதமுதற்பொருளுமனவெவையுந்
தேவர்தொழச்செப்பியபின்சேக்கிழார் - பூவலைய
மாந்தர்க்காறங்கமுறவந்தகோனேரியெனத்
தீந்தமிழ்செய்தானுபதேசம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சதுமுகனிற்பழமறையோன்கும்பயோனி
தலைசாய்க்குந்தமிழ்வாணர்தரணிதாங்கு
மதுவொழுகுந்தார்த்தடந்தோண்மன்னர்சேடன்
மன்பதையன்பொடுகுழைந்துசெவியான்மாந்த
வுததிகடைந்தெடுத்தவமுதன்னபாட
லுயர்தமிழ்ச்செந்நூரிலுபதேசகாண்ட
மதுரியன்முத்தமிழ்க்குநாற்கவிக்கும்வேந்தன்
மகாபுலவன்கோனேரிவடித்திட்டானே.

# சிறப்புப்பாயிரம்.

## வாழ்த்து.

கலிநிலைத்துறை.

திங்களஞ்சடையெம்பிரான்றிருவருள்பெருக
பொங்குதிங்கண்மும்மாரியும்பொழிகபூதலத்தி
லெங்கணுயகன்றிருக்குழாத்தொண்டரீடேற
தங்குநான்மறைச்சைவநூலோங்கறந்தழைக்க. (க)

மானவெண்குடையிறைவன்செங்கோனெறிவளர்க
வேனைமன்பதைமன்னுயிர்சிறக்கவெஞ்ஞான்றும்
வானமீச்செலுங்கடவுளரிருவரும்வாழ்க
பேனவார்திரைநெடுநிலப்பல்வளம்பெருக. (உ)

## கடவுள் வணக்கம்.

சிவத்தைப்போற்றல்.

விரவுமாயிரந்திருமுகப்பகிரதிவிரிக்கு
முரவுவெண்டிரையொருமருங்கலைப்பவொண்சடைமே
லரவகன்பணமொடுக்குறவருநடம்புரியும்
பரமனங்கதப்பரிபுரப்பதம்பணிகுதுமே. (ங)

சத்தியைப்போற்றல்.

உலகுமேருவுமண்டமுமுறைமுறையுதவி
யலகில்பல்லுயிரளித்தவைக்களவையினருளி
நிலவுவெண்பிறைச்சடிலிமற்றோர்புடைநின்றாண்
மலர்சிலம்படிவழுத்துபுகருத்துறமதிப்பாம். (ச)

சுப்பிரமணியர்துதி.

பூத்தகற்பகப்பொன்னுலகிமையவர்க்கிரங்கிக்
காத்தசேவகன்கடம்பணிபன்னிருதடந்தோ
ளேத்தநாடொறுந்தழும்புமென்னுத்தடவரலாற்
சேத்தகிண்கிணிச்சீறடிசென்னிசேர்த்துதுமே. (ரு)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்துதி.

தெள்ளருந்தமிழ்வேட்கையிற்செலுத்துமென்சிறியே
னுள்ளமோர்தொறுஞ்சுவைப்பனவுமைதிருமுலைப்பால்
வள்ளம்வாக்கினின்றூட்டிடமாந்தியகாழிப்
பிள்ளைசீறடித்தாமரைக்காதலம்பிரசம். (சு)

## சிறப்புப்பாயிரம்.

திருநாவுக்கரசுநாயனார் துதி.

முப்பணைத்திறமூவரிற்காட்டியோர்முதலாய்க்
கப்பனைத்துமாறுயிரொனக்கவைத்தருவானேற்
கொப்பனைத்திருநாவினுக்கரசெனுமொருபே
ரப்பனைத்தொழுதகற்றுதுமும்மலத்தவலம். (எ)

சுந்தரமூர்த்திநாயனார் துதி.

உரவுமென்னுளத்தறிகடிந்தொருவலதாகி
விரவுமுத்தமிழ்மும்மதச்செருக்கொடுமேவுந்
தரவருங்களிமீக்கொளச்சங்கிலியகற்றிப்
பரவையிற்படிந்தாடுறுமொருதனிப்பகடு. (அ)

மாணிக்கவாசகசுவாமிகள் துதி.

வரும்பரிக்கருள்வழுதிபாற்பொருடனைவரதன்
பெருந்துறைபபணிவிடைக்குரித்தாக்கியபெருமா
னிருந்துவாதவூர்ச்செம்மொழிப்புலவனைத்திருத்தாள்
*பொருந்துமன்பினுற்போற்றிவைத்தநுதினம்புகழ்வாம். (கூ)

---

## அவையடக்கம்.

எழுபசும்பரிநுகம்பிணித்தியக்குவானிரவி
மழைதொடுஞ்சிகைவடவரைவலம்வரனோக்கி
யிழுதைமட்பரியிசைப்பதுபோலுமற்றெளியேன்
முழுதுணர்ந்தவர்முன்னரின்மொழிதருந்துணிபே. (க0)

விளங்குமாமணிமாசிடைமேவரவதனைத்
துளங்கவேகடிதுரிசறுத்தடுக்குவானதுபோ
லுளங்கொண்மேலவரொன்கவிப்புன்மையோர்ந்தொதுக்கிக்
களங்கறுத்துமற்றெம்பிரான்கதையுணர்ந்துவப்பார். (கக)

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

ஆக காப்பு உள்பட திருவிருத்தம் - கஉ.

---

* "பொருந்தினேன்றனைப்போற்றிநம்புன்மைபோக்குநமே" எனவும் பாடம்.



உ

சிவமயம்.

# உபதேசகாண்டம்.

முதலாவது

## கைலைமான்மியச்சருக்கம்.

### நைமிசாரணியச் சிறப்பு.

கலிநிலைத்துறை.

சேண்மதித்திருமுகத்தியர்காமமுந்தெருளாக்
கோண்மதிப்படுவெகுளியுமயக்கமுங்குறைத்தோர்
வாண்மதித்துறைமாதவத்தலைவரிற்பொலியு
நாண்மலர்ப்பொழிற்பொதும்பர்சூழ்நைமிசாரணியம். (க)

கலிவிருத்தம்.

அத்தலத்துவிசேடமரும்பொருண்
முத்தமிழ்த்துறையிற்சொலமுற்றுமோ
வெத்திறத்ததுவேனுமியன்றவா
றுய்த்துசிந்தையறிந்துணர்த்துவாம். (உ)

முனிகரும்பெனநின்றவன்மொய்கணை
முனிதருந்தவரோம்புமுழங்கழன்
முனியெழும்புகைவானெறிமுந்துறு
முனிவரங்கணிமைத்துறமுற்றுமால். (ங)

ஆகமங்களருமறையாதிய
தாகமங்கலமாக்கொண்டுறைதலா
லாகமங்கமெனாந்தணர்க்கார்வதி
யாகமங்கணைபங்கனளிக்குமால். (ச)

வேழமாவனைமேயவிளம்பிடி
வேழமாவனைமேயவிளம்புவார்
வாழிமுற்றவமாதவயோகுசெய்
வாழிமுற்றவமாதவயோகரே. (ரு)

விரதமேலவராவையின்மேவிய
விரதமேலவராவையின்மேவுவார்
வரதருப்பைதருவனமந்தியே
வரதருப்பைதருவனமந்தியே. (சு)

ஊறுமாமறையோதியதத்தையே
யூறுமாமறையோதியதத்தையே
நாறுபூமலர்நந்தவனங்களே
நாறுபூமலர்நந்தவனங்களே. (எ)

மெய்த்தவத்தர்விளம்பினமென்கிளி
மெய்த்தவப்பொருளன்றிவிளம்புவ
கைத்தசிந்தையரோதியகாவியங்
கைத்தடஞ்சினைப்பூவைகழறுவ. (அ)

உழைமறிக்குலமொள்ளுகிர்வெம்புலி
யுழைமடிப்பயமுண்டுகளிப்பன
விழைபுலிப்பெடைமென்பறழ்நவ்விய
விழைசுரைபயமேயினிதாமோல். (கூ)

மன்றஞாறுகோடரமதுமலர்க்
கொன்றையேந்திக்கொடியிடந்தாங்கலா
லன்றேனமுமன்னமுநேடுவா
னின்றமுக்கணிமலனையொக்குமால். (௧0)

## கலிநிலைத்துறை.

அனையமாதவத்துறையுளினருந்தவத்தலைவர்
வினையினீங்கியசூதனைவரனமுறைவினவி
யெனையகேட்டுழிக்கேள்வியினுணர்ந்துரு திருந்த
நினைவினீதியினெருங்குறவுணர்குவானினைநதார். (௧௧)

துரிசறுத்துநின்றியற்றியவருந்தவச்சூத
வரியசம்பவகாண்டமேமுதலியவாறுந்
தெரியவெம்மனோர்க்குணர்த்தினைமற்றதுதெரிப்பான்
பரியுநெஞ்சினேநின்னலதியாவரோபகர்வார். (௧௨)

வானளந்தெழுவடவரைமேருவின்வடபான்
மேனிவந்தெழுமண்டபித்திகைப்படமேவி
யானமாபெருங்கயிலையொன்றுளதெனவறைந்தாய்
ஞானநாதவக்கிரிவளமறிகுவானயந்தேம். (௧௩)

அன்னமாபெருங்கயிலையினகற்சியுசிவப்பு
மன்னுதிண்கிரிவளங்களுமவனுறைவனப்பு
மின்னவாகுமென்றிசைத்தருளெனவவரிசைப்பப்
பன்னுமாதவக்கொழுந்தவர்க்கின்னனபகரும். (கச)

கைலாயச்சிறப்பு.

வயங்குகெட்டிலைவேற்படைமாமயிற்பெருமா
னுயங்குமாதவக்குறுமுனிக்குரைத்தனன்மேனுண்
முயங்குமக்கிரிப்பெருமையையறிந்தனமொழிவா
மியங்குவெண்பிறைக்கணணியோற்கினிதுறுமிருக்கை. (கரு)

மாகணங்களும்புனிதரும்வரன்முறைவணங்க
வேகநாயகனினிதுறுவடபெருங்கயிலை
மீகொள்யோசனைநாற்பதுகோடிமேனிவந்த
தாகயோசனையதிற்படுமபாதியினகற்சி. (கசு)

தெய்வமால்வரைமீப்பொலிநெடுமுடிச்சிகரம்
பொய்யில்கேள்வியர்புலமையினளப்பினும்புலவா
வெய்யவாகுலக்கொடுமுடிநடுவுறவிளங்கிச்
செய்யபன்மணிக்காந்திவிட்டெறிப்பதோர்சிகரம். (கஎ)

பத்துக்கோடியோசனையகன்றுளததுபாங்க
ரொத்துக்கோடியதின்றிநான்மதிலொழுங்குடைததாய்
வைத்துக்கோடியமரகதக்கொடுங்கையால்வயங்குஞ்
சத்துக்கோடியாவதிந்தபொன்மாளிகைசசயிலம். (கஅ)

ஒழுகுநீண்மதிலுடுத்தவச்சிகரத்தினுச்சி
தழுவுஞானரூபப்பெருந்தனித்திருக்கோயின்
முழுதுகோடியோசனையுளமுழுமணித்தவிசி
னெழுதிமுற்றுருச்சதாசிவமினிதுவீற்றிருக்கும். (கக)

மூலமீறிடையென்பனமும்மையுங்கடந்து
காலநீடியகணக்கறுகற்பனைகழிந்து
ஞாலமேமுதற்பூதவுச்ளியாவையுநல்கி
வாலசூரியரளவொழிந்திமைத்தல்போல்வயங்கும். (உ௦)

வெளிவிளைந்தருள்பழுத்துமேலெவற்றிற்குமேலாய்க்
களிவிளைந்துகாண்பரிதெனக்கட்புலங்கதுவா
தளிவிளைந்தபேரடியவர்க்கருளினனந்த
வொளிவிளைந்தெழுமுகங்களையைந்துபெற்றுளதால். (உக)

திருக்கரங்களோர்பத்தினிற்சிறந்ததுசிவணி
முருக்குமுத்தலைச்சூலமேமுதலியதாங்கி

யுருத்திரப்பெருங்கணங்களோடுறைந்துயிர்க்குதவி
யருத்திகூர்தரப்பஞ்சசத்திகட்கினிதருளும. (உ௨)

அப்பெரும்பொருளுறைசிகரத்தினுக்கயல்சூ
ழொப்பருஞ்சிகரங்கள்பன்னொன்றுளவுயர்ச்சி
முப்பெருந்தலைவர்க்குமெட்டாதனமொழியிற்
கப்பிளங்கதிரொளியெறிசூரியகாந்தம். (உ௩)

பரிதிகாந்தமென்றுரைத்திடுபன்னொருசிகரத்
தருகுகாதலினுருத்திரரினிதுறைந்துவப்பா
ரருகுசூழ்ந்துநூற்றெட்டுளகொடுமுடியவைதாங்
கருகிருட்படாந்தொலைத்தெறிசந்திரகாந்தம். (உ௪)

ஆங்கவற்றினைம்பத்தொருசத்திகளருநூ
லோங்குசிந்தையரொம்பிரானுருவுகொண்டுடையோ
ரோங்குசிற்றிடைக்கொடிநவசத்திகளினையோர்
பாங்கமர்ந்தருட்சதாசிவங்கருத்துறப்பணிவார். (உ௫)

இவற்றைமுற்றியவாயிரத்தொருமுடியென்ப
வவற்றையோதுறினழலொளியிமைத்துநின்றவிர்வ
தவத்தரும்பெருந்தாண்டவஞ்சத்தகோடிகளாய்க்
கவாச்செய்மந்திரமுருவுகொண்டிருப்பனகருதில். (உ௬)

அனையசூழ்தருமுடிபதினாயிரத்தொன்று
நினையினன்னவைபடிகமற்றுங்கவணெடுங்கைக்
கனைமதக்கரிமுகவனுமுருகனுங்கருணை
வினைசெய்மூவருஞ்சாத்தனுங்கணங்களும்விரவி. (உ௭)

நவையொழித்தருள்வயிரவனந்திபிங்கிருடி
சிவகுமாரருங்காளருந்தேனுவும்விடையு
மிவர்கொடும்படைத்தூர்க்கையுஞ்சத்திகள்யாருந்
தவமுயற்சியினினிதிருந்தப்பதஞ்சரிப்பார். (உ௮)

இலக்கமொன்றுபெற்றுடையனகொடுமுடியிவைசூழ்ந்
துலப்பிலாமணிமயத்தவாய்க்கடுங்கதிருமிழ்வ
நிலைத்தமேற்றிசைநாரணர்கோடியாநினைவார்
மலத்தினீங்குவார்தனிமுத்தற்சிற்பரம்வணங்கி. (உ௯)

உத்தரத்தனகொடுமுடியுச்சியினொருவார்
முத்திவேண்டுவரளவறுமுழுமுதற்பிரம
ரித்தரத்தனகொடுமுடிகீழ்த்திசையிவற்றி
லத்தனைத்தொழுதளவறுமிர்திரரமைவார். (௩0)

தென்புலத்துறைகொடுமுடிநெடுமுடிச்சிகரத்
தென்புருக்கியகணங்களுமிருடிகள்யாரு
மன்புருக்கிடவுருகியகருத்தினராகித்
துன்புறுத்துநின்றருமறைத்தலைவனைத்தொழுவார். (௩௧)

ஒன்றுபத்திலக்கத்துடனவைமருங்குடுத்துப்
பொன்றிகழ்ந்திடுங்கொடுமுடியாங்கவைபொருந்தக்
கன்றுபூதசேனாதிபருருத்திரகணங்கள்
சென்றசித்தர்வித்தியாதரர்கருடர்கந்திருவர். (௩௨)

சூலமேமுதற்கருவியுஞ்சுரபியுமணியுங
காலமோர்ந்தருணிதிகளுங்கறபகதருவு
மேலவார்குழற்கணிகையரீட்டமுமெம்மான்
சாலுமோருருத்தரித்தவர்யாவருஞ்சரிபபார. (௩௩)

இன்னதன்மையகொடுமுடிக்கீழ்வளைந்திருபப
மின்னுவெள்ளியங்கொடுமுடியவற்றினைவிரிகின்
மன்னுகோடியுமொன்றுமாய்வயங்கொளிமடுப்ப
வன்னவற்றிடைச்சரிபபனவரன்முறையறைவாம். (௩௪)

வெள்ளைவாரணமோரிரண்டாயிரம்வியப்பி
னுள்ளமோர்வரும்பிரணவத்துருவுகொண்டுறைவ
தெள்ளுநான்மறையுருவுகொண்டுளபரித்திரள்க
ளெள்ளருஞ்சதுமுகற்குமோர்கணக்களவிறந்த. (௩௫)

ஒற்றைத்தாளினமூன்றுடைத்தாளினவுமைக்கும்
பொற்றைத்தாள்பலவுடையனபொருந்துதாளொழிந்த
கற்றைச்செம்மயிருடையனகணங்கணகிறந்த
மற்றைக்கைகளுமன்னதன்மையவெனவழங்கும. (௩௬)

ஒருமுகத்தனவிரண்டுதீமுகததனவொருவாக
கருகுமூன்றுடைமுகததனமுகமிலாக்கணங்க
டிருகுசீற்றவெங்கணங்களுமின்னணஞ்சிறநத
மருவுதண்பிறையெயிற்றினபிலம்படுவாய. (௩௭)

மானிடத்தவர்முகத்தனபறவைமாமுகத்த
வானைமாமுகம்புலிமுகமுடையனவழல்வாய்க்
கானமானரிமுகத்தனகரடிமாமுகத்த
வேனைமாமுகமுடையபூதங்களெண்ணிறந்த. (௩௮)

இனையயாவையுமெம்பிரானுணையினியங்கி
யனையவெள்ளியங்குவட்டிடைச்சரிப்பனவன்றிப்

புனைசெய்தேரொடுமாகமும்பொருந்துவபொருந்தா
வினையினீங்கியதேவர்க்குமதனெறிவிளங்கா. (௩௯)

வாழிமாபெருங்கயிலையைமருங்குசூழ்த்துயர்ந்த
பூழில்பூத்தலர்கற்பகப்பொதும்பரினகீழ்போய்ப்
பாழிமாநிலந்தாங்கியபடம்படப்படர்ந்த
கோழிலைக்கொழுந்தண்டமுந்திகந்தமுங்குலாய. (௪0)

மாதிரத்தொடுமணவுறுவான்சினைவருத்த
போதிணர்த்துவான்கயிலையையிருள்படப்பொதிந்த
மீதிலங்கொளிமுழுமணியவ்விருள்விழுங்கி
யாதவற்குமோரதிசயங்காட்டிநின்றலர்ந்த. (௪௧)

கள்ளவிழ்ந்திழிநறுமலர்தாதினங்கவிழ்ப்பக்
கொள்ளைவான்றொடநிவந்தெழுகொடுமுடிக்குவைக
ளெள்ளரும்பசும்பொற்குழம்பங்கையாலேந்தி
யள்ளியப்பினவாமெனப்பொலிந்ததவ்வசலம். (௪௨)

விரிந்திலங்கியவடபெருங்கயிலையைமேலோர்
தெரிந்ததெய்வமென்றறிந்தனசினைக்கரங்கூப்பிப்
பரிந்தபூநறுமஞ்சனமாட்டிமென்பனிப்பூச
சொரிந்துதாமுநின்றேத்துவபோன்றவச்சோலை. (௪௩)

மணிகுயிற்றினமரகதமிழைத்தனவயிரத்
துணியுறுத்தினபவளமென்கொடியொடுகதொடர்ந்த
தணிபசும்பொனிற்பொதிந்தனசினைதொறுந்தழுவி
யணிமணிக்குவைதுவன்றினதருவிருளறுப்ப. (௪௪)

காலமின்றியேகனிவனகண்மலர்முகிழா
வாலுநெட்டிலையவிரொளிப்பசுமபொனுலலர்ந்த
போதுநான்மலர்நறைபகிரண்டமும்பொதிநத
சோலைசூழலிற்றகையறுமிரவிதேர்த்துரகம். (௪௫)

உருளுநேமியொன்றோட்டியபசும்பரியுதயோ
னருகுபோதலினயர்வுயிர்த்தருந்தகையகற்றும்
பொருவுசீதளத்துடனடுக்குறநன்போவான்
கருகுகங்குலிற்போதருங்கலைமதிக்கடவுள். (௪௬)

அன்னசோலையினகன்சினையூழ்த்திடுநறும்பூத்
துன்னுவானிகநிழிதொறுமலமருதோற்ற
முன்னையூழ்முறையநுபவமுற்றுறமுடிந்தா
ருன்னரும்பதமிழக்திழிவாரையொத்துளதால். (௪௭)

ஆயசோலையினணிமலர்க்குப்பைவீழருவி
யேய்மால்வரையுச்சியெம்மருங்கினுமிழிதன்
மேயசெல்வனைவேண்டிநர்வேண்டிநர்விரும்பித்
தூயநாண்மலர்த்தொடைபுனைந்தனவெனத்தோன்றும். (சஅ)

நரந்தநாறினநறுமலர்ச்சந்தனங்கமழ்ந்த
குருந்தமட்டுயிர்த்தலர்ந்தனகுங்குமமணத்த
செருந்தில்வாசநாறினசெழுஞ்செண்பகம்விளைத்த
பொருந்துதண்சினைநெடுங்குரவலர்தொறும்பூத்த. (சகூ)

அருவிதேக்கியபடுகரிற்பொதுளியவாம்பன்
மருவுவெள்ளியங்குவட்டொளிகதுவுறமலர்ந்த
பொருவின்மால்வரைப்பொற்குவடடிளவெயில்பொரலான்
முருகுவாய்மடுத்தொடுக்கிதழ்மலர்ந்தனமுளரி. (ருo)

காலத்தூழ்பலமுறைமுறைகழிதரவயிர்த்துச்
சாலககாரொளிதழைதரத்தனித்தனியரும்பி
யேலத்தம்முழைக்கருங்கொழுநதெழுந்தெனநீலக்
கோலப்பாறையினகன்சுனைநிரப்பினகுவளை. (ருக)

அயிர்பெற்றேங்கியதமனியத்தறையறைதோறு
மெயில்பெற்றேங்கியபொற்குவட்டிடநதொறுஞ்சார்ந்த
செயிரற்றேந்தியபொற்றகட்டமூந்துறச்செறிதத
வயிரப்பாள்மொத்திமைப்பனதெளிபுனன்மடுக்கள். ருஉ)

ஆட்டுவார்திரையலைத்திடவுடையரக்காம்ப
னீட்டுநீர்த்தடததொசிந்தனகிடப்பவங்கெடுநீர்
மாட்டுவார்திரைவாவியவாளைவாலடிப்பக்
கோட்டுநீரராகருதிகொப்புளிப்பனபோலும். (ருங)

தெளிக்குமீர்ம்புனற்றடத்துறைநறுமலர்சிவணிக்
களிச்சுரும்பினகான்மறையல்லனகழறு
வொளிப்புலத்தினன்புடையவர்க்குளப்படும்பதவி
யளிக்குமஞ்செழுததல்லதுமிழற்றிலவன்னம். (ருச)

அப்பெருங்கிரிநவநதியருங்கதிபுரக்கு
முப்பெருந்தலைவர்க்குமெட்டாதனமுயலா
வொப்பருந்துறைகுடைபவர்க்கோங்கிரும்பதத்தி
னெப்பெருங்கதியளிக்குமேழுவழிந்திலமின்னும். (ருரு)

பாங்கர்வைகியவனந்தொறுமருந்தவம்பயில்வா
ரோங்குமாதவவொப்பதமுணர்ந்துகொலுணரேம்

வாங்குவார்சடைப்புனிதனோர்மலர்ப்பதமல்லால்
யாங்கணுந்தெரிந்துணரினும்பதவிமற்றில்லை. (௫௬)

அனையகானகத்தரும்பொதியயிலெயிற்றரவ
முனையெயிற்றுறையமுதலதூற்றுறுமுழங்கி
வினைசெய்வாளரிபிணையொடுங்குழைவனவிரும்பி
நினையுநெஞ்சமுமஞ்செழுத்தல்லதுநினையா. (௫௭)

வனத்துவைகுறுங்குடம்பையவார்சிறைப்பறவை
யினத்தகிள்ளைகளிசைப்பனசெவிமடுத்தொப்பில்
புனற்கொடுஞ்சடையெம்பிரான்றிருவருள்பொருந்தி
யனைத்துமாகமச்சரிதைமற்றல்லதொன்றறையா. (௫௮)

விழைந்தமாதவர்விரும்பியவளமெலாநுகர்ந்துந்
தழைந்தமாவனத்தருந்தவந்தவறுறுதிழைப்பார்
குழைந்தவெண்ணிலாக்குழவியஞ்சிமிலியைக்குணியா
விழைந்தசிந்தையினவனுருவேண்டினரிருப்பார். (௫௯)

இன்னதன்மையகயிலையின்கொடுமுடியிலக்கம்
பன்னுகோடியொன்றெடுத்தபன்னோரிலககத்தை
மன்னுமாயிரமொன்றுபத்தவற்றொடுமருவித்
துன்னுநூற்றிருபத்தொடுமைந்தெனச்சொலவார். (௬0)

மொழிதரும்பெருங்கயிலையைக்கீழுறமுயற்றி
யிழிவறும்பசுந்தமனியத்திருநிலமிதனபா
லொழிவறுங்கணக்கிறந்தனகணங்களோடொழியாப
பொழியுமன்பினருருத்திராயிரர்பொலிவார். (௬௧)

ஆடகத்தளத்தளவொருகோடியோசனையா
மாடுமூற்றுறவெள்ளிவெண்மதிளுடுத்திருக்கு
மூடுசுற்றியதமனியவிஞ்சியொன்றுளதா
னீடுவார்மதிற்பெருமையினிலைநிகழ்த்துதுமால். (௬௨)

கோடியோசனையிடமுளகோடியிற்கோடி
பூடுபோக்கியேமேக்குறநிவந்தனவோங்கி
நீடுகோபுரமெட்டுளநெடுநிலைவாயின்
மாடுகாப்பவரிவரெனவரன்முறைவகுப்பாம். (௬௩)

பூருவத்திடைகணபதிபொங்கெரிப்புறத்து
வீரபத்திரன்றென்றிசைநந்திமேன்மூலை
கூரயிற்படைவயிரவன்மேற்றிசைக்குமரன்,
மாருதத்திசைவைரவிவடக்குமாகாளர். (௬௪)

வடகிழக்கினிலரியரபுத்திரன்மறங்கூ
ரடுசினத்தெறுகணங்களோடவணவண்புரப்பார்
நெடுமுடிப்பெருங்கயிலையினிலையிது பகர்ந்தே
மூடனிவற்றினைவளைந்திடுமரணமொன்றுளதால். (சுரு)

வனமணிக்குலந்துவன்றினவானுறநிவந்த
சினவரக்கராணிருதராற்செலற்கருந்திறத்த
கனைபெருந்திரைப்பிரளயஞ்செலற்கருங்காவ
லனையமாபெருங்கயிலையினிலையிதென்றறைந்தான். (சுசு)

சூதமாமுனிவாசகங்கேட்டலுந்துளங்கிச்
சீதமென்புனல்விழிவழியொழுகுறத்திருந்தும்
போதநெகுறமயிர்பபுறம்பொடித்தனர்புலமை
மாதவத்தினரொன்புடைந்துருகினர்மயங்கி. (சுஎ)

அன்னகாலையினன்னவர்ககருந்தவத்தலைவன்
மன்னுமாதவத்துறையுளீர்கேட்கெனவகுப்பான்
சொன்னமாபெருங்கயிலைவீற்றிருக்குமத்தொல்லோன்
மன்னுமாருயிர்க்குயினைத்திருவருள்வழங்கும். (சுஅ)

கண்ணுங்கட்புலங்கதுவியவொளிகளுநிவந்த
விண்ணும்விண்ணிடைவழங்கியகதிர்களுமேலோ
ரெண்ணுமெண்ணியபொருள்களுமியாவையுந்தானாய்
நண்ணுநாயகனிருப்பதகயிலைமாநகரம். (சுகூ)

தெய்வமேருவின்றென்புலத்திருப்பெருங்கயிலைத்
தையல்பாகன்முத்தலைநெடுஞ்சூற்படைப்பெருமா
னையுலமுண்டிருண்டகண்டத்தினனமர்வான்
வையம்யாவையும்படைத்தளித்தழிக்குமவ்வரதன். (எ0)

உரைத்ததெய்வமாக்கயிலைகளினையவோரிரண்டு
மருத்திஞானமாமயமெனலாகுமிக்கயிலை
யுருத்திரப்பெருங்கணங்களுமுலகளிப்பவருந்
திருத்தமாதவத்தலைவருஞ்சிநதைசெய்திருப்பார். (எக)

இயங்குவாயுவுமெரிகதிர்க்கடவுளுமெழுந்து
வயங்குதிங்களும்வளரொளிக்கனலியுமரபான்
முயன்றுநிற்பனவிவரருட்பெருமையான்முழவுத்
தயங்குதிண்புயத்திந்திரன்பூரவுமத்தகையே. (எஉ)

இந்தமாபெருங்கைலையினியற்கையைப்புலித்தா
டந்தமாமுனிதனதுபமன்னியற்குரைப்ப

வந்தமாமுனிதாமரைக்கண்ணவற்கருள
விந்தைநாயகன்பாண்டவர்க்குரைத்தனன்மேனாள். ᵃ(எ௩)

அறிந்தமூவகைத்தலைவருங்கயிலைபெற்றடைந்தார்
செறிந்தவார்சடையந்தணிர்நீவிருநினைவிற்
செறிந்தவேட்கையிற்சிவனடிசேவைசெய்திடுமி
னெறிந்தபேரொளிக்கைலையேகதிபிறிதில்லை. (எச)

என்றுகூறியதொருங்குகேட்டிந்தியமனைத்தும்
வென்றமாதவரிருந்தவச்சூதனைவியந்தா
ரின்றுநாமிவணியற்றியதவப்பெரும்பேறு
சென்றுபெற்றவாகிடைத்தனமெனவகஞ்சிறந்தார். (எரு)

கைலைமான்மியச்சருக்கம் முற்றிற்று.

---

ஆகத் திருவிருத்தம் - அஎ.

---

இரண்டாவது

## சூராதிகளொடுக்கச் சருக்கம்.

---

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உள்ளமோர்ந்தனகேட்டிழியெம்முழையொருங்குணர்ந்தொருங்காகப், பள்ளவார்மடைபபுனலெனத் தொகுததனையாமதன்பயன்றுய்த்தேம், வெள்ளெயிற்றுவெஞ்சூரனை முதலியோர்விளிந்தபின்னவராவிக், கொள்ளைவேற்படையொடுக்கியதன்மையைக் கூறுதியெமக்கென்றார். (௧)

பன்னுமாதவத்துறையுளோர் கேட்டிழிப்பழவினைப்பகைவென்றோன், பின்னலஞ்சடைநெடுமுடி துளக்கினனுவகையிற் பெரிதுற்று, னன்னகாரண மறைகுதுங்கேண்மினென் றறைகுவா னொருகாலம், பொன்னலங்குதார்ப்பனனிருதடம்புயப் புங்கவனெங்கோமான். ()

கானவண்டறுக்கற்பகப்பொதும்பர்சூழ்கந்தமாதனநின்று
மானவேலொடுமரகதக்கலாபமாமயிற்புறமினிதேந்த
வேனைமாநிலத்திருவிளையாடலுக்கெழுந்தருளியஞான்று
ஞானநாயகனுமையொடுமினிதுறைகயிலையைநணுகுற்றான். (௩)

உற்றகாலையிற்களிமயிற்புறனிழிந்தொவிதருசிறுதண்டைச்
சிற்றடித்துணைகோவரமென்மெலச்சென்றவச்சிறுகாலைச்

கொற்றவார்கொடிமயிலொடுங்கயிலையின்கீழுறக்குமரேசன்
கற்றைநீவார்கதிர்க்கயிலைசென்றிறைஞ்சினன்பன்னிருகரங்கூப்பி. ()

கறுத்தகண்டனைக்கண்ணுதறபரமனையடியவர்கருத்தீமை
வெறுத்தநாதனைவெண்ணிலாச்சடிலியைவெருவலர்புரந்தீய
வொறுத்தவாணகைப்புனிதனைககண்டுகண்களித்தனனுளநெக்கான்
மறுத்துவார்குழன்மரகதக்கொம்பனைவணங்கினன்மகிழ்பெற்றான் ()

வருகழற்சிறுதண்டையஞ்சீறடிமைந்தனையெதிர்நோக்கி
யுருகுகாதன்மிக்கெழுந்தனனுவகையானும்பரிற்றலைநின்றான்
றிருநடம்புரிந்தனனதுநோக்கினன்சிந்தையென்பொடுநெக்கா
னருகுநின்றனன்மெய்பொடித்தரும்பினனயர்ந்தனனக்காலை. (சு)

முடங்குவெண்டிரைபொருந்திருப்பாற்கடன்முன்றிலின்முடத்து த்திப், படங்கொள்பாம்பணைக்கண்டுயில் படலையம்பசுந்துழாய்மணி மார்பன்,றடங்கொடுஞ்சிறையுவணமீபபொலிதொருமேருவின்றலை முந்நீ, ரிடங்கொள்காரமழைமுளரிபூததன வெனவெழுந்தனன்வரு கின்றான். (எ)

தேவிவாழியதிருமறுமார்பினன்சென்றுறுதிசைநோக்கித்
தாவியன்னமொன்றுகைத்தனனான்முகசசுருதியெம்பெருமானு
மேவுகற்பகநறுநிழலினிதுறைவிண்ணவர்கணஞ்சூழ
மூவெயிற்புரஞ்செற்றவனுற்றுறைகயிலையைமுடுகுற்றார். (அ)

ஆழிமாயனுமருமறைக்கிழவனுமவணிழிந்தயலாகப்
பாழிவெண்சிறையுவணமுமன்னமுமொழிந்தனர்படர்கின்று
ரூழிபற்பலகாண்கினும்பிரளயவொடுக்கினுமுலவாத
சூழிமால்வரைக்கயிலைமீசசென்றனர்திருநடந்தொழுதேத்த. (௯)

தொழுதகையினர்துளங்கியமெய்யினருருகியதொடர்போடு
மழுதகண்ணினரன்பினர்செனறுழியணிநெடுமணிவாயின்
முழுதுணர்ந்தறிநந்திகைப்பிரம்படிமுடிதொடநெருக்கூடு
வழுவியேகினர்திருநடந்தொழுதனர்வழுத்தினரயனின்றார். (௧௦)

மறைமுழங்கியமுழக்கொலியளவறுமாதிரங்கிழித்தோட
வறைகருங்கழலரிமுதற்பிரமரோத்தண்டகோளகையோங்க
விறைதிருப்பதச்சிலம்பொலிமன்னுயிர்க்கினிதளித்திடரோட்ட
நிறைபெருங்கணமரகரவெனுந்தொனிபெருநெடுநிலம்போர்ப்ப.(௧௧)

தேவதுந்துபிமுரட்டொடுபஃறொனைச்சில்லரிச்சிறுபாண்டில்
பாவுகண்படுமரம்படுதிமிலைவெம்பல்லியத்தொகையார்ப்ப
மேவருஞ்சடைப்பகிரதியுவட்டெழவிண்ணவர்கணஞ்சூழத்
நாவினத்திகைப்பிரம்பினுவிமையவர்முடிமணிதகர்த்தோட. (௧௨)

பனிப்படாம்பொதியிமயமீன்றளித்தருண்மரகதப்பசும்பாவை
கனித்தசிந்தையினருகுநின்றியற்றியகமலமென்கரப்பாணி
தொனித்தபன்முறைச்சுதிவழிசீர்தொறுந்தூக்கிசைசெவிதூங்கக்
குனித்தநாயகன்றிருநடந்தொழுதனாவிண்ணவர்குழாத்தோடும். ()

குழைந்தசிந்தையர்குமிழிவிட்டொழுகியகண்ணினர்குழையாநின்
றிழைந்தவன்பினருருகியவென்பினர்முகிழ்த்தகையிணைவாங்கார்
விழைந்தவேட்கையினின்றனரயர்ந்தனர்மெய்பொடித்துளநெக்கார்
தழைந்தசெஞ்சடைப்பரமனையாடல்கண்டுவப்பொடுந்தலைநின்றார்.()

இன்னரின்னணமாடல்கண்டுவப்புழியெறிகதிர்க்கயிலைக்கீழ்
மன்னுசேவலுமரகதக்கொடுஞ்சிறைமயூரமுமினிதுற்ற
வன்னகாலையிற்சூரனும்பதுமனுமரிமுகத்தவனுங்கூர்
மின்னுவெள்ளெயிற்றடுசினத்தாருகனெனப்படுவெய்யோனும். (௧௫)

பூதவெங்கணக்குலத்திவர்நால்வரும்பொறிமயிற்கருகேகிப்
பாதகிண்கிணிப்பங்கயம்பொறுத்தநின் பெருந்திறல்சொலற்பாற்றே
கேதனத்திறற்குக்குடத்தடுதிறலெவர்கிளத்துவாகெட்டேன்
போதினுன்முகத்தலைவனு நம்மடிபோற்றுதலெளிதன்றே. (௧௬)

இவையறிந்துமற்றறிகிலராமெனவெறுழ்வலிக்குடையோர்போற்
கவர்கொடுஞ்சிறைக்கலுழனுமன்னமுங்கருத்துறமதியாவா
யவமதித்தனவறிந்திலிர்போலுமற்றும்மொடுமடுபோர்க்கென்
றுவைசெறுப்புழிநும்மொடுநால்வருமுருத்தெழுந்துடனிற்பேம். ()

எனமொழிந்தன விருசெவித் தொளைபுக வெரிபொறி விழிகால,
வனமயில்குலச்சிறைபுடைத்தெழுந்ததுவாரணஞ்சினஞ்சீறிப், புனை
புடைச்சிறையடிதொடப் போர்த்த போர்துணிந்ததுபூதத, தின
விழிக்குலம்வடவைகக் கியவுருத்தெழுந் தனவெதிர்நோக்கி. (௧௮)

உருவுசீற்றமொத்தெதிர்வரநோக்கியவுவணமுமுலகோங்கிப்
பொருபெருந்திரைப்பிரளயஞ்சுவற்றிய புடைசிறைபுடைத்தார்ப்ப
விருகொடுஞ்சிறைமலரயனன்னமுமெதிர்நடந்ததுதம்மிற்
செருவிளைத்திடுதிமிலமிட்டுரப்பினதிருகினசினஞ்சீறி. (௧௯)

(வேறு.)

தெழித்தனவுரப்பின சினத்தன கனற்பொறி தெறிப்பவெதிரோ,
விழித்தனகடித்தன மிதித்தன வலக்குநிரை வேலைசிறையாற், சுழி
த்தன வுவட்டெழ நெடுங்கிரி முடித்தலை துளக்கியதிரக், கொழித்
தெழுநிலத்துகள் கொழுந்தொடுபடர்த்துதிசைகொண்டுமறுக. (௨௦)

ஆதவனொளித்தனனசும்புறுபசும்பொனுலகண்டர்வெருவிப்
போதரநினைத்தனரிடிக்குலமிடிப்பொடுமெரிந்துதிருமான்

மீதொடுநெடுஞ்சிகரமாயிரநிரைத்தவடமேருவரையு
மாதிரமுழக்கவருமாருதமெனப்பதறிமம்மருறுமால். (௨௧)

வாளெயிறதுக்கியகணத்தலைவர்கால்வருமனஞ்சினவினர்
கோளுறுசிறைக்கலுழனோடெதிர்மலைந்தமர்கொடுத்தனர்களாற்
றோளொடுசெடித்தலைகடித்துதறிடச்சிகிதடஞ்சிறையினன்
மூளுறுசினக்கலுழனைப்பிடர்புடைத்ததுமுழக்கமெழவே. (௨௨)

வாரணநெடுங்கொடிமலைந்ததிறலீதெனவழங்கவசமோ
கூரடியுகிர்ச்சுவடுகொண்டெகினநெஞ்சுகுறைபட்டகுறைவாய்ச்
சோரியுகளித்தெழவயச்சிறைபுடைத்ததுதுறக்கமதிர. (௨௩)

இத்தலையருஞ்சமரிழைத்தகருடக்கொடியிழந்துநெடுவான்
மொய்த்தசிறைதட்டியெழுவோதிமமதன்பிறகுமூர்ந்துறுவதாற்
கைத்தலைநெடுங்கதைபொறுத்தெறிகணத்தலைவர்கண்டுகதழ்வார்.
சித்திரமயிற்கொடியகுக்குடமவற்றின்வழிசென்றுதொடர. (௨௪)

சென்றிடுபெருந்திசையுமண்டமுமதிர்ந்துயிர்சிலைதந்துமறுக
வுலகத்திடை
கன்றியசினத்தொடுதொடர்ந்தடிபடர்ந்ததுகலாபமயிலே. (௨௫)

ஆயிரமிதழ்க்கமலபீடிகையிருக்குமயனுதியுலகிற்
பாயதுகணத்தினிலனத்துயிர்செகுத்ததுபடர்ந்துநெடுவா
னேயதுமுகுந்தனுலகெய்தியவிருஞ்சிறைவயக்கலுழனைப்
போயுயிர்பறித்ததுமுகுந்தனுலகம்பொடிபடச்சிதறியே. (௨௬)

அங்கணமரர்க்கு முதனயகன் முகுந்தனுலகத்தை யழியாச், செங்கமல நாயகனிருந்த வுலகப்பதவி சிந்திடமுனிந், தெங்கணும் வெகுண்டு கொடிவாரணமுயிர்ப் பொறைகொறித்ததெரிசூழ், வெங்கணிகல்வாளெயிறுடைத் தலைவரெங்கணும் வெகுண்டுமுனிவார். ()

இப்படியருஞ்சமரிழைத்திடுமதிர்ப்பினிலெழுந்தவிமையோர்
கப்படிவிரற்பதமுறுத்தநெடிதோடினர்கலக்கமுறுவா
ரெப்படியினிக்குடியிருப்பதெனவிம்மலினிரங்கிவெருவா
மைப்படிகளத்தனடனம்புரிதருங்கயிலைவந்தணுகினார். (௨௭)

அன்னவர்திருக்கயிலையண்மினர்கொடுஞ்சமரடர்த்தமயிலு
மின்னெயிறுடைக்கணமும்வாரணமுமக்கயிலைவெற்புமருவி
மன்னியொருபாகமுறமுந்தமரரம்பொனணிவாயிலினுழை
வின்னலினியாரொருமெம்விளம்புதமெனத்தனியிரங்கிமெலிவார். (௨௮)

ஆயதுநிகழ்ந்தபொழுதாரணமுதற்பரனையாடல்பரவிச்
சேயொளிவிரித்தபதபங்கயம்வணங்கினர்திரும்பிவரலு
மாயனையெதிர்ந்துநெடுவானவர்குழாமொடுவணங்கிவழிபா
டேயதுபுரிந்துவெருவந்துபடுதங்குறையிரந்துபுகல்வார். (௩0)

தரவுக் கொச்சகக்கலிப்பா.

மூவாமுதலேமுளரித்திருநாபிப்
பூவாலுலகளித்தபுண்ணியனேயெம்முயிரைக்
காவாயெனிலெவரேகாப்பார்கடலுறங்குந்
தேவாபசுந்துழாய்ச்சென்னிப்பெருமானே. (௩௧)

அன்றோர்களிறுதிமூலமெனவழைப்பச்
சென்றேடியோடாவிடர்தீர்த்தசேவகனே
குன்றேடினங்காத்தகோவேயுலகளந்து
நின்றேயெரிவிழிக்குநேமிப்பெருமானே. (௩௨)

ஐயோவமரருலகிறந்ததாழியாய்
வெய்யோமெமைக்காப்பாருன்னன்றிவேறுளரோ
மையோடுமேனிமயூரங்கடுஞ்சிறையாற்
செய்யாளுறைநின்றிருநாடுஞ்சிந்தியதே. (௩௩)

வாழிமலரோனிருக்குமலர்க்கோயில்
பூழிபடச்சிதைந்துபோயினதேபுங்கவரு
மாழிவரைப்புறத்தோவண்டத்தினப்புறமோ
வூழியளந்தாயெளியேமுணரோமால. (௩௪)

நீரோறுதாமரையோனேறுநெடுந்தூவிச்
சீரோறுமன்னஞ்சிதைந்ததாற்றேநதுளவக்
காரோறுபூங்கமலக்கணணுகடலவண்ணு
போரோறேநீயேறும்புள்ளரசும்போயிற்ருல். (௩௫)

வெண்பாற்பிறையெயிற்றுவெவ்வாய்க்கணநால்வ
ருண்பானவர்க்கிவ்வுலகடையப்போதுமோ
வெண்பாலடங்குமோவெம்மோரிறப்பெல்லாங்
கண்பார்கருணைசிறிதுளவேற்காண்பேமால். (௩௬)

என்னுவணங்கியிமையோரொதிர்நிற்பப்
பொன்னுண்முளரிப்புயல்பூத்தனையோனும்
பன்னுண்மலர்க்கமலப்பண்ணவனும்போயினர்
பின்னாலங்கிலையவேலோற்குறுகினர். (௩௭)

கண்டாரிருகண்களிகூர்ந்தாரோர்மருங்கு
தண்டாமரைமேகமன்னுன்றனிநின்று

னுண்டாமரைத்தவிசுவீற்றிருக்குமோதிமத்தோன்
விண்டூனுழந்தபரிசெல்லாம்விளம்புவான். (௩௮)

வாரார்முலையுமையாளீன்றமகவேயெம்
போரேறேவானுலகங்காத்தளித்தபுண்ணியனே
தாரோதியகடப்பந்தாரோய்சமர்கடந்த
வீராமயூராவிளங்கிலையவேலோனே. (௩௯)

தேவேபுரந்தரனார்செல்வமேசெங்கமலப்
பூவேயெனக்கும்பொருள்விரித்தபுண்ணியனே
தூவேயலங்கிலையவேலோய்சுருதியருக்
கோவேகடம்பலரும்பன்னிருதோடகுன்றமே. (௪0)

நாதாவொருதமியேனுன்மறையேநாப்புரட்டி
யோதாமறையேபிரணவத்தினுண்மயமே
பூதாதிநின்றும்புலப்படாப்போக்களிறே
வேதாகமத்துறையேதண்கருணைவெள்ளமே. (௪௧)

தேங்குதிரைததும்புதெண்ணீரின்மெய்ஞ்ஞான
மோங்கிநிரம்புசரவணத்தினுற்பவமே
தாங்குசிறியதண்டைத்தாளோயிடையறுப்
பூங்கருணையாறுமுகம்பூத்தபொற்கிரியே. (௪௨)

கூற்றமுரணறுக்குமாறெழுத்துக்கொண்டடியேம்
போற்றுமெளியாய்வலியாய்புராதனனே
யாற்றலரும்புலத்தைவெனரூரகந்தெளிய
நோற்றிழைத்தவெண்ணூனுடங்குமணிமார்போனே. (௪௩)

என்றுபலவுமெடுத்தேத்திக்கைகூப்பி
நின்றுமலர்வாய்புதையாநிகழ்த்துவான்
கன்றுசினக்கணமுங்கார்மயிலுங்குக்குடமுஞ்
சென்றெகினத்தோடுங்கலுழனெடுஞ்சீறினவால். (௪௪)

சீறுஞ்செயலொழிந்ததின்சிறையவன்கலுழ
னேறுந்தமியேனைத்தாங்குமோதிமத்தோ
டாறுஞ்சிறகோய்ந்தலமந்தமரிழந்து
மாறஞ்சினவாய்ப்புறங்கொடுத்துவானடைந்த. (௪௫)

பின்போயெனதிருக்கைமாளப்பெரிதிழைத்து
வன்போடென்னோதிமத்தைமாய்த்துவயக்கலுழ
னென்போடொடியமுடித்துமறுத்தேகினவாற்
பொன்போலுருவாயரியுலகும்போயிற்றால். (௪௬)

வானோரநேகரிறந்தாரவ்வானோரி
னேனோர்வடவரையும்பல்வரையுமெய்தினார்
யானோபுகல்வேனிவர்பிழைத்தாரிங்குற்றார்
தேனோடினவண்டுழுபூந்தெரியலாய். (௪௭)

என்றுரைத்தவெல்லாந்திருச்செவிதாழ்த்தெம்பிரான்
குன்றுருவமன்னகணத்தோர்க்கொணர்கென்று
னின்றகணத்தோர்நெடிதோடிக்கூவுறலு
மன்றிழைத்தசூரன்முதலோர்வந்தண்மினார். (௪௮)

நாவாய்வறப்பக்குறுந்தாணடுநடுங்க
வோவாத்திறலோய்ந்துயிர்நடுங்கியுள்ளழிந்து
மேவாவெருவெருத்துநின்றனரால்வெங்காலத்
தீவாய்விழித்தவிழிபாலிற்றிகழ்ந்தனவால். (௪௯)

வந்தாரடியற்றமாமரம்போல்வீழ்ந்துபணி
தந்தாரவரைத்தனிவேலிறைநோக்கிச்
செந்தாமரையுலகுமேலுலகுஞ்சேதித்தீர்
நந்தாவலிதொலைத்துவானவர்தநாடழித்தீர். (௫௦)

நீவிரினிப்போய்நெடுநீர்ப்பெருநிலத்துப்
பாவநிருதர்குலத்துற்பவித்துப்பன்முறையாற்
றேவரிவர்க்கிடுக்கண்செய்வீர்கடைமுறையெம்
பூவிலையவேலாற்றொலைந்துகதிபுகுவீர். (௫௧)

என்னுங்கடுஞ்சாபங்கேளாவிகற்பூதர்
மின்னுஞ்சுடரிலைவெள்வேலோற்பதம்போற்றி
மன்னுங்கொடியேநிருதர்குலம்வைகுறினு
நின்னன்பகலாதநெஞ்செமக்குவேண்டுமால். (௫௨)

ஈதன்றிமற்றொன்றுளதாலெளியோங்கள்
போதுங்குலத்துப்புரிதவத்தானெடியிலைவேல்
காதுந்திறத்திறக்குங்காலமயிலாகிப்
பாதம்பொறுக்கக்கொடியாகப்பாலிப்பாய். (௫௩)

ஆயவரமிரண்டுமெம்பாலருடியெனத்
தூயமுறுக்கெயிற்றுச்சூரன்பதுமனொடு
மேயவுவகையொடும்பெற்றார்மிகுதவத்தான்
மாயைவயிற்றிலிவர்கால்வோரும்வைகினார். (௫௪)

மாளாவலிதொலைத்துமாண்டவயக்களுமன்
றுணாரவித்தனோறுந்தனியெனைக்

தாளாய்முடிந்தசுரருலக்கெம்பிரான்
ரேளாறிரண்டுடையான்சொல்லினிலைபெற்றனவால். (ருரு)

மூரிக்கமலவிழியாற்குமூதுணர்ந்த
வேரிக்கமலத்தயற்கும்விடையருளி
வாரிக்கருணைப்பெருமான்மயிலுகைத்துப்
பாரித்தகந்தப்பணிவரையிற்போயினன். (ருசு)

என்றுமிளையானியம்புமொழிதிறம்பாத்
துன்றுதுணைத்தடக்தோட்சூரன்பதுமனொடு
மொன்றுதனிவயிற்றிஞெருருவாயுற்பவித்தார்
நின்றவிருவருடன்பிறந்தார்நீணிலத்தில். (ருஎ)

சூலப்படைபொறுத்தசூரபன்மனென்றொருவன்
சீலக்குணமொழிந்தசிங்கமுகனென்றொருவன்
சாலத்தவமிழைத்ததாருகனென்றுறொருவன்
ஞாலத்தசுரகுலமன்னவராய்நண்ணினர். (ருஅ)

பூவிற்பொலியும்புணைகழலோன்போர்வேலாற்
காவற்கணத்தோடிருவர்கலந்தொழிந்தார்
தூவிற்பொலிசூலச்சூரனுயிரிறந்து
சேவற்கொடியுமயிலுமெனச்சென்றெழிந்தான். (ருகூ)

ஈதுநிருதர்பிரானெய்தியவாறிக்காதை
யாதிமுதனுளரும்பியதாலென்றருளிச்
சூதனுரைத்தபரிசெல்லாந்துரிசறுத்த
மாதவத்தோர்கேட்டுவமூத்திமகிழ்சிறந்தார். (சுo)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஈங்கிவணிப்பரிசாயதெனவுணர்த்தவுணர்ந்தனம்யாமினிநீயைய
வாங்குபிறைவளையெயிற்றுவாளவுணருயிரொழியமடிந்தஞான்று
வீங்குதுணைப்பணைத்தமூலையமுகியுமிவட்பயந்தவெய்யவேற்கட்
டாங்குகருங்குழன்மாயையெனுமவளுமொழிந்தவழிசாற்றவேண்டும்

என்றுமுனிவரரியம்ப விருந்தவத்தி னருங்கொழுந்தா யெழுந்த சூதன், வென்றுபுலன் களையிகந்த மாதவத்தீர் கேண்மினென விள ம்புமேனுட், பொன்றிகழ்கின் கிணிமுளரித் தண்டையந்தாண் முருகனெடும் பொருதஞான்றின், மன்றலெழுங் குழன்மாயை கதிர்ப்ப கைக்கோர் மறைய்றைந்து மறைந்துபோனுள். (சுஉ)

போயநெறித் தலைப்பயந்த மகட்புணர்ந்துன் றெடும்பிறந்த புதல்வர்க்கெல்லா, மேயவிற லினிப்புகுதா தொருகுமரன் றிருக்கைவடி

வேலால்வீவா, ராயதுவக் தறுமளவு மிவணிருத்தி மந்தரவெற்
படைகின் றேன்யான், றீயநெறிக் கொடுஞ்சூரன் முதலியோர் கள
த்துலக்குஞ் செயனீயோர்வாய். * (சுங)

மந்தரவெற் பிணையடைந்து சீகுலமாப் பருப்பதத்து வருகின்றே
ன்யா, னிந்தநெடுங் கொடுஞ்சமரி னிவரிறப்ப துணர்ந்துபின்ன ரிவ
னுருது, வந்தொழிதி வருந்தலைநீ சீகுலவெற் பிணைநோக்கி வருதி
யென்னு, வந்தரவா னவர்குறித்து நகைவிளைப்ப மாயையவ னகன்
றுபோனுள். (சுச)

பொருசினத்த வாளவுணர் கிளைமுழுது மடுகளத்துப் புல்வுவே
லாற், செருவொழிய வுயிரிறந்தார் மாயைதனைப பயந்தளித்த தீயோ
னேடுங், தருவுலகஞ் சிறைப்படுத்த சூரனரு ளிரணியன்பா தலதது
ச்சார்ந்தா, னுருகியசெம் பெனத்தெளிந்த கண்ணியய முகியரற்றி
யோடினுளால். (சுரு)

மலைத்தலைவெம் மூலத்தலத்தி னிடியெனத்தன் கரம்புடைக்கு
மருளுமேங்கும், பிலப்பகுவாய் திறந்துமுக டதிரவெடுத் தழுதரற்
றும் பின்பார்த்தோடுங், கொலைத்தலைமுத் தலைப்படையோன் கொடு
த்தவர மின்றளவோ வென்றுகூறு, முலைத்தலைகின் றுருகுமெழு
கெனக்குழைந்து தனையீன்ற ளுறையுளுற்றுள். (சுசு)

சீகுலமாப் பருப்பதத்தி னழுதரற்றிச் செல்வானை யெதிர்ந்து செ
ல்லா, மாகுலமுற் றுறமுடிந்த தெனவுணர்ந்த மாயைநெடு மண்ணி
ல்வீழ்ந்தாள், சோகமெடுத் தலைப்பமற்றை யயமுகியு மவளடியிற்
றுயர்ந்து வீழ்ந்தா, ளாகுலத்துக் கொருநிலைய ருலகதிரத் தழுவிய
முதரற்றினுரால். (சுஎ)

அந்தரவா னவர்பணித்த பணிதலைக்கொண் டியற்றுமுடம் பயர்
வுதீர்ந்தார், கந்தருவ ரியக்கர்சித்தர் விஞ்சையர்தக் கீராத † கவ்வை
தீர்ந்தார், சுந்தரிமங் கலந்தடவி நெஞ்சுதொட்டு முறுவலித்துத் துய
ரந்தீர்ந்தா, ளிந்திரனை முதலினேர் காற்றழும்புங் காத்தழும்பு மிழ
ந்தாரன்றே. (சுஅ)

பொருவருவெண் குடைநிழற்றிப் பொதுக்கடிந்து பல்லண்டப்
புவனமெல்லா, மருவரம்பெற் றினிதளித்த வசுரர்குல மொருகள
த்தி னவிந்துமாளத், தருவிழந்த விந்திரற்சென் றடுகளத்தி னெதிர்க்
துபுறந் தந்துமானச், செருவிழந்த தலைவரினி முகமலர்ந்து தமதுப
தஞ் செலுத்துவாரால். (சுகூ)

---

* "செய்கையோர்வாய்" என்றும் பாடம்.

† "தந்திராதி" எனவும் பாடம்.

அரிமுகவ னெடுத்துரைத்த மொழியுணரா யண்டமுற்று மளந்த செங்கோ, லெரியினுக்குத் தனைபோலும் பெருவரனு மெறும்வலியு மிழ ந்தாய்போலு, முரியவுயிர்த் துணைவனென வோருயிரா யினிப்பிறப் பா ருளரோ கெட்டேன், விரிதருகற் பகநீழ லிந்திரனு ரரசுகொ ண்ட வெகுளி வேலோய். (எ0)

ஒழியாத பெருவளனு மூவர்க்குஞ் சலியாத வுரனுமென்று, மழி யாது பெறுவரனு மழிந்தனைமற் றனதெழிலு மழிந்ததேயோ, சுழி யாறு சடைக்கரந்தோன் மதலையிவ னென்றுரைத்த சொற்கேளா யாற், பழியாவி சுமந்துநும்மை யிழந்திருந்தே னுடன்பிறந்த பரிசு நன்றே. (எக)

எனவரற்று மயமுகிகட் குமிழியெடுத் தெறிபுனலை யிருகைமா ற்றி, மனமயக்க மொழிதியென மாயைமகட் கருகிருந்து மம்மர்தீ ர்ப்பாள், புனைமயிலுங் கொடியுமெனப் பெறற்கரும் பேறினிதுபெ ற்றுப் பொலிந்தான் முன்னோ, னனமுகைக்கு நான்முகனு மரியுமிவ னடிதொழுதற் கணியவன்றே. (எஉ)

பண்டிழைத்த மாதவததாற னைடததனனமற றுதுவிதன்மேற் பத வியுண்டோ, தண்டையஞ்சீ றடிகதிவுந் துகளிழுகப் பெற்றனனெ த் தவமோவென்ன, வண்டிமிர்பைந் துணரோதி யன்னையுரைத் தன ளவனை வதனநோக்கிக், கெண்டையங்க ணயமுகியுஞ் சிறிதுமனக் கவலொழிந்து கிளப்பதானாள். (எங)

சூரபன்ம னடுகுருதிப் புகர்முகத்த வேலினுரந் தொலைந்து வெ ற்றி, வீரநெடுஞ் சிறைமயிலுஞ் சேவலுமா யினனென்ன விளம்பி னுயத், தாருகனு மரிமுகனுஞ் சென்றடைந்த திசையுணரேன் றமி யேனன்னோர், சோரிசொரி முத்தலைச்சூன் மறலிவலைப் பட்டனரோ சொல்கவென்றாள். (எச)

ஆயதுமுற் றுணர்ந்தறிவா னுரைக்கின்றே னயமுகிமற் றறிதியெ ன்ன, மாயையுரைத் திடுமனையோர் கயிலைவரு கணத்தினெடும் வா ழ்ந்தா ரென்னை, தீயவினைத் திடுமிவரிப பெறற்கரும்பே றடைந்த தென்னை செப்புகென்று, டாயெனநின் றிவட்பயந்தா ளவட்கறிந்த முறையனைத்துஞ் சாற்றலுற்றாள். (எரு)

முன்னொழிந்த நெடுங்காலத் திரைதிரைநின் றுவட்டெடுக்கு மூரி முந்நீர், தன்னகத்து நவதீவிற் சாகத்தீ வொன்றுளதா லதனுட்டோ ன்றி, முன்னியசெங் கோலோச்சி யொருகுடையி னுயிர்புரக்கு மன் னர்மன்னன், பொன்னவிர்பைங் கழற்காற்பிர பாகரனென் றுள னொருவன் புலவுவேலோன். (எசு)

அளையவனுக் குயிரனையா ளொருத்தியக மாட்சிபுரக் தளிப்பாள வ்ஞுள், புனைமணிமே கலையள்சகு மாரியெனும் பெயருடையாள் பொற்பினீங்காள், வனைகழற்கா லரசனெறி முறைதிறம்பா ளருந்த தியிற் கற்பினிற்பா, ளிளையரிவ ரளவிறந்த நெடுங்கால மரசபுரிந் திருந்தா ரன்றே. (எஎ)

ஈங்கிவர்கின் றிழைத்தபெருந் தவப்பயத்தா லினிதுவப்பி னெடுத் துமோப்பத், தீங்குதலை மதலையரோர் நாலவர்பிறந் தளரிவர்க்குச் செங்கோல்வேந்த, ஞேங்குதிறற் சூரனென்றும் பதுமனென்று மிர ட்டையருக் குரைத்தே ஞேர்க்குத், தாங்குகழற் சிங்கனென்றுக் தா ருகனென் றும்புனைந்தான் றமவேலோன். (எஅ)

தங்குலத்து முதியோர்பே ரீன்றெடுத்த மதலையாக்குத் தந்தபின் னர்ப, பொங்கொளிப்பைங் கழலிவர்க்குண் முன்பிறந்த சூரனுக்குப் புரவுநல்கிச், சிங்கவா சனத்திருத்தித் தேவியொடு மருந்தவத்திற் சென்றானன்னே, னங்கணவ னுலகுபுரந் தொருகுடையி னுயிர்க்கு தவி யருளினுனல். (எகூ)

அறநெறிச்செங் கோலோச்சி யவனிபுரந் தினிதளிக்கு மந்நாட் டென்பாற், குறுமுனிகுண் டிகைதூக்குங் கரதலனாய்த் தரித்திடு கைக் குடையனாகி, மறைதவத்தோ ருருவுகொண்டு வந்தனையோன் றனதிடத்து வரவுநோக்கி, முறையினினி துயிர்புரக்குஞ் சூரனருந் தவற்கெதிர்போய் முறையிற்றாழ்ந்தான். (அ௦)

அருந்தவமே யருந்தவத்தோர்க் கருமருந்தே யாரணமே யனிபே ம்பெற்ற, பெருந்தவமே முழுஞானக் கலைக்கடலே யெழுந்தருளப் பெற்றே னெந்தை, திருந்துமல ரடிநீண்டக் கடற்கிடந்த தீவுஞ் செய் திறனன்றென்னுக், குருந்தமலர் தமிழ்ப்பொதியக் குறுமுனி யைத் தன்கோயில் கொண்டு புக்கான். (அக)

புக்கமுனி வனைத்தரளங் குயிற்றுமரி யாசனத்தி லிருத்திப் போ ற்றித், தக்ககடன் முறையாவுந் தம்பியொடு மினிதியற்றித் தமிழி ன்வேந்தன், மிக்கெழுந்த பேருவகை வெள்ளமுளத் தவட்டெழிய வியந்து நோக்கிப், பககமரு விருத்திரெண்டுத் தொழுதிருந்தா ரன னவர்க்குப் பகாதுற்றான். (அஉ)

கலிநிலைத்துறை.

தூயவெண்குடைநீழலினவனிகாத்தளிக்குந்
தூயசித்தையிற்றுரிசறுபெருங்குணமுடையீர்
மேயதங்களைக்காண்குறும்பிருப்பொழிவென்டீர்ந்தே
மேயதன்பொருளொன்றன்றியம்புகன்றேனியின்.

[illegible]

சரணபங்கயம்டணிந்தனன்ருருகன்சிந்தை
முரணகற்றரிமுகவனும்டணிந்துகைமுகிழ்த்தான். (கஉ)

முகிழ்த்தகையினருருகியசிந்தையர்முனிபா
னெகிழ்த்தநெஞ்சினர்புனற்படுகண்ணினர்நிறைந்த
மகிழ்ச்சிகூர்தரமாமதிட்கோயிலகொண்டணைந்தா
ரிகழ்ச்சியல்லதோாமுழுமணித்தவிசகமிருத்தி. (கங)

செய்யவேண்டுவவரன்முறையாவையுஞ்செய்தா
ளையநின்னடிதொழபபெறுமருந்தவம்யாதோ
வையம்பாவையும்டிரந்தனமாயினுமறுமை
வெய்யதீவினையொழிந்தனம்யாமெனவியந்தார். (கச)

அன்னமன்னவர்க்காசிசொற்றங்கையாலமைத்து
மன்னுயிர்க்கினிதோாகுடை நீழலின்வகுத்தீர்
டன்னுநூன்முறைதிறம்புருதறநெறிபயந்தீ
ரின்னுமொனறுளதுமக்கெடுத்தியம்புவானியைந்தேம். (கரு)

அதுகருத்துணாந்தறிகுதிரரியரற்கெனவோர்
மதலைதோனறினன்மாநிலத்துயிர்புரந்தளிட்டான்
விதுமுடிச்சடையவனையும்வேரிவண்டரற்றும்
புதுநறுந்துழாயவனையுமொழித்துயிர்புரபடான். (கசு)

அவனுகைக்குமோரழிமதக்கலுழிமாலயானை
புவனமுற்றுறவிடிபடுத்தண்டமேற்புரட்டி
யிவர்தடந்திரைப்பிரளயகடப்புறினெதிரோய்க்
கவர்தொளைக்கரத்துறிஞ்சிநின்ருருயிாகாக்கும். (கஎ)

அன்றியின்னுமோரருமன்றைப்பொருளுளதறைவாங்
குன்றுயிர்த்தெழுமரகதக்கொழுங்கொடியுருவாய்
மின்றிரித்தனமுத்தலைவேற்படைபொறுத்தாள்
பொன்றிகழ்ந்திடுமேருவும்வையமும்புரந்தாள். (கஅ)

புரந்துமாநிலம்பலகையுஞ்சுரிகையம்பொறுத்துக்
கரந்துடல்லுயிரனைத்தையுமொருநெறிகாடடாள்
சுரந்தகங்கையஞ்சடையினருடனடந்தொகுத்தாள்
பரங்குறித்திடிலவளலதுயர்ந்துளோர்டகரார். (கக)

அனையநூபுரத்தளிரடிதாங்குவாளரிக்குப்
டினையுநானமறைநாற்பதமெனுந்தவம்புரிந்த
சினவுவள்ளுகிரொனத்தவம்புரிந்ததுதிங்கள்
கனலியீற்றெழுந்துருப்பினுமெதிருறீஇக்கவரும். (சoo)

நுமக்குவேண்டுவதிக்கதிநோக்கிமற்றினையோர்
தமக்குவேண்டியபூசனைவரன்முறைதந்து
சமர்த்தலைப்படைகைகடந்துடன்பிறவிநோய்தவிர்ப்ப
தெமக்குவேண்டியதிதுவெனமொழிந்தனனெழுந்தான். (௧0௧)

முனிவனேகியபின்னருநால்வருமுயலாத்
தனையாபாலுலகளித்தனர்தவஞ்செயத்தணந்தார்
புனையுமாமயிலவாரணம்வாளரிபுகர்மா
நினையுநெஞ்சினரப்பதம்பெறுகுவானினைந்தார். (௧0௨)

மஞ்சியங்கியடருப்பதவனத்திடைவைகிப
பஞ்சவக்கினிநாபடணின்றருந்தவம்பயில்வார்
செஞ்சுடர்க்கதிர்டொழிமழையிரும்டணித்திவலை
நஞ்செதிடபினுமந்நிலையல்லதுநடுங்கார. (௧0௩)

இக்க * ணின்னணமருர்தவமியற்றிடுமெல்லை
தொக்கநான்முகனரிமுதல்வானவர்துவன்றிப்
புக்கியாமனோபுதலவன்மற்றரியரன்புதல்வன்
முக்கணன்றிருநடந்தொழக்கைலையின்முன்னி. (௧0௪)

நத்தமூர்த்தியைக்கைலையின்மருங்குறத்தணவா
வத்தனைத்திருநடந்தொழக்கைலைவெற்படைந்தா
ரித்தலைச்சிறைக்கலுழனுமன்னமுமெதிர்ந்த
சித்திரக்கலாமயிலினையடைந்தனசெப்பும். (௧0௫)

சாகதீவகத்தரசரோர்நால்வருந்தழுவித்
தோகையங்கொடிச்சேவலுந்துர்க்கைவாளரியும்
வேகவெம்பரிச்சாத்தனின்றுகைக்கும்வெங்களிறு
மாகவேண்டினரருந்தவமழன்முகத்திழைபடார். (௧0௬)

வருடநாற்பதினாயிரஞ்சென்றனமதியீ
ரருடரும்பதமுங்களுக்கிழக்குநாளடுத்த
பொருவினும்பதமின்றுகொளுளைகொல்புகுவார்
வெருவரும்புனல்வருமுனமணைசெயல்வேண்டும். (௧0௭)

என்னக்கூறியகலுழனுமன்னமுமேக
வன்னக்காமயின்முதலியவாகனங்குழுமித்
தின்னச்சீறியவாமெனுமடுசினந்திருகிக்
கன்னற்போதினிலவருழைக்கடுஞ்சினங்கனலா. (௧0௮)

---

* "ணின்னவருத்தவ" என்றும்பாடம்.

கனல்விழித்தன *வனமெலாம்பொடித்தனகதுவி
யனனமுகத்துநீரருந்தவமிழைத்தவாறறைவீ
ரெனவுரைப்புரைசெவிபுகநால்வருமேங்கி
மனநடுக்குறவரனமுறைநினைந்தவாவலித்தார். (க0சு)

அச்சொற்கேட்ட வுமையின்முதற்கூடியவனைத்தும்
விச்சைமாதவம்புரிந்தருள்வேந்தனைவெகுளா
விச்சையெம்பதம்விரும்பினிராதலினினிநீ
ரொச்சைமாகணக்தலத்தொடுங்கலத்திரொன்றுனையா. (கக0)

மீண்டடைந்தனகயிலையின்மருங்குறவேந்தர்
மாண்டவெங்கணத்தலைவராய்வதிந்தனர்மறுத்து
மாண்டுமாமயினமுதலியவவற்றொடுமெளியேம்
வேண்டுமாதவமுறுங்கொலென்றிரந்தனர்விளம்ப. (ககக)

மயிலுஞ்சேவலுமுதலியமனநெகிழ்ந்திரங்கிக்
கயிலைமாகணத்திருந்துநீர்நாள்பலகழித்தான்
முயலுநுந்தவபடயனெலாமுற்றுதிரொன்னப
டியனிறக்கணமண்டவாடரணனிற்புகுந்த. (ககஉ)

மாயனூர்தியுமலரயனூர்தியும்வனத்தி
னேயநந்தவமழிபடதற்கியற்றினவென்னத்
தீயசிந்தையிற்கிடத்தியக்கணத்தவர்சினவி
மேயதோகையுங்கருடனுமுடற்றுபோர்விளைத்தார். (ககங)

முக்கணன்றிருநடந்தொழுமுதன்மையோராயாரு
மக்கணத்தினிற்றம்பதியடைந்தனரதன்பின்
மிக்கநால்வருமறுமுகனுணையால்விரிநீ
ரொக்கமாநிலததசுரரிறரேன்றினாதொடர்பால். (ககச)

ஆயதன்மையினசுரரிறரேன்றினரொன்றுற்
சேயவானவர்தங்களைத்தீமைசெய்தொறுப்பா
னேயகாரணமென்கொன்மற்றியம்புதியென்றுண்
மாயைதன்மகளயமுகிக்குணாததுவாண்மறித்தும். (ககரு)

பூதராமிவாகணத்தொடும்பொருந்தியமேனாட்
காதுவெஞ்சினத்தசுரருமமரருங்களத்தின்
மோதவானவாபேரமரிழந்தனர்முறிந்தார்
பாதுகாபபிரொன்றிவனாவந்தடைந்தனர்பதறி. (ககசு)

---

கனலவித்தன" எனவும்பாடம்.

அன்றுவானவர்க்குதவுவானகனிலத்தடைந்து
குன்றுருத்தெனக்குவலயப்பூதரிற்குழுமிச்
சென்றுருத்தெழுநிருதர்வெஞ்சேனையைச்செருவிற்
கொன்றுவானுலகிந்திரற்குடியிருத்தினரால். (கக௭)

அந்தரத்தவர்க்குதவிவான்கயிலையையடைந்தா
சந்தவார்புயத்தருவாகோனிடனொடுந்தமித்து
வந்திரங்கியவ்வண்டவாபரணனைவழுத்தி
யெந்தைகேண்மதியெங்குறையுளதெனவிசைப்பான். (கக௮)

நின்னதாணையி * னிலைஇயபூதரோர்நால்வ
ரொன்னதாகியசேனையையுயிர்செகுத்திறுத்துப்
பின்னரீங்கிவணடைந்தனரொனறனன்பிழையோர்ந்
தன்னகாலையிற்பூதநாயகன்வெகுண்டனனால். (கக௯)

வருதிநால்வருநீவிரென்னாணையைமதியா
தொருவிவானவர்க்குதவிசெய்தவுணரையொறுத்தீர
குருதிவாளெயிற்றசுரர்வெங்குலத்திடைத்தோனறித்
தருவிலுட்டவாக்கிடும்பைசெய்தகனிலஞ்சரிடமீா. (க௨0)

என்றுரைத்தனனண்டவாபரணன்மற்றிவரு
மன்றவன்சொலுஞ்சாபத்தாலம்டரத்தவர்க்குக்
கன்றுவெஞ்சினத்திடும்பைமுற்றிழைத்தனாகண்டா
யன்றுதொட்டவரிழைத்திடுமிடும்பையின்றகனற. (க௨க)

இவணிகழ்ந்தனவின்னணமீங்கிதனமேலுட்
டவறின்மாதவமியற்றியசாகத்தீவரச
ரவரைமாதவமழித்தனதிருவுளத்தடையாக்
கவரொளிக்கழனமுருகவேள்வெகுளியிற்கழறும். (க௨௨)

கொடியெனப்பிடித்துயரியசேவலைக்கொழுங்கார்
நெடியதோகைமாமயிலினைநீவிர்போயுருத்து
முடிவின்மாதவமுயற்சியையொழித்தனிரதனாற்
கடியபாதகமடைந்தனிரெனமனங்கறுத்தான். (க௨௩)

இற்றைநாண்முதலெம்மடிதாங்கலையினிநீ
கொற்றவாகொடியல்லையெனறிவற்றினைக்குறித்துச்
சொற்றவாசகங்கேட்டுழிக்கொடியொடுந்தோகை
வெற்றிவேலவற்பணிந்துநின்றினையனவிளம்பும். (க௨௪)

* "னிலைபெறும்" எனவும்பாடம்.

இன்றுகாறுநின்னிணையடிததொண்டுபூண்டிருந்தே
மென்றுநின்னடிடாகுதுவதெம்மனத்துணரோம்
வென்றிபூததொளிராவிளங்கிலேவேற்படைப்பெரும
வொன்றியேழையேம்புரிகுவதுரைத்தியெனவிரப்ப. (௧௨௫)

கஞ்சிமானகரடைந்துநீவொமையுணர்கருத்தான்
மஞ்சுதோய்வரைமாதவம்புரிகுதிர்புரிந்தாற்
றஞ்சமெம்மடிதருகுதுமெனச்சென்றுசாரா
வஞ்சிலம்படிநினைந்துநின்றவனடியடைந்த. (௧௨௬)

பயிலுஞ்சூரனும்பதுமனுமியற்றியதவத்தான்
மயிலுஞ்சேவலுமாயினாவாளரிமுகனு
மியலுந்தம்பியுநினைந்தனமுடிப்பதற்கெண்ணிப்
புயலுண்டேகுறுங்கயிலையினந்திடாற்புகுந்தார். (௧௨௭)

நந்திநாதநின்னளிர்கழற்பங்கயமடைந்தேம்
புந்திகூாதவநாள்பலகழிதரப்புரிந்தேம்
விந்தையூாதியும்வெண்ணிணச்சூற்படைச்சாத்தன்
றந்தியூாதியுமாகுவமெனமனந்தரித்து. (௧௨௮)

அளியமாற்றியவருந்தவமவபபடாதருளி
யொளியநீறணியெம்பிரானருடியென்றுரைப்ப
வெளியவாளெயிற்றிவர்முகநோக்கினன்வியவாத்
தெளியுநான்மறைநந்திமற்றினையனசெடடம். (௧௨௯)

நீறணிந்தருளெம்பிரானேறியநெடுங்கோட்
டேறவாக்குளவூர்திகட்கிருங்கதிகொடுக்குங்
காறுமெம்முறையிருத்திரொன்றுரைத்தனன்கருதி
வேறுகொண்டிலரிருவருந்தமதுளம்வியந்தார். (௧௩0)

இப்பெருங்கதைகேட்டுழியமுகியென்டாள்
கப்பிளந்தனச்சுமையுடைத்தாயொடுங்கவைக்கோட்
டொப்பருந்திறலேற்றினுனுாதிகளினைத்துந்
தப்பில்வான்கதிபெறுவனசாற்றெனச்சாற்றும். (௧௩௧)

வெள்ளியங்கிரிக்கோட்டகமேவருமிறைவன்
வள்ளிநுண்மருங்குமையிடைத்துர்க்கையைவருத்திப்
புள்ளிவண்டறைதுளவணிமுகிலிடைப்பலவூ
னள்ளிலப்படைச்சாத்தனைவருத்தினனதுநாள். (௧௩௨)

இனையர்போந்தனரெம்பிரான்றிருவடியேத்தி
வினையவூர்திமற்றெங்களுக்கருளெனவேண்ட

வனையவேற்றினையழைத்திவர்க்கூர்திநீயருள்வா
யெனவுரைத்தலுமெறுழ்வலித்துணைமருப்பிடபம். (௧௩௩)

அருவிமால்வரைக்கயிலையினருகுறச்சரிக்குந்
திருகுசீற்றவெஞ்சீயமொன்றிழிமதச்செருக்கி
னெரிவிழிக்கரத்தந்தியொன்றீங்கிவர்க்களிப்பக்
கரியுமத்திறலாளியுந்தனிமனங்கவலா. (௧௩௪)

இடபநாயகயாங்களிக்கயிலையினிருந்துன்
படரொளிப்பதம்பெறுகுவானருந்தவம்பயின்றே
மிடையினீங்கிதுற்பவித்தவாறெதுவெனவிசைப்ப
வடன்மருப்புடைவிடையவற்கின்னணமறையும். (௧௩௫)

சேயகாலமற்றினையவர்க்கூர்தியாய்த்திரிந்து
போயபின்கதியளிக்குதும்போமினென்றிவரை
யேயபின்னர்மற்றவாக்கவையூர்தியாயிருந்து
மாயிரும்பதமேறறிஞலடைந்தனமகிழ்ந்து. (௧௩௬)

ஏறுமூர்திமற்றிலமெனவிருவருமெதிர்ந்து
கூறுநான்மறையேற்றெடுமுரைத்தனாகுறுகி
நீறிலங்கொளிநந்திதன்னுளத்தொடுநினைந்தான்
வேறுகொண்டிவரிருவரைக்கொடுத்தனன்விரும்பி. (௧௩௭)

சூராதிகளொடுக்கசருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் உ-இ திருவிருத்தம் - உஉ௩.



## மூன்றாவது
## அயமுகிசருக்கம்.

### கலிநிலைத்துறை.

ஏதுகேட்டிநின்றயமுகிபின்னருமினிநீ
தாதுவார்குழலன்னையென்னிலைசொலத்தகுமென்
றோதவோதுவன்கேண்மதியென்றனனுடையாள்
சீதவார்பெருங்கடலகத்துளதொருதீவு. (௧)

தேங்குதண்புனறகிடந்தகோமேதகத்தீவின்
வாங்குநான்மறைவிசிட்டனென்றுளனொருமறையோ
னுங்கவன்றனிச்சுவேதையைவேட்டனனவள்பா
லோங்குமாதவத்துதித்தனள்சித்திரரோகை. (௨)

அழகெலாந்திரண்டோருருக்கொண்டனவனையாள்
குழவிமானிளம்பிடியெனத்தவழ்தொறுங்குழைவாள்
மழலைவாய்மொழிக்குதலையிற்கேட்பினுமாறுந்
தழையுலர்ந்தனவாயினுமரும்பினதழைக்கும். (௫)

குழைத்தசெம்பொனுலியற்றியபுனைந்தகூன்சிலம்பு
தழைத்தசில்லொலிகலிப்பப்புறத்தளர்நடைபயின்று
ளிழைத்தமாதவத்தன்னைகண்களித்தனளிருபப
மழைத்தவாகுழலேழ்வயதுற்றனள்வளாநாள். (௬)

அனையதீவகத்தயல்கிடந்துளதொருநகரந்
தனையுளாத்திடிற்றயங்குபூச்சக்கரமதன்பா
னினையுநான்மறைக்குலத்தரிசன்மனோநெறியோன்
மனைவயிற்றிடைத்தோன்றினனொருதனிமதலை. (௭)

புனிதமாதவன்புண்டரீகப்பெரும்பெயரான்
றனிமறைப்பெருந்தலைவனத்தையலைமணந்தா
னினிதுகொண்டுபோய்த்தனதகத்திருத்தினனிவளை
வனைகனங்குழைபுதுவனப்பொருங்குறவளர்வாள். (௮)

எரியுநஞ்சமுமமுதமுமெடுத்துறக்குழைத்துப்
டரிவினீட்டினகிடத்தினவாமெனடபதைத்த
வரிபரந்தனவயல்பிறழ்ந்தணிகுழைநடந்த
கரியவாயினவெளியவாயினதடங்கண்கள். (௯)

ஆரிருட்பிழம்பொழுக்குவிட்டனையதோகமஞ்சூற்
காரிருட்கொழுந்தொருவழிக்கான்றதோகமழ்ந்த
வேரியஞ்சனமயிரெனவிழுதுவீழ்ந்ததுவோ
வாரிணாச்சுருளோதியையாதெனமதிப்பாம். (௰)

முளைத்தவான்பிறைமுந்தினமுற்றியபின்னர்க்
கிளைத்தவாரிருட்கீழ்வடிம்பிணைபெறக்கிடத்தித்
தளைத்தவாமெனக்கரும்புருரத்தொடுந்தயங்குந்
திளைத்தசிந்துரவாணுதல்யாதெனத்தெரிப்பாம். (௰௧)

பயிர்ச்செய்கானகமரகதபசும்பனித்தோகை
மயிற்குலங்குழீஇமயங்கினசாயலின்மயங்கு
முயிாத்தபூந்தழைமாஞ்சினையுடனுறைந்திசைக்குங்
குயிற்கொழுங்குரலமுதொடுங்கூட்டினகுதலை. (௰௨)

முழுத்தபானிலாப்பிதிர்த்தனமுறைமுறைதிருத்தி
யழுத்திவைத்தவோவமிழ்தினையரும்பெனலாக்கிப்

பழுத்தவெண்ணிலாப்படுத்திவைத்தனகொன்மற்றறியோ
மொழுக்குவாணகையாதெனவுணாந்திலமின்னும். (௩௧)

வட்டவாாசுருளோலேயிற்பொலிந்தனவள்ளே
கெட்டகாமனுக்கன்றுயிாகொடுத்ததிக்கிளேயே
தொட்டவாாதிாைப்பரவைமாநிலத்துயிர்சூறை
யிட்டருந்துறமறலிகைத்திருத்தியவிலக்கே. (௩௨)

இலவுபூத்ததிற்பவளமென்கொழுந்தொளியிருத்தி
மலர்முருக்கிதழ்ச்சேயொளிவழித்ததின்விரவிக்
குலநறுங்கனிவீழியிற்கொடுத்தனவெனலா
யலேகடற்படுமாரமுதரும்புசெவ்விதழாள். (௩௩)

அரும்புகண்கறுத்நாரமுதகம்பொதிந்தமிழ்தின்
குரும்பையொத்தணிதிதலேமீபபொடித்தறக்குழைந்த
மருங்கினுக்கிரங்கா திருமருங்கொளிபழுத்து
முருங்குதன்மைபெற்றெழுந்திணேமுகிழ்த்தவெம்முலேயாள். (௩௪)

மறுவின்மென்கலேசுருக்கவக்கலேயொடுமயங்கி
புறுவதின்மைபெற்றுலகெலாமயக்கியமார
னிறுதிபெற்றபின்னெடுத்தவோருருவெனலாகிச்
சிறியசிற்றிடையவனுயிராமெனத்திகழும். (௩௫)

அருடபிளந்தனத்தாருயிரளித்தவராசை
விருப்பமெவவளவவ்வளவாகியவிரிவா
யுருத்துருத்தமுறூற்றிருந்தன்னவருளம்போற்
பெருத்தறக்கனிந்தகலியவல்குல்பெற்றுடையாள். (௩௬)

டாயொளிப்டணித்தாமரைபரிதிவிட்டுமிழுங்
காயொளிக்கதிர்பட பட்க்கருகுவகதுவா
மீயொளிப்டமென்மையுந்தன்மையும்விரவிச்
சேயொளிபடச்சிவந்தனசீறடிச்சிலம்பு. (௩௭)

சாந்தளாவியபொதியகினறுயிர்பபுறத்தவழ்ந்து
போந்ததென்றலங்குழவியோர்தளர்நடைபோலு
மாந்தராருயிாமயக்கியமடநடைக்குவமை
சூந்தலம்பிடியன்றிமற்றியாதெனக்குணிப்பாம். (௩௮)

இவளேயின்னுயிர்க்குயிரொனத்தழுவினனிருந்தான்
புவனமுண்டுமிழ்ந்தளந்தவனிணேயடிபோற்றித்
தவமுயற்சியினெழுகுவானறநெறிதவறு
னுவர்க்கருங்கடலுலகமொத்தொழுங்குறவாழ்வான். (௩௯)

துளவமார்பினனச்ருக்கியவுத்தரீயத்த
னளவுதாமரைமணியினளூரமுதளைந்த
இளவிமென்குயிலம்புயத்திருமகள்கேள்வ
னுளநினைந்திடுவயிணவத்தலைமைபெற்றுடையோன். (௨0)

பொருவின்மாதவப்பண்டரீகப்பெரும்பெயரான்
மருவுசித்திரரோகைபூண்வனமுலைமயங்கி
யொருவுறுவருங்காமவெங்கடற்படிந்துற்றுன்
றிருகுசிந்தையளிவனெடுஞ்சிறந்தனள்சிலநாள். (௨௧)

மறைக்குநாயகனீங்கிவன்வறுமைகண்டிரங்கி
நறைபடசுந்துழாய்நாயகனொருமணிநல்க
நிறைத்தமாநிதிக்குடையங்கதுதரநின்றான்
செறித்தவாயிரஞ்சிடருக்கருளினன்சிறந்தான். (௨௨)

இவனகத்திருந்தில்லறமாட்சியினிழிந்தா
ளவனடித்துணைச்சீடரையவாவினளணைந்தாள்
குவிமுகிழத்துணைக்கொங்கையாள்குறிபபுவேறுகிக்
கவருளத்தினள்காமமிக்கூாதரக்கவல்வாள். (௨௩)

வாளரித்தடங்கண்களாலுயிருகமருட்டு
மூளெரிக்கடுங்காமவெந்நோய்கெடமுயங்கு
நாளொரானாழிகையாயினுமொழிவுறணயபபால்
வேள்விசுநபமேயல்லதுவேண்டுழிவேண்டாள். (௨௪)

அள்ளல்வாாகடலகனிலத்தாடவரநேக
ரொள்ளிறைப்பொழுதொழிவுறுதியற்றினுந்தமித்தாற்
கள்ளவாணெடுங்கண்ணிதனநுபவக்கலவி
யுள்ளமோாந்துமெய்பொடித்திருங்காமமிக்கொழுகும். (௨௫)

கோட்டிரும்புனற்கொள்ளையக்கோடிறமுறித்து
நீட்டிநிடொறுமாயிரங்கவர்த்தலைநிமிரும்
வாட்டடங்கணுமனையனமாந்தரிற்படரும்
தோட்டலங்கலாள்சிந்தையுமவ்வழித்தொடரும். (௨௬)

மனையிழந்தனர்மாநிதியிழந்தனர்மயங்கி
நினைவிழந்தனாநெஞ்சிழந்தனர்நிலையிழந்தார்
புனைசெய்மாநகாமாந்தரிலவளொடும்புணர்ந்தா
ரினையவொன்பெழுந்தியங்கியவாக்கையரிளைத்தார். (௨௭)

கலிவிருத்தம்.

ஆயளின்னணமவ்வழியெய்துழி
மேயவேதவயிணவவேந்தனை
நேயநெஞ்சொடுநீண்மறையோரொடுந்
தூயசிந்தைத்துருமுனியெய்தினான். (உ௮)

சென்றவத்துருவாசற்கெதிர்செலா
வொன்றுசிந்தையுருகவுருகினு
னின்றுநீவரற்கெத்தவஞ்செய்தனன்
வென்றிமாதவவென்றுவிளம்பினான். (உ௯)

பொய்யின்மாதவப்புங்கவனைத்தொழு
தையபொனனடிசாத்தினையாதலி
னெய்துமென்னகமெத்தவஞ்செய்ததோ
செய்தமாதவவுண்மைசிறந்தனன். (௩0)

என்னுமன்பினெடுத்தெடுத்தேத்தமு
வுன்னருந்தன்னுறையுள்கொண்டேகினான்
முன்னருந்துருவாசனெடுஞ்சுடா
ரனனுமாமணிமண்டபம்வைகினான். (௩௧)

ஆசனந்தந்தருச்சனைசெய்தபின
போசனஞ்சொற்றமைக்கடபுகுந்தனன்
டாசிழைக்குடபரிந்துரைத்தானவண்
மாசகற்றியமைத்தனண்மாட்சியின். (௩உ)

இயலுமன்பினடிசிலிழைத்தபின
புயனறுங்குழல்கொண்டனைபோவெனக்
கயனெடுங்கட்கரும்புகொண்டேகினு
டுயிலுநெஞ்சிற்றுயில்வளர்வான்றனை. (௩௩)

கண்டுவெஃகியக்காமக்கலவியுட்
கொண்டுவீழ்ந்துகுலத்தோடழுவினு
ளணடரோத்துமருந்தவன்றன்விழி
விண்டுநோக்கவெருவரவோடினாள். (௩௪)

ஓடிநாற்சதுக்கத்துயராலடி
கூடினாள்செந் * துருவைக்குழாத்திடை

* ஆட்டுமந்தை.

நீடுமாதவனின்றுவெகுண்டுதன்
சீடனைக்கடிந்தன்னவட்டேடென்றான். (௩௫)

விரும்புசீடன்விரவிற்றுருவியு
மரும்புகொங்கையையவ்வழிகண்டிலன்
றிரும்பிமாமுனிதன்னெடுஞ்செபபிரு
னிருந்தமாதவன்றன்னுளத்தெண்ணினான். (௩௬)

தழுவிநாலுசதுக்கந்தருதெரு
வெழுவுமாலினிருநிழற்றுஞ்சியே
குழுவு * டளலைக்குழாத்துட்கரந்தவள்
வழுவினின்றுவரம்புசிதைந்துளாள். (௩௭)

† தவறினில்லறத்தாறிழிந்தாடனைக்
குவளையுண்கட்பொதுமகட்கொண்டுடோ
யிவாதடஞ்சினையாலிடத்தேற்றியுன்
றவமுயற்சியைக்காட்டுதிதனைமையோய். (௩௮)

சேறியென்றவத்தீதறுசிந்தையோன்
கூறுசொற்றலைக்கொண்டகுணத்தவன்
வேறுகொண்டவிருபபினளைப்பிடித்
தேறுதொன்மரத்துசசியினேற்றினான். (௩௯)

ஊடுவாடையுறுந்தொறுமென்சினை
யாடுதோறுமலமந்தலறுவாள்
கோடுபறறிக்கிடந்துதுலுங்குவா
ணீடுநெஞ்சினிழியநினைந்துளாள். (௪௰)

மானமாநகாமைந்தருமாதருங்
கானவாாகுழற்கனனியைக்கண்டுவிண்
போனமாமரத்தெவ்வணம்போயினள்
மோனஞானிமொழிகொடிதென்றனர். (௪௧)

அறிந்தவட்குயிராகியவந்தணன
பிறிந்திருக்கப்பெறுகிலன்பேரருட்
செறிந்தமாதவச்செல்வனையேத்துரு
மறிந்துவிழ்ந்தமரமெனவீழ்ந்தனன். (௪௨)

---

* ஆட்டுமந்தை.

† "அவளை யில்லறத்" எனவும்பாடம்.

ஐயநின்னருளின்மையென்றாயிழை
லையம்யாவும்வழூச்சொலவைகினாள்
வெய்யவாலைவிடுத்திழிதற்கருள்
செய்யவேண்டுந்திருவருள்செய்கென்றான். (சங)

இல்லறத்தையிகழ்ந்தொழிவாளிவள்
புல்லொழுக்கம்பொருந்துறுபுன்மையோய்
வல்லறுத்தவனமுலைமாநிலத்
தெல்லவாக்குமினிதளித்தாளரோ. (சச)

இன்னதன்மையிவளையுனக்கென
வனணிமுன்னர்வழங்கினராலவ
டன்னலம்பிறர்க்காகச்சமைந்தன
ளுன்னையோர்பொழுதுள்ளுகிலா * ளென்றான. (சரு)

ஏதுகுற்றமிழைந்தனளேனுமம்
மாதுகுற்றமனக்கொளலையநீ
மீதுயர்ந்தவடத்தருவிட்டிவள்
போதவொன்றுபகலுதியென்றனன். (சசு)

கற்பினிளறுகணங்குழையாயினின
சொற்படிக்குயாதொன்மரநீங்குவா
னெற்படுஞ்சினைபற்றியிறங்குவான்
முற்படப்போய்மொழிகுதிநீயென்றான். (சஎ)

வந்துநின்றென்மனைவிவருகெனச்
சந்தவாமுலைநாலடித்தாழ்ந்தன
ளிந்தவெல்லையிறங்கப்படாதென்றாள்
குந்தியோடினன்மாதவற்கூடினான். (சஅ)

நாலடிச்சினைதாழ்ந்தனளம்மவென்
னேலவார்குழல்பின்னரிறங்கிலன்
மாலடிக்கொண்டயம்மரினென்னினிச்
சீலமாதவசெய்குவதேதென்றான. (சகூ)

மங்கைகொங்கைமயங்கிமுயங்கினா
ரங்கண்மாநிலத்தாடவர்யாவரும்
பொங்குமாலடிபோந்திறங்காயெனி
னங்கைகீழ்வருமென்னநவிற்றினான். (ருo)

மையலொன்றுமனக்கொடிருந்தவா
தையலைப்புணர்ந்தாரவர்யாரையும்

---

* “துள்ளுணரா” என்றும் பாடம்.

வெய்திஞேடிக்கொண ரவிளித்தன
ரெய்துமாமரம்பாதியிறங்கிஞள். (ருக)

இப்புறத்தினிறங்கரிதாயவ
டப்பறத்தழுவிச்சினைசார்தலு
மொப்பறுத்தமுனியருகோடிஞன்
குப்புறுத்தமுகத்தினன்கூறுவான். (ருஉ)

என்னையிவ்வணங்கண்டனையேயினிக்
கன்னிபாற்றிருக்கண்ணருள்செய்யென
நின்னருட்பெறுவார்நின்றுகூவிலுன்
பொன்னனுளுமிறங்குவள்போகென்ருன். (ருங)

அன்னசீடருந்தானுமடைந்துதன்
பன்னிதன்னையழைக்கப்பகர்ந்தனன்
பினனரன்னவர்கூவப்பெருமர
மனனடிக்கவைவந்திருந்தாளரோ. (ருச)

* கூண்டபின்னற்குடுமியலைந்திடப
பூண்டதாமனைமாலைடிரண்டிட
வீண்டுதுன்பத்திரைத்திடவோடிஞன்
மீண்டுமாதவவேந்தனைநண்ணிஞன். (ருரு)

கவாதருஞ்சினைக்கப்பினிறங்கிஞ
ளிவளைமுற்றுமிறங்கபபணித்தியென்
றவனையேத்தியிரந்தனனந்தணன்
புவனமேத்துமுனிபகல்வானரோ. (ருசு)

பேதைதனனைப்புணர்ந்தவர்பேரொலா
மோதியோதியுணாத்திலிறங்குமென்
ருதிவேதமளந்தவன்சொற்றுழி
வேதவேதியன்பின்னருமீண்டனன். (ருஎ)

ஏடிநின்னிளங்கொங்கையிணைத்தடங்
கூடிஞர்பெயர்முற்றுறக்கூறினீ
தோடுவார்ந்ததொடுசினைவிட்டடி
மூடிறங்குவையென்றுமொழிந்தனன். (ருஅ)

இன்னவாசகங்கேட்டலுமேந்திழை
யன்னகேள்வரநேகனாயெண்ணிஞள்

* சடைக்கற்றை.

பின்னரந்தப்பெருங்கவைநீத்ததின்
மன்னுகீழ்க்கவைவந்துவதிந்தனள். (௫௯)

எவற்றினுலுமிறங்ககிலாளினிச்
சிவததிறந்தெரிசீயவட்சென்றிடில்
கவர்த்தடம்பணைகைவிடுமெய்துவாய்
தவபெருங்கடலேசரணென்றனன். (௬0)

மூரலித்தமுகத்தினனந்தண
ஞர்வநோக்கியகநெகிழ்ந்தாரணச
சீரளந்தறிசிட்டர்குழாத்தொடும்
பாரவெம் * பழுவத்தருகெய்தினன். (௬௧)

எய்தியன்னளிளமுலைவேட்டருள்
பொய்யினன்மறைப்புண்டரீகன்றனை
வைதிகததனிமாமுனிநோக்கிநின்
செய்கைசிற்றெழுக்கத்திற்சிறந்ததால். (௬௨)

வாளைவென்றமதர்விழியாளிவள்
† சூலையெனபதுணர்ந்துந்துணைமுலை
மூளுமாசையின்முற்றிமுயங்கினைய
கோளறுந்தவத்தன்மைகுறைந்தனை. (௬௩)

மற்றொமாதைமணந்திலைமாதிவள்
பெற்றடாவம்பிரித்தொருபாதியு
முற்றதாலுனையோங்கெயின்முபபுரஞ்
செற்றதேவனடித்துணைசேர்கலாய். (௬௪)

புண்டரீகனதுபுலத்தோரந்தனன்
விண்டுவாய்மொழியொன்றும்விளம்பலன
றண்டருஞ்சொற்சமயவிரோதமுட்
கொண்டெனக்கிதுகோளுரைத்தாயென்றன. (௬௫)

வேகவெஞ்சினமீக்கொண்டுதன்மன
மாகவற்சிதரததுருவாசனும்
யோகசித்தனையோகிமனத்தின
ஞகநின்டெயரொன்றறைந்தானரோ. (௬௬)

புன்புறச்சமயபபுறநின்றுநீ
யென்பெருக்கணியெந்தைபிரானடி

* ஆலமரம்.
† வேசை.

யன்டிறப்பெறுவாயலெவெண்ணிற
மின்பிறங்குவிபூதியும்வேண்டலே. (சுஎ)

ஆகியபடிறபடின்சமயத்தறுய்ப
போகபோகவெனபடுகன்றனனவன்
பாகமுற்றிடுஞ்சீடனைபடாத்துள
வேகவெஞ்சினமீக்கொண்டறைகுவான். (சுஅ)

பின்னுசிந்தைப்பிணக்கறுத்தாரண
மன்னுசிந்தையராக்கியமாதவன்
பன்னிகொங்கையிற்பற்றுவைத்தீாநுமா
மின்னனாகளும்வேசையராகுவார். (சுகூ)

என்றுகூறியெரிவிழித்தாங்கவாக்
கொன்றலாதபலமுனிந்தோாதினன்
கன்றுநெஞ்சக்கனங்குழைவைகிய
துன்றிருஞ்சினைத்தொன்மரநோக்கினன். (எo)

வார்ந்தகூந்தல்கவிந்துடமாமரஞ்
சேர்ந்தமார்பங்குருதிசிலும்பிடச
சோர்ந்துமாமரந்தொற்றியிருந்தன
ணேர்ந்தசிந்தைமுனிவனிகழ்த்துவான். (எக)

கொம்மைவெம்முலைக்கோற்றெடிநீயிவ
ணெம்மைமேலவிழுந்தெம்முருத்தீண்டலால்
அம்மவெங்கணசுரரிறனேன்றியே
வெம்மைக்காமவிகாரம்பெறுதியால். (எஉ)

அயக்குலததுட்கரந்தனையாதலின்
மயக்குநின்முகமம்முகமாகுமால்
வியக்குமக்குலமேவியும்வெம்முலே
முயக்குகாமமுடிவொழியாயென்றான். (எங)

ஈதுகூறிமரத்தினிறங்கினை
போதியெனனவிறங்கிபடுகுந்தனள்
கோதினமாதவன்பாதங்குறுகினை
மாதராாக்குமரபுவழுச்செய்தாள். (எச)

எந்தைநீயிவணெனறுணைக்கேள்வனைத்
தந்தைகேள்வித்தலைவாச்சாபியா

சிந்தைதந்தனனென்கொடுதேறுகேன். (எரு)

ஈதுபட்டுமெளியணிணைமலர்ப்
பாதந்தீண்டப்பணித்திலைபோலுமென்
முதரத்தினவளிரப்பத்தனி
வேதமாமுனிபின்னர்விளம்புவான். (எசு)

செய்தபாதகஞ்செப்புறப்போமெனப்
பைகொண்மாநிலமோதுபழமொழி
யையனுண்மருங்காயறியாய்கொலோ
தையனின்பவந்தானேதொலைந்ததால். (எஎ)

பெண்ணுருக்கொண்டசுராபெருங்குல
நண்ணுநாளருங்காமநயப்பினும்
கண்ணிணைக்குரியாதமைக்கைக்கொளா
வண்ணவெம்முலைக்கோட்டின்மருவுவாய். (எஅ)

ஆபகாலத்தியாமவனெய்தவன்
றூயவெம்மைத்தொடாந்தனையாகிநீ
மேயகாமவிருப்பொழிந்தக்குலந்
தேயமைந்தரிருவாபபெறுதியால. (எ௫)

மாக்கனத்தொடுவைகியவையனைக்
காக்கும்வெங்கதக்காளாகரத்தினை
மூக்குமிந்தமுலையுங்கரத்தொடும்
போக்கிவீழ்ந்துபுலம்புவைநீயென. (அ0)

ஆங்கவன்றெடவன்றளவுனவயி
னோங்குபாவமொழிந்துணாவுற்றுநீ
தேங்குதன்சுனேசசீகுலவெற்பிடை
வாங்கிருந்தவமன்னுதியேகெனமுன். (அக)

அனையளாயவணீயென்னருந்தவத்
தனையளாகச்சனித்தனையததவ
முனைவனோதியசாபமுடிந்ததால்
வினையினீங்கித்தவத்தைவிரும்புவாய். (அஉ)

அயமுகிசருக்கம் முற்றிற்று.

---

ஆகச்சருக்கம் ௯-இ திருவிருத்தம் - ௯0௫.

## நான்காவது
# மாயைசருக்கம்.

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

என்றுரைத்துணர்த்துமாயைதன்முகமினிதுநோக்கி
வன்றிரண்முரட்டுக்கொங்கையயமுகிமறுத்துங்கேட்கு
நின்றவென்னியற்கையெல்லாநிகழ்த்தினைநிகழ்த்தாநின்ற
வுன்றனதியற்கையெல்லாம்புலப்படவுரைத்தியென்றாள். (௧)

முற்படுதொல்லைநாளிற்காசிபமுனிவற்கியானோ
ரிற்படுபன்னியாகியில்லறதொழுகிநின்றே
பற்பலமைந்தர்க்கோடிபயந்தனளவர்க்குவானோ
ரொற்படுபடையினன்னோரிறந்தனர்மடிந்துபோனார். (௨)

செருமுகத்திறந்துபோனமக்களிற்சிந்தைகோட்டி
பருவரற்குடனாய்நின்றுபற்பகலிரங்கிமாழ்கித்
தருநிழற்பகையைவெல்வானகருதியிந்தரணிசார்ந்து
பொருமுகட்டுச்சியேறிவீழ்ந்துயிர்போக்கினேனால். (௩)

பின்னருந்தகுவர்கோற்குப்பெண்ணெனப்பிறந்துமாயை
யென்னுமோர்பெயராலந்தக்காசிபற்கினியளாகும்
பன்னியாய்நும்மையெல்லாம்பயந்தனன்படைத்ததேவர்
பொன்னினுடனேந்துமீளாச்சிறைபுகப்பொருமறீர்ந்தேன். (௪)

பிள்ளைகளுள்வாயார்க்கும்பெறற்கரும்பேறும்பெற்றா
வள்ளைவார்குழையாயானும்பெருங்கிரிக்கண்வந்தே
மெள்ளருந்தவத்தைப்பன்னாளிழைத்தருங்கயிலைசேர்வேன்
வெள்ளியங்கிரியினம்மையுமைபதம்பெறுவன்மேனாள். (௫)

நீபெறுங்கதியுமின்றேநிகழ்த்துவனீயுமந்த
மாபெருங்கயிலைசேர்வாயென்றனண்மகிழ்வுகூர்ந்தாள்
கோபவெந்தீயிற்றோன்றுங்கொடியவளன்னைநின்னைத்
தாபதர்பிரிந்தஞான்றுதனித்தவாசாற்றுகென்றாள். (௬)

குனிசிலைப்பகழிமாரியநங்கவேள்குறித்துநீட்டத்
தனிகிடந்துயிர்த்துவாடைதைவரத்தழலாநின்றான்
பனிமதிவடவைகாலப்பகைத்தன * னாகித்தென்பா
லினியபூந்தென்றனோக்கியெரிமெழுகென்னலானான். (௭)

அந்நிலைகமலபீடத்தந்தணனுணர்ந்துபோந்தா
னுன்னருந்தவத்துளோரிலொருங்கிருந்தயத்தின்மிக்காய்

* 'பதைத்தன' என்றும் பாடம்.

கன்னலஞ்சிலையிற்றூங்குங்கணைக்கிலக்கென்னநின்று
யின்னதீற்றுழந்தாய்கெட்டேனீதுனக்கியைவதன்றால். (௯)

என்றனபலவுங்கூறியிடரொழித்தாற்றிநின்றான்
றன்றனித்தலைமையோனுந்தனித்துயரொழிந்துபின்னர்ப்
பொன்றிகழுருவமங்கைபுலத்தியன்மகளைவேட்டு
நின்றனநெறியபெற்றானெடுந்துயராவிரகவெந்தீ. (௯)

அன்னைசொற்றறியபெறரளதிசயமடைந்தாளின்ன
வென்னைநீயறியபெற்றகாரணமியம்புகென்று
முன்னருந்தவத்துட்டோன்றுஞ்சுக்கிரனுரைப்பமேரு
ளிந்நிலையுணர்ந்தேன்காலமும்மையுமுணர்வனென்றாள். (௧0)

இவையெலாமுணர்ந்தபின்னர்மாயைதானிறைஞ்சியேத்தி
நவையெலாமொழியபெற்றநற்றவமுயற்சிபெற்று
ளிவாகருங்கண்ணிமாயைதன்னெடுமிழைத்துத்தேவ
ரவையெலாந்தழுவாநிற்குங்கைலையையடைந்தாளன்றே. (௧௧)

ஏவியணிகழ்ந்தகாதைபடரிசெலாமெடுத்துக்காட்டி
நனைமலர்ப் * படபைசூழ்ந்தநைமிசாரணியத்தோங்கும்
புனைசடைமௌலியோர்க்குப்புகன்றனன்சூதன்கேளா
வனையவராமகிழ்ச்சிகூரவணிமுடிதுளக்கினாரால். (௧௨)

மாயைசருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௪-இ திருவிருத்தம்-௩௧௭.

## ஐந்தாவது
## விபூதிமான்மியச்சருக்கம்.

கலிநிலைத்துறை.

மேற்கடாவியடொருளெலாம்விரித்தனைவியந்தேஞ்
சூற்பெரும்படைமுதல்வனிற்றோன்றியதோன்ற
ஹற்பெருங்கலைக்குறுமுனிக்குரைத்தனநயந்தே
நூற்பெருங்கடற்கடந்தவநுவலுதியென்றார். (௧)

சூதனவ்வுரைகேட்டலுந்துரிசறுத்துணர்ந்த
போதமாதவத்துறையுளீர்கேட்கெனப்புகலு
மோதுதெய்வவிபூதிமற்றுருத்திரவக்கம்
வேதநுட்பமென்றெடுத்தடஞ்சாக்கரமேன்மை. (௨)

* சோலை.

தன்னுளத்துறுமாயைபோயுணர்ந்தனன்றணவா
தென்னையாளுடைநாயகனீங்கெழுந்தருள
முன்னையான்புரிமாதவமுளதெனமொழியாப்
பன்னுநான்மறைச்சுருதிசொற்றவனடிபணிந்தான். (உ0)

ஈங்கெழுந்தருள்காரணமென்கொலென்றியம்ப
வோங்கெயிற்பரஞ்செற்றவனுரைக்குமூவுலகந்
தாங்குமுந்தியந்தாமரைநான்முகன்முதலோர்
வீங்குவெண்டிரைபிரளயத்தொடுங்கினர்விளிந்தார். (உக)

மோதுவெண்டிரைப்பிரளயமுடிவுமுற்றியதா
லாதிமாநிலபரப்பையுஞ்சராசரமனைத்து
மோதுநீதியிற்படைப்பதற்கொருப்படுத்தியற்றும்
வேதவேதியன்மலரயன்வெளிப்படவேண்டும். (உஉ)

தாருகாவனத்தெய்தியார்ந்துகண்வெஞ்சூலக்
காரியைப்பயக்கின்றநாட்காலமோர்ந்தறிந்தெம்
பாரிசத்தியாயெதிர்ந்தனையின்றுமப்பனிப்பூ
வேரிவார்குழற்சத்தியாகுதியெனவிளம்ப. (உஙு)

அனையனவ்வுருவெடுத்தலுமரனவட்புணர
வினையினெய்தியபொற்றுளிவிந்துவாங்குதித்து
நனைநறுந்துழாய்நாயகனுந்தியந்தலத்து
வனையுநெட்டிதழ்க்கமலமொன்றலர்ந்ததுமன்றே (உச)

முளைத்ததாமரைபீடிகைமுழுமுதற்பிரமன்
கிளைத்தவைந்துமாமுகத்தொடுந்தோன்றியக்கெழுநீர்
வளைத்திடித்தழிவையமுமன்பதைப்பரப்பும்
திளைத்தசிந்தையிற்படைத்தினிதிருந்தகஞ்சிறந்தான். (உரு)

வையம்யாவையுமன்னுயிர்யாவையும்வகுத்த
தெய்வம்யாமலதில்லெனச்சிந்தனைதிறம்ப
வையனூடரவசைத்தணிவேணியனறியா
வெய்யசூற்படைவயிரவக்கடவுளைவிடுத்தான். (உசு)

விடுத்தசூற்படைவயிரவனுருத்தழல்விழித்துக்
கடுத்தசிந்தையிற்புகுந்தனன்கமலநாயகனை
நடுப்படுந்தலையறுத்தெறிந்தரனுழைநடந்தா
னெடுத்தசிந்தையனுன்முகத்திருந்தனனின்னும். (உஎ)
வெள்ளொளித்திருநீற்றிணுலாவிலைமேலோன்
கள்ளமாயைபோய்க்கண்ணுதற்காண்குறப்பெற்றான்

பிள்ளையாமெனமலரயற்பயந்தனன்பெரியோ
ருள்ளிமோர்வதுதிருவெண்ணீறல்லதொன்றுளதோ. (உஅ)

அஞ்சவித்திடுதேவத்துளீரிங்கதுவன்றிப்
பஞ்சமெட்டிரனெரியழன்முகத்தினன்பகுவாய்
நஞ்சுயிர்த்தசற்பாசுரன்மூவருநடுக்கும்
வெஞ்சினத்தின்மூவுலகையும்விளித்தனர்மேனாள். (உகூ)

அலகிலாவலிமூவராலமரர்டட்டிறப்ப
நிலவுநீற்றொளிவீரபத்திரத்தனிநிமலன்
பலகைவாட்படைபொறுத்தனனவருழைப்படர்ந்தான்
சுலவிவெஞ்சுரத்தனையவராருயிர்தொலைத்தான். (௩0)

மீண்டபத்திரன்வின்னுலகடைந்தனன்விளிந்து
மாண்டுபோயினவானவாமறையவர்யாரு
மூண்டபேரருள்சுரந்தவனளித்திடமுறையா
லீண்டுநீறுபட்டுயிரப்பொறையினிதுபெற்றெழுந்தார். (௩க)

இன்னுமத்திருநீற்றதுபெருமையொன்றிசைட்டா
மன்னுமாதவத்துறையுளீர்வரன்முறையுணாவீர்
பின்னும்வெண்டிரைப்பரவைசூழ்பெருநிலபரப்பின்
மின்னெயிற்றுடைப்பிரமராக்கதனொருவிறலோன். (௩உ)

பிடித்ததண்டொடும்பெருவலித்திறனொடும்பெருவான்
முடித்துமாநிலத்துயிரெலாமுடித்தனன்முதனாட்
டொடுத்தபாதகக்கஞ்சுகம்புனைந்தனன்றோலான்
மடித்தவாயினன்மறலியுந்துணுக்குறுமறவன். (௩௩)

வாமதேவனென்றொருமுனியவனுழைவரலுங்
காமர்நீற்றொளியவனுருக்கரந்தமைகண்டான்
றமனைச்சரணேசரணென்றவற்றாழ்ந்தா
னேமுறத்தழீஇநீற்றணிதன்னுருவேய்ந்தான். (௩௪)

முனிவனீற்றணிதன்னுடன்முயங்கியபின்னர்ப்
புனிதனல்லுருப்பொருந்தினனிருங்கதிபுகுந்தான்
குனிதடந்திரைக்கிடங்கர்சூழ்குவலயட்டரப்பிற்
பனிநிலாவிரிநீற்றுடைத்தன்மையார்பகர்வார். (௩௫)

பகருமுத்தமிழ்க்குறுமுனிதமிழ்நிலப்பரப்பிற்
புகலுநான்மறையொருவன்மற்றொருவனிற்புகுந்து
மகரவார்குழையொருத்தியைக்களவினன்மணந்தா
னிகலடுஞ்சினத்தன்னவடலைவனுற்றெதிர்ந்தான். (௩௬)

பாயலிற்படுமிருவரைப்பற்றினன்பற்றித்
தூயமாமறைத்தலைவனையுயிருகத்துணித்தான்
மேயநாட்டுனையிறுக்குறக்கயிற்றெடும்வீக்கி
யாயவெஞ்சினத்திழுத்தனனுவணத்திட்டான். (௩எ)

குருதிபீர்விடமறுகிடைக்கிடக்கலுங்குறுகி
யருகுமாடுறவடலையிற்கிடக்குமோர்சுணங்கன்
பருகிநக்குறவாங்கவனெற்றிமேற்பதத்திற்
றிருவெண்ணீறுபட்டணிந்தனவாமெனச்சிறந்த. (௩அ)

அக்கணத்தினிலவனுயிரடுதிறன்மறலி
தெக்கணங்கொடுசேறலும்வெண்டுகட்சிறப்பின்
முக்கணெம்பிரான்கணத்தவர்முன்னினர்முடுகித்
தொக்ககட்டறுத்தத்திசைத்தூதரைத்துரந்தார். (௩அ)

பிணத்தினுய்ப்பதத்தலைபெற்றிடப்பெறும்பேற்றுற்
கணத்திறோரவன்றனைக்கொடுகயிலையிற்புகுந்தார
புணர்த்தமாதவத்தலைவிர்காண்மும்மையிற்பொருந்தி
மணத்தவெண்டுகட்பெருமையையாரகொலோமதிப்பார். (௪0)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஈங்கிவை நின்றிடக்கவிந்த பணிக்கவிகைத் தனிச்செங்கோ லிக * லேறன்னன், றேங்கமழு நறுந்தெரியற் செருவொழியப் பகைநடிந்து சினவுவேலோ, னேங்குதருமந்தழைடப மனுமுறையி னுயிர்புரக்கு முர வுத்தோளான், வாங்குதடந் திரையுலகிற் புயபலனென் றுளனொருவன் வங்கவேந்தன். (௪க)

அருமறையினெறிதிறம்பாவந்தணருக்கினிதுபுரிந்தளிக்குமன்னோர்
பருவரலுற்றுழலாதுபல்லுயிருந்தனனுயிரிற்புரிந்துமாயாக்
கருணையொருதிருவுருவுகொண்டனையோனிலவலையங்காக்குநாளில்
வருபருதிதென்றிசைவிட்டுத்தரஞ்சென்றயனமுறைவழங்கலுற்றான்.()

அக்காலத்திருநிதியக்குவைதனதுமுன்னரமைத்தருநூல்சொற்ற
விக்காலந்தனைநிகர்த்ததருமநாளில்லையெனடதெண்ணியோர்ந்து [ணீர்
முக்காலம்பகுத்துணர்ந்தமுனிவரரந்தணரவருவான்மொழிந்தான்புண
ணக்காடலலங்கிலைவேற்புயபலனுங்கவாக்குதவக்கருதினனால். (௪௩)

தூங்குதடந் திரைப்பழன விதர்ப்பநாட் டிருந்தனனச் சுசீலனென்பான், வீங்குதடந் துணைபடணைத்தோ ளாங்கவன்றன் றிருநாட்டை விருப்பினெய்த, வோங்கருநான் மறைத்தலைவ னெதிர்புகுந்து தொழுதுநகருய்த்தார் மற்றைத், தீங்குதலைத் திருமணக்கும் புயபலற்கன். னவன்வரவு செப்பினரால். (௪௪)

* ‘கவிகைத் தனிச்செங்கோன்முறை நடத்துமிக’ எனவும்பாடம்.

வேந்தநீ புரிந்தியற்றுந் தவப்பயனே நினதுகுல வேந்தரெல்லா, நீந்துபெருந் தவப்பயனே நின்னுடு புரிதரும நிலேயோமுற்றுந், தோய்ந்தளந்த பெருஞ்சுருதி யோருருவு பெற்றனைய சுசீலனென்பான், பேர்ந்தனனின்னகரடைந்தான் யாவர்க்கு முதற்றலைமைபொருந்தநின்றான்

புரக்குமுதற் பெருந்தான மன்னவற்கு முதற்புரிந்து போயபின்னர்த், தரப்பெறுதும் யாமென்னத் தனிச்செங்கோற் புயபலற்குச்சாற்றவன்ஞான், வரத்தவனை யினிதினின்னே கொணர்திரென்ன மாதவத்தோன் வருதலோடுஞ், சிரத்துமுடி * படிபடியப் பணிந்தெழுந்தான் றனித்திகிரிச் செங்கோல்வேந்தன். (௪௬)

எந்தைநீ யெழுந்தருளப் பெற்றபே றியானிழைத்த தவமோவென்பான், முந்தையோர் நெடுங்காலம் பெரிதிழைத்த தவமெனக்கு முடிந்தவாறே, விந்தமாநிலம்புரிந்த தவப்பேறே வென்றுபல வெடுத்துக்கூறி, வந்தமா தவற்கும்ணித் தவிசளித்துத் தொழுதிருத்தி மகிழ்ந்தானன்றே. (௪௭)

என்புருகவுருகிநிற்குஞ் சிந்தையனுயிருநிதிய மிருகைவாரி, யன்புருகியளித்திடலும் புயபலனை முகநோக்கி யறைவானுள்ளத், துன்பொழிய நிதியுதவிக்கதியுதவுந் திருநீறுதொட்டிலாயா, னின்கருணைக் கிதுமுறையோ வெனவுரைத்த சுசீலனின்னு நிகழ்த்துவானல். (௪௮)

ஏறுயர்த்தசிவபெருமானெம்பிரான்றிருவடிகண்டிறைஞ்சாரோனு
நீறுபுனைந்திடுமவரோதேவர்க்குந்தேவரெனநின்றார்நீறு
மாறுபடுமன்னவரோகொடுநிரையப்படுகுழியின்வயிற்றுவாழ்வார்
சீறருஞ்செங்கோலரசநீறணிந்துதருதியெனச்செபபினனல். (௪௯)

செப்பருமாதவனுரைத்த மொழிதனது செவிப்புகலுஞ் சினமீக்கொண்டு, வெப்பெழுந்தசிந்தையனுய் முனமிழைத்த விதியுடற்றவெகுண்டுநோக்கி, யப்பெருநீறணிந்திலனே லென்னுகுமெனக்கேட்ப வந்தணனா, னொப்பருமாகமத்துறைவன் புயபலனுக் கிதுவகுத் துரைப்பதானன். (௫0)

செய்யதிருநீறுதொட்டுத் தரியாதார் பெருஞ்செல்வஞ் சிதையுமன்னர், கொய்யுளையபரித்திரளுங் கரித்திரளுமறுமன்னர் கொள்வார்வேட்ட, தையலொழிந்தருமகவு தணந்துபெரும்பிணியுடனுய்ச் சரிப்பரன்றி, மெய்யினுறுப்புக்குறைந்து புலையரினுங் கடைப்பிறவிமேவுவாரால். (௫௧)

---

* 'படிபடிய' எனவும் பாடம்.

எங்கணிவற்குறுகதியுண் டெனவுரைத்த மொழிசெவிக்கொண் டிகழாநின்று, பொங்கொளிவெண் ணீறுதொடே னேற்றனேயேற் றரு தமெனப் புகலவன்ஞேன், செங்கணிள மழவிடையோன் றிருநீறு தீண்டாதைத் தீண்டலாகா, விங்குனது தருநிதியமேற்பதிலே யென்று வெகுண்டெழுந்துபோனுன். (ருஉ)

போதாரும்புயபலற்குப்பின்னிருக்குமவன்றேவிபுதுப்பூங்கோதை
மாதொருதன்ஞெனோசிதுரும்புதிருகினடும்மிமறைவலாளா
நீதருதானம்பெறுதேகுதியேற்றடையிதென்னநிகழ்த்திஞண்முற்
ருேதியவந்தணனவ்வூருறைந்திலன்றன்விதாப்பநாடுற்றுனன்றே. ()

தனியாழி யினிதுபுரந் துலகளிக்குஞ் சிறிதுநாட் டணந்தபின்ன ர்க், குனியாடற்சிலேத தடந்தோட் புயபலற்குப் பெரும்பிணிமேற்கொ ள்ளவெற்றித், தனியானைமுதலினவாஞ் சதுரங்க மிறந்தொழிய வறு மைசார்ந்தான், பணியாழிநெடுநிலத்தி னிவற்குடைந்த பகையரசர் பகைத்தாரன்றே. (ருச)

அடுகளத்தி னெதிர்பொரநின் ருற்றலஞு யரணநீத்தகன்று போ கிப், படுவனத்து மனைவியொடுந் தனிப்புகுந்தா னிவனிருந்தபதியுநா டும், விடுபரிதி யிறந்துபடக் கரியகங்குல் வளர்ந்ததென வெகுண்டு போரி, னெடுநிலத்தி னிவற்குடைந்து புறங்கொடுத்த குறும்புதலைநிமி ர்ந்ததன்றே. (ருரு)

புலிகளிறுபொருகானத் திவரிருவரிழந்துதனிப் புகுந்துசின்ஞு, ளொலியருவிப் புனனுகர்ந்து முப்பிலடகருந்தியுமற் ருவியோம்பி, மலரமளி யுறுத்துடலம் பரலதுக்கவைகினராய்ப் பூழ்திவார்ந்த, நில னிடைவெம்பனியொதுக்கி னினிதுறங்கிப் பசிவருத்த நெடிதுவாழ்ந் தார். (ருசு)

மனைவிமுகம் பார்த்தரசு முகங்கவிழ்ந்து மனமிரங்கிக் கண்ணீர் மல்க, வனையதுகண்டனையவளு மழுதிழிகட் புனலொடுநின் றலமந் தேங்க, வினைவிளைய விதிவெறுத்த மனத்தினராய் வருந்துறவோர் வேடஞேர்ந்து, புனையிழைகைப் பிடித்திழுத்துக் கொடுபோக வழுத ரற்றிப் புலம்பலுற்ருள். (ருஎ)

கலிவிருத்தம்.

மனைவாழியகற்புவரம்பழிவான்
வினையாரிதுசூழவிளைத்தனரால்
வனைவார்கழன்மன்னவர்வாளரியே
றனையாயெதுசெய்தியறிந்திலனே. (ருஅ)

பைவார்நிலமன்னர்பதம்பணியச்
செய்வார்கழலோயெதுசெய்தொழிவாய்

மெய்வாழ்யிரொன்னைவிடுத்தொருநீ
யுய்வானுனதாவியுமுண்டுகொலோ. (ருகூ)

எரிமுன்னர்மணந்தனையென்னையெனக்
குரியாயிதுநாளுயிர்போலுனையா
லரிவாழும்வனத்திலகற்றினையிப
பிரிவாயபெரும்பிணிதந்தனையே. (சுo)

வளைசேர்புயம்வைகலும்வைகுறுமென
களைபோயதுயர்க்கடல்கண்டிலையே
யுரவோயெனுயிர்த்துணையேயுலகோ
ரரசேயெனையென்கொடயர்த்தனையே. (சுக)

கொற்றக்குடைமன்னர்குலந்தொழவெண்
கற்றைக்கவரித்துணைகாலசைப
மற்றைத்தனியாசனம்வைகுறுமுன்
வெற்றித்திறனெங்ஙன்விடுத்தனையே. (—)

என்னைப்புலவேடனெடுத்திடமற்
றுன்னைக்கொடுவேதனொளித்தனனோ
முன்னைப்பழவல்வினைமுற்றியதோ
மின்னுத்துவிளங்கிலைவேலுடையோய். (சுஙு)

சித்தத்துளிருந்துசிறந்தனநின்
றெதனைக்கொடுதேறுவதென்றுணரேன்
முத்தத்தொடரோடைமுகம்புரளு
மத்தக்களியானைவயப்பரியோய்.

உன்றுடுபிறர்க்குளவாகவொழிந்
தென்றேடிருஞ்சுரமெய்தினையெ
முன்னாள்வினையீதுமுடித்தனவான்
மன்றுவெனையெங்ஙன்மறந்தனையே

மயிலேகளிறுமடப்பிடியே
குயிலேபெடையூடுகுலக்கிளியே
பயில்கானிடையாவிபதைத்தனனு
லயில்வேலவனெங்ஙனறிந்திலிரோ. (சுசு)

என்னப்பலபன்னியிரங்குறுவா
டன்னைக்கொடுபோயதனிச்சவரன் *

* வேடன்.

முன்னர்ப்புலிபாயமுடிந்தனனுன்
மின்னெத்துநுடங்கிடைவேறுறுவாள். (சுஎ)

அற்கோதையையாவியெடுத்தவனைக்
கொற்கூனுகிர்வெம்புலிகொண்டணையப
பொற்போலுருவன்னவள்பொய்ம்மைம்படாக்
கற்புண்மைநிகழ்ந்ததுகண்டனமால். (சுஅ)

இவளின்னணமெய்தவிகற்பகையைக்
கவருஞ்சுடர்வேலொருகாளையனுன்
பவர்கொண்டபடப்பைவனஞ்சுழல்வா
னுவருண்டபசும்புலுலர்ந்தனையான். (சுகூ)

புனனுடுகுறும்புபுகுந்தடர
வனநாடியடைந்தவழித்தலைவாய்
மனையாளையொர்வேடன்வலிந்துகொள்வான்
வினையேயிதுசெய்தனையேவிதியோ. (எ0)

இறவாவுயிர்பெற்றவெனக்கினிமற்
* றுறவேதுதவப்பயனுண்டுகொலோ
மறைநாவலராசிவழுக்குறுமோ
வறமேதுமெனக்கிலையானதுவே. (எக)

பயில்கானிடைவைகியபற்பலநா
டுயில்போயொழியாததுயர்ப்படுவான்
மயில்போலியவால்வளையைப்பிரியா
வுயிர்போயவுடம்பெனவொல்கினனுல். (எஉ)

தரவுக்கொச்சகக்கலிப்பா.

விலங்குபடுகொடுங்கானத்தொருதமியன்வேறுறருன்
பொலங்குழையினடகருந்தப்பொருந்திலனுயுயிர்ப்பெறிவா
னலங்குநெடுஞ்சுடரிலைவேலனனவனும்பசிவருத்த
நலங்கழியவிதர்ப்பநாடடையவந்துநணுகுற்றுன். (எங)

உற்றபெருமாநகரத்துள்புக்காஞெருதமியேன்
பொற்றெடியையிழந்தனமென்றுள்ளுயிர்க்கும்பொருமலான்
பெற்றபெரும்பசியலைப்பநெடுமொனம்பிறகிட்டான்
மற்றநகர்க்கடைத்தலைவாயிரந்திரந்துவயிறேம்பும். (எச)

இரவாதமனையுழிச்சென்றிரந்தேற்றுந்தன்வயிற்று
விரவாதபசியுருத்துமீக்கொளலுமற்றெருவர்

---

* "றுறவோடு" எனவும் பாடம்.

கரவாதகரவுணர்ந்துகரந்துபசிகளைந்தனனாற்
பரவாதுகழலரசர்ப்பணியுறுத்தபடைவேலோன். (எரு)

மாணகரத்தவரவர்தம்மனைபுகுந்துகவர்தரலு
நீணகரக்கடுங்காவல்புரிந்துடையோர்நெறிதேர்ந்து
கோணுடையகொடுமுடிக்கினரனைநிக்குபபுறனும்
வாணிலவுபடைத்தடக்கையனையர்கண்டுவலிந்தனரால். (எசு)

பற்றிவலிந்திடையிழுத்துப்பாசத்தாலிருகரமுஞ்
சுற்றிவரிந்திறுக்கியந்தக்கருங்கங்குற்றொலைந்தபின்னா
முற்றரணபபுறங்கொடுபோய்முளரிபொருங்கரங்காலு
மிற்றுவிழவரிந்தனரார்குருதிசொரிந்திடருழந்தான். (எஎ)

கைபார்க்குமரிந்திட்டகால்பார்க்குங்குருதிபட்ட
மெய்பார்க்குமிதுவிளைத்தவிதிபார்க்கும்வெய்துறுமால்
மைபார்த்தவரிநெடுங்கண்மயில்பார்த்தபொலஞ்சாய
னெய்பாாத்தகருங்குழலைநினைந்துநினைந்துயிர்பயெழுமால். (எஅ)

பேரரசுபுரிதருநாள்யானறியப்பிழைத்திலனு
னேரரசுபணிகேட்பத்தனிக்கவிகைநிழற்றினே
னோரறத்துமுறைதிறம்பேன்மநுமுறையினுயிர்புரந்தேன்
யாரிழைத்தபெரும்பாவமெனக்கிதுவந்தெய்தியதே. (எகூ)

கொள்ளாதமுறைதிறம்பிக்கொண்டிலேன்குவலயத்து
நள்ளாதவலியரன்றியெளியோரைநலிந்திலே
னெள்ளாதமுதியோரையிகழ்ந்துணரோனீங்கிதுநா
ளுள்ளாதவினைவிளைந்தாலின்னுமுயிரோம்புவனோ. (அ0)

குலமுறையிற்பேரரசுகுறும்புகொள்ளமணந்துகொண்ட
மலர்மகளையொருவேடன்வலிந்துகொள்ளமாநகரத்
தலைகுருதியெழக்கரங்காலறுப்புண்டேன்றனித்திகிரி
நிலனளித்தபேரரசினெறிநன்றேநெறிநன்றே. (அக)

என்றென்றுபலபிதற்றித்தனிமறுகியிடருழக்குங்
குன்றன்றுதோளானைக்குறுகினர்கண்மயங்கூரா
வன்றுண்டமுடனரிந்தாரில்லையெனவற்புறுத்திக்
கொன்றுண்டசினங்கதுவக்குப்புறுவான்குலவேந்தன். (அஉ)

காலமுகிக்கையமுகிமுடைநாற்றங்கவர்ந்தபின்னர்
மேலெழுநல்வினையிருந்தகடைப்பிடியால்வேந்தற்கு
வேலெறிபுண்புலர்ந்துநெடுவீதிதொறுமிரப்புற்று
ஞலியபொற்கலத்தருந்துமவனேட்டிலருந்துவான். (அங)

இந்நகரத்தெருத்தலைவாயிரந்திரந்துநுகர்ந்திரோட்
டுன்னருங்கானகத்திழந்ததாகிலாப்பணிமூரல்
பொன்னுருவங்கருகிமுன்னைப்பொலிவழிந்துபோந்தனளா
லந்நகரதனிடைப்பக்காரிருவருமற்றறிவயர்ந்தார். (அச)

ஆங்கவளும்பெரும்பசிதொட்டலைப்பறநின்றுற்றும
லோங்குதெருப்பெருமனையினுட்புகுந்துகரந்திடலுந்
தூங்குகருங்குழலிவளைத்தொடர்ந்துகாவலாபிடித்தார்
வீங்கிருளிற்பாசத்தால்விசித்திட்டார்விடிவளவும். (அரு)

விடிந்தபொழுதெழுந்துநறைவிரிமலாபபூங்குழலாளைக்
கடிந்தகடுஞ்சினத்துறுக்கிக்கடிகாவற்பறங்கொடுபோய்
வடிந்தகுழைகொடிமூக்குவனமுலையோடரிந்தனரா
லொடிந்துவிழுமரம்போனின்றலறிநிலத்துறவீழ்ந்தாள். (அசு)

தேக்குயருநெடுவனத்துக்கொலைவேடனநீண்டியநா
ளுக்கழிவுதந்தேனெனவுளமழிவுதந்திலளு
லாக்கியதன்புகழவேந்தேயுனைக்காணுமாசையாற்
போக்கியமூக்குடனிருக்கப்புலையாவிபொறுத்தேனே. (அஎ)

ஒறுத்தாரையொறுத்துமறத்துடனெழுகாதவ்வறத்தைக்
கறுத்தாரைக்கறுத்துநினறசெங்கோனமைக்கடனீதோ
வெறுபபாயகடுஞ்சினத்தேனவெம்முலையுங்கொடிமூக்கு
மறுப்பாருக்கெளிதுற்றேனெவவுழைக்கண்டறிவாயே. (அஅ)

இல்லரணுந்தனிக்குடையும்பகைவேந்தற்கீந்திரக்கும்
புல்லரணம்புரிந்தவிதிக்கதுகொண்டுபோதாதோ
நெல்லரணநீரநாட்டுநினைவணங்காநிலவேந்தா
வல்லரணமிடிபடுத்துச்செருக்கெழுமால்யானையாய். (அகூ)

ஆடருவிநெடுவரையுமருவிகளுமருவிதுறுங்
காடளவுமாக்கயரிற்றனித்திரிந்துங்கண்டிலே
னுடணைந்தாயெனப்பரவிநனுகுற்றேனரவுயிாக்கு
மேடவிழ்பூந்தெரியலாய்கடைமுறையீங்கிதுபெற்றேன். (கூ0)

ஏனையவெல்லாம்பிதற்றியிருங்கூந்தல்பறந்சோர
மானனையாளிருகரங்கணிலத்துழாய்வரவிருந்து
தேனனையகொழுங்குதலைவேறுபடத்தெருமந்தா
ளானபெருந்துயர்க்கடற்கோாபுணைகாணுதலமந்தாள். (கூக)

இத்துயரம்பெரிதுழவாப்பசித்துயரமெரிமூட்ட
மெய்த்துயரத்துடனெழுந்துவீதிபுகுந்திரக்குறுநா

ளத்தெருவிற்புயபலனுமந்தணர்தந்தெருச்சார்ந்தான்
சுத்தமறைமுழுதுணர்ந்தசுசீலனகப்புறமடைந்தான். (௯௨)

ஐயரீசிறுகூழ்மற்றளித்தனையேலிவணுவி
யுய்வனேயெனவிரப்பவோங்கருநான்மறைத்தலைவன்
செய்யநீற்றினையிகழ்ந்துசெருக்குமந்தத்திரைவேலி
வையம்யாவையும்புரக்கும்வங்கவேந்தினைப்போலும். (௯௩)

என்றெண்ணிமனத்திஞேர்ந்தியாவனீயெனக்கேட்பக்
குன்றன்னதடந்தோளானஃதொன்றுங்கூறிலான்
மின்றுன்னுநூன்மார்பன்வியப்பெழுந்துவிளம்புவான்
பொன்றுன்னுங்கழல்வங்கப்புயபலனீபோலுமால். (௯௪)

அகந்தெளிந்தமறையவர்க்கன்றருநிதிதானம்புரிநா
ளுகந்துநினதருகியாமுயர்தானம்பெறுமெல்லை
முகந்திருநீறிலதென்னுமொழிந்தனமெம்மொழிசீறி
யிகந்தனைநீயல்லையோவெனவுரைப்பவிகல்வேலோன். (௯௫)

அருந்துயிற்கண்டகனுவிழித்தபின்னரறிவான்போற்
றிருந்தமனத்துணர்ந்தனனன்றுளவெல்லாஞ்சிந்தித்தா
னிருந்துயரமெய்தினமாங்கதனுலென்றெண்ணினுன்
பொருந்துமறையவனிருதாள்விழுந்திரந்துபோற்றினுன். (௯௬)

பொறுத்தருணீயையவெனப்புன்கணீர்புறஞ்சோரக்
கறுத்ததிருவுளமிரங்கக்கடவையெனக்கைகூப்பி
வெறுத்ததிருவெண்ணீற்றால்விளைந்ததிந்தவினையென்றான்
பெறற்கருநான்மறைவேந்தேநின்னுரையும்பிழைக்குமோ. (௯௭)

எனப்பலபட்டனவெல்லாமெடுத்துரைத்துவணங்குவான்
மனக்கருணைசிறிதுபுரிந்தளியவென்பால்வழங்குதியா
னினக்கபயமடைந்தனன்வெண்ணீறருளவேண்டுமெனச்
சினக்கதிர்நெட்டிலைவேலோன்செங்கரமொன்றேந்தினனுல். (௯௮)

சுருதிநூன்முதற்றலைமைச்சுசீலனுளமிகவிரங்கி
வருதிநீயெனவருளித்திருநீறுவழங்குதலு
மரசர்கோனுடலடங்கப்பூசித்தானக்கணத்திற்
குருதிபோக்குறவரிந்தகரத்தொடுகால்கூடியதே. (௯௯)

அரிந்திட்டகரங்கால்வந்தந்நிலையிற்கூடுதலும்
புரிந்திட்டபேருவகைமீக்கொண்டுபொருமினுன்
பரிந்திட்டபெரும்பிணிபோய்ப்பண்டையினுமெழில்பெற்றான்
விரிந்திட்டதாமரைபோல்விளங்கினவக்கரங்காலும். (௧00)

பொங்கியநீற்றொளிபொதிந்தபுல்லுருவம்புயபலற்கு
வெங்கதிராயிரமிமைக்கும்பசுங்கதிர்போலிலகமலர்ச்
செங்கமலத்தயனனையான்றிருவாயிலிவணிற்பக்
கொங்கையொடுமூக்கிழந்தாளம்மறுகிற்குறுகினாள். (௧0௧)

கண்டனளின்னுயிரனையகொழுநனைத்தன்கண்களாற்
பண்டையினல்லுருப்பெற்றானிவனென்னும்பரிவினளாய்
விண்டகுரற்போதிரப்பவிரைந்தலறியடிவீழ்ந்தா
ளண்டரினுமெழில்பெற்றானிவளாரொன்றையுறலும். (௧0௨)

இவ்வினையென்னெழில்கவரவெனையுணராயானுனது
மைவரைத்திண்டோள்புணர்ந்தமாதவத்தேனிம்மறையோர்
தெய்வநீறுதவிடிலென்செய்தபிழைதீர்வனெனப்
பெய்வளைநீசெய்தபிழைபேசுகெனப்பேசுவாள். (௧0௩)

அரிசுமக்குமாசனத்துத்தணியரசுசெலுத்துநாட்
டுரிசறுத்தபெருங்குணத்திற்றென்மறையோர்தோன்றினர்
விரிதவளத்திருநீறுவேண்டலைநீயிவாபோத
முரிதுரும்புமூக்கிழைத்துத்தும்மினேன்முடிவோரோன். (௧0௪)

அன்றிழைத்தமதச்செருக்காலரசிழந்தோமரசிழந்து
குன்றிழைத்தபெருங்கானங்குறுகினேங்கொடும்பாவ
நின்றிழைப்பவேறாகிநீங்கினேனிற்கான்பா
னின்றிழைத்தநல்வினையொன்றிருந்தவாவெய்தினேன். (௧0௫)

ஆங்கவணின்றுரைத்தமொழியறிந்தனனையுறவொழிந்தான்
பூங்குழலாளவட்கண்டுவிழிபனிப்பப்பொருமினான்
றேங்கமழுநறுங்தெரியற்சிவமறையோனுளநெக்கா
னீங்கிவாகணிலையோராந்தார்யாவரோயிரங்காதார. (௧0௬)

வங்கவேந்தணிபுரிநூன்மறையோனையடிவணங்கி
யெங்கணுயகமுழுதுமிரங்குதியென்றிரந்தேற்பப்
பொங்கியவெண்ணீறவட்கும்புரிந்தனனப்பழமறையோன்
மங்கைதிருவுருப்பெற்றுமறையோனைவணங்கினாள். (௧0௭)

அந்நிலையினீங்கிவர்கண்முன்னையுருவடைந்தனரான்
மின்னிலையமுப்புரிநூன்மறையோனைவீழ்ந்திறைஞ்சி
நின்னிலையுற்றுணராதுநீநிகழ்ந்தோமிதுபட்டே
மின்னருளினீறுதரித்தீங்கிதுபெற்றனமென்றார். (௧0௮)

அந்தமாநகர்சிறந்தாரதுநோக்கியகமகிழ்ந்தார்
சந்தவார்தடநெடுங்தோட்டனிச்செங்கோல்விதர்ப்பர்கோ

னுந்துறுபேருவகையுடனதுகேட்டங்குடனடைந்தான்
சிந்தைகூர்ந்தினிதுவந்துசுசீலரடிசென்னிவைத்தான். (க0கூ)

தேவராயுறைந்தோரும்பல்லுயிர்க்குச்சிறந்தளிக்கு
மூவராய்நின்றுருநீயாதிமூதுணர்ந்தோய்
பாவியேன்றிறம்பியதொன்றுளதெனினப்பழியொழித்துக்
காவல்பூண்டருளுதியென்றிரந்தனனக்கழல்வேந்தன். (கக0)

கணைகழற்காலினனின்றதனிச்செங்கோற்காறோறு
துணைபரித்தேர்த்தானையனெம்மாதுலனிற்றேன்றிரு
ணினையனையொற்றரையேவியெவ்வுலகுந்தேடினே
னனையவர்தங்கட்புலத்தினெய்தாமையடைந்தனரால். (ககக)

அந்தணநின்றிருவருளாலிந்நகரமடைந்தனனுன்
முந்தையுடைக்கவினுடுநின்னருள்பெற்றுனெனமொழிந்தச்
சந்தநெடும்புயபெலனையுறவணைத்துத்தழீஇக்கொண்டு
புந்திமகிழ்ந்தனையோனைத்தேவியொடுங்கொடுபோனான். (ககஉ)

மழையாடுமெதிற்கோயின்மண்டபத்தினரியணைமேற்
குழையாடுமுகத்தியொடுமினிதிருத்திக்குலவேந்தன்
றழையாடகத்துடுக்கைமுதலவெல்லாந்தந்தளிப்ப
விழையாடுதடம்புயத்தான்சிலவைகலவணிருந்தான். (கக௩)

இப்பரிசிங்கிவணிகழ்ந்ததிவணிருந்தபுனனாட்டை
யொப்பருமன்னவாகொண்டாரவவையொழித்தோரரக்கன்
செப்பரியகொடுங்கோன்மைசெலுத்தினனதுகேளா
வெப்பெழுந்தவெகுளியினன்விதர்ப்பநாட்டிகல்வேந்தன். (கக௪)

புயபெலனுக்கடுகளிறுங்கொய்யுளையபுரவிகளும்
வயவரொடுநெடுந்தானைமன்னவருமளவொழிந்த
கயவளக்கரோரேழுமொன்றுபடக்கலந்தவெனத்
துயல்வருகார்ப்படையணிகததொகைநிரப்பிச்சொல்லுவான். (கக௫)

எம்முடையபெருஞ்சேனையுடனேகியிகலரக்கன்
வெம்முனையினெதிர்நடந்துபோர்மாயவிளித்துனது
செம்மைதருதனிச்செங்கோல்செலுத்துகவென்றேயினன்
பொம்மெனநின்றெழுஞ்சேனைகுறித்தவனும்பூரித்தான். (கக௬)

கலித்திலைத்துறை.

புனைசெய்மாகளிறுகோடியிருபொங்கருவிதாழ்
வனைசெய்தன்னவைநிரைந்தனவயப்புரவியுந்

திரைசெய்வாரிதியெனச்சிலவுகண்டுசெறியக்
கரையெடுத்தபுறவாழிபொருசேனைகளுல. (ககஎ)

வாசியெண்டிசைகுலுக்கிடுசிரிப்புவயவெங்
காய்சினக்களிறதிர்ந்திடுமதிர்ச்சிகதுவும்
பூசலஞ்சிலையினுணொலிபுடைக்குமுரசோ
டாசைகொண்டுககனந்தொடநிமிர்ந்தவமலே. (ககஅ)

மீயொளிக்கதிர்பதைத்திடவிதாததவடிவாட்
சேயொளிபபொறியிடைந்தனதெறித்ததிசைபோய்
மாயிருட்படலநக்கினவயத்தவருரப
பாயவெண்டிசையடைத்தனவெடித்ததவனி. (ககக)

இன்னசேனைகொடெழுந்தனனெழுந்துகணிநூல்
சொன்னபோதொடுசுசீலனையெழுந்துதொழுதா
னன்னவன்றருவிபூதிநுதல்கொண்டனனணிக்
கன்னிமாநகரொழிந்திடைகடந்துபுகுவான். (கஉ௦)

வெய்யசேனைகொடுடன்புகுவிசித்திரதரனை
யையநிற்றியெனவன்பினொடுபுல்லியகலா
வொயயெனக்கடிதெழும்படையொடேகியொலிசீர்
மொய்கொள்வேலிபடுதன்னகரமுன்னநிருதன். (கஉக)

வன்படைத்தலைவனைக்கடிதுவம்மினெனலு
மினபடைக்குலமொடண்மினர்வெகுண்டதிறலோ
ரன்படைத்தறிவிலார்முரணடைத்தகொடியோர்
துன்படைத்துயிர்களுக்குறுதுணுக்கமிடுவார். (கஉஉ)

வெள்ளவெம்படைமிடைந்தொருவழிபபுகுதரத்
தள்ளில்வாளரவநந்தன்முடிதட்டழிவதாற்
கள்ளவெஞ்சினவரக்கன்விழிகக்கும்வடவை
யொளளெரிப்பொறிகலித்ததுசலித்ததுலகம். (கஉங)

கோலமுத்தலையயிற்படையெடுத்தனர்கொடுங்
காலசக்கரமெடுத்தனாகதைபபடையொடு
நீலமைக்கடனெருபபொடுமுருத்துநிமிரு
மாலமொத்தனரரக்கனுருமொத்ததிருவான். (கஉச)

எழுவுசேனைபுடைகொண்டனனெழுந்தனனெழுந்
தொழுகுசேனைநிபடர்ந்தனனுடற்றநினைவான்
மழைமுழக்கெழவிதர்ப்பர்படைமண்டியெழலு
முழைவயப்புலியெனச்சினவரக்கன்முனிவான். (கஉரு)

வில்லும்வேல்களுமிடைந்தனமிடைந்துவிரவக்
கல்லொலிப்படவெழுங்குருதிகாணிமிரவோர்
வல்லெயிற்றுநிருதன்கறுவிவங்கவிறைமேற்
செல்லுறத்திருவெண்ணீறரசனெற்றிதிகழ. (கஉ௬)

கண்டனன்றிருவெண்ணீறருள்கனிந்துருகினன்
மண்டுசேனையைவிலக்கினன்மறித்தனன்மனக்
கொண்டகாதலினெடுத்திருகையுச்சிகுவியாத்
தொண்டனென்றுதனிசென்றனன்விழுந்துதொழுதான். (கஉ௭)

வங்கமன்னவநினைபபடவளைந்துமறலி
பொங்குசெங்குருதிநுங்குதல்புரிந்தபுலையே
னிங்குநின்னையெதிர்கொண்டுறலுமென்பருகினே
னெங்கணுயகடபுகுந்தபரிசென்கொலுணரேன். (கஉ௮)

வன்றொழிற்பலையரக்காகுலமன்னியவெனக்
கின்றுநிற்றொழுதுதெய்வவுருவெய்தியதுவென்
புனறொழிற்றறுகணெவ்வுழைபுகுந்ததுணரோ
னென்றடிக்கடிவணங்கினனெழுந்துபணிவான. (கஉ௯)

அன்னதன்மையனையன்புருகிவங்காபெருமா
னின்னதன்மையிதுவென்னையெனநின்றதிசயித்
துன்னையுள்ளபரிசோர்சிறிதுமுற்றுணர்கிலேன
முன்னையூழ்முறைமொழிந்திடுதியென்றுமொழிய. (கங0)

காலமுற்றியதுகாய்சினவரக்காதறுகட்
சீலமற்றதுனசேவடிதெரிந்தபொழுதே
மூலமுற்றனவனைத்துமடிதொட்டுமொழிவே
னேலுநின்னகொழுந்தருடியென்றுதொழுதான். (கஙக)

இருவழிப்படுமனீகமுமெழுந்ததிரைநீ
ரொருவழிக்கொடுநிமிர்ந்ததெனவுற்றுமிடையப
பொருகொடித்திரண்முகிற்றொடநிவந்துபொதுளுந்
திருநகர்த்தனதுகோயிலுழைசென்றுதிகழ்வான். (கஙஉ)

கலிவிருத்தம்.

அன்னவற்கன்றரக்கருருவொரீஇப்
பொன்னுருக்கொண்டிலங்கும்பொலிவினன்
மன்னுசோதிடஞ்சொற்றவரன்முறை
முன்னைநாளின்முடிபுணர்ந்தானரோ. (கஙங)

# உபதேசகாண்டம்.

தூயமாமுடிசூட்டியபின்னர்
ஞேயதன்னிலையன்னார்க்கறைகுவான்
மேயமேற்றிசைக்காப்புடைவேந்தன்யான்
மாயிரும்புவிகாக்கும்வருணனே. (கநச)

என்னதாகியநாட்டையெறுழ்வலி
மின்னெயிற்றுநிருதர்விளித்தனர்
துன்னமர்க்குத்தொடங்குவனேவலா
கன்னலொன்றிற்கரப்பர்கருங்கடல். (கநரு)

நாளுநாளுமென்றுநலிந்திட
வாளெயிற்றுநிருதர்செய்மம்மராற்
கோளிழைத்தகுறிப்பிற்குலிசப்புத்
தேளிருக்குந்திருநகரெய்தினேன். (கநசா)

நானநாண்மலர்க்கற்பகநாறிய
மானநீழன்மடங்கலிரும்பிட
ரானசெம்பொனவிர்மணியாசனத்
தானமின்றிவிளங்கியவும்பரின். (கநஎ)

கண்ணொராயிரந்தாமரைகாட்டிட
வண்ணமேகலைமங்கையர்சூழ்தரத்
தண்ணறுமலர்த்தண்டலைக்கற்பகத்
தெண்ணறுநுண்டிவலைதெறிப்பவே. (கநஅ)

பன்னிறக்கதிர்க்காசுபரப்பிய
மின்னிறக்கதிர்க்கற்றைவிரவலாற்
றென்னிறச்சுடர்மாமுடியன்னவன்
வின்னிறச்சுடர்க்கற்றைவிழுங்கவே. (கநகூ)

பூசற்றும்பிபலம்பியமென்குழ
லாசைச்சிந்தையரம்பையர்சாமரை

வாசக்கற்பகமாலைதுயல்வர. (கசO)

மழலைவானவர்மங்கையர்நல்லியா

யொழுகுபாடலிருசெவியூடுபுக்
கிழுகுதோறுமுவகையெடுப்பவே. (கசக)

முல்லைமூரன்முருக்கிதழ்மங்கையர்
கல்லெனச்சிறுதண்டைகலிப்பப.

பல்லவப்பதம்போதொறும்பாடிய
மெல்லிசைக்கிளிபொம்மெனவிம்மவே. (கசஉ)

வீற்றிருந்தனன்கற்பகமென்னற
லூற்றிருக்குந்தெரியலினும்பர்கோ
னேற்றெதிர்ந்துறவெய்தியவென்னையு
மாற்றருஞ்சொல்வரப்பணித்தானரோ. (கசஙு)

சென்றிருந்தென்னிருங்கவல்செப்புழிக்
குன்றிருந்தகுறுமுனியெய்திஞ
னன்றிருந்தவற்காயதுசெய்தபி
னென்றிலங்கரியாசனத்தேற்றினன். (கசச)

கும்பயோனிதிருவருள்கூர்ந்தினி
தும்பர்கோமகற்காசியுரைத்தன
னிம்பரெய்தியிருத்தியெனுத்தமிழ்
நம்பனோர்கரநாண்மலர்நீட்டினன். (கசரு)

முனிவனீதுமொழியத்தருநிழற்
புனிதனுங்கொர்தவிசிற்பொலிந்தன.
னினியசொற்றுறுமெல்லையிற்றொல்லையோ
னனிதருந்தவநாரதனண்ணினன். (கசசு)

நண்ணருந்தவநாரதர்க்கும்பர்நாட்
டண்ணலெய்தியருச்சனையாற்றுபு
வண்ணவார்மலையம்முனிக்கங்கொர்பா
லெண்ணரும்பொற்றவிசினிருத்தினன். (கசஎ)

வானவிந்திரன்மாமுனிநாரத
னுனமூவரளவளவிக்களி
மோனராகவிருந்துழிமுற்றுணர்
ஞானநான்மறைநாரதன்கூறுவான். (கசஅ)

தொன்னிலத்திடைத்தோன்றுமோரற்புதம்
பொன்னிலத்துமக்கோதப்புகுந்தன
னன்னதன்மையறைகுவனம்புவிக்
கன்னல்சூழ்தருகாச்சிமிரத்துளான். (கசகு)

ஆரவாரியகனிலமோர்குடை
யீரநீழலினிதுபுரந்துதற்
சேரலாரைத்திறைகவர்ந்துற்றனன்
வார்தடஞ்சிலைவச்சிரதேயனே. (கரு0)

மன்னர்மன்னவன்வாசற்புரோகிதன்
றுன்னருஞ்சொற்சுதன்மனென்பானவன்
டன்னுசொற்கலைகற்றும்பயனிலா
னன்னவன்றனைநோக்கியரசர்கோன். (கருக)

கற்றிலாய்கலைகற்றுணரார்முக
முற்றுநோக்கின்மயானத்தையொக்குமால்
பெற்றுளார்பெறும்பேறுதங்காதலர்
சொற்றகல்வியிற்றூயதொன்றேதலே. (கருஉ)

என்றுவேந்தனியம்புறக்கேட்டபின்
பொன்றயங்குபுரிநூற்புயத்தினன்
ஒன்றுநானுணராக்கலையுள்ளதோ
வென்றியாய்விளங்கபெறுகிற்றிலேன். (க(

இற்றைநாண்முதலைம்படையேந்திய
வெற்றிநாரணன்மென்மலர்த்தாடொழாப்
பெற்றகல்வியனுகபெறுவன்யான்
கொற்றவேந்தவென்றேதினன்கோதிலான். (கருச)

தண்ணறுந்துளவோனடிதன்னுளத
தெண்ணியேத்துறவெந்தைபிரானெதிர்
நண்ணிநாற்கலைநல்கினனுன்மறைப்
புண்ணியன்றிருப்பாற்கடற்போயினன். (கருரு)

நான்மறைத்தனிநாயகனன்குணா
நூன்முறைக்கலைமுற்றுணர்நோன்மையைத்
தேன்மறைத்தினவண்டடைதேன்றொடைக்
கோன்முறைத்தனிவேந்தவைகூறினன். (கருசு)

ஞாலமுற்றுநடத்துசெங்கோன்முறை
மாலைவெண்குடைவச்சிரதேயனும்
வேலைமாநிலநான்மறைவேந்தனை
யேலவம்மினெனவுரைத்தானரோ. (கருஎ)

வந்தநான்மறைவாணனையிங்கிவன்
சிந்தையோர்கவெனச்சில்செப்பலு
மந்தணாளரளந்தறிந்தாரவன்
தந்தகல்விமுடிவெவர்சாற்றுவார். (கருஅ)

முற்றுணர்ந்தமுழுமறைவேதியர்
க்ற்றதின்மையெனக்கடிந்தானவன்

மற்றுநாவலர்வந்தவர்யாரையுஞ்
சொற்றிறத்துச்சுதன்மனொழித்தனன். (௧௫௯)

மொழிந்தமூரலிவன்முகநோக்கில
ரழிந்தசிந்தையராயகன்றுரவ
ரிழிந்தமேன்மையராகியிருங்கலை
யொழிந்ததொன்றுமிவர்க்கெடுத்தோதிலார். (௧௬௦)

ஈதுணர்ந்தனனீரிதழாயிரப்
போதிருந்தபுராதனன்றன்னுடன்
மீதுபாவத்திரைந்தவிருத்தனு
யோதுநான்மறைச்செல்வனையுற்றனன். (௧௬௧)

உற்றகாலைச்சுதன்மனையுற்றுநீ
கற்றகல்விக்கழகிலைகற்றுளோர்
முற்றுநன்குமொழிவதழகதன்
பெற்றியீறுபிறக்கப்பெறுவரே. (௧௬௨)

என்னவென்னுளங்கற்றனவெண்ணில *
மன்னுமைம்புலததாறுமயங்கலான்
முன்னர்நின்றுமொழிந்தனைமூப்பினோ
யுன்னருங்கலையொன்றுணராயென்றான். (௧௬௩)

அக்கடுஞ்சொலவனுரைத்தேகனு
முக்குணங்கடிநான்முகமுன்னவன்
றொக்கநான்முகந்தோன்றிடத்தோன்றினன்
மிக்கெழுந்துகொளுந்துவெகுளியான். (௧௬௪)

கற்றுணர்ந்தகலைப்பெரியோர்களை
முற்கடிந்துமொழிந்தனையாதலிற்
சொற்கடந்தநின்னுவிழச்சொற்றநீ
நிற்கவூமரினென்றுநிகழ்த்தினன். (௧௬௫)

வேதநான்முகனோதியவெம்மையா
லோதுநாவயர்ந்தூமரினுயினன்
மாதுயர்க்கொடுவச்சிரதேயனு
மேதுசெய்துமெனவிருந்தானரோ. (௧௬௬)

தொல்லைவேதச்சுதன்மனைநோக்கிநின்
றல்லலுற்றனனாகியழுங்குவான்

---

* "வெண்ணிலாய்" எனவும்பாடம்.

வல்லையன்னவன்றம்பியைவாவென
வொல்லைகூய்க்கொண்டுணர்த்துவதாயினன். (கசுஎ)

மூதுணர்ந்தநின்முன்னனைமூமனுய்ப்
போதியென்றயனோதியபுன்மொழித்
தீதுதீர்தரத்தெய்வப்பசுந்துழாய்ச்
சீதரன்றனைச்சிந்தைசெய்வாயென்றான். (கசுஅ)

வேந்தனவ்வுரைகூறலும்வேதியன்
போந்துசெங்கட்புனிதனைப்போற்றினன்
சேர்ந்ததாமரைச்செல்வத்திருமகள்
காந்தனங்கிலைக்காட்சிதந்தானரோ. (கசுகூ)

ஆழிநாதனடியிணைபோற்றிமற்
றாழிவேதமெனக்குமுணர்த்தியென்
வாழிமுன்னவற்கோதியமாமலர்ச்
சூழனுன்முகன்சாபந்துடைத்தியால். (கஎ0)

இவையிரங்கியளித்தருளென்னலுங்
கவரொளித்திகிரிக்கருங்கண்ணனு
மவையிழந்துநின்முன்னவன்யாவையு
நவைமொழிந்ததுநன்றலவென்றனன். (கஎக)

நானளித்திடுங்கல்வியினல்லறி
வானபேறையவமதித்தானது
தானுணர்ந்தயன்சாபமிட்டானவ
னூனமென்னுலொழிக்கத்தகாதென்றான். (கஎஉ)

இதுவுணர்ந்தவிசுத்தனிரந்துநீ
யதுமனத்திலடைந்தனையல்லையாய்ப்
புதிதளித்தருளென்னப்புனத்துழாய்
மதுமலர்த்தொடையோனைவணங்கலும். (கஎங)

மீண்டுமக்கலைவிஞ்சைபுரிந்திடி
லீண்டுவேதனையின்னுமிகழுமென்
றுண்டுசிந்தையளந்தனனாகியே
நீண்டமேனிநிமலனிகழ்த்துவான். (கஎச)

ஆசறுங்கலைகற்றறிந்தாரவ
ரோசிலுள்ளமிரங்கியொடுங்கினுற்
பூசைசெய்வர்புலமையுள்ளோரிவன்
மாசில்சாபவழுவகலாதென்றான். (கஎரு)

ஆதிநாதனருளியகேட்டலும்
வேதசிந்தைவிசுத்தன்விளம்புவா
னீதவிர்த்திலையாகினினன்பிறேன்
றீதுதீர்ப்பதியாரொனச்செபபுறு. (௧௭௬)

மாபெருஞ்சொல்வசிட்டனுரைத்திடுஞ்
சாபமுற்றத்ரிசங்குவென்பான்றனைப்
பாபநீக்கிப்பதவியுளுய்த்தனன்
கோபநீத்தருள்கோசிகனென்பரால். (௧௭௭)

நின்னடித்துணைநெஞ்சுகொண்டேமெம
தின்னனீக்குநர்யாரொன்றிசைத்தலும்
பொன்னெடும்பொலிகார்முகில்போலுமா
றன்னுளங்கறுதநின்னனசாற்றுவான். (௧௭௮)

என்னைநிந்தைசெய்தீதுபகர்ந்தனை
யுன்னுறுப்பிற்குறையுளவாகநின்
முன்னவன்றனிச்சாபமுடிந்துரு
தின்னலுற்றுழப்பீரொன்றியம்புறு. (௧௭௯)

நீங்கருங்கடுஞ்சாபநிகழ்த்திய
தேங்கமழ்ந்ததுழாய்புனைசென்னியோ
னீங்கொழிந்தனனேகவிசுத்தனு
மோங்குறுப்பிழந்தின்னலுழந்தனன். (௧௮0)

மன்னர்மன்னவன்வச்சிரதேயனு
மன்னதன்மையறிந்தலமந்தன
னென்னசெய்துமிதற்கெனவெண்ணினன்
பின்னருற்றுநிகழ்ந்தனபேசுவாம். (௧௮௧)

கலிநிலைத்துறை.

பனிபொதிந்துமெய்ஞ்ஞானநல்லொளிதிசைபரப்பி
நனியுயர்ந்தருமாதவர்க்குறைவிடநல்கிப்
புனிதமாதவர்கணத்தொடும்போற்றுறப்பொலிந்து
தனிமுதற்பரனிகர்த்ததுதயங்குகேதாரம். (௧௮௨)

அத்தலத்துறையிறைவனைப்பணிந்தருளடைவான்
மெய்த்திறந்தருமுவகையின்விரும்பினன்வேந்த
னெத்திறத்தினுமிவரிடர்நீக்குவனென்று
வுய்த்துடன்கொடுபுகுந்தனனங்ககருற்றான். (௧௮௩)

தேவதேவனைச்சென்னிதாழ்த்திறைஞ்சினனிமயப்
பூவைநாயகன்சினகரமுன்றிலிற்பொருந்தி
யோவருந்துணைமறையவரிவரொடுமுற்றான்
மேவரும்பெருஞ்சாபநீத்தொழித்துறவிரும்பி. (௧௮௪)

மோனஞானிகளருந்தவர்மும்முதலனையார்
ஞானநாதனைத்தொழுதனர்வருந்தொறுநலிந்த
வேனையீங்கிவர்சாபநீத்திடுதியென்றிரப்பச்
சேனைவேந்தநீகேட்டியென்றுரைப்பரச்செயலோர். (௧௮௫)

உலகெலாமளந்துண்டுமிழ்ந்தருளியவொருவன்
மலர்மிசைப்பொலிநான்முகன்வழங்கியசாப
மலகில்பேரருட்கறைமிடற்றெம்பிரானற்கன்றி
யிலகுவெண்குடைவேந்தமற்றெம்மனோர்க்கெளிதோ. (௧௮௬)

எனவுரைத்தவரோகலுமெம்பிரானருளிற்
றனையுணர்ந்தததீசியாமருந்தவன்சார
வனைகருங்கழன்மன்னனுமறைமுழுதளந்த
வினையவிஞ்சையரிருவருமவனடிவீழ்ந்தார். (௧௮௭)

பணங்களாயிரப்பாம்பணைப்பாற்கடலவனு
மணங்கொடாமரைப்பிரமனும்வழங்கியசாபங்
குணங்கொணின்னருட்பெருமையினெழிப்பதுகுறித்தே
மணங்குமித்துயரொழித்தியென்றடிக்கடிபணிந்தார். (௧௮௮)

ஐயநீற்றுளபெருமையுமுருத்திரவக்கத்
தெய்வமாட்சியுந்தெண்ணிலாக்கைலையிற்சிறந்த
பையராவணிநம்பரன்*பெருமையும்பகுத்து
மெய்யுணர்ந்தவர்நின்னலதியாருளர்வியப்பின். (௧௮௯)

மறைமொழிந்திடுநாவிவற்கொன்றினும்வழங்கா
திறைவதன்னுறுப்பொழிந்தனனீங்கிவனிவற்கு
நிறைபெருங்குணத்தருடியேனின்னடிமறவா
துறைவரொன்றெடுத்துரைத்தனனுலகெலாம்புரப்போன். (௧௯௦)

உரைத்தவாசகங்கேட்டலுமொருங்குணர்முனிவ
னிரைத்தபேரருள்வெள்ளநின்றுவட்டெழவிரங்கி
விரைத்தவெள்ளொளிநீறெடுத்தளித்தனன்வேந்தன்
வரைத்தடம்புயமண்ணுறவணங்கினன்வாங்கி. (௧௯௧)

---

* "நம்பன்றன்" எனவும் பாடம்.

வாங்குநீற்றினைமறையவர்க்களித்தனன்மறையோ
ரோங்குதத்தமதுடம்புறப்புனைந்தனருவந்தார்
தேங்குநான்மறையிசைத்தனன்முன்னவன்சிறியோ
னீங்குதன்னுடற்குறையெலாநிரப்பினனின்றான். (௧௯௨)

சாற்றருந்தவத்ததீசியையடிக்கடிதாழ்ந்தார்
றூற்றடம்புயமுனிவனுமாசிகணுவன்றான
போற்றிமூவருங்காச்சிமிரப்பதிபுகுந்தா
ரேற்றமாதவத்தலைவனைவழுத்தினரிருந்தார். (௧௯௩)

ஆதிநாயகனணிதிருநீற்றினதருமை
யோதிலெம்மனோர்க்கெளிவரவுரைக்குமாறெளிதோ
வேதநாயகன்றிருமகணாயகன்விளம்புந்
தீதுதீர்த்ததன்கதனிலையாவரோதெரிபவர். (௧௯௪)

என்றுநாரதனிந்திரனினிதுகேட்டுவப்பக்
குன்றிருந்தவனென்புநெக்கன்பொடுங்குழைய
வன்றுரைத்தலுமதிசயமடைந்தனரனையார்
மன்றுளாடிவெண்ணீற்றினதருமையார்வகுப்பார். (௧௯௫)

பொன்னகர்க்கிறைமுதலினோர்மூவரும்பொருந்தி
யின்னசொற்றுழியென்னதாழ்வினையிடைநிகழ
மின்னெயிற்றுவாளரக்கருமசுரரும்வெகுண்டு
மன்னுயிர்த்தொகைசெகுத்தனருணர்த்துவான்வந்தேன். (௧௯௬)

அதுகிடக்கமற்றணிதிருநீற்றினதருமை
யிதுமொழிந்தனிரினிச்சிறிதொழிதியொன்றமைத்து
மதுகைவாளெயிற்றரக்கரைவல்லையினொழித்தற
கெதுகொல்செய்துமென்றிந்திரன்றன்னொடுமியம்ப. (௧௯௭)

குறுமுனிப்பெயரருந்தவன்வெகுண்டனன்கொதித்து
மறுவினீற்றியல்புகன்றனமறுத்தநீவருணா
தறுகண்வாளெயிற்றரக்கனாகுதியெனச்சபித்து
நறுமலர்த்தொடையிந்திரன்றன்னொடுநவிலும். (௧௯௮)

எம்பிரான்றிருநீற்றினதுண்மைமற்றிதுவோ
வம்பொனங்கையினெல்லியினறிகுதிவருகென்
றும்பர்கோமகன்றன்னொடுநாரதனொடும்போய்க்
கும்பமாமுனிநெடுந்திரைப்பரவைநீர்குறுகி. (௧௯௯)

செங்கணேற்றுடையெம்பிரானணிதிருநீற்றை
யங்கையள்ளியிட்டறலொடுங்குழைத்தனனணிந்தான்

பொங்குவாரிதிவாவெனக்குடங்கையுட்புகுத
நுங்கினுனுளத்தரனடித்தாமரைநோக்கி. (உ00)

வயங்குவச்சிரப்படைகொடுகடற்படமறைந்து
முயங்கரக்கரைமுடித்தியென்றொருகரமுளரித்
தயங்குநீறளித்தருளினனவனதுதரித்தான்
கயங்கரந்துறையரக்கரைமுடித்தனன்கணத்தின். (உ0க)

பொதுவறத்தனிநோற்றருள்குறுமுனிபோக
மதுமலர்த்தொடையிந்திரனவனடிவணங்கி
யெதுவுணர்ந்தனனீங்கிவனிவற்கிடுசாப
மதுவொழித்தியென்றடிக்கடிவணங்கினனவனும். (உ0உ)

வேலைவேலிசூழ்கிடந்தவம்மேதினிப்புறத்து
ஞாலமேத்துறும்புயபெலனாட்டினைநணுகி
மாலைவெண்குடையரசுகொண்டிருப்பவம்மன்ன
னுலிரும்படையிவனொடுமுடற்றுவானணைவான். (உ0ங)

அவனெதிர்ந்தமையறிந்தனனுகிநெஞ்சழலா
விவனிரும்படைச்சேனையோடடைந்திடுமேல்வைச்
சிவனினைந்தவனணிதிருநீற்றொளிதெரியப்
பவமொழிக்துமுன்னுருப்பெறுமிவனெனப்பகர்ந்தான். (உ0ச)

அந்தமர்முனியுரைத்தநற்காலம்வந்தடைந்தே
னிந்தநின்முகநீறுகண்டவ்வுருவிழந்தேன்
றந்தைநீதனித்தாயுநீயென்றடிதாழா
மந்தரம்பொருடுயபெலற்குரைத்தனன்வருணன். (உ0ரு)

மீண்டுதன்னுடைச்சேனையோடொருதனிமேற்பா
லாண்டிருந்தனன்வருணன்மற்றுங்கவனுரைப்ப
வேண்டுநீற்றுடைப்பெருமையைவியந்தனன்விரும்பி
யாண்டுமெத்திருநீறலாதணிகிலனிறைவன். (உ0சு)

பூசொளித்திருநீற்றினுலிருநிதிபுதல்வர்
வாசநாண்மலர்க்குழலியர்மாபெருஞ்சேனை
யேசில்செல்வமுற்றிருந்தனன்புயபெலனென்பா
னுசைநீத்தனன்கடைமுறைகைலைசென்றடைந்தான். (உ0எ)

பூதிபூசினும்பூதியின்றன்மைகேட்டிடினும்
யாதுபாதகமியற்றினும்பாதவமெனினுந்
தீதுறுந்துயர்தொலைவனவாதலிற்சிறந்த
வாதிநீற்றினதுண்மையையாவர்பெற்றறிவார். (உ0அ)

எழுதருமறைமொழிதருநீற்றியற்சரிதை
முழுதுணர்ந்தவையுணர்த்தினன்சூதமாமுனிவன்
வழுவுறுவழிகேட்டனர்முனிவரார்மகிழ்ந்தார்
தழுவுசிந்தையினன்பொடுதனித்தனிசசிறந்தார். (௨0௧)

விபூதிமான்மியச்சருக்கம் முற்றிற்று.

---

ஆகச்சருக்கம் ரு-றி திருவிருத்தம் - ருஉசு.

---

## ஆறுவது
## உருத்திராக்கமான்மியச்சருக்கம்.

---

கலிநிலைத்துறை.

இலகொளித்திருநீற்றினதியற்கையையிசைத்தே
மலங்குகங்கையோன்கண்ணெனுமுருத்திரவக்கந்
துலங்குமேன்மைபெற்றுணர்ந்தனவுணர்த்துதந்தொலையா
நலங்கொண்மாதவத்துறையுளீர்கேட்கெனநவிலும். (௧)

மொழிவதற்கருமிதனுடைத்தன்மையைமொழியப்
பழுதுறுவழிகேட்டுறிற்கேட்டவைபகரி
ஞெழிவரும்பெரும்பாதகமடைந்துளோரொனினு
மழிவறும்பெருங்கயிலையுற்றிருங்கதியடைவார். (௨)

இதனையன்பொடுதரிக்கினுமன்பிலராகி
யதனிலோர்மணிதரிக்கினுமாடலஞ்சிலைக்கை
மதனைவென்றருளெம்பிரான்கண்ணெனவரலாற்
பதமனைத்தையுமுதவுமத்தனிமுதற்பரமன். (௩)

மணிகளாயிரந்தரித்தரற்பணிகுவானவனே
பணிகொள்செஞ்சடைப்பரமனென்றேத்திடப்படுமா
லணிபுயத்துமுப்பானிரண்டணிமணிகரததி
லிணையின்மாமணித்தொகையறுநான்கெனத்தரிப்பார். (௪)

உச்சியொன்றிருகாதினிற்பன்னிரணடுவந்த
வச்சிரத்தினிஞுற்பதெண்ணுன்கணிகளத்துச்
செச்சைமார்பினூற்றெட்டெனச்சிறந்தணிபவரோ
பச்சிளம்பிடியிடத்தனென்றேத்துறப்பணிவார். (௫)

தழைநிலாமணிபவளமொன்றின்னனதயங்க
விழைபடத்தொடுத்தணியினுமிடையிடைபடிகம்

புழைபடுத்தனதொடுத்தனபுனையினுமொளிருங்
குழைபசும்பொனிற்புனையினுங்குலக்கதிபெறுவார். (௬)

தெய்வமாமணிகரந்தரித்தொருமனுச்செவித்தா
லையமில்லுருவொன்றொருகோடியாமன்றிப்
பொய்யின்மாமணிமுடிபொறுத்தீர்ம்புனல்குளிப்பின்
றுய்யகங்கைநீர் * துளைந்ததாமெனமறைசொல்லும். (௭)

இன்னமாமணிமஞ்சனம்புரிந்திடாதிரங்கி
மன்னுமாகமவிதிமுறைபூசனைவகுப்பார்
பன்னகக்குழைப்பரமனைவழிபடும்பதவி
நன்னலம்பெறப்பெறுகுவர்கயிலையைநணுகி. (௮)

ஒருமுகத்ததுமுகங்களைந்துடையதுகருணைத்
திருமுகங்கள்பன்னொன்றுளதருளொடுஞ்சிறந்து
வருமுகங்களீரேழுளதனையமாமணிகள்
கருதியர்ச்சனைபுரிந்தவர்பெருவளங்கலப்பார். (௯)

மன்னுசின்மயவுருத்திரவக்கமாமணியின்
முன்னிகழ்ந்துளதோர்கதையக்கதைமொழிவாம்
பின்னலஞ்சடையந்தணீரொன்றிணிப்பிறவாத்
தொன்னலந்தருசூதமாமுனிவரன்சொல்லும். (௧௦)

நந்தியென்றுநான்மறைவலோருறையுமாநகர
மந்தமாநகராலயத்தடியருளொருத்தி
செந்துவர்க்கனிமழலைவாய்ச்சேயரிக்கருங்கட்
பைந்துணர்க்குழனந்தையென்றொருபெயர்படைத்தாள். (௧௧)

வள்ளைவார்குழைசேவலோர்வானரமிவற்றை
யுள்ளவாசையின்வளர்த்தனளாங்கவைக்கொருங்கே
யெள்ளின்மாமணியுருத்திரவக்கமுத்திடைகோத்
தள்ளுசெம்பொனிற்பொதிந்தனளுவகையினணிவாள். (௧௨)

காதணிந்தனள்கழுத்திடைச்சாத்தினளுச்சி
மீதுசுற்றினண்மென்கையிற்பிணித்தனள்விரும்பி
யோதுசேவலங்குழையினும்புனைந்தனளுவப்பா
லாதிநாயகன்கண்ணெனுமுருத்திரவக்கம். (௧௩)

கூத்துநூன்முறைபயிறரப்பயிற்றினள்குறித்துப்
பார்த்தகண்களுங்களிகொள்வாளாங்கவைபன்னு

* "துளைந்தெழுபெருந்தவந்தொகுவார்" எனவும் பாடம்.

ணீத்துமுன்னையூழ்வினைப்படிதம்முயிர்நீங்கிப்
பூத்தகூட்டுடைவாரணங்குரங்கொடும்போன. (கச)

சிறந்தமாமணிதரித்தலாலுயிருகச்செல்லா
விறந்துகாச்சிமிரப்பதியெனும்வலிவேந்தன்
பறந்தலைத்திறற்பத்திரசேனனோர்மனைவி
யறஞ்செய்தன்மையால்வாரணமவள்வயிற்றுதிப்ப. (கரு)

மற்றைவானரமன்னவனமைச்சனோர்மனைபாற்
பெற்றபேறெனச்சென்றவதரித்ததுபிறப்பக்
கொற்றமன்னவன்றனுடைக்குழவியைக்குறித்துச்
சொற்றருஞ்சுதன்மாவெனவரும்பெயர்சொற்றான். (கசு)

காலமோர்ந்தறியமைச்சனுமீன்றகான்முளைக்குச்
சாலுநன்மையிற்றாரகனெனும்பெயர்தந்தா
னேனுமீங்கிவாகற்பனவெவற்றையுமுணர்ந்தா
வாலவேனிலானெனப்பொலியெழிலொடும்வளர்த்தார். (கஎ)

குருமணிக்கலன்பலவுளபுனைகிலாகொடுங்கோ
லொருவிநின்றருண்மன்னவனுயிரையொத்துணர்ந்தா
ரிருவராவியமுடலுமொத்தியங்குவாரெம்மான்
கருதுருத்திரவக்கமேவேண்டுவர்கருத்தால். (கஅ)

பொன்செய்மாமுடியரசமைச்சுரியராய்பபுகுந்து
முன்செய்நல்வினைத்தொடர்பினுன்முப்புரஞ்செகுத்தோற்
கன்புசெய்தனருருத்திரவக்கமேயணிவார்
மன்பதைக்கினிதளித்துலகளித்தனர்மரபால். (கக)

உலகெலாம்பொதுவறப்புரந்தோம்பியபின்ன
ரலகில்செல்வமுமாயுவுந்துறந்தராவணிந்த
புலவுமுத்தலைச்சூலிவெண்கைலையிற்புகுந்தார்
திலகவாணுதனந்தையுமக்கதிசிறந்தாள். (உ0)

கேட்குநன்கதையின்னுமொன்றுளததுகேண்மின்
வாட்கடுந்திறற்புட்கரதேயத்துமன்னன்
கோட்கொளுந்திறற்சவுமியன்குலமனையொருவி
நாட்கழித்தனன்பிறர்மனைநலனுகர்நயப்பால். (உக)

நல்லொழுக்கெனுமொழுக்கினைமறந்தனனகைக்கும்
புல்லொழுக்கினையீதலதில்லெனப்புரிவான்
வல்லொழுக்கிளவனமுலைமனைவிபான்மனவா
னல்லொழுக்கியவுளத்தனுபுலகுகொண்டளிப்பான். (உஉ)

வார்கருங்குழல்வசுமதியெனுமவன்மனைவி
யூர்தருங்கரவளையினளுயிரபெறிதுயரான்
கூருமைங்கணைபடப்படத்தன்னுளங்குழைவாள்
வேரிமென்மலர்ப்பாயலுந்தழலெழவெதும்பும். (உ௩)

செய்யதாமரைநாயகியிவளெனச்சிறந்தாள்
வெய்யவேந்தனைத்துணைப்புயந்தழுவுவான்விரும்பி
யையநுண்மருங்கெனத்தனதங்கரொந்தயர்ந்தாள்
கையறுந்துயருழந்துளம்பலபடக்கவல்வாள். (உ௪)

அன்னகாலையிலடுதிறலரசர்கோன்றனக்குப்
பன்னுநான்மறைப்புரோகிதனுளனவன்பன்னி
யுன்னுகற்பினள்சத்தியவிரதையென்றொருத்தி
தன்னைவந்துறவுறைத்தனளாங்கவள்சார்ந்தாள். (உ௫)

அரசனென்றனையிகழ்ந்தனன்பிறர்க்குளமளித்தான்
வரைசெய்திண்புயனெனதுளநீங்கலான்வருந்திக்
கரைசெயற்கருங்காதலங்கடலிடைக்கிடந்தே
னுரைசெயீங்கிதற்குபாயமென்றழுதழுதுரைப்ப. (உ௬)

பெற்றமேறியவெம்பிரான்றிருவிழிப்பிறப்பென்
றுற்றவாறுரைத்துருத்திரவக்கமொன்றுதவிக்
கற்றைவார்குழலீங்கிதுதரித்தியேற்கழற்காற்
கொற்றவேந்தனுன்வசம்வரும்பிறர்மனைகுறுகான். (உஎ)

நல்லெழிற்பிறந்திலங்குவைநன்மகப்பெறுவை
தொல்லைமால்விடையெம்பிரான்றிருவருடோய்வை
யில்லறத்தினின்றிருஞ்சிறபெய்துவையினிநீ
புல்லெனுதுடன்வாழ்கெனப்புகன்றனள்போனாள். (உஅ)

தொழுதகையினள்வாங்கினடரித்தனடுயில்போ
யழுதகண்ணிணையரிபரந்தாரொழிலமைந்தா
ளிழுதைமன்னவனிணையனைநோக்கினனிரங்கி
யொழுகுசிந்தனையிவட்குலதியாவர்க்குமுதவான். (உகூ)

முகிழ்த்தவெம்முலைமுகத்திடைமுகம்புதைத்தொருவா
னெகிழ்த்தசிந்தையினனையளுமவன்புயநீங்காண்
மகிழ்ச்சிகூரதரமாரனுமிரதியும்போல்வா
ரிகழ்ச்சிசெய்தனர்பிறர்மனையின்னணமிருந்தார். (௩0)

நரந்தநாறுபூங்குழலொடுமகத்துறைநாளிற்
புரிந்தவோலக்கமிழந்தனன்வெள்ளிடைப்புகுந்தான்

சுரந்தவெம்படைத்தானையங்தொகுதியைபபுரவான்
பரந்தசேனையுந்திசைதொறுஞ்சென்றதுபாறி. (ருக)

சேனைபோயதுநோக்கினரடுபடைத்திறலோர்
கானநாண்மலர்க்கழனிசூழ்நாடெலாங்கவரா
வேனைமாநகாக்கொடிநுடங்கிஞ்சிசூழ்ந்திறுத்தா
மானவேற்கரனென்செய்கேனினியெனமதித்தான். (ருஉ)

அளந்தசேனைகொண்டவர்க்கெதிருடற்றுவானகன்று
கிளர்ந்தமன்னவாசேனையைக்குறுகினன்கிட்டி
யுளங்கடுத்தனன்பொருதனனன்னவர்க்குடைந்தான்
வளைந்தவிஞ்சிசூழ்மாநகரப்புகுந்தனன்வருந்தி. (ருரு)

கொடிநுடங்கியகோயிலுட்புகுந்துளங்குழைந்து
வடிநெடுங்குழைமனைக்கமரிழந்நவாவருந்து
நெடிதுநெஞ்சுகொண்டினைர்தனன் * வெருவரனீங்கான
கடிமலர்க்குழலாங்கதுகண்டனள்கழறும். (ருச)

ஏழையாயினுமென்னுரைமனக்கொளினிகலார்
பூழியாகுவர்நின்குடையொருதனிப்பொலியும்
வாழிமங்கையருணர்த்துசொற்கேடலேவழுவென
ரூழிமாநிலம்பகல்வதுமேற்கொளலேய. (ருரு)

உருத்திரற்கிருகண்ணெனுமுருத்திரவக்கம்
தரிபடதுண்டெனிலெவ்வுலகும்பெறத்தகுமான்
முருக்குதெவ்வருமுன்னிலாமுருங்குவரிதுநீ
யருத்திகூர்தரமேலவாக்கேட்டுணாந்தறிதி. (ருசா)

எனவுரைத்தசொற்கேட்டுளத்துணர்ந்துயிரன்ன
மனைவிசொற்றசொன்மறுத்திலனுகிமமறைநூல்
வினையமோர்ந்தறிபுரோகிதற்கொணர்கெனவிளித்தா
ரனையனெய்தினனவனுனையாங்கவற்கறைந்தான். (ருஎ)

கேட்டவேதியனுவகையிற்கிளர்ந்தனனாகித்
தோட்டடங்களுமுள்ளமுந்துணுக்குறச்சொல்வா
னோட்டுவெள்விடையவனணியுருத்திரவக்கம்
பூட்டிடுங்கலனுமெனவரன்முறைபுனையின். (ருஅ)

மாறுநீங்குவையளவொழிமாநிதிவளர்ப்பை
யூறுநீங்குவையும்பருந்தொழுவர்மற்றுன்னை

* "டினைத்தனன்" எனவும் பாடம்.

பேறுயர்த்தவனிணையடிபெறுகுவையிதனைக்
கூறுசொன் முறைபடீனகுதியென்றனன்குரவன். (௩௯)

தீதிஞன்மறைபபுரோகிதன்சொன்முறைதெரிந்தா
ஞதிநாயகன்கண்ணெனுமுருத்திரவக்கம்
பேதியாதுகொண்டாயிரம்பொறுத்தனன்பின்னர்
மாதுமத்துணைபொறுத்தனள்வானுளோர்மதிக்க. (௪0)

பின்னரன்னவன்சேனையினுடனெழீஇப்பொருவான்
மன்னுபொற்கொடிநுடங்கியகொடிஞ்சிமான்றேர்மே
லன்னமன்னனைபபாகெனவமைத்திகலமர்க்குத்
துன்னருங்கழிஞ்சினந்தலைக்கொண்டனன்றொடர்ந்தான். (௪௧)

தொடாந்தசேனையுந்தானுமாய்த்தோள்றலுந்தொடர்ந்து
படர்ந்தசேனைகொணடெதிர்ந்தனாபகைபபுலவேந்தர்
மிடைந்தசேனைநின்றெதிரொதிருடற்றலும்வெகுளாக்
கடந்தவெம்புலத்தடையலர்புறந்தரக்கடிந்தான். (௪௨)

போனபோனதிக்கறிந்திலரொதிரமாபுரிந்தார
மானவேந்தனுமன்னவர்பெருநிலம்வவ்வித்
தானைகாவலாக்களித்தனன்றன்னகரடைந்தான்
ஞானநாயகன்விழிமணிபபெருமையார்நவில்வார். (௪௩)

தனிபபெருங்குடைபொதுவறநிழற்றினன்றனது
கனிதசிர்தையினுருத்திரமணியணிகழற்முன *
பனிபபெருங்கடலுடுத்தகன்மாநிலப்பரப்பி
னனைத்துளோரையுமம்மணிபொறுத்திரொன்றறைந்தான். (௪௪)

உலகம்யாவையுமுருத்திரமாமணிபுனைவித்
தலகில்வெண்குடையரசளித்தினிதுறையநாள்
மலர்தருந்தொடைச்சௌமியன்றனக்கெழின்மைந்த
ரிலகுமாமணிப்பெருமையிற்றேன்றினரிருவர். (௪௫)

இவரையன்றியுமிருமகட்டயந்தனனென்ப
தவமுயற்சியிற்றருமிருமைந்தர்கடமக்கன்
றவிரதனதிரதனெனப்பெறும்பெயரறைந்தான்
கவிகைமன்னவன்பின்னிருமகளிர்பேர்கழறும். (௪௬)

காலஞானியென்றொருமகட்குரைத்தனன்களிகூர்
வாலசித்திராங்கனையெனமற்றவட்குரைத்தா

* "களத்தான்" எனவும் பாடம்.

ஞாலுமக்களுமுருத்திரனன்மணிதரிக்கச்
சாலுமென்றவைகொடுத்திடவாங்குபுதரித்தார். (சஎ)

இத்திறத்தினரிவரிவணிருந்தனரிப்பான்
மைத்தடம்பொழில்வளவயலுடுத்தமேனாட்டு
மெய்த்தநன்னெறிப்பிரமநாதனனெனும்வேந்தன்
முத்தவெண்குடைக்கனைகழலொருதனிமுதல்வன். (சஅ)

அனையமன்னவனருந்தவமுயற்சியினளித்த
தநயனாகியதாமரைக்கண்ணனத்தனிக்கோற்
புனைபொலன்கழற்சௌமியன்றவந்தருபுதல்வி
வனைகருங்குழற்காலஞானியைச்சென்றுமணந்தான். (சகூ)

வன்னிமுன்னரின்மணந்தனன்மணவினைமுற்றி
யின்னலந்தருமணவினையவளொடுமெய்திக்
கன்னிநன்னலங்காமுறவாங்கதுகருதிப்
பின்னகந்தருதொடையினளவற்கெதிர்பேசும். (ருo)

அரசர்தொல்குலத்துதித்தனையாயினுமரச
வுரைசெயற்கருந்தன்மையவுருத்திரவக்கஞ்
சிரமணிந்தனைதீண்டுதியல்லையேற்றீண்டேல்
வரைசெய்திண்புயமறுத்தனன் * வேண்டலைமணத்தல். (ருக)

என்னக்கேட்டுழிமுறுவலித்திருங்கழல்வேந்தன்
பொன்னிற்பூண்டனவேண்டுவவுளவெனப்புகலா
நின்னிற்பூணுதியென்றுநீநிகழ்த்தியமணிதான்
மன்னர்க்காவதொன்றன்றெனவுரைத்தெதிர்மறுத்தான். (ருஉ)

ஆயமாமணியுருத்திரவக்கமுற்றணிந்தார்
மாயிரும்புவிச்செல்வராய்மன்னரிற்சிறப்பா
ரேயவெள்ளியங்கைலையிற்றிருப்பரிதிகழ்ந்தோர்
பாயவெண்டிரைநிலத்துழல்பஞ்சபாதகரே. (ருங)

ஆகமத்துறைமுற்றுணர்ந்தறிந்தவர்க்கொணர்ந்து
யோகநாயகன்விழிமணிப்பெருமைகேட்டுணர்ந்து
நீகவன்றெழுசிந்தனைநிரம்பியொத்தனையே
லேகன்மாமணிபுனைகுதியென்றனளிறைவி. (ருச)

யாவராயினுநானெடுத்துரைப்பவர்க்கொண்டு
பாவைநீயதனிலைமையைப்பகர்தரப்பணித்தாற்

* "மறுத்தனை" எனவும் பாடம்.

லறநெறிக்கதியினுய்க்குமஞ்செழுத்துணர்த்தத்தம்மி
லிறைதிறம்பலராய்ப்பன்னாளிருந்தன ருலகமேத்த. (அச)

இங்ஙலநுகர்ந்துமண்மேலிந்திரசெல்வந்துய்த்து
நன்னெறித்துறையினவைகிநாள்பலகழித்தபின்னர்த்
துன்னருங்கிளையுமின்றமக்களுந்தொடரப்போந்து
பொன்னெடுஞ்சடிலமௌலிதிருவடிக்கமலம்புக்கார். (அரு)

கொழுந்துவிட்டிலங்கிநீண்டுபடர்கொடிப்பவளவேணிச்
செழுந்தவத்துறையீரின்னுமஞ்செழுத்தியல்பிற்செல்லு
மொழுங்குறுகதையொன்றுண்டாலுணாத்துதுமுணர்மினென்றுத்
தொழுந்தகைக்குரவனென்னுஞ்சூதனீதெடுத்துச்சொல்வான். (அசு)

விட்புலத்திமையோர்வீந்துபிறப்பதைவிரும்பவன்னோர்
கட்புலங்கதுவுந்தொல்சீர்க்கவுசிகமென்னுநாட்டி
னுட்புலத்தாடிவீழ்ந்தவானகருருவுபோலு
நட்புலந்திறவாச்செல்வவிக்கிரமநகரொன்றுண்டால். (அஎ)

அத்திருநகரின்வேதகோத்திரத்துளரானந்தன்
சுத்தநாற்சுருதிவல்லசூரியசன்மாவென்னு
மித்திறத்திருவர்தம்முளிகலுளார்நிகழுங்காலை
சத்திரம்புதைத்தநெஞ்சனறுகணானந்தனென்போன். (அஅ)

மாறுகொண்டிவனைவெல்லப்படுவதன்றென்றுமாயங்
கூறுகொண்டனையநெஞ்சனானந்தன்குறித்துவேதத்
தீறுகண்டிருந்தபோதத்திரவிசன்மாவையெய்தி
வேறுகொண்டிருந்ததீமைபொறுத்தியென்றடியில்வீழ்ந்தான். (அகூ)

இற்றைநாளளவுநின்பான்மாறுகொண்டிழைத்ததீமைக்
கற்றமொன்றில்லையையவென்னறிவின்மையானே
குற்றமுற்றொழித்துநீயேபொறுத்தனைகோடிபொல்லா
வெற்றனையருள்வாயென்னப்பின்னரும்வணங்கிவீழ்ந்தான். (கூ0)

தோமறுகுணத்தினமிக்கசூரியசன்மனுளத்
தாமரையயனுக்கொப்பானுங்கவன்றன்மைநோக்கி
வேமெரிமெழுகைவைத்தாலன்னதாய்மெலியுநெஞ்சன்
காமருங்கருணைநல்கியிருக்கெனக்கழறினனால். (கூக)

ஆங்கவன்பணித்தலோடுமருகுபோயிருத்தற்கஞ்சித்
தேங்கியகருணையையநின்னடிச்சேவைநல்கிப்
பூங்கழற்குரிமையென்னையாக்குதிபுலையன்செய்த
தீங்கினைப்பொறுத்தியாயிற்றேவரிற்றேவனீயே. (கூஉ)

என்றவனுரைத்தமாற்றமிருசெவிப்படுத்திவெண்ணெய்க்
குன்றெரிதுற்றதென்னக்குழைந்தனனிரவிசன்மா
வின்றுதொட்டெனதுசுற்றத்தினியைநீயெனக்குநின்போ
னன்றியோருளரோவென்னத்தழுவினனட்புக்கொண்டான். (கூ௩)

அற்றிரண்டனையநெஞ்சத்தானந்தனொருநால்வேதச்
சொற்றிரண்டனையநாவான்சூரியசன்மனோடு
மற்றிரண்டிலனாயொன்றிப்பற்பலவைகல்சென்றான்
கொற்றிரண்டனையவைவேலுள்ளத்தான்குறித்துக்கூறும். (கூ௪)

வரையடுத்திருக்குநம்மூர்மறுகெலாம்வரிகொள்வேங்கை
யிரையெடுத்துழலும்வாளிட்டீரிருட்பிழம்புவீங்கும்
விரைகமழலங்கலாய்நீவெளிப்படாதிருத்தியானே
யரையிருணடுநாளெல்லாந்துயில்கலன்றிரிவனென்று. (கூ௫)

வாளுகிர்த்தடக்கைவேங்கைவருநெறிபார்த்துநின்பான்
மூளிருந்துயிலைநீக்கியெழுப்புவன்முனிநாண்கோத்துக்
கோளிரும்பகழிதூண்டிக்கோறியென்றுரைப்பவொத்தான்
கேளிரும்பவத்தைவென்றோனவனுளங்கிடப்பதோரான். (கூ௬)

அளித்தகவில்லாநெஞ்சத்தானந்தனன்றோரா*வை
வெளிப்படவிடுத்துவீக்கிவேங்கையினதளாற்போர்த்துத்
துளிப்புனல்விழியிற்சோரச்சூரியசன்மற்கூவி
விளித்தனன்சிலைகையேந்தியனையனும்வெளிவந்துற்றான். (கூ௭)

சுட்டினன்வேங்கையீதென்றுரைத்தனன்சுட்டாமுன்னம்
விட்டனன்பகழியீதுவேங்கையென்றுண்மைகொண்டான்
பட்டதுபகழிவீழ்ந்துபட்டதுபசுவுநோக்கிக்
கெட்டனனிவனென்றுன்னப்பின்னருங்கிளத்தலுற்றான். (கூ௮)

கள்ளிருட்பொழுதுநீங்காமலிவணிருப்பினேருங்
கள்வரால்வெருவாதியான்போய்நம்மனைகண்டுமீள்வேன்
வள்ளலிங்கிருத்தியென்றேவேகினன்மனையுளெய்தி
யொள்ளிழாய்சோரர்சோவரகத்தைவிட்டொழிதியென்றான். (கூ௯)

கொண்டுபோயவளைமைந்தன்குலமனையிருத்திமைந்த
னொண்டொடியோடுங்கூடியுடன்செலவருத்தித்தாதை
தண்டலின்மனையுட்போக்கித்தம்பிநின்றந்தைபோல
மண்டிருள்விளிப்பர்கள்வர்துறக்கலைவாயிலென்றான். (க00)

---

* "துயில் கலனறிவனென்று" எனவும் பாடம்.

இவளையீங்கிருத்திமீண்டுபுன்மையவனைத்துங்கூடிக்
கவாபடுமனத்தன்சென்றான்கைபுடைத்துயிர்த்துநின்றாள்
துவிமுலைமடந்தைமற்றோர்கொழுநனைக்கொணர்ந்துபாய
லவள்விளைத்திடுதல்கேட்பானரிதுநின்னருகுவந்தேன். (க0க)

அன்னவனுரைத்தலோடுமழலெழவுயிர்ப்புவீங்கி
மின்னிலைவாளொன்றேந்திவெகுண்டுருத்தெழுந்துமீண்டான்
றனனிலைவாயிற்கூவத்திறந்திலர்தறுகண்பெற்றா
னந்நிலைமதிலொன்றேறித்தன்னகமதனுட்புக்கான். (க0உ)

புகுந்தனன்மனையுட்புக்கானமருகியைபபொருந்திடபுல்லி
மகன்றுயில்கொள்வதோரான்மறம்படுகுருகிவாளாற்
பகுந்திறமருமம்போழ்ந்தானிருவரும்பட்டாரகங்கு
லிகந்ததுபரிதிவெய்யோனெழுந்ததுகுணபாலெய்தி. (க0ங)

தாவுகொச்சகக்கலிப்பா.

வந்தாண்மனையாண்மதலையொடுமருகி
செந்தாகுருதிச்செழுஞ்சேற்றிடைக்கிடபப
வந்தோவிதுகாணப்பெற்றேனீதாரிழைத்தா
ரெந்தாய்மகனேயென்றேங்கியெடுத்தழைத்தாள். (க0ச)

சோரிக்கொழுஞ்சேற்றிடைக்கிடக்குந்தோன்றலைத்தான்
வாரியெடுத்துமடிகிடத்திமைந்தனுக்கும்
பாரிக்குமீதோவகுத்தானபழமறையோன்
யாரிக்கொடிதிழைத்தாரென்றுவரற்றினாள். (க0ரு)

பெற்றெடுத்ததாதையறிந்துமுயிர்பெற்றாளே
விற்றிரண்டுகூறுயிறந்தாயுனைக்கண்டு
முற்றவுயிர்சுமந்துவாழ்ந்தேனுலகத்தோா
மற்றெனைக்கைதீண்டியழவழக்குவாராதே. (க0சு)

கல்விக்கடலேகலைஞானதீபமே
செல்வக்கொழுந்தேசெழுநான்மறைப்பொருப்பே
சொல்வித்தகனேயென்றோன்றுனையிதுநாட்
கொல்வித்ததாரென்றுணரேன்குலமுடிந்தேன் (க0எ)

பீரியல்சோரிபெருகப்பெருந்தாமத்
தாரியன்மார்பமிருபிளவுதந்தாரே
யாரிதுசெய்தாரறியேனுனையீன்ற
சூரியசன்மாவறிந்திலனோதோன்றலே. (க0அ)

கள்வர்வருவதுணர்த்தறிந்தகள்விநா
னுள்புக்குமைப்புறத்துப்போக்கினேனேனோர்பாவி
தன்னூதினையுலகங்கைகழிப்பததானமிழந்
தெள்ளிறையுநீங்கேனிருந்தேனுமையிழந்தும். (௧௦௯)

ஈனுந்தனித்தாயாயானிருப்பவீங்குனக்கு
ஞானம்புரிந்தோனிருப்பவிதுநாளவளையும்
தானென்றுநீயென்றும்வேறுபடுத்தாத்தகைமை
யானந்தனின்னுமறிந்திலனேவையனே. (௧௧௦)

என்றரற்றியேங்குகுரல்கேட்டிரவிசன்மா
வின்றுணைவியாமென்றிடிவீழ்மரம்போல
நின்றலறிவீழ்ந்தானெடிதோடியுள்புக்கென்
வன்றடக்கைவாளாலிறந்தனையோமைந்தனே. (௧௧௧)

செய்வார்செயற்கரியசெய்தேனெனவுனையான்
வைவாளெறிந்துவதைத்தேனேயானந்த
னுய்யாவழிபார்த்துடனுடசெத்துருவாய்ப்
பொய்யாய்ப்படுத்தானினியாவிபோற்றேனே. (௧௧௨)

விள்ளாவிருளிற்புலிவேட்டம்போக்கினு
னெள்ளாதுசெய்தேனெனதுவினைதீரேனு *
லுள்ளாடசெத்துருவென்றோரேன்மருகியொடும்
பிள்ளாயுனையிழக்கப்பெற்றேனேபேறிலியேன். (௧௧௩)

என்றுபலபிதற்றியேங்குமிரவிசன்மா
தன்னாலறியாத்தவறிழைத்ததீராமை
யந்நாளவையறிந்தவந்தணருமையுற்றார்
பின்னானின்றுணர்ந்தனுங்கொன்றுபேசுவான். (௧௧௪)

கம்பங்கழுதுதருமிருளிறகைச்சிலையா
லம்பொன்றெறிந்துசன்மாகொன்றான்சினையாவை
வெம்புங்கொலைவாள்விதிர்த்தீன்றமைந்தனையும்
வம்புண்குழலியையுங்கொன்றான்மருளுற்றான். (௧௧௫)

என்றானவையோரெழுந்தாரிவன்சினையாக்
கொன்றானேவல்லனேபார்த்துமெனக்கூடினார்
சென்றார்பகழிதிளைப்பச்செயலொழிந்தாங்
கன்றாவிறந்ததறிந்தாரருமறையோர். (௧௧௬)

---

* "னெது வென்று தேரேனு" எனவும் பாடம்.

மீண்டார்மறையோர்வெருண்டிரவிசன்மனெனும்
தீண்டாப்புலையவருதியெனச்செப்புறலு
மாண்டாரணத்துறையோர்முன்வந்தானன்னவரும்
வேண்டாவிழைத்தனையெம்பேரவையின்மேவலையால் (ககஎ)

ஆவினுயிரொறுத்தாய்மைந்தனையுமன்னவனறன்
பூவியலுங்கூந்தலையுங்கொன்றாய்புலைபூண்டாய்
மூவழியாயுள்ளபழிபொறுததாய்முன்னின்றாய்
பாவியுனைநோக்கிலுண்டாம்படுநிரயம். (ககஅ)

என்றெடுதுக்கூறியெமதுநகருற்றனையேற்
கொனறிடுதுமென்றாரவரையெதிரைகைகூப்பி
யன்றளவையானந்தன்செய்தபரிசத்தனையு
மொன்றுவழாதோதினனோர்ந்தறியாதையுற்றா. (ககக)

சூதாவ்வினைந்தபரிசென்றுசொறறனைநீ
கேதாரநாதன்றிருமுற்றங்கிட்டினையிப்
போதாரிடபத்தைபபுல்லருந்தநல்கினையே
னீதானிழைத்தனவன்றென்னறிநுழ்த்தினா. (கஉ0)

எந்தைபெருமான்றிருமுனிடபத்தேறு
சிந்தைதிருவருளிற்சிரியதானன்மதினுந்
தந்தவிடபந்தருகோபுரத்திடபம்
வந்தருந்தச்செய்வேனீகாணபான்வரிலென்றான். (கஉக)

ஆயதுசெய்துமெனாானகருமறையோர்
தூயதிருமனந்துச்சூரியசன்மாவொடும்போ
யேயபெருமான்றிருமுற்றமெய்தினா
போயொருதன்சிடனையும்புற்கொணர்தியென்றுரைத்தான் (கஉஉ)

ஈட்டுமதிட்கோடியெய்திடபத்தேறுகா
ணீட்டுநெடுங்கோபுரத்துநின்றெழிர்தசேவினங்கா
ளாட்டுதிைக்கங்கையணிந்தபிரானஞ்செழுத்து
மாட்டுதிருவருளுண்டென்றால்வருதிரென்றான். (கஉங)

பொய்யிலிருங்கேள்விப்புலமையோன்சொற்றவுடன்
றையலொருபாகன்சந்நிதியினேற்றருகு
வெய்யமுழக்கெழுப்பிமேவந்துவேதியன்கைச்
செய்யபசும்புற்கொழுந்துநாவளைத்துத்தின்றனவால். (கஉச)

கண்டார்மறையோர்களித்தாரதிசயமுட்
கொண்டார்வெருவந்தார்கும்பிட்டார்கோமானைத்

தண்டாமரைச்சரணந்தாழ்ந்தாராய்நீயன்றே
பண்டாலிலைகிடந்தோற்கெட்டாப்பரனென்றார். (௧௨௫)

யாங்களிழைத்தபிழையெல்லாமிதழவிழ்தத
பூங்கமலததாரோய்பொறுப்பாய்நினதிடத்தி
னோங்கறமேயன்றிமறமிருக்கவொண்ணுமோ
வீங்குபவப்பரவைகீழ்போகமேனின்றாய். (௧௨௬)

இன்னபலபன்னியேத்தியிரவிசன்மா
பொன்னடியைமீண்டும்பணிந்துபுலமையோய்
சின்னெறியவஞ்செழுததினுண்மைதெளிவிபபா
னின்னலதியாருளரோவென்றுநிகழததினா. (௧௨௭)

அருளிற்கதிபுரக்கு * மஞ்செழுத்துநாலு
வருணத்தவாக்கும்வகுத்தபரிசோதித்
தெருளத்தெருட்டித்தெளிவிப்பாய்நீயென்னத்
துரிசற்றசிந்தையோன்சூரியசன்மாவுரைபபான். (௧௨௮)

பேராமறையோரபிரணவத்தோடுச்சரிக்க
பாராளரசரதுவொழிகபல்சனங்க
ளோராச்சிகாரமுதன்மகரமீறாக
வாராய்ந்துருவேற்றியுய்ந்தொழிகவென்றறைந்தான். (௧௨௯)

அக்காலையாங்கனையான்பன்னியருகடைந்தா
டக்கோருடன்சூழந்தவனடியிற்றாழ்ந்தனளான்
மிக்காடகழிதொடவீழ்ந்தபசுவுமுயி
ருக்காருமுய்வானுனைத்தியெனவிரந்தாள். (௧௩0)

தெய்வத்திருவஞ்செழுத்தொடுதென்சிந்தைவைத்தான்
மைவைத்தகண்டனிரங்கிவரங்கொடுத்தான்
வைவைததவாளிசெகுததபசுமைந்தனொடு
முய்வித்தான்மாமருகியாங்கணுடனெழுந்தாள். (௧௩௧)

எல்லோருநோக்கியதிசயங்கொண்டேத்தினா
நல்லோனைச்சூழ்ந்துநடுநடுங்கியஞ்செழுத்து
வல்லோனைநோக்கிவலஞ்சூழ்ந்துபோந்தகன்று
புல்லேறனைத்துமிருந்தவுழைப்போயினவால். (௧௩௨)

சொல்லாமறைதெளித்தசூரியசன்மாவருள
வெல்லாருந்தங்கண்மனையகத்தினெய்தினர்

---

* "மஞ்செழுத்தினுண்மை நால்" எனவும் பாடம்.

பொல்லாததீங்கிழைத்தவானந்தன்பொங்கருவிக்
கல்லாநெடுவரையுங்கானகமுஞ்சென்றொளித்தான். (௧௩௩)

தன்னுருவமெல்லாம்பிணிக்களித்துத்தன்னுடலச்
செந்நிறநீர்பாயப்புழுக்கிளைப்பதீதுற்றான்
மன்னுயிருமாண்டான்மறலிவதைததிழைப்ப
வின்னுநிரயத்திழிந்தானெழுந்திலனால். (௧௩௪)

சூரியசன்மாசுருதியுரைக்கெட்டாத
சீரியவஞ்செழுத்தின்சின்மயனுய்ச்சேயநாட்
பாரினினிதுவந்துவைகல்பலகழித்தா
னாரியொருபாகன்றிருக்கைலைநண்ணினான். (௧௩௫)

நண்ணுங்கைலைக்கிரியினெடுநாள் * கழித்துக்
கண்ணுதலெம்மானுருவிற்கரந்தொழிந்தா
னண்ணலருந்தவத்தீரொன்னலவ்வஞ்செழுத்தி
னுண்மைதெரிபவினுணாத்தறகெளிதன்றே. (௧௩௬)

அஞ்சுதிருவுருவம்பெற்றெடுத்தவஞ்செழுத்தை
நெஞ்சினினைவாரிதழியொடுநீணிலாப்
பிஞ்சுபுனையும்பெருமானேயென்பதல்லால்
வஞ்சமறுத்தீரவரையென்னென்றுவாழ்த்துகேன். (௧௩எ)

ஆதியருளுருவம்பெற்றெடுத்தவஞ்செழுத்தை
யோதியுணர்ந்தாரையுள்ளத்துணர்ந்தாலும்
தீதுபிறப்பறுப்பாரன்னவர்க்குத்தீங்கிழைப்பார
டோதுநரகினுக்குமண்ணுத்தல்போகாதே. (௧௩அ)

பஞ்சாக்கரமான்மியச்சருக்க முற்றிற்று.

ஆகச்சருக்கம் எ-இ திருவிருத்தம் - ௬௧அ.

எட்டாவது

## சிவநாம மான்மியச்சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வேதத்தொழுக்கமுழுதுணர்ந்தபுரிபுன்சடையீர்விமலனம
தாதிப்பெருமான்றிருவெழுத்தினுண்மையறிந்தமுறையறைந்தே
நாதத்தொளிருந்திருவுருவநாமமுளதென்றுரைத்தனமெம்
பேதைச்செருக்கினறிந்தவற்றைச்சொல்வாங்கேட்டுப்பெரிதுவப்பீர். ()

* "இளையோடுநாள்" என்றும் பாடம்.

புரங்கண்மூன்றுமடவெடவைக்கொடுந்தீமாட்டும்புன்னகையோன்
சிரங்களோரைந்துடையபிரான்றிருநாமத்தினொருநாம
மிரங்கியொருகாலுரைத்தாலுமிவனேயவனென்றெணலன்றி
யரங்கிமனஞ்சூழஞ்ஞானத்திகழ்வாரளறுபுகுவாரே. (௨)

எந்தைபெருமான்றிருநாமம்பிறந்தநாட்டொட்டிறப்பளவுஞ்
சிந்தையொருபோதுணராராய்த்தீதுபுரிந்தோர்செல்லுநா
ளைந்துபுலனுமயர்ந்தபின்னரறிந்துமறியாமையினாலும்
வந்தநாமங்கலைகொடுபுகுத்தப்புகுந்தவழிமொழிவாம். (௩)

திரைநீர்வேலையகழுடுத்தகொடிக்கோட்புரிசைசெலக்கிடந்த
வரைநீண்மாடமறுகுதொறுமழைகிண்டியரவருகலிங்கப்
புரைதீர்திருநாட்டகவையறம்புரிகந்துகமென்றொருநகரத் [யோன்.
துரைநான்மறையோர்குலந்தோன்றும்வியாழனென்போனொருமறை

புதல்வரிலனாய்நெடுங்காலம்புரிந்ததவத்தின்பொருட்டானோர்
மதலைபயந்தான்வீரியனென்றவற்குநாமமதலையவன்
சிதையுமனத்தான்வரம்பிகந்துபுலவுமதுவுந்தின்றருந்து
மதுமற்றொழியான்கள்விலைகூய்மறுகுதோறுமலமருமால். (௫)

அறுத்தபுலவுவகைந்தரிந்து * கூலத்தமைத்துவிலைபகரு
நிறுத்தபொருள்வேட்டவாவினனாய்ப்பிறந்தவரம்பினெறிநீத்தான்
கறுத்தமனத்தின்புலைத்தொழிலேயன்றிக்கருதான்பரப்பிரமத்
திறுத்தபொருளோராந்துள்ளோரையிகழாதொழியானெஞ்ஞான்றும். ()

இவ்வாறொழுகும்புல்லொழுக்கினொழுகிச்சிலநாளொழிந்தபின்னர்
வெவ்வாறிழைத்தவினைபெருக்கிவீந்துபடுநாண்மெய்தீண்டி
யவ்வாறொழுகுமதலையவனருகுசார்ந்தானினதுபொரு
ளெவ்வாறுணரேன்கொடுத்தபரிசேற்றபரிசேதியம்பென்றான். (௭)

செல்லக்கிடக்கும்புலைச்சேரித்தலைவரிருவரிவர்களிலோ
ரல்லற்புலையன்புலவுவிலைதரவேண்டுவதுண்டாப்பணமற் [வ்
றொல்லைக்கொடுத்துமதுச் சிவமென்றுரைத்தானுயிர்விட்டொழிந்தனன
வெல்லைக்கடைபார்த்திருந்தமன்பாசங்கழுத்திட்டிழுத்தனனால். (௮)

தென்பான்மறலிசெலக்கொடுபோய்ச்செக்கிற்றிருக்கித்திருக்கியவ
னென்பானவையொன்றறியாமலரைக்குங்காலையிறந்தொழிநா
ளன்பாஞ்சிவமென்றுரைத்ததனைக்கயிலைக்கணதோரறிந்துறுத்து
முன்பாமறலியொடும்பொருதுமுடித்தார்மறலிமுறட்சேனை. (௯)

---

* கடைவீதி.

-நிரையத்தலைவன்பெருஞ்சேனையிறந்துநீங்கநெடுமெறலி
வரையெடுத்திவரும்புயத்தடத்தைப்பாசத்திறுக்கிவலித்திழுத்தா
ருரையிற்சிவமென்றுரைத்தானைத்தெய்வமானததும்பருய்த்து
விரையக்கொடுபோய்த்திருக்கயிலைப்புனிதன்றிருமுன்விடுத்தனரால். ()

விடுத்தமறையோன்முதற்புரிந்தவெம்மைநீங்கியுமைபாகத்
தெடுத்தபெருமான்றிருவுருவமெடுத்துச்சிறந்தான்றொடர்பாசந்
தொடுத்தநமனைக்கொடுமுழையின்றுரவுட்புகுத்தாரதுகேளாப்
படுத்தநிரயத்தென்றிசைக்கோன்வடபாற்கைலைபடர்ந்துற்றான். (௧௧)

எங்கோனந்திவெம்பெருமானிருத்தாளிறைஞ்சுமியமனொரு
செங்கோலளித்தாயதுவன்றித்தீமைபுரியேனொருசிறியே
னங்கோர்மறைநன்குலமிகந்துபுலவுமதுவுமயின்றருந்தி
வெங்கோலரசன்றிருப்போலத்தருமங்கழியமீறாநதான். (௧௨)

அவனைக்கொணாந்தார் கொணர்வழிச்சென்றயில்வாளெயிற்றுக்
கணநாதா, சிவனைப்பணிந்தோனிவனெனவென்சேனைமுடியச்செகுத
திறுத்துப், பவனத்தொருசாரநெடுமானபபாங்கரேற்றியிவணுய்த்தா,
ரெவனுற்றடைத்தாரறியேனென்பணிமேற்கொணடிழைத்தானே. ()

இதுகேட்டுனதுதிருவடிக்கீழெய்தியடைந்தேனெம்பெருமா
னதுகேட்டின்னபரிசெனவோர்ந்தருள்வாயெனலுமருணந்தி
மதுவாய்ப்புலையன்மறைக்குலத்துவரம்புநீத்தவீரியவா
னெதுதீர்த்தொழிவானல்வினையொன்றிருந்ததிறந்தமுற்பிறப்பின். ()

ஆதலானுமுயிரிறக்குமற்றைநாளிலரனும
மோதலானும்பெறறகரியகதியினுயாந்தானுடம்பெடுத்தார
தீதிலாமைசெய்திலராய்ச்சென்னவலையிற்றியங்குறினுஞ்
சாதலானகாலைசிவநினைந்தார்கதியின்றலைநின்றா (௧௫)

அபபெருநாக்கிலரும்பதவியவர்க்கல்லாமலெமாக்குண்டோ
வெபபோடெரியுந்தீநிரயத்திழிவாரிவர்க்குவினைசெய்வா
ரிபபோதுனதுகொடுங்கோன்மைக்கரன்பேருணாததாரெளியரோ
மைபபோலுளத்தாய்முன்னொருநாணிகழ்ந்தகாதைமறந்தனையே. (௧௬)

கழிந்தகாலத்தொருவேடன்வைவாள்விதிர்க்குங்கரத்தினனா
யழிந்தசிந்தைமறச்செருக்கால்வழிச்செல்வோரையாறலைத்துஞ்
சுளிந்தசீற்றத்துடனுயிரைத்துறந்தீர்ந்தீட்டும்புலமயக்கி
னிழிந்தமதுவுண்டீர்ம்புலவுதின்றும்பிறர்பாலிடர்விளைத்தும். (௧௭)

இரக்கமென்பதொருசிறிதுமில்லானாகித்தறுகண்மை
கரக்குமனத்திற்பிறர்பொருளைக்கவ்விக்கவர்ந்துங்கடும்பாவம்

புரக்கும்புலையரிற்பழகிக்கண்மோர்துண்டும்புரியறத்தைத்
துரக்குந்தொழிலுக்குளனுகிக்களவானிரவுந்துயில்கொள்ளான் (கஅ)

வரைக்குண்முழையினகத்தொதுங்கிவழிச்செல்வோரையாகாவென்
றுரைக்குமொருகாற்பிறகாவென்றுரைக்குமொருகாற்கடுஞ்சீற்றத் *
திரைத்துவெகுளாச்சங்கரவென்றியம்புமிவனுக்கிறுதியடுத்
தரைக்குங்குழவியெனவுயிர்க்குங்காலைமதலையருகுற்றான் (கசு)

எளியேனுய்வதெவ்வாறென்றிரங்கியழக்கண்டிவனோக்கி
யொளிவாயெழுந்துசெல்வோரையோடிமறித்துன்னேவலரை
விளியாகாவென்பிறகாவென் விடலையாகிச்சங்கரவென்
றுளிநீர்கலுழக்கவர்ந்திடெனவுரைத்தானுவிதுறந்தொழிந்தான். (உ0)

தொலைவில்காலம்பெரும்பாவந்தொடக்கத்தொடாந்தாருயிரனைத்துங்
கொலைசெய்வேடனிவனைநெடுநிரயங்குமிழியெழவமிழ்த்தி
யலகில்காலங்கிடத்தியெனவறைந்தகணக்கற்கெதிர்நோக்கிப்
புலையனெனினுஞ்சிவனுமமுரைத்தானிறக்கும்பொழுதென்றாய். (உக)

நீயாயுரைத்தவுரையுணர்ந்தநிறைந்தகுணச்சித்திரகுத்தன்.
றேயாப்பதவிபுரந்தளிக்கும்பெருமானணியுந்திருநாமம்
வாயானுரைக்குந்திறனுற்றானொழிந்தானிரயமெனமதிப்பத்
தாயார்வழுத்தநடுநின்றாய்நீயன்றிழைத்தசொல்லுவாம். (உஉ)

வெள்ளேறுகைத்ததனிப்பெருமானுமமுரைத்தான்வீந்துறுநாட்
புள்ளேறுகைக்கும் * பெருமாற்குமயற்கும்போற்றும்பொறைபெற்றன
வுள்ளேமொருகானெடுஞ்சூலடபடையீர்வழுத்தும்வழுத்துமென்க்
கள்ளேறிதழ்ப்பூமலரிறைத்துத்தொழுதாய்களித்தாய்நீயன்றோ. (உங)

இன்னகாலனெனத்தெரியேன்வேடனிருந்தானெம்பெருமான
றன்னதாயதிருவுருப்பெற்றறியாய்போலுஞ்சதுமறைதேர்
மன்னுபுரிநூல்வேதியனைமறலப்புகுந்தாருன்னுழையோா
டன்னுகணத்தோரிதுபுரிந்தாருனக்கேசாலபழுதென்றான். (உச)

நந்தியுரைததபரிசனைத்துஞ்செவியோர்ந்துணர்ந்தநமனுரைக்கு
மெர்தைபெருமான்றிருநாமத்துயர்ந்தோனவனையிடரிழைத்தல்
சிந்தையுணர்ந்தேனலன்கைலைப்பெருமான்சேவைசெயப்புகுந்தேன் [ன்
முந்தைமுறைக்காலனையொழித்தீங்கிவனையமைத்தெனமுறையோரா

சேவேறுகைத்தமுதற்பெருமான்றிருநாமத்தினொருநாம
நாவேறுதற்கன்புடனின்றானெனக்குநமரோநானிழைத்தல்

* "பெருமாற்கும் போற்றும் பெரும்பேறினிதுற்றான்" எனவும் பாடம்.

பூவேறிதழிப்புரிசடைமேன்மதியுமரவும்புனைந்தாரா [ன்.
யாவேறுகைத்தோனருட்பெருமான்பொறுத்தியெனச்சேவடிவீழ்ந்தா

தருமனிரங்கத்தானிரங்கிநந்திபுகலுஞ்சண்டனைவெகு
செருவினெழுந்துமாகாளர்கணத்தோரபிடித்துச்சேமித்தார்
அருகுசெலப்போயாமுரைத்தேமென்னவுணர்த்தியாங்கவனை
மருவுசிறைமீட்டெனகொடுபோவெனலுந்தொழுதுவழிக்கொண்டான்

**கலிவிருத்தம்.**

ஏகாநெறியெய்தலுமெண்ணுறுவான்
சோகாகுலநெஞ்சுதுணுக்குறுவான்
மாகாளரைமுன்னிவணக்கமுறு
நீகாவெனநின்றுநிகழ்த்துவனால். (உஅ)

எந்தாய்நினபொன்னடியெய்தினனென்
சிந்தாகுலமுற்றருள்செய்தியெனு
வந்தானைவருந்தினையென்னையெனு
நந்தாமொழிகாளர்நவிற்றினரால். (உகூ)

முன்னுற்றுநிகழ்ந்தனமுற்றுமுரைந்
தின்னற்குறைகூறியிரந்திடுமக்
கன்னற்பொழுதிற்றெறுகாளாவெகுண்
டுனனச்சமொழிந்தனைபோலுமெனு. (௩0)

ஐயாவெனதச்சமொழிந்திலநீ
செய்யாயருள்சிறவைசிறியநின்
கய்யாலவாவந்தகதைத்துயரொன்
மையார்தனிநெஞ்சுமறக்குமதோ. (௩க)

என்றன்னவனஞ்சியெழுந்துமுடிக்
குன்றென்னவிழுந்திடாகூறினனென
றன்றேதியகூதனையந்தணாவான்
மின்றேயுநெடுங்கொடிவேணியனே. (௩௨)

மறலிக்கிடர்காளர்வருத்தியவா
றுறமுற்றுமுணாத்துதியென்னவுணாந்
தறமுற்றுமளந்ததவத்தறவோன்
முறைபற்றியவாக்குமொழிந்திடுவான். (௩௩)

ஓதுஞ்சவுராட்டிரமென்றொருநாட்
டேதந்தருதீவிரனென்றொருநால்

வேதம்பயிற்றல்குலவேதியனை
மாதந்தையெனப்பெறுமோர்மதலை. (௩௪)

கூறும்பெயர்கோசிகனென்றுடையான்
மாறுண்டமனத்தன்வரம்புகடந்
தூறுங்களிமாமதுவுண்டுசலாய்
நாறும்புலவுண்டுநடக்குவனால். (௩௫)

வள்வாளொடுநள்ளிருள்வாயுழல்வான்
கள்வாரொடுநாடுகவாந்துறுவான்
புள்வாய்விடல்கண்டுபுலைக்குடில்புக்
குள்வாய்மதுவுண்டுடனாடுவனால். (௩௬)

இத்தன்மையனாகியவங்குவனோர்
பொய்த்தன்மையளாயபுலைச்சிமுலைப்
பித்தின்மயலாயவள்பின்சுழல்வான்
மத்தன்கொலையஞ்சிமனந்திரியான். (௩௭)

ஒருநாளவளோடுறையும்பொழுதிற்
செருவாளொடுகண்டசினபுலையன்
பெருமாறுகொண்டுபிடித்திவனை
யிருதோளுமிறுக்கிவிசித்தனனால். (௩௮)

வைவாளகொடுவெவ்வியவன்குறியைக்
கொய்தானதுகொண்டுயிர்விண்டனனன்
மொய்வாரபடையோடுமுடுக்கிமன்
கைவாரகொடுகட்டியிழுத்தனனால். (௩௯)

தென்றிக்கிவனைக்கொடுசேறலுமவ்
வென்றிச்சிவதூதர்வெகுண்டனரா
யொன்றிச்சமதூதரையோடவடித்
தன்றிப்படுபாவியையணமினரால். (௪௦)

செம்பொற்றனிமானமிசைச்செறிவித
தும்பர்க்கொடுசென்றனருற்றனராற்
கம்பக்களியானையுரிக்கனகப்
பைம்பொற்கிரிவில்லிபழங்கயிலை. (௪௧)

குருதிப்புனலாறுகுதித்தெழுமற்
றொருதிக்கிலாதென்றிசையுற்றனரால்
வெருவிபயதறித்தனிவிம்முறுவார்
செருவிற்றருமற்குரைசெய்தனரால். (௪௨)

அக்காலையெழுந்தனனந்தகனு
மிக்காயகடுஞ்சினமீதுறுவான்
மைக்காளகளத்தன் மணிக்கயிலை
புக்கானதுசென்றுபுகுந்துறலும். (சங)

கண்டாரதுகாளர்கணத்தலைவ
ருண்டாயதுவென்னையுரைத்தியெனத்
தண்டாமரையன்னசரண்பரவா
விண்டானிடருற்றுவிளைந்தவெலாம். (சச)

தென்பாலிறைசொற்றசெவிப்புகுதா
முன்பாயதுகாளாமொழிந்திடுவா
ரன்பானவனன்பனெனத்தகுமா
றுன்பாலறிவிபபனுணாந்தறிநீ. (சரு)

விளையாடிடவீதிபுகுஞ்சிறுநாட்
டளையாரருள்சம்புவொடும்பயில்வா
ணிளையாமறைவேதியனென்றிடுசம்
பளையார்வமொடின்னவறைந்தனனால். (சசு)

கூகைப்பெயர்கோசிகனென்டதனக்
காகத்தருமாறலவென்றுமையாள்
பாகத்திரியம்பகனெனறுபகர்ந்
தோகைப்படவோதியழைத்தனனால். (சஎ)

சம்புப்பெயரான்முறைதந்தபெயர்
நம்பற்கினிதாயருணண்ணினனு
லும்பர்க்குமுயர்ந்துடையோனிவனைக்
கம்பித்தனையென்னைகொல்காரணமே. (சஅ)

உற்றேனறுமுறைந்திலையென்னையென
மற்றந்தகனீதுவழங்குவனு
லிற்றின்னதிரியம்பகனென்பெயரா
இற்றுன்னருமிக்கதிகிட்டுவரோ. (சகூ)

செய்யாதபவத்தொடுசென்மமெடுத்
துய்யாதவரோர்பெயரோதிடினப்
பையாடரவோனடிபற்றுவரோ
லையாவதிகாரநடத்துவனே. (ருo)

என்னச்சிலகூறியிகழ்ந்தனனுய்த்
தன்னைக்கொடுபோதுறலுந்தழலா

முன்னர்ப்படவாவென மூர்துறலுங்
கன்னத்துவிழுந்த துகாளர்கதை. (ருக)

அடியுண்டதுசோரியலைத்தெழவா
னிடியுண்டவராவினிடிந்துவிழா
முடியுண்டனனென்னமுயங்கிநெடும்
படியுண்டன னுவிபதைத்திலனே. (ருஉ)

அதுகாலையிலாழிவயப்படையோன்
பதுமாசனமீதுறைபண்ணவனங்
கெதிர்வார்கயிலைக்கிரியெய்தினரா
லிதுவார்நமனைக்கொடடாத்தவரோ. (ருந)

என்றுற்றனர்காளரையெய்தினராய்
மன்றற்றுளவோனுமலர்க்கிறையும்
மின்றெத்துமெயிற்றுடைவெம்மறலிக்
கின்றைப்பிழைநீவிரபொறுத்திரென. (ருச)

கூறந்தகனுங்குருதிப்புனலாற்
றேறுண்டெழுசிந்தைதெளிந்தனனன்
மாறின்றியகாளரைவந்துதொழா
நாறும்பணிநாண்மலரோனறைவான். (ருரு)

வேறு.

கொழித்தநான்மறைக்கோசிகனென்பவன்
கழித்திடும்பெயராற்கதிநண்ணினன்
விழித்துவேளையெரித்தவன்மெய்ந்நெறி
மொழித்திறத்தின்மொழிதரமுற்றுமோ. (ருசு)

கயிலைமேவுகடவுடன்னுமதநைத்
துயிலைமேவிவெருவந்துசொல்லினு
மயிலையோர்மருங்காக்கியவானவன்
பயிலுமிந்தப்பருப்பதம்வைகுவார். (ருஎ)

ஈயிழைத்ததரும்பிழைநீயுநின்
வாயிழைத்தனகாளரைவாழ்த்துதி
யாயிழைக்கொருபாகனையாமென
மீயிழைத்தவினையறமேவுவாய். (ருஅ)

என்றுகாளரையேற்புறநோக்கியே
யின்றுகாறுமிவன்பிழைநோக்கலை
வென்றியாளவிடுத்திடுவாயென
நன்றுகூறிக்கயிலையைநண்ணினர். (ருகூ)

வாளரப்பணியானைவணங்கினர்
நீளறத்தநெறிப்படநின்றவெங்
கோளரத்தருமற்குறிததாரரோ
காளரற்றகருணைவழங்கினா. (சுo)

தென்புலத்தியமன்புகச்சென றன
னன்புலபபறுகாளரவனறனை
வன்புறுத்தியவாறுவகுததனை
முன்புணாத்துவழிமொழிவாமரோ. (சுக)

ஐயனாந்தியருளியவாறுநின்
செய்யதாமரைச்சிறடிபோற்றினேன்
வெய்யகாலனைவிட்டிடெனுமன
மையறுங்குணக்காளைவாழததினன். (சுஉ)

நந்திசொற்றனநாமறுபபேமலேஞ்
சிந்தைகூாந்தனமெனறுதிருந்தியே
முந்துபூதருடன்மொழிந்தானவ
ருந்துகாலனைக்காவலொழிக்கவே. (சுந)

பூதரோடிபபுகுந்தனர்சற்றெனு
மூதுகாலியங்காதவுழைமுழைச்
சாதனமேவியகாலனைததள்ளியே
தீதில்காளாதிருமுன்விடுத்தனா. (சுச)

கொண்டுபோவெனக்காளருங்கூறினா
டண்டுபோலிருபாதம்வணங்கினன்
மண்டுகாலனெடும்வழிச்சேறலும்
விண்டநெஞ்சொடுகாலன்விளம்புவான். (சுரு)

போதும்போதுமெனக்கிதுபுன்றொழில்
யாதுஞ்செய்திலனிததுயரொய்தினேன்
மீதுண்டோடுங்குருதியின்விம்மின
னேதுந்தன்மைத்தருமனுணர்ந்ததுவான். (சுசு)

தொட்டநாளிற்றொழிலிற்புகுந்தியான்
பட்டபாடுபகர்வதுகேளென
வட்டவாரிவளைந்தவரம்புடுத
திட்டகந்துகமென்றொருநாடுளே. (சுஎ)

அந்தநாட்டினருங்கதலிப்பதி
நந்தகப்பெயர்வெண்குடைநாயகன்

புந்திகூரப்பொதுக்கடிந்தோர்தனி
முந்தைவையமுறையிற்புரக்குநாள். (கூ௯)

அன்னவன்றனக்காருயிர்த்தேவியோர்
கன்னியன்னவள்காமதையென்றுளாள்
பொன்னினின்னுருவேண்டும்பொலிவினள்
பன்னிகற்பையிகந்துபரந்துளாள். (சுக)

கட்புலத்தினினியனைக்கண்ணுறீஇ
யுட்புலத்தினுடன்கொடோயவர்
நட்பளாவியகாமநலத்தினால்
வெட்கமின்றியுமேல்விழைபுல்லுவாள். (எ0)

பொங்குபேரொழிலானதுற்புத்தியென்
றங்கொருத்தனவனையணைந்தனள்
வெங்கனற்கடுங்காமவெதுபபினாற்
றங்குவேகந்தலைப்படுமாசையாள். (எக)

இனையகாதலிவனைம்வைகுறு
மனையதன்மையரசனுணர்ந்தனன்
புனைசெய்கொங்கைபுறம்படப்போவென
மனனிகழ்ந்துதுறந்தனன்மன்னர்கோன். (எஉ)

போனமங்கைதுற்புத்தியோடுங்களித்
தானகாமமனுபவித்தாளறத்
கானவோதிகருப்பமுண்டாயினா
ளேனையன்னவன்றன்னைவிட்டெகினாள். (எங)

வடித்தவேதவசுமதிமின்னெனத்
துடித்தமுப்புரிதோன்றியமார்பினா
னடித்தொடர்ந்தனள்சென்றனளன்னவற்
பிடித்திருந்துதன்காமம்பிதற்றினாள். (எச)

வேதவேதியன்விட்டிலனன்னவட்
பூதரம்பொருகொங்கைபுணர்ந்தனன்
மாதராளுமகப்பயந்தாளோ
காதலந்தணன்காலங்கழிந்தனன். (எரு)

பிறந்தகாதற்பெறலரும்பிள்ளையை
மறந்தும்வேண்டலளாய்மறுகிட்டன
டுறந்தசூத்திரன்றுற்புத்திதன்னொடுஞ்
சிறந்திருந்தனள்கற்பிற்றிறம்பினாள். (எசு)

அவனொடன்பினருங்கலமேறியே
யுவரிபுக்கனளோட்டுறுநாளையிற்
கவனவெங்கடுங்காலெறிந்தெற்றலி
னிவர்கலன்கவிழ்ந்திட்டிறந்தாரரோ. (எஎ)

ஈறுகண்டனனொன்னுழைத்தூதர்கள்
மாறுகொண்டனர்வம்மினெனச்சொலாச்
சீறுசீற்றந்தெறிந்தவர்திண்புயங்
கூறுபட்டுறக்கட்டிக்கொணர்ந்தனர். (எஅ)

ஈருமீர்வடிவாளெடுத்தீர்ந்தனர்
சோருமாவியர்துன்னெனுநெஞ்சினர்
யார்கொல்காப்பவரொன்றென்றரற்றினர்
வீரபத்திரன்றூதாவெருண்டனர். (எகு)

சூலம்வாண்மழுத்தண்டுசுரிகைவெங்
காலநேமிமுதற்படையைக்கொளா
வாலகாலமெனப்பரந்தண்மினர்
மூலமுற்றவெஞ்சேனைமுடித்தனர். (அ0)

இழைத்தபாவிகளாமற்றிருவரைத்
தழைத்தபேரொளிமானந்தனிவர
வழைத்திருத்தினரோகலுமண்மினீர்
பிழைப்பதெவ்வுழையென்றுபின்சென்றனன். (அக)

என்னைப்பற்றியென்பாசத்திறுக்கினர்
தின்னுஞ்சீற்றமொடுந்திகிரிக்கிரி
துன்னக்கொண்டொர்முழையுட்டுறுத்தினர்
மன்னுபூதரைக்காக்கவும்வைத்தனர். (அஉ)

மற்றொர்பூதத்தைவாவெனக்கூவினா
னற்றதென்றிசையாங்கதுக்கேந்தனர்
குற்ற *பாவரிருவரைக்கொண்டுபோய்
நெற்றிநேத்திரன்முன்னர்நிறுத்தினர். (அங)

இத்திறத்திநிகழ்ந்தவிவையெலாஞ்
சித்தமோர்ந்தறிசித்திரகுத்தனும்
பைத்தபாம்பணைப்பாற்கடற்றுஞ்சிய
வத்தனைத்தொழுதாங்கறிவித்தனன். (அச)

---

*"பாவத்தர்" என்பதில் அத்துச்சாரியை விகாரத்தால் தொக்கது.

பைந்துழாய்நறுமாலைப்படலையோ
னுந்திபூத்தெழுநான்முகத்தோனொடும்
வந்துவெள்ளிப்பருப்பதமன்னினான்
றந்திமாமுகப்பிள்ளையைச்சந்தியா. (அரு)

செய்யவேண்டுவயாவையுஞ்செய்தனர்
வெய்தினென்னைப்பிடித்ததுமேயவென்
பொய்யில்செய்கையோர்பூதற்களித்ததுங்
கைகொணமாமுகற்குற்றுக்கழறினார். (அசு)

தும்பிமாமுகத்தோன்றனந்தூதனை
வெம்பிமேல்விழுந்தானறியாதுநீ
ரிம்பரெய்தினீரென்னலுமீர்ந்திரைப
பம்புபாற்கடனாதன்பகர்ந்தனன். (அஎ)

என்னைவேண்டுறினிப்பிழைதீரெனப்
பின்னருஞ்சிலசொற்றனன்பேதையோன்
முன்னறிந்திலன்செய்யுமுயற்சியி
னின்னுமொன்றறியான்புதிதென்றலும். (அஅ)

ஐந்துசெங்கையவானைக்குழவியுங்
குந்துதாளசலாக்கனைக்கூவியே
வெந்தொழிற்கணவீரரியமனைச
சிந்துசூழ்திகிரிக்கிரியிட்டனர. (அஅ)

சென்றுநீயவனசேமந்திறந்தனை
யின்றுகொண்டடனெய்துதியென்றலு
மன்றெனைக்கொண்டளித்தனனெனவினை
பொன்றயானைமுகவனைப்போற்றினேன். (௯௦)

என்னைநோக்கிநகைவிளைத்திங்கிவ
டன்னையினனவன்றன்னைத்தளைபடுத்
தினனல்செய்தனையீங்கிவாக்கெய்திய
மன்னுநல்வினையொன்றுமனக்கொளாய். (௯௧)

இவளொருத்தியரசரில்லெய்திரு
ளவனொருத்தனவள்வயினாயினன்
றவறிழைத்திவர்தம்மிற்கலந்தனர
கவருளத்திகருப்பமுண்டாயினள். (௯௨)

மால்விளைத்ததுற்புத்தியைமாற்றிமென்
மேல்விளைத்தெழுகாமவிருப்பினாற்

சிலவேதவசுமதிசெவ்வெழிற்
றேகாலம்வவ்வியவனுடன்கூடினள். (௯௩)

அந்தணாளனகத்திருந்தோர்தனி
மைந்தனீன்றனன்மாமறையோனுயிர்
நந்தினுனிவண்மைந்தனைநாடுறாள்
புந்தியோடுதுற்புத்தியைமேவினாள். (௯௪)

பங்கயக்கைவசுமதிபத்தினி
மங்கைகாமதைமைந்தனையேற்றனள்
சங்கரனெனத்தந்தனரபபெய
ரிங்கிவர்க்குபபெருங்கதியீந்ததால். (௯௫)

யாவனோனுமிழிகுலப்பஞ்சமர்
பாவகாரியனோனுமெம்பண்ணவன்
மேவருந்திருநாமமிலேந்துளோர்
தேவரேயவர்தேவரிற்சீரியோர். (௯௬)

பிள்ளையானைமுகப்பெருமானெனக்
குள்ளவாறிதுணர்த்தலுமுள்ளுறத்
தள்ளுமாவிருடுங்குறத்தாழ்ந்தனன்
வள்ளன்மாயனயனெடும்வாழ்த்தினான். (௯௭)

என்னைமாற்றியிருத்தியவெங்கணந்
தன்னைமாற்றித்தனக்களித்தன்புடன்
மின்னெயிற்றயிலந்தகமேவுநின்
பொன்னகர்க்கினிப்போதியென்றனரோ. (௯௮)

சாந்துறுங்கைதலைதடவித்தனிப
போந்தனனதிருபபூங்கமலாசனி
காந்தனம்பொற்கருடனுகைத்தனன்
சேந்தபங்கயச்செல்வனும்போயினான். (௯௯)

அலலல்வெஞ்சினமாளறிந்தல்லது
செல்லுறுதெனச்செப்புவர்சீரியோர்
புல்லையேறுயர்புங்கவன்றூதனை
யொல்லைகண்டுதொழாதுருத்தேகினீர். (௧௦௦)

பஞ்சபாதகராயினும்பாவமே
தஞ்சமாகச்சரிப்பவராயினு
நஞ்சயின்றவனுமமுறைபபரோ
லஞ்சுமஞ்சுமென்னெஞ்சகமஞ்சுமால். (௧௦௧)

எண்ணியீதொன்றறிந்திலேயின்றள
வண்ணலஞ்சடையானடியாரொனிற்
கண்ணிற்காணுமுன்கைதொழுதில்லேட
னண்ணுநம்மதிகாரநமக்கல. (க0உ)

எனக்குமற்றிங்கிருக்கவிடையிலே
நனைத்துழாய்முடிநாயகனோடும்போய்ப்
புனற்கொடுஞ்சடைப்புங்கவன்வாயிலே
வினைத்திறங்கொடுகாக்குதல்வேண்டுவேன். (க0௩)

நீடுகோடிநிரயமுநின்னது
நாடுநின்னதுநன்னகர்நின்னதென
றூடலந்தகன்காலற்கருகுறப
பாடிருத்தியிதுபகர்ந்தானரோ. (க0௪)

உரைத்தவாய்மையுணர்ந்தறிகாலனு
மிரைத்தவச்சமிவனுரைகீழ்ப்பட
நினைத்துநிற்பனநெஞ்சகமஞ்சுவான்
வரைததடம்புயன்பின்சொல்வழங்குவான். (க0௫)

சிவகணத்துறைதிண்டிறல்வீரரை
யவமதித்திலனாயினுமற்றையோர்
தவறிழைத்தனனென்பரதன்மையா
லிவருநெஞ்சொடுமஞ்சுவன்யானென்றான். (க0௬)

என்றகாலற்கியமனியம்புவான்
குன்றவில்லிகுலக்கணத்தூதரை
யன்றிநீமற்றொருவற்குமஞ்சலே
யொன்றுகேட்டியுரைத்துமென்றேதுவான். (க0௭)

வஞ்சிவிருத்தம்.

பார்மடமங்கைபணித்தோண் - மார்பணியென்னவயங்கும்
வார்திரைவாளைபுரட்டு - மார்கலிசூழுமவந்தி. (க0௮)

வாய்ந்தநகர்த்திருமறையோன் - சாந்திகனன்புறுதநய
னேய்ந்தகலைக்கடலெல்லாந் - தோய்ந்தமறைக்குணசீலன். (க0௯)

அன்னவன்மேல்கடலருகோ - ருன்னுசிவாலயமுளதாற்
பின்னிடமேவியபெருநீர் - மன்னுதடங்கரைவரலும். (கக0)

நீடியமாலைநினைந்தா - னாடினனத்துறையன்னான்
மாடுகிடந்தொருவன்மீ - னோடியெடுத்துயிருண்ண. (ககக)

மாதவனுமம்வணங்கி - யேதமிலாவியிழந்தான்
காதுகடுஞ்சினமோடென் - றூதர்தொடர்ந்துகொணர்ந்தார். (கக௨)

சேயுயிர்சென்றதுகேளாத் - தாயொடுதந்தைசலித்து
மேயுடன்மேவினர்தம்மோ - டேயதுசொல்லியிறந்தான். (கக௩)

என்றலுமன்னரிரங்கி - மன்றன்மலர்த்துளவோனை
யொன்றுகருத்தொடுனைத்தான் - கொன்றதிடங்கர்கொதித்து. (கக௪)

என்னலுமன்னவனென்சேய் - தன்னையவன்றருமென்று
வுன்னருமம்மொழிந்தான் - பன்னியுமன்னபகர்ந்தாள். (கக௫)

ஆவதுபோகவதன்பின் - மாவசுதேவர்வரத்தாற்
றேவகிசிற்றுதரத்தி - ளேவறுமாயனுதித்தான். (கக௬)

கண்படுகட்செவிமுன்று - வெண்பலபத்திரனென்று
வொண்டொடிபுக்கலுதித்தான் - திண்டிறலவீராசிறந்தார். (கக௭)

கற்படுநெஞ்சொருகஞ்சன் - சொற்கொடுவந்துதொடர்ந்த
மற்பொருதாவிமடிததா - ருற்பவவையமுதைத்தார். (கக௮)

பூதன்முதற்பெயாடிக்கோ - போதநிசாசரரெல்லா
மீதுறுவிண்ணில்விடுத்தார் - தீதுறுதும்பிசெகுத்தார். (கக௯)

காமருசிந்தைகனன்றுர் - மாமனையோடிமடித்தார்
தாமருதந்தையர்தாய - ரோமுறவல்லியிறுததார். (க௨0)

போயவனுவிபுரட்டித் - தியவனுடுசெறந்தா
ராய்புரிநூலுமமைத்தா - சேயபெருங்கலைதேர்வார். (க௨க)

சாந்திகனுற்றுழிச்சார்ந்தா - நீந்துகலைக்கடனேடி
யேய்ந்தனமென்னவிரப்பப - போந்தவனன்புபுரிந்தான். (க௨௨)

ஆலுறுநூலறுபத்து - நாலுமுடித்துநவின்றுர்
சீலுறுதெக்கணைகேளா - றாலுறுமார்டனுவன்றுன். (க௨௩)

என்னுயிரோயதொர்மைந்தன் - முன்னர்நின்றுமமொழிந்தா
னன்னநெடுங்கடலாட - வின்னுயிருண்டதிடங்கர். (க௨௪)

அக்குமரற்றரிலாமென் - றுக்கமனத்தினுரைத்தான்
மிக்கதொரதேரின்விரைந்தார் - மைக்கடலுயகன்வந்தான். (க௨௫)

பிள்ளைதரற்கெதிர்பேச - வுள்ளநடுங்கியுரைப்பான்
வள்ளுகிர்வன்றலைவன்மீ - னள்ளல்படுதைத்ததருந்தி. (க௨௬)

என்னவழற்கணிறைப்ப - வன்னதனைப்பிளவாக்கித்
தென்னிலையென்னெதிர்சேர்ந்தா - ரின்னயமாகவிசைத்தார். (க௨௭)

யானதினெஞ்சமிரங்கிப் - போனவுயிர்ப்பொறையோடு
மூனமிலாமறையோனை - மானவர்தம்முனம்வைத்தேன். (கஉஅ)

தேரினமைத்தனர்சென்று - ரோர்குருவுக்குமுனுய்த்தார்
வார்கடலாடைவளைக்கும் - பாரரசெய்தினர்பன்னுள். (கஉகூ)

மாயவனென்னைவழுத்திப் - போயவுயிர்ப்பொறைபெற்று
னீயெனையென்னைநினைந்தா - யேயதுகேட்டருளென்றான். (கஙo)

காமனையன்றுகனனறே -ஞமநவின்றவர்க்கல்லால்
யாமொருவற்கெளியேமோ - நீமனனெஞ்சனினைத்து. (கஙக)

என்றியமன்சிலசொல்லக் - கன்றுகருத்துறுகாலன்
சென்றுறுசிந்தைதெளிந்தா - னன்றொடுமுண்மைநயந்தான். (கஙஉ)

சீலனெனுஞ்சிறுசெல்வன - மாலைவணங்கன்மறந்து
பாலவிலோசனர்பாதங் - காலமுணாந்துகளித்தான். (கஙங)

மைக்கடன்மாநிலமன்னித் - தொக்கசிறபபொடுதுய்த்தா
ஞெக்கலெனுங்கிளையோடு - மக்கயிலாயமடைந்தான. (கஙச)

கலிநிலைத்துறை.

மற்றுமோர்கதைநிகழ்ந்தனவரன்முறைகேட்டி
தெற்றுவெண்டிரைச்சரையுவென்றொருநதிசிறக்கு
மெற்றுவாரதிரையுலகுளவினையொழித்திடுவா
னுற்றதனகரைநந்தியங்கிராமமொனறுளதால். (கஙரு)

அக்கிராமத்தினருமறைதந்தகோத்திரத்துட்
புக்கவேதியரிருவர்புட்கரனெனும்பெயரோன்
மிக்கமாநிலப்பாதகமவையெலாம்விரவி
யொக்கமேவியவாக்கையனிருவரிலொருவன். (கஙசு)

ஒருவனுயிரம்பெயருடையமலனையொருங்கே
கருதியன்பொடுமென்புநெக்குருகுறுங்கருத்தான்
மருவருந்துழாய்மாலிகைமார்பினன்மனத்தாற்
பொருவருந்திருவெட்டெழுத்தல்லதுபுகலான். (கஙஎ)

படமொராயிரம்பரப்பியபாம்பணையவற்கு
மடலவிழ்தநிடுநறுமலரருச்சனைவழங்கிக்
கடவுண்மற்றிலையென்றுளக்கருத்தொடுங்கனிவா
னுடனிகழ்ந்திவற்பூசனைபுரிந்தினிதுவப்பான். (கஙஅ)

அனையகாலையிலத்திருமாநகரதன்பாற்
புனையுநல்லறந்துறந்தவப்புட்கரன்றன்னை

நினையுமிக்கணங்கொணர்கெனநானிகழ்த்திடலும்
வினைசெய்தூதர்போய்மயக்கினுலவன்றனைவிடுத்து. (கரு௯)

புள்ளுயர்த்தவன்றிருவடித்தாமரைபோற்றி
யுள்ளிநெக்குறுவேதியற்கொணர்ந்தனருணர்ந்து
வெள்ளவெம்படைத்தூதரைவெகுண்டனனெருநீ
ரொள்ளின்மாதவத்திவனையென்கொணர்ந்தனிரொன்று. (க௪0)

எடுத்தபாதகனவனைவிட்டிவற்கொணர்ந்திடலாற்
கடுத்தசிந்தைவிட்டிவற்கொருநன்னெறிகாட்டி
விடுத்துவிட்டனனுங்கவன்றன்னகர்மேவிப்
படுத்தபாம்பணைப்பள்ளியோற்பழித்திதுபகர்வான். (க௪க)

இறந்துழித்தனதிணையடித்தாமரையெனக்குச்
சிறந்துநல்குமென்றின்றளவருச்சனைசெய்தேன்
மறந்தருந்திகிரிபடைநாயகன்மறந்தான்
றுறந்துழிச்சிவமன்றிமற்றில்லையோர்துணையே. (க௪உ)

எனநினைந்தணிநீற்றெருடுமிலங்குறநின்றுன்
புனைசடைப்பிராற்கினியனபூசனைபுரிந்தான்
பனகமாநிலச்சிறபபொடுமிருந்தனன்பன்னு
ளனகன்வைகுறுங்கயிலைபோய்க்கடைமுறையடைந்தான். (க௪௩)

ஆதலானுமற்றரிமுதற்றேவர்க்குமஞ்சேன்
மாதுபாகனைவழுத்துநர்மழுப்படையவனைத்
தீதினெஞ்சொடுநினைபபவரவன்றிருநாம
மீதுகொண்டவரெதிர்ந்துறிற்பணிந்தடிவீழ்தி. (க௪௪)

இன்னுமோர்மறையுனக்குளதியம்புவன்கேட்டி
கன்னியம்பிகையாங்கவள்கருணைவாண்டிதல்வர்
மின்னுசூற்படைநந்திவெள்விடைச்சிவனடியார்
மன்னுகாளர்மாசாத்தர்நம்வயிரவக்கடவுள். (க௪௫)

ஈங்கிவர்க்குளபெயரொவருரைக்கினுமிவரைப்
பூங்கழற்றெருழுதங்கிலைநெடுந்தொலைபோதி
யாங்கவற்குளபெயரொவர்பொறுக்கினுமவருக்
கோங்கிருங்கதியுளதுமற்றங்கிலையுரைக்கேன். (க௪௬)

மல்லலம்பழனத்தொடுஞ்சிறந்ததோர்மகத
வெல்லைநாட்டகத்தருமறைக்குலத்துவந்துதித்தான்
பல்பெரும்பவக்கிளையெலாம்விளைக்குமோர்பதகன்
றெல்லைவல்லிருட்கங்குலிற்பிறர்மனைதுழாவும். (க௪எ)

கொலைக்கடுந்தொழிற்கஞ்சலன்மதுக்குடித்துழலு
மலைக்குமாக்களையாற்லைத்தரும்பொருள்கவரும்
புலைக்குலத்தரிற்புலவுணுங்கண்மயம்பொருந்தா
னுலைத்தழற்கணுஞொளிபடக்கானகத்துறையும். (கசஅ)

அத்தனிக்கொலைப்பாதகனுங்கவனொருநான்
மைத்தகாரிருட்கனைபெயன்மழைநடுநாளிற்
கைத்தசிந்தையக்கள்வனோர்கடிநகர்புகுந்து
மெய்த்தனிப்பொருள்கவர்தலுங்காவலர்வெகுண்டார். (கசகூ)

வெருவியோடினன்காவலர்தொடர்ந்தனர்வெகுண்டு
துருவுகள்வனைக்காண்கிலாசுவட்டடிதொடர்ந்தார்
கருவியேந்தியகையினர்பிற்படக்களைத்தா
ரொருவனுங்கவன்றன்னொடுமுடன்கலந்துற்றான். (கரு0)

உற்றகாட்டிடைபபிடிபிடியெனத்தொடர்ந்துற்றான்
மற்றிவன்குரல்கேட்புழியொருவரிவேங்கை
முற்றகன்புழைமுழையகன்றிவனெதிர்முழங்கி
யொற்றைவான்பதத்தடித்தலுங்காவலனுலந்தான். (கருக)

துரந்தகாவலனிறத்தலுமிவன்றுயர்துறந்தான்
பரந்தகானிலோர்படட்டைபுக்கொதுங்கினன்பதுங்கிக்
கரந்துறப்புகுநெறியெலாங்காவலொற்றுணர்ந்தா
னரந்தைவெம்பசியுடற்றலினவணிகந்தகன்றான். (கருஉ)

வல்லியந்தொகுமருவரைமுடுக்கரினவழிபோய்க்
கல்லிருஞ்சுரநெடுநெறியொருதனிக்கடந்தா
னெல்லைசென்றனன்கேரளநாட்டகமுற்றான்
றெல்லைநல்லறம்புரியுமர்நாட்டகந்தொக்கான். (கருங)

புலிதொடர்ந்தவற்பதங்கொடுகோறலும்பொய்ம்மை
நலிவியாக்கிரபாதனென்றொருதனிநாம
மலிதரச்சிலநாள்கழித்தொழிந்தனன்மாண்டா
னெலிதுரந்தெழுபூசைபோலெமர்பிடித்திழுத்தார். (கருச)

பிடித்திருந்திறற்புயவரையிறுகுறப்பிணித்தா
ரடித்துரப்பினர்புரந்தொறுங்குருதிதொட்டலைப்பான்
கொடிக்கயிற்றொடுங்கொணாந்தனர்சிவகணக்குலத்தோர்
துடித்துயர்ந்தனர்முன்மறித்தாரமர்தொடுத்தார். (கருரு)

காலொடிந்தனர்கண்மணிதகர்ந்தனர்கைபோய்
மேலெழுந்துகள்குருதிகின்றலைப்புறவெருவிச்

சூலவெம்படையிழந்தனர்நம்முடைத்தூதர்
பரிலெனத்தெளிகண்ணினொம்முழைப்படர்ந்தார். (கருசு)

இரக்கமின்றியவியாக்கிரபாதனையெடுத்துப்
புரக்குநல்லொளிமானமீதேற்றினர்போனா
வரப்பெருந்திறற்சிவகுலக்கணத்தவர்வானத்
துரப்புதுந்துமிமுழக்குறக்கயிலைகொண்டுய்த்தார். (கருஎ)

வெள்ளியங்கிரிப்பரஞ்சுடர்வியாக்கிரபாத
னுள்ளுறத்தருகெனப்புகுந்தரனருளுவந்தான்
றெள்ளுகங்கைசூடெம்பிரான்சிதம்பரத்தவையு
ளௌ்ளிலெம்மடியான்பெயர்பொறுத்தனையென்னு. (கருஅ)

அவனையாரருள்புரிந்தளித்தாங்கவணிறுத்திச்
சிவனிருங்கதிதருதுமென்றருளுறச்சிறந்தா
னிவர்தரும்பெருங்குருதிநின்றலைதழுறவெம்மோர்
தவறியோடினர்சிலர்சிலவொம்முழைச்சார்ந்தார். (கருகூ)

தாங்களாயிடையுற்றனயாவையுஞ்சாற்றி
யேங்கிநின்றனரந்நிலையெழுந்தனன்சென்றே
னோங்கிமீச்செலுங்கொடுமுடிக்கயிலைசென்றுற்றேன்
றேங்குகங்கைசூடெம்பிரான்றிருவடிதெரிந்தேன். (கசுO)

தெரிந்துநூபுரச்சேவடிசிந்தையுட்சிறப்பப்
பரிந்துபோற்றிநின்றேத்தலுமெம்மையாள்பரமன்
புரிந்ததுனபொடும்போந்தனையாதெனப்போற்றி
விரிந்தமாநிலத்தவன்புரிபவமெலாம்விரித்தேன். (கசுக)

திருச்செவிபுறத்தேற்புழியெம்பிரான்சிரித்தெம்
மருட்பொருந்துறுமடியவர்நாமமற்றெம்பாற்
கருத்துவந்திடுநாமமோதுற்றவர்கருத்தி
னுருத்தபாதகங்கனற்படுபஞ்சில்வெந்தொழியும். (கசுஉ)

தேவருந்தொழுஞ்சின்மயசிதம்பரத்தவையுள்
மேவருந்தவவியாக்கிரபாதனோபெயரை
யோவறச்சுமந்திறந்தனனிவனைநீயுறுத்தாய்
பாவியாயினும்பயந்திலையப்பெயாபாராய். (கசுங)

ஆயினின்னுழையறப்பழுதுளதெனவருளும்
பாய்விடைத்தனிப்பரமனைப்பின்னரும்பணிந்தே
னேயவென்பிழைபொறுத்தியென்றிவற்கருகிருந்த
தூயவேற்படைச்சேவலங்கொடியினன்சொல்லும். (கசுச)

மறந்தொழிந்தனேமுன்னொருகாலத்துமறைநூற்
றிறந்தெரிந்தருள்சதானந்தனெனுந்தவத்திறலோன்
கறங்குவார்திரையுலகெலாந்திரிதருங்காலை
யறங்கொள்சிந்தையனின்னுடைத்தென்புலமடைந்தான். (கசு௫)

மண்டுமாநிரயத்திடைக்கிடப்பவர்மறுக்கங்
கண்டுகண்புதைத்திரங்கினனிவரைமெய்க்கதியிற்
கொண்டுபோவனென்றுளத்தொடுங்குறித்தனன்கூவித்
தொண்டைவிம்மநின்றரகரகரவெனச்சொன்னான். * (கசுசு)

அன்னகாலையினிரயநீத்தெழுந்தனரவர்க்குப்
பொன்னின்மானம்வெவ்வேறெனப்புகுந்துளபொருந்தி
யென்னையாளுடையெம்பிரான்கயிலைவந்திறுத்தார்
கன்னலொன்றிலாண்டெய்தினேநீயுமிக்கயிலை. (கசுஎ)

நிரயமுற்றுறவறிதுபட்டனவெனநிகழ்த்தி
யிரைபுனற்சடையெம்பிராற்றொழுதுநின்றிசைத்தா
யரனுரைததனவன்றுகொண்டயர்த்தனைகொல்லோ
நரகமில்லையென்னுமமோர்ந்தறிந்தவர்க்கென்று.

எந்தையெம்பிரான்றிருவருளுமமொன்றெடுத்துத்
தந்தநாவினரொம்மினித்தலைமையிற்சிறப்பா
ரந்தநாமமற்றிருசெவிகுளிர்ப்புறவறிந்தார்
பைந்துணர்ச்செழுங்கொன்றையான்றிருவடிப்பதிவார். (கசுகூ)

ஈதறிந்துமற்றறிகிலராமெனவிழைத்தாய்
தீதுசெய்தனைசெயத்தகுமென்பனசெய்யா
யாதலாலெதிர்நிற்கலைபோதியென்றருள
மீதுளந்தனில்வெருவரத்தொழுதனன்மீண்டேன். (கஎ0)

இவையெலாமுனக்கெடுத்தெடுத்திசைத்தனனினிநீ
யவையெலாமளந்தறிந்துதென்றிசைபுரந்தளிப்பாய்
நவையெலாம்பொறுக்கினுமரன்றன்னுடைநாமந்
தவறினப்பிழைபொறுக்கலன்முனிவுதந்தருளும். (கஎக)

என்றுகாலனுக்கியமனோர்ந்துணர்த்தினனிதன்மேற்
சென்றசிந்தையன்காலனுமவ்வழிச்சிறந்தா
னன்றுகொண்டெவர்சிவன்றிருநாமத்தைநவின்று
ரன்றியார்பொறுத்துளரவர்பெருமையாரளப்பார். (கஎ௨)

* "றரகரவெனச்சிலசொன்னான்" எனவும் பாடம்.

பூதிபூசினுமுருத்திரமாமணிப்புனையன்
மீதுகொண்டவர்மிலையினுமஞ்செழுத்துண்மை
யோதியோரினுமரன்றிருநாமமோர்ந்துறினுந்
தீதுதீர்த்தவர்முழுமுதற்றலைவரிற்சிறப்பார். (களங)

எனவெடுத்தெடுத்திருடிகட்கியம்பினன்சூதன்
மனனுவந்தவர்வரன்முறைகேட்டுளமகிழ்ந்தார்
புனனெடுஞ்சடைப்புங்கவற்கினிதுறுவிரத
மினியுரைக்குதுங்கேட்டிரென்றிருந்தவனிசைப்பான். (களச)

சிவநாமமான்மியச்சருக்க முற்றிற்று.

ஆகச்சருக்கம் அ-இ திருவிருத்தம் - கዐகூஉ.

ஒன்பதாவது

## சிவவிரதமான்மியச்சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தொல்லையவல்வினைகழிததுத்தருஞ்சோமவாரமாதிரைநோன்பன்றிப்
புல்லியவுமாமகேச்சுரஞ்சிவராத்திரிமுறையிற்பொருந்தநோற்கப்
பல்வினையுந்தொலைத்திடுகேதாரமணவிரதமிவைபரமனேன்பு
கொல்லுறுசூற்படைவிரதமெனுமெட்டுஞ்சிவவிரதங்குணிக்குங்காலே.

சித்திரைபூரணைப்பக்கஞ்சுக்கிரவாரம்பயில்வார்தீமைதீர்த்து
முத்திதருமைப்பசியுத்திரத்தொடுமாநவமியிவைமூன்றும்பச்சைத்
தத்தைமொழியுமைவிரதந்திமுகனவிரதம்வெள்ளிசதுர்த்தியன்றி
யொத்துறுமார்கழிசட்டியிவைமூன்றுமங்கவனுக்குரியநோன்பே. (உ)

ஐப்பசிவெள்ளிக்கிழமைகார்த்திகைகாததிகைச்சட்டியனையமூன்றுங்
கொற்படுவேற்றனிக்குமரமுருகவேள்விரதம்வெய்யோன்குலவுதையிற்
சொற்படுஞாயிறுசித்திரைப்பரணியைப்பசியிற்றெருக்குத்தவந்நா
ளூற்பவிக்குமிவைமூன்றும்வைரவற்குற்றிடுவிரதமுறைக்கின்மன்னே. ()

பரித்திடுசெவ்வாய்விரதந்திறல்வீரபத்திரற்குப்பகுத்தநோன்பு
தெரித்தவரான்முறைநோற்றூரிருநிலத்துப்பெருநிதியச்செல்வராகி
விரித்தபெருங்கிளைகளொடுமக்களொடுநலநுகர்ந்துமிகுநாள்வைகிப்
புரித்தபெருஞ்சடைப்பெருமான்றிருக்கைலைபுகுந்துகதிபுகுதுவாரால் ()

ஈங்கிவைநோற்றிடு முறைமையின்னபரி செனவிசைத்து மினிது
கேண்மின் றோங்கியசந்திரவாரங் கார்த்திகைத் திங்களிற் றொடங்க

வுதயகாலம், வீங்குபுனற்குடைந்து முன்னர்க்குறை முடித்துச் சிவ
பூசைவிருப்பிற்செய்து, பாங்கொர்மறையவனை யன்னான்பன்னியையு
முடனழைத்துப் பரிந்துபோற்றி. (ரு)

அன்னவனைச்சிவனாகப்பாவித்தாங்கவளையுமையாகப்பாவித்
துன்னருந்தண்டுலமுதலகொடுத்துத்தானொருபோதுநுகரவேண்டு
மன்னுகதிர்மறைந்தருந்தின்மிகநன்றுசிவபூசைவரம்பிலாதார்
முன்னுமாத்தவழிமுயன்று * சிவபரனாலயம்புகுந்துமுன்னின்றேத்தி()

அரனுக்குப்பஞ்சவமிர்தத்தினாலபிடேகஞ்செய்வித்தந்த
வரனுக்குப்பன்மலரால்வழிபட்டுமறையவர்போசனமுநல்கிப்
பரனைச்சேவித்தொருபோதுண்கினுமாமுபவாசம்பயின்றுமற்றை
யிரவிற்கண்டுயிலினுமாமிப்படிநோற்பவர்கயிலையெய்துவாரே. (எ)

இதினிகழ்ந்த தொருகதைகேள் மந்தினியென் றரசர்குலத் தெய்தி
நின்றாள், முதனிகழ்த்து வரன்முறையாற் சோமவிரதந்தவறாள் முய
ன்றுநோற்கும், புதுமறையோர்தமையுமவர் பன்னியையு மரனுமையி
ற் புகழ்ந்துபோற்றிப, பதிவிரதமுறைதிறம்பா ளிவ்வண்ணநல்லொழு
க்கிற் படருநாளில். (அ)

பாரரசனொருவனிவளுளத்தியற்கை யளந்தறிவான்பரிவினோர்வா,
னோரிருவரொனும்பிரமசாரிகளிலொருவனைப்பெண்ணுருவமாக்கித், தாரி
வருங்குழலிவள்பாற்றிங்களினன்றேவினனத்தகையனோர்ந்து, சீர்கெ
ழுபெண்ணுமையென்னத்தியானிப்பப்பெண்குறியிற்சிறந்தானன்றே.()

வினையறநோற் றுளவசிட்டன்சோமசன்மன்றன்மவீ ரியனோர்க
கற்க, னினையவிரதத்தினைநோற் றருந்ததியை யரும்பொருளைக் கதி
யையீன்ற, தநயனைப்பெற்றினிதுவந்தா ரின்னுமொரு கதைநிகழ்ந்த
தன்மைசொல்கே, னினமறைச்சத்திய சந்தற்கொரு மைந்தன்விரா ட
னென்போ னெறியை நீததோன். (கo)

கள்ளுண்பான் புலவுதின்பான் காரிருளிற்பிறர்மனைபோய்க் கவரு
மோர்நாட், புள்ளுண்பூர் தொடைக்குழலாக் கெடுத்தபொருள் கொ
டுத்தணைவான் புகுதலோடும், வள்ளுண்கோற் சிலைவயவர் காவலர்
கண்டிடைதொடர மழையினோடி, முள்ளுண்கானகம் புகுந்தானரும்
பசியானுதரவங்கி மூளநின்றான். (கக)

அன்றுகதிதருஞ்சோம வாரமத னுண்மையிவனறியானந்நாட்,
கன்றுசினப்படவரவம் பற்புதையக் கடிததுவிடங் காலப்பட்டா, னெ

* "சிவனுறையாலய" மெனவும் பாடம்.

ன்றுணர்ந்தகடுமெறலி விடுதூதர்பாசமெடுத் தெறிந்துவீசிக், குன்றனை யபணைத்தடந்தோள் பிணித்திறுக்கி நெடுநிரயங் கொடுசெல்காலை. ()

அறிந்தசிவகணத்தலைவ ரெதிரபகுந்தா றலைததவரை யடர்த்துச் செம்பொற், செறிந்தமணிமானத்து விராடனையேற்றினர்கயிலை செல் லுங்காலை, மறிந்தியமதூதரவற் கவையுரைபபத் தென்றிசையோனவர் பின்வந்தா,னெறிந்துயிர்கொன் றிடுபாவிக் கிதுசெய்வ தியல்பலவென் றிசைத்துப் பின்னும். (கங)

பாதகமென்றுள்ளவைமற்றெவற்றினுக்குமிவனொருவன்பற்றாநின்றான்
மீதகுபுன்றசையினைத்தும்பிறவுயிர்கொன்றெடுத்துமிசைவீக்கமிந்தத்
தீதகத்தோனறெய்வவிமானந்தொடுதற்கியலானெனசெய்தீருள்ளப்
பேதகத்தினிதுபுரிந்தீரிவனுழைபபுண்ணியமுளவேற்பேசுகென்றான். ()

வேறு.

சோமவாரநாளிருளிடைக்கனைபெயரேய்ந்தனன்கடுங்கானிற்
காமரொன்கனிகிழங்கிவையருந்தினனுண்பனகாணுல்
வேமலங்கெரிவிழிசொரிடவராக்கடித்துறவீந்துற்றான்
போமரும்பிறபபருந்தவமிருந்தவாகயிலையிற்புகுகின்றான். (கரு)

ஏழைடங்கினன்றிருவருள்பெற்றனன்கயிலையினிதூழி
வாழிவாழ்ந்துறுங்கடைமுறையெம்பிரான்றிருவடிமலர்சேரும்
பாழிவெம்பகட்டூர்தகவென்கொலெம்பிறகுறடபடருற்று
யாழிநிற்குதியலலையேற்பிழைவருமென்றிசைத்தவர்போனார். (கசு)

செய்யகோன்முறைத்தென்றிசைக்கிழவனுந்தன்றிசைசெலலுற்றான
றெய்வமானமும்விராடனுமெம்பிரான்கயிலையிற்செலடபெற்றான்
பையராவணியான்றிருவருளினுறூழிகள்பலடோக்கிப
பொய்யிலவானகதிபுகுந்தனனதனிலையாவரோடுகல்கிற்டார். (கஎ)

சந்திரத்தனிபெயரினுன்மற்றிதுநோற்றவூர்தனிநாதன்
வந்திரக்கமுற்றுன்றிறத்துருகினம்வேண்டுதியரமென்னு
விந்திரப்பெரும்பதவியோவன்றிமற்றெம்மடியவர்பேறு
சுந்தரத்திருநாயகன்முதலியோர்முதன்மையோசொல்கென்றான். (கஅ)

என்னதாகியபெயருடைக்கிழமையினியலுநின்றிருநோன்பு
நின்னதாகியவருளினென்பெயரொடும்வழங்குவானினைகின்றே
னன்னவாறளித்தருளெனக்கேட்டலுமருள்புரிந்தருளிப்போய்ப
பொன்னலர்ந்தெழுகொன்றையஞ்சடையினன்கயிலையங்கிரிபுக்கான் ()

பட்டராகனென்றொருதிருமறையவன்வறுமையிற்பரிவுற்றான் [ற்
றொட்டகார்த்திகைத்திங்கண்முற்றிங்களிற்றொடுத்தியன்முறையானே

றிட்டிரும்பொருளெய்தினன்பன்மகப்பெற்றனனிதழிப்பூ
மட்டலர்ந்தெழுவேணியான்கயிலைபோய்மன்னிவான்கதிபெற்றான். ()

ஆதலாலியற்சோமவாரத்தினைநோற்பவரகன்ஞாலத்
தீதுதீர்த்தனர்பல்வளநுகர்ந்தனர்சேவுடைப்பெருமானுக்
கோதுமீதுபோலுவந்ததொன்றில்லையாலுவகையிற்றலைநின்று
னீதுநோற்பவரிக்கதைகேட்பவர்கயிலைவீற்றிருப்பாரே. (உஉ)

கலிவிருத்தம்.

ஆதிரைநோன்புளதென்றறைந்தனந்
தீதறநோற்றிடுமுறைமைசெப்புகே
மேதகுமார்கழிதிங்கண்மேவரு
கோதறுமாதிரைகுறுகும்வைகலின். (உஉ)

காலையிலீசனைக்கருத்துளோராந்துநற்
கோலநீராடியபின்னர்க்கோதறு
வாலநீறணிந்துசெய்மரபுநோந்துசென்
றாலயமடைந்துசூழ்ந்தரனைப்போற்றியே. (உங)

ஈசனுக்கருளபிடேகமேற்றுவித
தாசினெய்வேத்தியக்காவதீந்தவற்
கேசறுநெய்விளக்கேற்றியீசனைப
பூசனையாற்றுவித்தகத்துபபோற்றியே. (உச)

இம்முறைதாணடவேச்சுரற்குமேய்ந்தபின்
செம்மையினவனடிசிந்தைசெய்துபோய்த்
தம்மனைபுகுந்துணறவிர்ந்துவைகியே
வெம்மைவெங்கதிரொழும்விடியல்வைகலின். (உரு)

தெண்புனல்குடைந்துநீறணிந்துசெந்தழற்
கண்படுநுதலவற்பணிந்துகைதொழு
தெண்படுமறையவர்க்கடிசிலீந்துபி
னுண்பனபாரணமுவந்துகொள்வரே. (உசா)

செவ்வழிச்சின்மயச்சிதம்பரத்தலத்
திவ்வழியிந்தநோன்பியற்றுவாரவர்
வெவ்வழித்தன்மையவினையினீங்கிமற்
றுய்வழியருங்கதியொடுங்குவார்களே. (உஎ)

அந்தமின்மார்கழித்திங்களாதிரை
வந்தநாட்சிதம்பரத்தலத்துமன்னுவா

ரிந்திரன்முதலியதேவர்யாரினு
முந்துறுநாரதன்முதலமாதவர். (உ௮)

இருடிகளாயிரநாற்பத்தெண்மரு
மருடிகழத்தலத்தன்பினெய்துவார்
மருடிரிமேருவேமுதலமால்வரை
யுருடிரைக்கங்கையேமுதலவொண்புனல். (உ௯)

ஏழ்திரைப்பரவையுமுருவமெய்தின
சூழ்தருமத்தலந்தொழுதுசூழுவ
கேழ்கிளர்தும்புருகருடாகின்னரர்
வாழியபன்னகர்மறைந்துவைகுவார். (௩0)

முற்படக்கழிந்ததோர்மூன்றுகத்தினுஞ்
சொற்பெயர்வெளிப்படத்தொழுதுதோன்றுவார்
பிற்படுகலிவெளிப்படாதுபோற்றுவார்
சிற்பரஞானமசசிதம்பரத்தலம். (௩௧)

கங்கைசூழ்காசியினிறக்கமுத்தியிப்
பொங்குமாநகாதொழமுத்திபூங்கலைத்
திங்களூரசடையினேன்றிருநடந்தரத *
தங்குமிந்நகர்சிறபபியாவர்சாற்றுவார். (௩உ)

முன்னைநாளையின்முருகேசனெம்பிரா
னன்னகரிந்தநோன்பாற்றியேத்தியப்
பொன்னொளிமானமீப்பொலிந்துபோய்மதி
நன்னுதலிடத்தனைக்கயிலைநண்ணினன். (௩௩)

வே று.

வெள்ளைவாளுகிர்வியாக்கிரபாதனு
முள்ளமோாந்திதுநோறறுபமன்னியப்
பிள்ளையாமெனப்பெற்றுமத்தொன்னக
ருள்ளருங்கதிபெற்றுறைந்தானரோ. (௩௪)

வேதரூபவிபுலனென்பானொரு
போதனந்நகர்நோற்றுபபொருந்தினு
னுதிநாதனிமாசலையாரொழின்
மாதுபாகனுபயமலர்ப்பதம். (௩௫)

இன்னுமெத்தனைபேரித்திருநகர்
மன்னிமுன்னர்வரன்முறைநோற்றவ

* "நடந்தொழ" தெனவும்பாடம்

ரன்னர்பெற்றவருங்கதிமுற்றுறப்
பன்னகேசனுங்கூறப்படுவதோ. (ங௬)

மார்கழித்திருவாதிரைமஞ்சனத்
தாருயிர்க்கெலாமன்பினடம்புரிந்
தோர்வருங்கதிநல்கியுமையிடக்
காமிடற்றன்கருணைவழங்குமால். (ங௭)

நீற்றுமேனிநிமலனதிருநடம்
போற்றியன்புபுரிந்துருகாநின்றார்
மாற்றருங்கதிவைகுவதுண்மையாற்
சாற்றினேமிதுசத்தியஞ்சத்தியம். (ங௮)

திரளிருஞ்சடையான்றிருவாதிரை
விரதநோன்மைவிளம்பினம்வெள்விடை
வரதனோன்புமாமேச்சுரமாமுறை
சிரதமின்னபரிசெனச்சாற்றுவாம். (ங௯)

வேறு.

கார்த்திகைப்பூரணையன்றுகாலையிற்
சேத்துரந்திடுமெவற்சிந்தைசெய்துமின்
பூத்துறுநறும்புனற்பொய்கைமூழ்கிநின்
றேத்துறுகடன்முறையாவுஞ்செய்தபின். (௪0)

பொன்னினுல்வெள்ளியாலிமயப்பூவையை
யன்னவட்பாகம்வைத்தமைத்தவீசனை
யின்னுருவமைத்தொருதலத்தையீரம்புனன்
மன்னுகோமயத்தினன்மெழுக்குமாற்றியே. (௪௧)

ஆங்கவணையிருநாழிநெற்குவித்
தோங்கியகும்பமீதிருத்தியுள்ளுறப்
பூங்கமழநறும்புனல்பொழிந்துபூஞ்சினை
மாங்கமழ்நறுந்தழைவாய்ப்பெய்திட்டபின. (௪௨)

புதுக்கலைநான்மடிபபாக்கிப்பூந்தழை
யதுக்குறக்கும்பமீதமைத்துமுன்புற
வொதுக்கியவிம்பமோரிரண்டையொன்றெனப்
பொதுப்படுகெவியமோராங்திறபோற்றியே. (௪ங)

வகுத்தவோரிரண்டையுமடித்துவான்கலை
தொகுத்துவைத்தினியதோர்தூபங்காட்டிமென்

முகிழ்த்தபூச்சந்தனமுடியிற்சூட்டிநெஞ்
சகத்துறவுருகியாரமுதுநீட்டியே. (சச)

மரபினுன்மும்முறைவலன்றிரிந்தருட்
பரமனையுமையொடும்பணிந்துதம்முளம்
விரவியவொருபொருள்விரும்பிவேண்டிப்போ
யரனுடையாலயமணைந்துபோற்றுவார். (சரு)

ஆலயத்தீசற்குமந்தவாறிழைத்
தோலைவார்குழையொடுமரனையுண்ணினைந்
தேலவேதம்மனையெய்தியற்றையோர்
காலமுண்டப்பகல்கழித்தபின்னரின். (சசு)

இனியதோர்பண்டமுண்டிரவுபோக்கியே
நனிகதிர்ப்பகலெழும்பிற்றைநாளிடைப
புனிதநீராடித்தன்னியதிபோக்கியப
டனிவருங்குழலியைபரனைப்போற்றியே. (சஎ)

மீண்டருசசனைபுரிகும்பமேவிய
மாண்டகுபொன்னுருவிரண்டுமோமறை
யாண்டருள்வேதியற்கவற்றொடீந்தபிற்
கூண்டவேடத்தரோடமுதுகொள்வரால். (சஅ)

இத்திறந்திறம்புறுதியல்பினோற்றவா
புத்திரரொடும்வளம்பொருந்திவாழ்ந்துபி
னத்தகையவரொடுமமரரேத்தப்போய்
முத்திசென்றடைந்தனர்முதல்வராகுவார். (சகூ)

கலிநிலைத்துறை.

சீரத்தமாதவத்திரணவிந்தென்றொருசெல்வன்
பாரத்தகட்பலங்குழிபடவருந்தினனபன்னு
ளேற்றறிந்திதுநோற்றனனேற்றலுங்கிவப்புற
ளாத்தகட்புலம்பெற்றனன்கயிலைசென்றடைந்தான். (ருo)

பாக்கியம்புரிதேவகிபயந்தகோபால
னுக்கமாதவொண்ணுயிரவிரட்டிபெற்றணைந்தான்
கோக்குமாரர்களொன்பதுகோடிபெற்றுயர்ந்து
தேக்குவார்கடலுலகெலாம்புரந்தனன்சிறந்தான். (ருக)

மழலைவார்குழைக்கரும்புகாயத்திரிவாணி
யொழுகுவார்சிலைநுதலிசாவித்திரியொளிகா

விழைபொருந்தனமூவருமனையெனச்சிறந்தான்
செழுமலர்த்தவிசினிதுறைநான்முகச்செல்வன். (ருஉ)

ஈரநாண்மலரிழிதரவிருஞ்சுனைவடுக்குந்
தாருவிந்திரன்சயந்தனைப்பயந்தனன்றவத்து
மேருவன்னவோவசிட்டமாமுனிவரன்விரும்பி
யோர்வருந்தனித்தெய்வமாச்சுரபிபெற்றுயர்ந்தான். (ருங)

கனகமாமதிலுடுத்தகல்கடிநகர்மிதிலைச்
சனகனாருயிர்த்தநயர்களின்மையிற்றளர்ந்து
வனசரோருகமடந்தையைமகளெனப்பயந்தா
னினையரின்னணம்வரன்முறைவிரதமீதிழைத்து. (ருச)

சிலைத்தழும்புடைத்திண்புயச்சித்திரதேய
னிலைத்தநன்னெறிவிரதமீதிழைத்தனனேராக்
கொலைத்தவாணெடுங்கட்கடையுருப்பசிகுலத்தொண்
மலைத்தடந்தனமணந்தவண்மனையெனச்சிறந்தான். (ருரு)

பூதலத்திவனிவளொடுமெணந்துறைபொழுதிற்
றுதவிழ்த்தலர்கற்பகமிவனுழைச்சார்ந்து
மேதகப்பலவேண்டுவவேண்டுவபுரியத்
தீதவித்தருமைந்தனைப்பயந்தறஞ்சிறந்தான். (ருசு)

காலநீடுறுடற்பகல்கழிதரக்கழித்து
ஞாலமன்னுயிர்தன்னுயிராமெனநடாத்திக்
கோலவெண்குடைநிழற்றினன்பின்னர்வெண்குழவி
வாலசந்திரமௌலிதன்கயிலைபோய்வதிந்தான். (ருஎ)

வயங்குமுப்புரிநூற்சுதன்மாவெனுமறையோன்
றயங்குவிஞ்சையிற் * றகவறுகடுப்பினனாகி
மயங்கிநாட்பலகழிந்தனன்வையகமிகழ
முயங்குவிஞ்சைகேட்டீங்கிதுநோற்றனன்முறையின். (ருஅ)

விரதமீங்கிதுநோற்றலும்வெள்ளைவெண்கமலை
வரமகிழ்ந்தெதிர்தோன்றினளுதவியவரத்தாற்
பரவுநான்மறைமுதலியகலையெலாம்பயின்று
சுரருவப்புறவயற்குமோர்மறைக்குரைசொல்லும். (ருகூ)

* "தகவுறுகருத்திலனாகி"
"தகவறுதடுப்பிலனாகி"
"தகவுறுதரிப்பிலனாகி" } எனவும் பாடம்.

ஓதவேட்டவர்க்கோதுவித்தொருபொருள்விரும்பான்
மூதுணர்ந்தவர்யாவர்க்குமூதுணர்த்துறுமா
வீதுணர்ந்தகனெடுநிலம்புரந்தருளிறைவர்
தீதுதீர்த்திருநிதிதரப்பெற்றனன்செல்வன். (0சு)

இகழருங்கலைக்கடலெனமைந்தரீன்றெடுத்தா
னகழிமாநிலத்தளவறு * வளனுகர்ந்தருளு
மகிழ்சிறந்தனன்கடைமுறைகயிலைவான்கணத்தோர்
புகழவன்னவர்தலைவர்க்குந்தலைவனிற்பொலிந்தான். (சுக)

உந்துவெண்டிரைப்புணரிநின்றுவட்டெழுமுவரி
தந்தமாநிலப்பரப்பெலாநிழற்றியதகைசா
லிந்துவெண்குடைத்தனிச்சுடராழியோனெறிவே
லிந்துசேனனென்றுளனிகன்மன்னவர்திலகன். (சுஉ)

அனையனிந்நிலத்தாருயிர்புரக்குநாளவன்பால்
வினைசெய்திண்பரிவேற்படைமன்னவாவெகுண்டு
முனைசெய்காலையினவர்க்குடைந்தோடினன்முந்நீர்க்
கனைகருங்கடலுலகுபோய்க்கானகமடைந்தான். (சுங)

அரிதியற்றியவறுசுவையுண்டியினமைத்த
கருணைவெண்சுதையுணவொடுமயின்றவன்கனலா
யுருகுவெம்பசியுடற்றுறவொள்ளுகிர்க்கரங்கள்
குருதிபோர்த்தெழமுண்டகக்கனிகரங்கொள்வான். (சுச)

அடகவிந்தனவுப்பிலியருந்தியுமகிழ்ந்து
புடவிகீண்டமென்கிழங்குமென்றும்பசிபோக்கான்
படர்கொழுந்தொடும்பலகனிபுசித்தனன்படர்ந்த
விடரொனுங்கொடி † தவழ்ந்தகொள்கொம்பெனலானான். (சுரு)

அரக்கர்வெங்கழுதயிலெயிற்றரவுதேண்மதமா
முருக்குவெஞ்சினவாளரிமுதற்பலவிலங்கிற்
கருக்கியாருயிர்பொறுக்கினன்றிரிந்தன ‡ னந்நாட்
செருக்கின்மாதவக்குறுமுனியவ்வனஞ்சென்றான். (சுசு)

சென்றமாதவத்தலைவனையெய்தினன்சிறந்த
மன்றன்மாமலர்த்தாளிணைவீழ்ந்தனன்வணங்கி

* "பயனுகர்ந்தருளி" எ-ம்,
† "தவழ்ந்தவெங்கொம்பு" எ-ம்,
‡ "பொறுக்கினனிந்தனனந்நாள்" எ-ம், பாடம்.

நின்றுதன்னுடைக்குறையெலாநிகழ்த்தினன்மலயக்
குன்றிருந்திடுமுதுதமிழ்க்குறுமுனிகூறும். (௬௭)

மதித்தநல்குறுமாமகேச்சுரமெனும்விரதம்
விதித்தவாறுநோற்றனையெனில்வினையறவிளங்கி
யுதித்தவெண்மதிக்குடைநிழலரசுபெற்றுவப்பாய்
கதிக்குநாயகனுருவைகடைமுறைகயிலை. (௬௮)

என்றுரைத்தசொற்செவிமடுத்தேத்தினனிறைவ
னன்றுதொட்டுநல்விரதமீதாற்றினன்முறையாற்
சென்றுநாள்பலகழிந்தனசேவுயர்த்தியமான்
கன்றுழைக்கையான்றிருவுளநெகிழ்ந்ததுகருணை. (௬௯)

ஓரிடப்புறத்தம்பிகையுணர்ந்தனளொருங்கே
யாரருட்கடலுவட்டெழவிருவருமருளிற்
கூரிலைப்படைக்குபேரனையழைத்துநீகுணாநீர்ப்
பாரிடத்திந்துசேனனுக்குதவெனப்பணித்தார். (௭௦)

அளகைமாநகரிறைவனுமக்கணத்தடைந்து
மூளைவனத்திந்துசேனனையெதிர்ந்தனன்முழங்குந்
தொளைநெடுங்கைமால்யானைமீப்பொலிதரத்துவன்றி
வளைதடங்கடற்சேனைகொண்டவனொடும்வந்தான். (௭௧)

செருத்தலைப்புறத்தரசெலாமருவராசேர்ந்தா
ரொருத்தன்மும்மதத்தோடைநீடொருகரப்பொருப்பி
னெருத்தமீபபொலியிந்துசேனற்கரசீந்தான்
றிருத்துமாமுடிபுனைந்தனனளகையஞ்செல்வன். (௭௨)

மதிமுடிச்சடையெம்பிரானருளியவரத்தா
லிதுவியற்றினனீங்குனக்கென்றெடுத்தியம்பிப்
பொதிநிதிக்குவையளகைவேந்தளித்தனன்போனு
னதிருமார்கலிநிலமிவனெடிதுநாளளித்தான். (௭௩)

கடுத்தமன்னவரிருநிலங்கனவரைப்புயத்தா
லெடுத்தனன்பொதுக்கடிந்தனனுயிர்புரந்திருந்தா
னடுத்தகாலம்வந்தெதிர்ந்துழிக்கயிலைவாழமலன்
விடுத்தமானமீச்சிறந்தனன்வெள்ளிவெற்படைந்தான். (௭௪)

குணத்தினுமருந்தவமல்லதொன்றில்லெனவெடுத்தோதி [illegible]
குணத்துடனெழுகியமுனிவராக்கருத்தவத்தலைநின்று

முக்குணங்கடிந்தியற்றியசூதமாமுனிவரன்முறைநோக்கி
மெய்க்குணத்தவத்தலைவிர்காளின்னுமோர்விரதமுண்டதுகேண்மின் ()

என்றுரைத்தவர்க்கியம்புவான்மழவிடையேறுகைத்திடுமெம்மான்
சென்றசிந்தையிற்றிருவுளமுவந்ததுதேவருமுறைநோற்பார்
நன்றெனுஞ்சிவராத்திரியீங்கிதுநோற்பவர்நறுங்கொன்றைப்
பொன்றிகழ்ந்திடுசடைமுடிக்கயிலையம்புனிதனிற்றொழுகிற்பார். (எசு)

ஒற்றையாழியங்கடவுளூர்வைகலினுணவொழிந்துதூயம்போய்
முற்றுகங்குலின்யாமமோர்நான்கினுமுறைமுறைதுயில்போக்கிக்
கற்றையஞ்சடைக்கடவுளைவிதிமுறையருச்சனைக்கடனாற்றிப்
பிற்றைவைகலிற்பாரணங்கூட்டுவோர்பெறற்கருங்கதிசேர்வார். § (எஎ)

வருடமொன்றின்மூவெட்டெனத்தொடர்ந்திடைவந்துறுபதினான்கிற்
கருதியிப்படிவரன்முறைநோற்பதுகணக்கறுதவத்தீர்காள்
பொருவினித்தியசிவநிசியாகுவபொங்கிருட்பதினான்கு
தருவபன்னிரண்டெனுமிவைமதிச்சிவராத்திரியெனத்தக்க. (எஅ)

வருடமொன்றிடைவருதினமனைத்தினுமதிக்கிழமையிற்றோன்றுங்
கருகுகங்குலுவாவரிலவ்விராக்கண்ணுதலிரவாகு
முருகுசிந்தையீருரைததிடலாங்கதுயோகராத்திரியாகும்
பொருவிலற்றைநாணோற்றவர்பெற்றபேறெம்மனோர்புகல்வாரோ. ()

மகரதிங்களினமரபக்கத்திடைவருபிரதமையெய்திப் [கிப்
புகலுமன்றுதொட்டெதிர்ந்தபன்மூன்றுநாட்புசிப்பதோர் பொழுதாக்
பகர்தரும்பதினான்கிடைநோற்பதுபக்கராத்திரியாகு
மிகபரந்தருமாகமாதத்திடைநோற்பதுவியல்பாமே. (அ0)

அருடருஞ்சிவராத்திரியிபபடியைந்துபட்டதுவாகு
முருகுகாதலினீங்கிவைநோற்கமற்றொன்றெனுந்திறம்பாமல்
வருவிதிப்படியூண்டுயிலொழிந்திதுவரன்முறைநோலாதார்
பெருகுமாதவம்புரிந்தவராயினும்பிழைததனர்பிழையாதார். (அக)

இன்னவாய்நிகழ்ந்தெய்தியவருட்சிவராத்திரியெனுமந்நாண்
மன்னுகாலையிற்புனல்குடைந்தவரவர்வரன்முறைகடனாற்றி
மின்னிருங்கொடிவேணியெம்பிரானுறைகோயிலபோய்வியந்தேத்தி
யன்னவற்குநெய்த்தீபமேமுதலியவாற்றிநின்றடிபோற்றி. (அஉ)

உறக்கமுண்பனவொழித்தும்பற்றெம்பிரான்றிருவடத்துபயத்தா
ணறைப்பசுந்துணரருச்சனைபுரிந்திருநாலியாமமும்போற்றி

§ "யோர்வார்" எனவும் பாடம்.

பிறைக்கொடுஞ்சடையெம்பிரானருச்சனையில்லவர்பெருமானைத்
திறத்துணர்ந்திடுமுளத்தராய்க்கோயில்சென்றேத்துவர்சிவகதிக்குல். ()

எடுத்துரைத்தமற்றீங்கிவையைந்தையுமிபபடிமுறைநோற்கத்
தொடுத்திலாரெனில்விரதமொன்றாயினுநோற்றுநினவர்தூய்மை
யடுத்தநாவினாற்சொற்றுநிற்செழுங்கமலாலயததயனாலும்
விடுத்தகோடிகற்பத்தினுமமையுமோயாரதுவிரிப்பாரே. (அச)

ஆழிமாயவனுயிர்புரந்தளிபபதுமம்புயத்திருக்கோயிற்
பாழியெண்புயனெடுநிலமின்னுயிர்படைப்பதும்பசும்பொன்னூ
ழேழியிந்திரன்புரப்பதூஉமளகையாளுனெழிவறுவளனீண்டி
வாழிபெற்றதும்விரதமீதிழைத்தலாலென்பதுமனக்கொள்வீர். (அரு)

மதிகவித்தெனவெண்குடைநிழற்றுகன்மாடபாதனைப்பற்றி
விதிவழித்தொடர்பிரமகத்தியைவிடுத்தொழிப்பதுவிரும்புற்று
முதியமாதவக்கௌதமன்சொற்படியீங்கிதுமுறைநோற்றுக்
கதிதருந்தனித்தலைவனுய்ப்பாதகமெவற்றையுங்கடந்துற்றான். (அசு)

குனித்தவார்சிலைக்கரத்தினன்சுருடருகுஞ்சியன்றிணிதோளான்
றுனித்தசிந்தையன்காரணமின்றியேசுடுசினக்கொலைவேடன்
பணித்தகங்குலினடுகொலைவேட்டைமேற்படர்ந்தனன்படர்கானந்
தனித்துலாவினன்கிடைத்திலனென்றையுமிருந்தனன்றனியோர்பால்.

அன்றரன்சிவராத்திரியென்பதுமறிந்திலனயனேக்கிக்
கன்றுவெஞ்சினவிலங்கினைவெருவியோரவில்வமேற்கவையுற்று
ணின்றிருந்துயிறுறந்திலமாயின்வீழ்ந்திடுதுமென்றுளத்தெண்ணி
மன்றனுறுபத்திரம்பறித்திட்டனனிரவிதேர்வருங்காறும். (அஅ)

பறித்தபத்திரமெம்பிரான்றிருமுடிவீழ்தலும்பனிக்கற்றை
வெறித்தவார்சடையெம்பிரான்றிருவருள்புரிந்தனன்விறல்வேடன்
செறித்தபாதகங்கனற்படுபஞ்சியிற்றீர்ந்தனமறையாவுங்
குறித்தநாயகன்சேவடிபுகுந்தனன்விண்ணவர்குலம்போற்ற. (அகூ)

இழிதொழிற்குலப்புலையரிற்றேன்றினளொருத்திமற்றிரப்புற்றாள்
விழியிழந்தனள்வறுமையிற்றேம்பினள்விரதமீதுறுமந்நாட்
கழிபெருங்கடலுலகுளோரொழுந்துகோகன்னமெய்திடுங்காலை
வழியிருந்தனளிருகையேற்றிரந்தரும்பசியொடும்வருந்துற்றாள். (கூ0)

அந்நெறித்தலையருட்சிவராத்திரிநோற்கவென்றவணேகுஞ்
சென்னெறித்தலைமாந்தரிலொருவனின்றவள்கரந்தீண்டாமற்
பன்னுபத்திரவில்வமிட்டேகினனங்கதுபசிதீரத்
தின்னுதற்கியைந்தனவலவெனவெறிந்திட்டனடிசைநோக்காள். (கூக)

அனையகாலையிற்சுழித்தெறிகாலெழுந்தாங்கவளெறிவில்வம்
புனிதமேனியோரிலிங்கமுற்றுள ததன்றிருமுடிபொலிந்திட்ட
வினையடுஞ்சிவராத்திரியற்றைநாளாதலின்விடையூர்ந்தோ
னினைவருந்திருவுளமிரங்கினனவள்கயிலைநனெறிசென்றுள். (௬௨)

முடங்குமவ்வணமதுக்கணண்யனமுங்கணமுலமயொருதநு
யிடங்கொளெம்பிரானிரவுநோற்றின்னருட்கடற்பா
லடங்கினேர்கதையினனுமொன்றுளதுமக்கறைவாம்
படாந்தபுன்சடையர்தணீருணாகெனபபகாவான். (௬௩)

சுரிமுகக்குலமெடுத்திரும்பவளவேர்துருவி
விரிதிரைக்குலஞ்சுமந்துறவொழுகிமீதாந்து
வரிமுடப்படங்குளிாபபுறநடபபதுவானோ
தெரிதரும்புனற்சிந்துவென்றொருநதியுளதால். (௬௪)

அன்னமாநதிக்கரைமருங்கயல்வயலுடுத்த *
பொன்னினிஞ்சிசூழகிடந்ததுதேவரும்புகழ்தற்
கின்னலந்தருகுஞ்சரத்திருங்கரிதனபான்
மின்னுவேற்படைக்குஞ்சகனுளனொருவேந்தன். (௬௫)

அனையவேந்தனுக்காசிசொற்றிடுமொருமறையோன்
றனையரின்றியேயரும்பெருந்தவத்தொடுஞ்சரித்தான்
புனைநெடுஞ்சடையெம்பிரான்றிருவருள்புரியா
வனைதருஞ்சுகுமாரன்வந்துதித்தனன்வரத்தால். (௬௬)

வனப்பெலாந்திரண்டொருவழிக்கொண்டெனவளர்வா
னினக்குநான்மறைமுதலியயாவையுமிசைத்தான்
சினக்கொடுந்தொழில்வேனிலாற்குவமையிற்சிறந்தான்
கனைக்கருங்கடலுலகுளோர்காண்டொறுங்கவினும். (௬௭)

தகர்ந்தவெண்மதிதிருத்தியமுறுவலன்றுழாப்
பகர்ந்தமென்மொழிமயக்கினன்பணைத்தடம்புயத்தான்
சகந்தொழத்தகுந்தன்மையான்றண்சிறைச்சுரும்பர்
நுகர்ந்ததாரொடுமின்னெனநுடங்குநூன்மார்பன். (௬௮)

வருணநான்குளமாந்தருமயங்குறுவனபபி
னுருவமெய்தியவுறுப்பினனேடரித்தடங்கண்
மருவருங்குழன்மகளிர்கண்கவர்தருவதனன்
செருகுமென்மலர்க்குடுமியனுடவர்திலகன். (௬௯)

* "கயலயலுடுத்த" எனவும் பாடம்.

மாரனூல்வழிவரன்முறைதெரிந்ததுவகுத்த
சேரனீற்றல்கோதன்மையீறிவற்றிடைதெரிந்த
வோர்வருங்கரணங்கடொண்ணூற்றினெட்டுருக்கி
யார்தருஞ்சுவைப்பானமைந்தாறுமுற்றளந்தான். (கoo)

துஞ்சுகங்குலிற்பக்கமுமிருத்தையுந்தோய்ந்து
நஞ்சமாரமுதிடையிறநடபபனநாடி
யஞ்சினத்துகிரக்குறியெயிற்றுறுகுறியளந்து
பஞ்சின்மெல்லடிமகளிரைத்தன்வயபபடுத்தான். (கoக)

கொழுநரன்றியோர்கடவுளைத்தளிர்க்கரங்குவியா
வழுவில்கற்புடைமடந்தையாமனங்கனிந்துருகி
யொழுகநின்றனன்பிறாமனையென்பதொன்றுணரா
னெழுவுகோக்குலத்தொருதனியேறெனத்திரிவான். (கoஉ)

கன்னிமாடமுங்கடிமதிற்காவலுங்கழியத்
துன்னுமாரிருட்பிழம்பிடையிவனடிதொடாவா
ரன்னமன்னவாக்கலக்குறவிலக்கினுமமையா
ரின்னதன்மையினிங்கிவைநிகழ்ந்துறுமேல்வை. (கoங)

ஒளித்தகாமமீக்கூாசுகுமாரனென்றொருவன்
றெளித்தகற்புடைமகளிரையழித்தடுஞ்செயலை
வெளிப்படுத்தினராகிவந்திருநிலம்வியபடா
லளித்தமன்னவற்கறைந்தனராமானநீத்தயாந்தார். (கoச)

கேட்டமன்னவன்செவித்தொளைசுறுக்கொளக்கிளரா
வீட்டுசீற்றமிக்கெழுந்தவற்கொணாமினென்றிசைப்ப
வாட்டடக்கையோாசென்றனாகொணாதரவந்தான்
நீட்டுபேரொழிநோக்கினன்குளிாந்ததச்சீற்றம். (கoரு)

கொல்லலாமெனுந்தகையனன்றிவனெழில்குறிப்பின்
றொல்லைநான்மறையவருழைத்தோன்றியோனிவனை
யொல்லைகொண்டனிாபோதிரொம்முயர்குடைநிழற்கீ
ழெல்லைமாநிலங்கடத்திநீர்விடுத்திரொன்றிசைத்தான். (கoசு)

அனையரவ்வுரைகேட்டலும்பற்றினரகன்றார்
கனைபொலன்கழன்மன்னர்கோனகனிலங்கடத்தி
வினையுனக்கிதுவிளைந்தவாறென்றனர்விடுத்தார்
சினையகானகத்தருவனைநெடுநெறிசென்றான். (கoஎ)

சென்றகானகத்தடுபுலிகொய்யுளைச்சீயங்
கன்றுவெஞ்சினவிடவராவழிமதக்களிறு

துன்றுமோர்நெறிமுடுக்கரினெடுவனஞ்சுழன்ருன்
மன்றலம்புனற்பொய்கையொன்றெதிர்ந்தனன்மறையோன். ()

அன்னநாண்மலரப்படுகரினளவைபெற்றறியேந்
துன்னுபன்மலரிடைந்தனவுடைந்துதேன்சொரியக்
கன்னியன்னமேமுதலியதொகுதியிற்கலந்த
பன்னிறத்தெழுதியபடாம்படுத்தனகடுக்கும். (௧0௯)

சில்லுகிர்ச்சிறுதாட்டடுபுள்ளியஞ்சிரலை
யெல்லைவானெழுந்திருங்கயல்கதுவவீழ்ந்திடலு
மொல்லைபாசடைக்கயலொளிந்தொதுங்குறவோங்கி *
மெலலிருஞ்சிறைவிதிர்ததுவேறிருப்பதுவெள்கி. (௧௧0)

தாதுநாண்மலர்க்குப்பைநின்றுயிர்பபுறத்தவழ்ந்து
போதுகாலொடுநறைகரந்தொதுங்குறடபுகுந்தோ
ரீதுவாசமெனறறிவரிதாகிமற்றெல்லை
காதநாறினதடம்புடைக்கிடந்தவக்கானம். † (௧௧௧)

முளரித்தாதொடும்பொம்மெனமுழங்கியசுரும்பர்
களரிப்பானலம்பெடையொடுமேணந்துறக்கனலா
விளரிபபாடல்வண்டடுசினமிழற்றினவிரிநீர்
தளரிக்கொம்பரின்வாரலிசொனச்சினைதாழ்ந்த. (௧௧௨)

பாளைவாளெயிற்றிடங்கர்வாய்த்தவறியபகுவாய்
வாளைதாவுறவயவாகைவாட்டடைமருட்டுந்
தாளதாமரைமுகம்படுசூரிமுகச்சங்கங்
காளவேல்விழிமகளிர்கைக்கந்துகங்கடுக்கும். (௧௧௩)

மடலுடைந்தலர்தாமரையுழக்கிமென்மதுவாய்க்
குடமுடைந்தலராம்பலங்காடிடைகுழபபி
முடவுவெண்டிரைகிழித்துவாய்த்தவறியமுதுநீர்
நெடுவராலினைத்தொடர்ந்தெழுமடுசினநீர்நாய். (௧௧௪)

அனங்கொடுஞ்சிறைப்புறவொடுபுள்ளியஞ்சிரலை
யினந்தருங்குருகிடையிடைநடப்பனகுரண்டம்
புனைந்தவன்னகம்புட்படுசக்கரவாக
நனைந்தமென்சிறைபுலர்த்துவபுளினமேனடப்ப. (௧௧௫)

அன்னதன்மையவகன்புனற்படுகரின்பாங்க
ருன்னருங்கொலைபபுலைக்குலந்தோன்றியவொருத்தி

---

* "ஒதுங்கி" எ-ம் பாடம்.

† "காதநாறினதம்புடைக்கிடந்தனகானம்" எ-ம் பாடம்.

மன்னுதன்மனைநீக்கமுற்றிருந்தனள்வந்தா
ளின்னதன்மையென்றவள்வனபபியம்புவதியாரே. (ககசு)

அள்ளிவாரிமற்றொருகையிற்செருகியவளகந்
தொள்ளிநானநெய்யிழுகியகருமையின்றோற்றம்
வெள்ளவாரிமேற்படிந்தெழுகரும்புயல்விரவி
யொள்ளிருட்பிழம்பஞ்சனந்தீற்றினவொக்கும். (ககஎ)

எங்கொளிப்பதுமருங்கெனக்கணக்கறுத்திளகிப்
பொங்குவெம்முலைமீபபடப்பொடிததலர்திதலை
யங்கதிரபபகலிளங்கொழுந்தளவியபசும்பொற்
செங்குருந்தொளியிடைபடச்செறித்தனசிவணும். (ககஅ)

ஒழுங்குவார்குழைத்திருத்தியபொற்சுருளோலை
யழுங்குவார்கடலுலகெலாமடக்கியமாரன்
கொழுங்குயிற்நூரற்குதலையாட்கெழுதினன்கொடுத்த
தொழுந்தகைத்தனிச்சாதனங்கடுபபனசொல்லின். (ககக)

ஈரவாரமுதொழுக்கியமுழுமதிக்கிடையே
காரிருட்கொழுந்தெனவளர்கரும்புருரத்தி
ஞேரநஞ்சிரண்டெனவகுத்துறுத்தியகொல்லோ
வாரிமாநிலமுடித்திடச்செருக்கியவடிக்கண். (கஉ0)

இனையளெய்துறநோக்கினன்வெய்துயிர்ப்பெறிந்தான்
புனைகருங்குழலீங்கிவள்யாரெனப்புலம்பா
நினையுநெஞ்சொடுமீணங்கெனவயிர்த்தனனின்றான்
வனைசிலம்படிமண்ணுறத்தெளிந்தனன்மயக்கம். (கஉக)

தாமரைப்பொகுட்டாசனமிகந்தொருதனியே
காமர்பூமகணின்றனளாமெனக்கவலா
வேமருந்துயர்நெஞ்சினன்வெதுபபுறுவிரகின்
வாமமேகலைக்கருகுறப்பைபபையவந்தான். (கஉஉ)

வந்தபொற்சுகுமாரனைக்கண்டனள்வனம்போந்
திந்தநல்லுருக்காட்சிதந்தனனிவனென்னு
வுந்துசிந்தையள்வெள்கினள்வல்லியொன்றொதுங்கித்
தந்தகாமநோய்புலப்படாதொருதனிதளர்வாள். (கஉ௩)

முந்தையூழ்வினைமுறைத்தொடர்பிருந்தவாமுதியோன்
றந்தநான்மறைக்குலத்துளோன்புலைக்குலஞ்சார்ந்த
கந்தவார்குழற்குருகியகருத்தினனானு
னந்தநான்முகன்விதிப்படிதவிர்ப்பவர்யாரே. (கஉ௪)

நிலவுவாணகைக்குடைந்ததென்னெஞ்சகநெடுங்காற்
கலவிமாமயிற்சாயலிற்களித்தவென்கண்க
டிலகவாணுதலின்னுயிர்செகுத்ததுசெழுந்தே
னிலவமென்னுமைழயென்செயுமறிந்திலனின்னும். (கஉ௫)

புரங்கடந்தவனெற்றியந்தழலிடைபொடிந்தோன்
சரங்கடப்பனவெம்முயிர்பொறையெலாந்தமியேற்
கிரங்குநாளுளதென்றுமற்றறிகிலேனெரிவா
யரங்கடந்தவேற்கட்கடைசிறிதளித்தருளீர். (கஉசு)

குதலைகேட்புறினுயிர்தளிர்த்துடற்பொறைகுளிர்க்குந்
திதலைவெம்முலைமுகத்தொடுசிறியவென்றுணைத்தோண்
மதலைமோந்துறின்வார்சிலைகுனித்தவேள்வனைப்பான்
முதலையன்றியெம்முன்னர்நின்றிகலுமோமொழியின். (கஉஎ)

என்றுபெய்பரற்பரிபுரபபங்கயமிறைஞ்சிச்
சென்றுவீழ்ந்தனனேக்கினண்முறுவலிற்சிறந்தாள்
குன்றெடுத்தபூங்கொம்பரினெதிர்ந்தனள்குறுகித்
தன்றளிர்க்கைகோத்தெடுத்தனளிறுகுறத்தழுவி. (கஉஅ)

பூத்தமாதவிப்பொதும்பரினகன்றனரிருந்தார்
நாத்தழும்புறப்பயின்றனமதன்கலைநவிற்றுங்
கோத்திரந்தெரிந்தியைவனயாவையுங்குணித்து
மாத்திரைக்கரணந்தெரிந்தம்முறைமணந்தான். (கஉகூ)

மழலைவாய்மொழிமயங்குறவாளரித்தடங்கண்
குழையுலாவிநின்றலம்வரக்கருங்கொடிகுனிபப
விழைதனச்சுவடெடுத்திடைநுடங்குறவிருதாட்
டழைசிலம்பொலிகல்லெனத்தழுவினடணவாள். (கந௦)

இருவரீங்கிவருடலிரண்டோருயிரொன்னப்
பெரியவார்தடங்கண்ணிணையிமையெனப்பிரியா
ரொருவிநாள்பலகழிந்தபின்னீங்கிவர்க்குரிமை
மருவுமைந்தர்களேவனைப்பயந்தனர்வளர்வார். (கநக)

பயந்தமைந்தரப்பாதகமைந்தெனப்படுவா
ரியங்குநாள்பலகழிந்தனபின்னுமீங்கிவர்க்கு
வயங்குதாய்பெறுவனப்பொடுமகளிரோரிருவ
ருயங்கிமாரனுமயங்கிடப்பிறந்தனருவர்கள். (கநஉ)

மைந்தரைவருங்கூற்றமோரைந்தெனவளர்வா
ரந்தமைந்தரோடருநெறியாறலைத்தொழுகிச்

சிந்திமன்பதைபொருள்கவர்ந்துயிருகச்செகுத்து
வெந்தழற்சுழல்விழிக்கடும்புலியெனவெகுள்வான். (௧௩௩)

ஆவொராயிரமாயிரமருமறைத்துறவோர்
சேவுமோர்பதினுயிரஞ்செகுத்தனன்றீயோன்
பாவகாரியமெவையுளவவையெலாம்பயின்ருன்
வாவுதென்றிசைநிரயமொன்றுளதெனமதியான். (௧௩௪)

மதுநுகர்ந்தனன்பிறர்பொருள்கவர்ந்தனன்மருளாக்
கதுமெனப்புரிபவதொகையாவரோகணிப்பார
புதியபாதகமிழைப்பதற்கேதுவாம்புலைச்சி
யிதுபுரிந்தவனியங்குநாளாருயிரிறந்தாள். (௧௩௫)

குழலையாழினைப்பழித்தசொற்குதலையாளிறப்ப
வுழலைவேடைவெங்காமவெந்நோய்தெறவுடைந்தான்
சுழலிருஞ்சிறைத்தும்பியஞ்சுருளிருளோதி
மழலைமக்களையிருவரைமனையெனவரைந்தான். (௧௩௬)

ஈன்றபேதையரிருவர்தமின்னலநுகர்ந்து
கான்றகாமமீக்கூர்தரநாள்பலகழித்தா
ஞன்றபாதகமனைத்துமோருருவெனுமனையா
னேன்றுசூழ்வரைக்கானகத்தியங்குறுமெல்லை. (௧௩௭)

வேலைமாநிலம்புரந்தருளோர்தனிவேந்த
னலவாளராப்பரிதியுண்டுமிழ்தருமந்நா
ணூலினுன்மறைவேதியர்க்கிடுபொருணோக்கிப்
பாலைவெஞ்சுரத்தாங்கவரொதிருறப்பறித்தான். (௧௩௮)

நெற்றிகீண்டெழுகுருதியர்வெருவருநெஞ்சர்
பற்றுறந்திடுவாயினர்பதறியபதைப்பர்
தெற்றுகாலினரோடினர்மீண்டனர்சென்ருர்
கொற்றவேந்தனுக்கிவனிலையுணர்த்தினர்குழறி. (௧௩௯)

அனையகேட்புழிவடவையொத்தடுசினங்கதுவிக்
கனைகருங்கழல்வெண்குடைக்கடுந்திறல்வேந்த
னினையசெய்தவற்கொணர்கெனவிசைத்தனனனிக
முனைவரோடினரொருவருக்கொருவர்போய்முந்தி. (௧௪௦)

தொடர்ந்தபல்வரைமுடுக்கருமருநெறித்தொடர்பும்
டடர்ந்துபற்றினரடவியும்படப்பையும்படர்ந்தா
ரடர்ந்தசேனைகண்டறிந்தனன்வெருவினனகன்ருன்
மடந்தைமாரொடுமகாரொடுமவ்வனமறைந்தான். (௧௪௧)

ஒழுகுமாரிருட்கங்குலினிவ்வனமொருவி
யெழுவுகாவதம்பற்பலகழிந்தனனெகிப்
பொழுதியங்குறலுணதேயப்புடைப்பொருப்பின்
றழுவுசாரலினடவிபுக்கொளித்தவஞ்சரிததான். (கசஉ)

ஆயகானகத்தகவையுட்சரித்துறுமங்நாட்
பாயவேனெடுங்கண்ணியிருமகப்பயந்தார்
தீயதீயனவீன்றெனப்பிறந்துறுஞ்செல்வர்
மாயமென்சிறுகுதலைகேட்டுவந்தனன்மகிழ்ந்தான். (கசங)

அன்னகானகத்தயல்விளிம்புடுத்தநாட்டரும்பு
மின்னிளம்பிறைமுடித்தநாகேச்சுரரிருக்கை
பின்னிடப்படுகோவதம்பாதியிற்பெருநீர்
மன்னுநல்வளஞ்சுரந்தெழுநாகமாநகரம். (கசச)

உரைத்தமாநகர்மாதருமைந்தருமொருங்கே
யிரைத்தெழுந்துநாகேச்சுரமெய்தினரிழைத்தார்
வரைத்துரு முழுமறைமொழிவரன்முறைமரபான்
விரைத்தசெஞ்சடையவன்சிவராத்திரிவிரதம். (கசரு)

ஈதுணர்ந்திலனெம்பிரான்றிருமணிமுன்றிற்
றாதவிழ்ந்தலாநந்தனவனமலாதடவிப்
போதலுஞ்சுகுமாரன்மற்றுகொலைப்புலையன்
காதன்மிக்குநின்றவாதொழுதுரைப்பனகண்டான். (கசசு)

ஆயகங்குலிற்கடிகைமூவைந்துசென்றகலப
பாயவெள்விடையெம்பிரானிலிங்கமுற்பவித்துத்
தூயவெண்பிறையிதழிமான்மழுப்படைதுவன்றச்
சாயைகாட்டலுநோக்கினன்றொழுதனன்றணந்தான். (கசஎ)

கள்ளுண்வாழ்க்கையனெறுழ்வலியாக்கையன்கடுவான்
புள்ளுநோக்குறின்வெருவரும்பாவிதென்புலததோ
னுள்ளுநாளெலாமுறுக்குறுமியற்கையனொருநா
ளெள்ளுபாதகமிறந்தெனததன்னுயிரிறந்தான். (கசஅ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வெஞ்சினத்தெறுழ்வலித்தென்புலத்தவரெலாம்வெகுளி மிக்கா
ரஞ்சுறத்தழல்விழித்தொழுகுமுத்தலையயிற்படையெடுத்தார்
செஞ்சிலைப்படைகதைப்படைவலித்தொடர்விடுந்திகிரிகொண்டார்
நஞ்சுருத்தெனவுருத்தனாதெழித்தனர்பொருநகைவிளைத்தார். (கசக)

சென்றுறப்பினர்வளைத்தனர்பிடித்தனர்மூடைச்சிகரவன்றோள்
குன்றிணைத்தெனவிணைத்தனர்கதைப்படையில்வெங்கொடிறு டைத்தா
நின்றடித்தனரிடித்தனர்கழுத்திடைநெடும்பாசமிட்டுப் [ர்
புன்றலைக்கண்பிதுக்குறவிடித்தனருடன்கொண்டு போவார். (கடுo)

ஆயகாலத்துமுப்புரநகைத்தெரிகொளுத்தாதிநாதன்
றூயபொற்றிருவுளத்திவையுணர்ந்தருடலுங்தொல்லைமேனாட்
பாயநங்கங்குலிற்கடிகையீரொட்டினெம்பதமுணர்ந்தான்
போயவற்கொணாகெனக்கணமுதற்றலைவர்தென்புலமடைந்தார். ()

தண்டுசக்கரமழுப்படை திரிசூலங்கொடுஞ்சாபநேமி, பிண்டிபாலங்
கதிர்க்கட்கமற்றுளவெலாம் பெரிது கொண்டார், திண்டிறற்செருமுக
ச்சண்டவெம்படையொடுஞ் சென்றி றுத்தார், கொண்டெதிர்த்தனர்
வளைத்தனர்விளைத்தனர்கொலைக்கொடிய வெம்போர். (கடுஉ)

அக்கணத்துக்கணத்தலைவர்சென்றழல்விழித்தடல்வ யப்போர்
தெக்கணத்தவரொடும்புக்கிழைத்தடுசினந்திருகி நின்றா
தொக்கவெம்படைபடத்தலைதெறித்தனவிழிததொகைதெ றிப்பச்
செக்கர்தென்புலம்விழுந்தனவெனக்குருதிசெஞ்சேறு பட்ட. (கடுரு)

பல்லிழந்தனர்கரபபடையிழந்தனர்துணைப்பணைநெடுந்தோட்
கல்லிழந்தனர்தடக்கரமிழந்தனர்சரங்கால்பரப்பா
வில்லிழந்தனர்புலால்வேலிழந்தனர்விடாமிடலி ழந்தார்
சொல்லிழந்தனருயிர்த்தொகையிழந்தனாபொரார்மறலிதூதர்.(கடுச)

தாளிழந்தனர்முடித்தலையிழந்தனாதுணைச்சயிலமேருத்
தோளிழந்தனர்கரததுணையிழந்தனர்விழித்தொகையிழந்தார்
கோளிழந்தெழுமதிக்கடவுளொாத்தடுதிறற்குரவைகொண்டார்
வேளிழந்திடவிழித்தழலுமிழ்ந்தவனடித்துணையவீரர். (கடுரு)

முறுகுவெள்ளெயிறடித்தலைதெறித்தோடிவிண்முகடுமுட்டிக்
குறுகவிண்ணுயிரம்பிறைபொடிப்பனநிகர்ப்பனகுறிப்பி
னறுதலைக்குறையிரத்தங்குதித்தெழுவவேயணவுவெந்தீத்
தெறுதழற்கானகத்துலவைவேவுனவெனச்சிவணுமன்னோ. (கடுசு)

வெள்ளவெங்குருதியெங்கணுமெடுத்தோடிவெவ்வேறுபேதத்
தள்ளல்வானிாயமெங்கணுநிரப்பினபிணத்தொகையினம்மா
கொள்ளைபோயினநெடுங்தென்றிசைக்கிழவனூர்கொடிதிழைத்தா
ரொள்ளரும்போரிழந்திரியலாலியமனுடிரியல்போன. (கடுஎ)

அங்கிலத்தஞ்சுறுஞ்சுகுமாரனைப்புரந்தஞ்சலென்னுப்
பொன்னுடைத்தெய்வமானத்தினுய்த்தவனொடும்யோகனுற்றார்

கொன்னுனைச்சூலவெங்கணமுதற்றலைவர்தோள்கொட்டியார்த்தா
ரின்னிளம்பிறைமுடிச்சடையவன்கைலைசென்றெய்தினரால். (கருஅ)

கண்டமுக்கண்ணிறைனும்மகிழ்ந்திடையருக்கருணைசெய்தா
னண்டர்நாயகனுருப்பெற்றுநெஞ்சுருகியோரருகுநின்றான்
றெண்டர்பெற்றிடுபயன்பெறவளிததனனவன்றொல்லைவானோர்
துண்டவெண்பிறையினனிலையுணர்ந்திருகரந்தொழுதுநின்றார். (கருகூ)

வெருவருந்தகையனாகியநமன்சித்திரகுத்தனைவிளித்தான்
கருதரும்பாதகன்சிவகணத்தவரொடுங்கைலைசென்றான்
செருமுகத்திவரிழைத்தனவுமப்பாதகன்செயலுமுக்க
ணொருவனைத்தொழுதுரைத்திடுதுமென்றொளிமணிக்கைலையுற்றான். ()

பெற்றமேறியதனிப்புனிதனைப்பரவியெம்பெருமசெனறே
பற்றிவந்தனர்புலைச்சுருமாரனென்னுமிப்பாவிதன்னை
யுற்றகாலத்தருட்சிவகணத்தவர்மறித்துடனுருத்துக்
கற்றடந்தோளினெம்படைசெகுத்திவனொடுங்கைலைவந்தார். (கசுக)

கோறலஞ்சலன்மதுக்கொள்வதஞ்சலனடுங்கொடுமைசெய்யச்
சேறலஞ்சலன்மறைத்தெய்வமாமரபினிற்சென்றுதித்து
மாறரும்புலைமகட்புணருமங்கவள்வயின்வந்துதித்தார்
நாறிருங்கோதையோரிருவரைத்தழுவியின்னலநுகர்ந்தான். (கசுஉ)

இவனிழைத்திடுபவத்தெல்லைகண்டிலமெடுத்தோதினெந்தாய்
*தவமுயற்சியர்பெறுவீடளித்தனையிதோதருமமென்னக்
கவர்தலைச்சூலிமென்னகைவிளைத்திவருழைக்கண்ணடத்தாச்
சிவதினக்கங்குல்பெறறற்றைநாளெம்மடிசசிந்தைசெய்தான். (கசுஙு)

ஆதலாலிவனுழைக்கொடியபாதகமெலாமறைதுமற்றைத்
தீதுறும்பஞ்சியிற்சென்றுறும்பரிதிமுற்றிமிரமொத்தவ்
வாதவன்கதிரொளிப்பனிநிகாத்தனவிதற்கையமில்லை
நீதடுத்திடுவதற்கெளியனன்றென்றனன்னிலவணிந்தோன். (கசுச)

எம்பிரானிவையுரைத்தருளவொன்றுரைசெயானியமனெந்தாய்
நம்பநாயகதிரிசூலப்படைத்தேவபுன்னகைநிலாவான்
வெம்புமுப்புரமெரித்தருள்பரம்பரதராய்விடையெனப்போ
யிம்பரானவரொலாநகைதரத்தென்றிசைக்கெய்தினனால். (கசுரு)

ஈதுநஞ்சிவனருட்கங்குலின்பெருமைமற்றிதனையுள்ளக்
காதலிற்பெரிதிழைப்பவர்பெறும்பதவியார்கழறுகிற்பா

---

* "தவமுயற்சியி னுறுந்தலை யளித்தனை" எனவும்பாடம்.

ராதியிற்சிவநிசிக்குற்பவம்புகலமற்றறிதிறொன்னுச்
சூதமெய்த்தவன்மொழிந்திடமுனித்தலைவர்கைதொழுதுநின்றார். ()

கலிவிருத்தம்.

கற்பமீறுபட்டுந்திக்கமலவீட்
டிற்புரந்துலகீன்றவனிற்றுறப்
பெற்றெழுந்தபிரளயத்தாருயிர்
முற்றுமுற்றமுடிந்தெழுகங்குலின். (கசுள)

யாமநாலுமிருந்துமையாளிளங்
காமர்வெண்பிறைக்கண்ணியற்பூசியாச்
சேமவல்லிருட்சென்றகடைத்தலைத்
தோமில்வையந்தொடங்குறுந்தொல்லைநாள். (கசுஅ)

எந்தைநானுனையேத்தியகங்குனட்
சிந்தைகூாசிவராத்திரியென்றுபேர்
தந்துநோற்றவர்சாயுச்சியம்பெறப்
புந்திகூர்ந்தருளென்றடிபோற்றினாள். (கசுகூ)

ஆதலிற்சிவராத்திரியாகிய
தீதிலாமையுமின்னுமோாகாரண
மோதுறுஞ்சிவராத்திரியுற்பவந்
தீதின்மாதவர்கேட்கெனச்செட்புவான். (கஎ0)

ஆதிநாரணனம்புயத்தந்தணன்
காதுவெஞ்சமாதம்மிற்கனன்றனர்
தீதிழைக்குஞ்சினந்திருகிச்செருப்
போதுநூறுவருடம்புரிந்தனர். (கஎக)

நான்முகன்பிரமாத்திரநாரணன்
மேன்முகந்தெழவேண்டிவிடுத்தன
னுன்முகன்படநாரணவதிர
மேன்முகுந்தன்வெகுளியினேயினன். (கஎஉ)

ஈண்டிறந்துபடுவரிவனெனத்
தூண்டுமெத்திரமுன்னரிற்றேன்றியே
நீண்டசோதிநிலவணிசென்னியான்
காண்டகுஞ்செங்கனற்பிழம்பாயினன். (கஎஙா)

அன்னகாலையிலாங்கவரத்திர
மென்னையாளுடையானெதிரோற்றிடச்

சன்னமாகிவெண்சாம்பரிணியது
மின்னொர்பாகனையார்வியந்தேத்துரா். (கஎச)

மாகதிங்களவரும்பதினனன்னன
ருகநீடிருளத்தமகன்றபின்
னேகநாதனிலிங்கமுற்றெய்தினன்
வேகநீததவர்வந்தடிவீழ்ந்தனர். (கஎரு)

ஐயநின்னையளவறுப்பாரெவா
வெய்யபன்றியுமன்னமுமேயயாஞ்
செய்யவூழிதிரிந்துநிற்கண்டிலேம்
பொய்யிலன்பினருள்ளம்புகுந்தனை. (கஎசு)

என்னமாதவஞ்செய்தனம்யாங்கண்மற்
றுன்னதின்னுருக்கட்புலத்துற்றனம்
பன்னகப்பணியாயினிப்பங்கயப்
பொன்னடிததுணைபோற்றட்புரிதியால். (கஎஎ)

இற்றைவைகலிருட்படுகங்குலைப்
பெற்றமேறும்பிரானிரவென்றுயிர்
முற்றுமோதவுநோற்பவர்முத்திபெற்
றுற்றபாவமொழியவும்வேண்டுமால். (கஎஅ)

என்றுவேண்டியிரந்தனரொம்பிரா
னன்றவர்க்கவ்வரமளித்தானரோ
மன்றலந்துளவோன்மலரோனெடும்
புனறொழிற்சமரற்றுடன்போயினன். (கஎகூ)

செங்கணேறுடையான்சிவராத்திரி
யங்கணுற்றதறிந்திசைத்தனம்
பொங்குகங்குற்புனிதமறறெம்மனோர்
தங்களாலுமுணாக்கத்தகுவதோ. (கஅ0)

ஆதிநாளினரும்பியநோன்பினை
யோதிலுண்மையறிந்தெவரோதுவார்
ஈதுநோற்பவர்தங்களையெம்மனோர்
மாதொர்பாகனெனததொழுவாரரோ. (கஅக)

இந்தமாவிரதத்தினையெம்பிரா
னந்திபாலெடுத்தோதவந்நான்முதற்
கந்தவேளயன்காளாகடவுளர்
விந்தைகேள்வனிழைத்தனன்மெய்ம்மையால். (கஅஉ)

கலிநிலைத்துறை.

உரைத்தனஞ்சிவராத்திரிவிரதமுற்றுமக்கு
விரைத்தவார்சடையவனுடைவிரதமொன்றுளது
கரைத்தசிந்தையிற்கேட்குதிரென்றனன்கருணை
யிரைத்தசிந்தையன்சூதன்மற்றுங்கவர்க்கியம்பும். (கஅங)

விரித்தசெஞ்சடையெந்தைகேதாரமாவிரதந்
தெரித்துணர்ததுறினெம்முறையடங்குமோசிறியேந்
தரித்தவாறுமக்குணர்த்துதுமென்றலுந்தாழாப்
புரித்தபுன்சடைமாதவர்கேட்பதுபுரிந்தார். (கஅச)

பனிப்படாம்பொதியிமவரைக்கொடுமுடிபலவுட்
டனித்ததோர்முடிகைலைபோன்றுளததன்றன்மை
தொனித்துணர்த்துறின்வெள்ளியொத்தவிரொளிதுளங்குங்
கனித்தவன்பொடுமுறைவதுபிறைமுடிக்கடவுள். (கஅரு)

திசையெலாம்படவெள்ளொளிவிரிப்பதுசிமையத்
தசைவிலாமுழுமதியநின்றவிர்வதொத்திலங்கும்
விசையமாதவருளத்தொடும்பொதிவதுவிண்ணோர்
வசையிலாரணனுன்முகன்றொழத்தகும்வணங்கி. (கஅசு)

அருவிநாலிருபுறத்தினுமிடையறுதலைக்கு
மருவருஞ்சினைக்கற்பகம்பூழின்மந்தாரங்
குருநறுந்துணர்க்குங்குமஞ்சண்பகங்குருந்தம்
விரிகருஞ்சினைநரந்தைதேமாவனவெள்ளில். (கஅஎ)

இவையெலாம்பொதிந்திருட்படாம்போர்ப்பதவ்விருளை
நவமணிக்குவைதுவன்றிநின்றறுப்பனநளிநீக்
கவர்நெடுஞ்சடையெம்பிரான்றிருநடங்காண்பான்
றவறின்மாதவரரிமுதற்றேவர்சஞ்சரிப்பார். (கஅஅ)

தெய்வயோகிகள்கின்னரரியக்கர்கந்திருவா
மெய்கொடெய்வமால்வரையினைச்சூழ்ந்தனர்விரும்பி
மைகொள்கண்டனைவணங்கினர்மாதவம்பயில்வார்
பொய்யிலுன்மறையுச்சிவீற்றிருப்பதப்பொருப்பு. (கஅகூ)

இனையமால்வரையுச்சிவாளரிசுமந்தெடுத்த
புனைமணித்தவிசும்பரினுமையொடும்பொருந்திக்
கனைபொலன்கழலிந்திரன்கணத்தொடுமிறைஞ்ச
வினையமாநிலத்துயிர்க்களிததிருந்தனன்விமலன். (ககூ0)

பார்த்திவானவன்பன்மதிக்கடவுண்மாதவத்தோர்
குருதியாழிவெம்படையினனுன்முகக்குரிசி
லிருடிநாரதன்முதலினோர்தும்புருவியக்கர்
கருணைகூர்சனகாதியர்யோகிகள்கணத்தோர். (கககக)

வலவைகேள்வனுமரகதப்பலகையொத்தகலுங்
கலவமாமயிற்பாகனுநந்தியுங்கடல்சூழ்
நிலநெடுந்திசைப்பாலருநம்வசிட்டனுநினைத்தார்
மலரயன்றனித்தலைதுமித்தோனவைமருங்கின். (கககஉ)

மருங்குறுவுறமைபடுவாளரித்தடங்க
ணரம்பைமேனகையுருப்பசிதிலோத்தமையருநூற
றிருந்துபாடலிற்பல்லியச்சதிமுறைறதிறம்பா
திரங்குசில்லொலிச்சீறடிநூபுரமிரங்க. (கககங)

சுருதியாழிசைதும்புருநாரதரிசைபபக்
கருவிமத்தளமென்மெலவிசைப்பனகாண
வுருகுபாடலினரம்பையர்நடந்தரவொருபாற்
செருகுவெண்பிறைக்கண்ணியன்றிருவருள்சிறந்தான். (கககச)

இன்னலந்தருமரம்பையர்நடித்தவீற்றிறுதிப்
பின்னலஞ்சடைப்பிங்கிருடிப்பெரும்பெயரோ
னன்னவர்க்கெலாநகைவரமுடநடமயர்ந்தான்
மன்னுமாசவைநகைத்ததுமாதிரமதிர. (கககரு)

நன்றுநன்றெனததனிவிழிநெற்றியோனவிலப்
பின்றவிழ்ந்தபுன்புரிசடைநடித்தபிங்கிருடி
மன்றலோதியையொழித்திளமதிநிலாப்புனைந்த
குன்றவில்லியைநடத்தொடுதனிவலங்கொண்டான். (கககசு)

கொண்டுபோற்றினன்வரன்முறைவணங்கினன்குழைந்தா
னண்டர்நாயகனிதருள்பெறப்பெற்றவாற்றுற்
பண்டைநாண்முதலிழைத்தமாதவப்பயனடைந்தேன்
றொண்டனேனெனநடித்துநின்றடிக்கடிதொழுதான். (கககஎ)

ஈதுநோக்கினடிருவுளங்கறுத்தனளிறைவி
யாதிவன்செயலென்னைநீததவமதித்திகழ்ந்து
போதிளம்பிறைக்கண்ணியோய்நினைவலம்புரிந்த
தோதவேண்டினனென்றனள்சீற்றமிக்குமையாள். (கககஅ)

பானலங்கருங்கண்ணிமற்றுங்கதுபகர
வானிளம்பிறைக்கண்ணியோனவட்கெதிர்வழங்கு

மோனமாதவர்மூலமொன்றேயென முன்னி
நீனெடுங்குழன்மற்றுமொன்றுளதெனநினையார். (கககக)

தேங்குகங்கையஞ்சடையினனுங்கதுசெப்ப
வீங்குசீற்றமிக்கெழுந்தனனணைமீக்கிளரப்
பாங்குநின்றபிங்கிருடியைநோக்கினளவனபா
லோங்குசத்திநீத்தொழிதரவாங்கினளுமையாள். (உ00)

ஒழிந்தசத்தியனுலரியவாக்கையனுணங்கிக்
கழிந்தவென்பினன்றோலொடுநரம்பலகாணுன்
குழிந்தகண்ணினனொடுங்கியகொடிற்றினன்குருதி
பிழிந்தமெய்யினன்சுரம்படுமூலவையிற்பெயர்வான். (உ0க)

ஈசனித்தனைகண்டனனெனமனத்திருத்தி
மூசுவெஞ்சினத்தகன்றனளருந்தவமுயல்வான்
பாசிழைப்பரும்பணைமுலேயுளத்தினைபபழங்க
ணூசலாட்டுறக்கவுதமனுறையுள்சென்றுறைந்தாள். (உ0உ)

உலகம்யாவையுமுறுபொருளனைத்தையுமுலவா
வலகிலண்டமுஞ்சராசரமனைத்தையுமளித்தாள்
செலவுமன்னவள்சிறடிதீண்டவுஞ்சிறப்புற்
றிலகுமவ்வனமரிதுறப்புரிந்ததெத்தவமே. (உ0௩)

குருதிவாளெயிற்றடுபுலிக்கொள்ளையும்வெருண்டு
திருகுவெஞ்சினக்கவிழதலேயுளியமுந்திணிதோட்
டொருகைவாரணமத்தமீர்ந்தூற்றெழுங்குருதி
பருகுவாளரிமடங்கலுங்கலந்துடன்படாவ. (உ0௪)

திரிமருப்பெழுமிரலேயுஞ்சிறுபொறிபபுள்ளிக்
கரியகட்பெடைமானொடுந்திரிவனகடுக்கான்
றெரிசினத்தவாளரவினமொழுக்கியூர்ந்தியங்கும்
வரிநெடுஞ்சிறைப்புட்குலந்துவன்றுமவ்வனமே. (உ0௫)

இழைத்தமாதவத்தலேவாசூழ்ந்திருப்பனவிமவான்
கழைப்பசுங்கிரிப்புடைபடுமவ்வனங்கடுப்பத்
தழைத்தபூந்துணர்சினையொடுந்தழைப்பனசாந்தங்
குழைத்தகொம்பொடுபொதுளியசிலிர்த்தனகுருந்தம். (உ0௬)

இருந்தமாதவக்கவுதமனவணகன்றேகி
யருந்துகின்றனசமிதையுந்தருப்பையுமாய்ந்து
பொருந்துமேல்வையிற்றன்னுழையவ்வனம் * புகுதத்
திருந்துமவ்வனம்புதுவளஞ்சிறந்தனதெரிந்தான. (உ0௭)

* "வறுவனம்புகுத" எனவும்பாடம்.

பொழிந்தமும்மதக்கலுழியம்பொருப்பொருபூட்கை
கிழிந்துவாய்ப்பொருகோளரிவெரிநுறக்கிடப்ப
தொழிந்தவெம்பலிப்போத்தொடுமொருதனிமடமா
னிழைந்துநின்றுடஞேடுவமாறெழிந்திரங்கி. (உ0அ)

திறல்கொள்வெஞ்சினக்கலுழஞேடரவினந்திளைய
வுறைகொள்வாளெயிற்றிடையருதாரமுதுகுப்பப்
பொறையரிப்புறத்தொதுங்கியமடற்செவிப்புனமேய்
சிறுமுயற்குழாத்துடனுறைந்தாடுவசெந்நாய். (உ0கூ)

ஒருதனிபபெருந்திகிரிதேருருட்டியவுதயோ
னுருகுவெங்கதிரபடபபடவுணங்கியவுலவை
மருவருந்துணரீன்றனபூந்துணர்மலர்ந்த
பொருவருஞ்சினைக்கற்பகவனமெனபபொதுளி. (உக0)

பருவநோக்கிலடணைமரம்பழக்குலையீன்ற
மருவுறுமலர்மருப்படமலாந்தனமலர்வாய்ப்
பெருகுதேத்துளியிடையிடைதெறிப்பனபெரியோன்
கருதியெட்டியுமுண்டனபழுப்பனகண்டான். (உகக)

என்னையிவ்வனமிருஞ்சிறப்பினையுடைத்தாகி
முன்னையிறசிறப்புடையதாய்ப்பெருவளமுயன்ற
வென்னையாளுடைநாயகியினிதெழூநதருளிப்
பொன்னடித்துணைசாத்தியதுணாந்திலனபுனிதன். (உகஉ)

குடையன்குண்டிகைதூக்கியகரத்தினன்குனித்த
நடையனஞ்செழுத்தோதியநாவினன்கலைத்தோ
லுடையன்செம்பொனுமோடுமொத்துளவெனவுணர்வா
னடைதருப்பையேமுதலியவொருங்குகொண்டடைந்தான். (உகங)

வெயிற்கொழுங்கதிர்பரப்பியவேலைமாநிலத்தி
னுயிர்க்குமாருயிர்ப்பொறைகட்குமுணர்வுதந்துதவிப்
பயிற்சிதொன்றுதொட்டறப்பயிர்வளர்க்குறும்பணைத்தோட்
குயிற்கொழுஞ்சிறுகுதலைவீற்றிருப்பதுகண்டான். (உகச)

யாமிழைத்தமாதவங்கொலோவெம்முன்னோர்முன்று
தாமிழைத்தமாதவங்கொலோவனம்புரிதவமோ
வேமவெற்புறையெம்பெருமாட்டியைக்கொணர்ந்து
காமர்நல்வினையளித்ததென்றென்புறக்கனிந்தான். (உகரு)

கனித்தசிந்தையினருக்கியமுதலியகடன்க
டனித்துமாதவனுமையவட்கருண்முறைதந்தான்

பனித்தமெய்யினனடிக்கடிகிலனுறப்பணிந்தா
னினைத்தெழுந்தருளியகருத்தென்னெனநிகழ்த்தும். (உகசு)

மறுவறும்பிறைக்கண்ணியோற்கொருபுறமருவிப்
பெறுவதாற்றுதற்கியைந்தினனுங்கதுபெறுவா
னுறுபெருந்தவவிரதமொன்றுளைக்குதியுளைத்தா
லிறுவதின்றிவணிருந்தினிதியற்றுவனென்றுள். (உகஎ)

ஏழையின்னனமுளைத்தலுமிருந்தவத்தலைவன்
வாழிநான்மறையுயிர்த்தநாள்வழங்கியவழக்கத்
தாழியாகமப்பெருங்கடற்றுறைகுடைந்தளந்தோ
னூழியான்றனிவிரதமொன்றுளதெனவுணர்ந்தான். (உகஅ)

குணித்தசிந்தையானிமயவெற்பீன்றமென்கொடியை
யணித்துநின்றுலகீன்றளித்தருளியவணங்கே
பணிக்கொடுஞ்சடைப்பரமனுக்குவந்ததோர்விரதங்
கணித்ததொன்றுளதென்றனன்மும்மலங்கடிந்தோன். (உகக)

அனையகேட்டலுமகநெகிழ்ந்தருததியளாகி
வினையறத்தனிநோற்றருள்விரதமெய்த்தலைவா
நினைதருந்தனிவிரதமுநோற்றிடுநெறியும்
வனையுமாகமவரன்முறைவழங்கெனவருப்பான். (உஉ0)

உலகெடுத்தகேதாரமாமதன்பெயருலகம்
பலதொழும்புரட்டாதியிற்பூருவபக்கத்
தலகிலட்டமிமுதற்றொடுத்தருங்கலைகழியு
நிலவுவாவருமளவையுநோற்பதுநெறியே. (உஉக)

குழைத்தவெண்டிரைப்புனல்படிந்தரனடிகுறுகா
விழைத்ததந்துவினேழுமூன்றிடக்கரந்தரித்துக்
குழைத்தவெங்கதிர்ப்பரிதிபோய்க்குணகடற்குளிப்ப
விழைத்தசிந்தையினோர்பொழுதயின்றுறவேண்டும். (உஉஉ)

பரந்தகங்குலிற்பரப்பியதருப்பையிற்படியா
விரங்குமன்பொடுசிந்தனையரனடியிருத்திப்
புரந்தவப்பதினன்கிடைப்புனைமணிகிவந்தஞ்
சுரந்ததேத்துளிநறுமலர்த்தொடலைகடேக்கி. (உஉரு)

நிவந்தமூடுபுக்ககவைவெண்ணெற்படத்திருத்தி
யுவந்தமந்திரத்தெழுதியபிரணவத்துள்ளா
யவர்தொலைத்திடும்பூரணமணிக்குடமமைத்துப்
பவர்தொலைத்துறப்பவித்திரத்தருப்பையாற்பரப்பி. (உஉச)

ஏறுயர்த்திடுமெந்தையையிரும்புனற்குடத்து
வேறிருத்தியபாவகமன்பொடும்விளைத்து
நாறுநாண்மலரருச்சனைவரன்முறைநடத்தி
யூறுதீபமற்றுளவெலாமுறைமுறையுவந்து. (உஉரு)

சிரித்துமுப்புரந்துகளெழத்தீயெழச்சீறி
யெரித்தநாதகேதாரவென்றடிக்கடியேத்திப்
புரித்தமெனகுழலற்றைநாணோற்றதுபோக்கித்
தரித்தபிற்றைநாட்காப்பொழித்தரனடிதாழ்வாய். (உஉசு)

ஈதுநோற்பவர்மாந்தரோலேழுமூன்றிழையும்
தீதுதீர்த்திடவலந்தரித்திவவணஞ்சிறபபார
தாதுசேர்குழனோற்குதியென்றனன்றவபபே
ரோதுகோதமன்கேட்டுளத்தமைத்தனளுமையாள். (உஉஎ)

உரைத்தநூன்முறைநோற்பனவுயாந்தவர்க்குரிதததால்
வரைத்தமாநிலமன்பதைக்குரியனபதிஞன்
கிரைத்தநீர்குடைந்திறைபடுகாப்பணிந்திறைபாற்
கரைத்தவன்பொடுமுணவொழிந்தியற்றுதல்கடனே. (உஉஅ)

பிற்றைநாளமாவாசையிற்பிரமகோத்திரத்தோர்க்
குற்றபோசனமினிதுவந்தவரயின்றெழிந்தாற்
பெற்றபாரணங்கூட்டுவரீங்கிதுபிழையார்
முற்றுநோற்பவர்பெறுபயன்யாவரோமொழிவார். (உஉகூ)

என்றுகோதமனுரைத்தநோன்புமையவளியற்றி
நின்றுணர்ந்துணர்ந்திரங்கினணிலவணிசடையோன்
மன்றலோதிபாற்கணத்தொடுமெருகுறவந்தான்
குன்றுயிர்த்தபூங்கொம்பனுடைமுழுதுளங்குழைந்தாள். (உ௩0)

**தரவுகொச்சகக்கலிப்பா.**

மூலமாய்மும்முதலாய்முன்பின்னெனமொழியுங்
காலமாய்நீராய்க்கனலாய்வளிவெளியாய்த்
தாலமாயெப்பொருளுந்தாநாய்தனிநின்ற
கோலமார்காண்பாரொழியாக்கொழுஞ்சுடரே. (உ௩க)

எந்தாயெவர்க்கும்புலபடாயெவ்வுயிருந்
தந்தாய்தருமுயிர்க்குத்தாயாயுணவுதர
வந்தாய்சமயநூலாறுய்வழங்குற்றுய்
செந்தாழ்சடைப்பரமநிலவணிந்தசென்னியாய். (உ௩உ)

அண்டம்பலவாய்ப்புவனங்களாயவற்று
ளுண்டனவாயுண்பானொருவனுயுண்பனவாய்க்
கொண்டவிருப்பாவிருப்பாறுங்கொள்கையாய்ப்
பண்டையுயிர்க்களித்துநின்றாய்பரம்பரனே. (உகங)

ஈரக்குந்திரைபபாற்கடற்றுயிலுமீர்ந்துழாய்த்
தார்க்குன்றெருநாபிதந்ததனிக்கமலை
மார்க்குமுலகுயிரோடீன்றளித்ததாராய்ந்து
பார்க்கினிநதருண்மற்றன்றிப்பலியாதால். (உகச)

தோற்றமாயீறுயளவைசொலத்தோன்றுது
போற்றுமறைநுணுக்கம்போல்வாய்புலப்படா
யாற்றுமருநோன்பினெம்பிரானவ்வுருவே
மேற்றனவெங்கண்களிழைத்ததவமெத்தவமே. (உகரு)

ஆனந்தவாரியரிநெடுங்கணுறலைப்ப
வூனந்தமெல்லாமுருகவுளநெகப்போய்
வானந்தருநிலவச்சென்னியான்வார்கழற்கே
கானந்தருமலரிட்டேத்திக்கனிந்தனளால். (உகசு)

மானேந்துசெங்கைமழுவாட்படையுடையான்
றானேந்துபாகந்தரப்பெற்றாடண்ணிலாக்
கூனேந்துவார்சடைமேற்கொன்றைகொழித்துயிர்க்குந்
தேனேர்துசென்னியோற்போற்றியிவைசெப்புவாள். (உகஎ)

தேவநினைநோக்கிநோற்றதிருநோன்பை
யாவரிழைத்தாரெனினுமவர்க்கீறு
சேவடிப்போதீந்துதிருமகப்பெற்றுள்ளளவு
மேவுநலனளிக்கவேண்டுமெனவேண்டினாள். (உகஅ)

அவவாறருளியருந்தவத்தோர்க்காரருளிற்
செவ்வேதிருநோக்கஞ்சென்றான்றிணைபுரட்டு
மவ்வேலைநஞ்சணிந்தகணடனவளோடும்
வெவ்வேறுகைத்தொருதன்வெள்ளிப்பொருப்படைந்தான். (உகக)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆதிநாயகன்கைலையிற்சித்திரவங்கதனுயகந்தருவன்
போதன்மேயினனர்திபாலடைந்தனனவனிருபூங்கழலிறைஞ்சி
மாதவன்புகல்விரதமீதுணர்த்துறவுணர்ந்தனன்வலைகடலுடுத்த
பூதலம்புகுந்தாங்கனுச்சென்னிகேட்டறிந்தனனங்நகர்புகுந்தான். ()

ஒருதனிப்பெருங் கவிகையான் வச்சிர தேயனென் றுளனொரு வேந்தன், மருவருந்தொடை யாங்கவற்குணாத்தினன் கோதமன் வகுத்த நோன்பிதனை, யுருகுகாதலி னன்னக ராங்கவ னேற்றனன் பெருஞ்சிறப் போர்ந்தான், கருணைமைந்தரிற் பொலிந்தனன் றன்னுடைத் திகிரியா னிலம்பொதுக் கடிந்தான். (உசுக)

அனையமாநகர்வணிகரிற்பிறந்தனராரிமதர்நெடுங்கணுயிழையார்
மனையின்மாட்சியார்பாக்கியவதியெனும்புண்ணியவதியெனும்பெயரா
ரினையநோன்பினையிருவருநோற்பதற்கிசைந்தனரிரங்கியவுளத்தா
னினையுநெஞ்சினர்தாதைபாற்கேட்டனரீங்கிதுநின்றுநோற்றுறுவான்.

மரபின்மாட்சிய ரிங்ஙனமுரைத்தசொற் கேட்டலும் வணிகர்தம் பெருமா, னுராவுநீணிதி யிழந்தனன்வறிஞரி னேங்கினனுமக்கென நோக்கித், தரவரும்பொரு ளில்லென வுரைத்தலுமாங்கவா தரிக்கிலர்தாழாப், பரவிநீயிதற் கியைந்திலையென்னினு நோற்குதும் பணிததியென் றிரநதார். (உசுங)

வணிகனொத்துறக்கன்னியரிருவருமாநதிபெருந்துறைமூழ்கிப்
பணிமுடிச்சடைப்பரமனுக்காட்படுபாவகந்தம்முளததிருததித்
திணிதடஞ்சினையாணிழலிருந்திவாநோற்றலுஞ்செழுந்தனிச்சோதி[ன்.
மணிமிடற்றினன்றிருவுளத்தடைத்தனன்மகிழந்தனனொருதனிவந்தா

இனையவேழையர்க்கிருநிதியீட்டமுமேடவிழ்ந்தலர்ந்தபூமுளரி
மனைவிநல்லெழிலொப்பனவுருவமுந்தொலைவறவழங்கிவாணுளும்
புனைவளம்பலயாவையும்வேண்டுவபுரிந்தனன்புனைமலர்க்கோதை
நனைநறுங்குழற்கன்னியரிருவரும்வாழ்ந்தனர்நயப்புறுநாளின். (உசுரு)

வள்ளைவார்குழையிருவரிற்புண்ணியவதியெனுமழலைமென்குதலை
வெள்ளைவெண்குடைவச்சிரதந்தனுல்வேட்டுறபெருநலம்விளைந்தா
ளெள்ளரும்புகழ்க்காஞ்சிமாநகரொரிமுகச்சுடரிலைவேலோன்
கள்ளிருங்குழற்பாக்கியவதிதனைமணந்துறக்களித்துளம்வியந்தாள். ()

இருவரின்னணமரசரிற்புகுந்துமற்றில்லறப்பகுதியிற்சிறந்தா
ருருகுகாதலின்மைந்தருமகளிருமுயிர்த்தனரொருவருக்கொருவர்
பெருநலத்தினும்வளத்தினுமிழிந்திலாரறமுருப்பெற்றதேயனையார்
பொருவருந்தவவிரதநீத்தொழிந்திலர்நோற்றனரறமலாற்புரியார். ()

இரங்கிமன்பதைகையெடுத்தேத்துறநாள்பலகழிந்தனரிதுநாட்
சுரந்தமாநிதிச்செருக்கொடும்பாக்கியவதிதனிதுறந்தனள்விரதம்
புரங்கடிந்தவரடித்துணையிகந்தனளாங்கதுபுரவலனுணர்ந்தான்
கரந்துமீப்படுவெகுளியான்றுறந்தனனவளிளமுலைமுகக்கலவி. (உசுஅ)

மிடைவனம்புக மகனொடும் போக்கினன் புகுந்தனள் வெள்ளி டையறியா, ளடவி புக்குநின் றழுதன ளிரங்கின ளலமரு முளத்தின ளாகிப், படர்வனந்தரு முப்பிலிப் புற்கையாற் பற்பகல் கழித்தனள் பசியா, லுடலுணங்கிமற் றென்பொடுங் கழிதரு மகன்முகநோக்கி நின்றுயிர்ப்பாள். (உசகூ)

தன்னை நோக்கியமைந்தனின் றெதிரழத்தழலெழு முயிர்ப்பின டரி யாள், பின்னையாங்கவன் றன்முகநோக்கியப் பெய்வளையழுதழு திர ங்கு, மென்னையீங்கிவர் படப்படா வருத்தமொன்றில்லென வெரிவ னஞ் சுழன்று, ரன்னைமைந்தனை யருகழைத் திருந்துய ராற்றினளின் னணமறைவாள். (உருo)

மைந்தனேமகனேநெடுமாநிலங்காப்புறுமன்னரிற்புகுந்தேன்
முந்தையூழ்வினைநெடுவனம்புகுத்தியதின்னுயிர்முடிப்பதென்றுணரோ
னிந்தநல்குரவுடற்றுறமெலிந்தனனீயினியெனக்குமுன்பிறந்த
சந்தவார்குழற்புண்ணியவதியெனுமன்னைபாற்சார்குதியென்றாள். ()

என்றுரைத்தசொற்செவிபுகக்கேட்டலுமீன்றவடனைவிடுத்தேகிச்
சென்றுமீள்வதினிறப்பதேநலனெனத்தீப்படுமெழுகெனக்குழைந்தா
ஞென்றுநீயினிவருந்தலைமைந்தவென்றுரைத்தனளவவுரையொழியான்
கன்றுநீங்கியகறவையிற்கரைந்தனளன்னவனவ்வனங்கடந்தான். ()

எரிதருங்கதிரப்பரிதியோனெடுவரைவெதும்புறுமிருஞ்சுரத்தேகிப்
பொரிபரற்படவுள்ளடிபதைப்புறத்தாயரிற்போக்குசிந்தையனுய்க்
கரிகடுஞ்சுரமொருநெறிகடந்தனன்கடிமதிற்கொடிநகர்கண்டான்
புரிநறுங்குழற்புண்ணியவதியெனுமிருக்கையினொருதனிபுகுந்தான். ()

கண்டெழுந்தெதிரோடினளகவுறத்தழுவினள்கயனெடுந்தடங்கண், கொண்டலைத்தெழுகுமிழிநீருவட்டெழ வுச்சிமோந்துயிரொடுங்குழைந் தாள், புண்டிறந்தெரிகொளுத்தியநெஞ்சின ளாமெனபொருமினள் கனிவாய், விண்டரற்றினளன்னையாங்கென்றன ளவற்குளபரிசெலாம் விரித்தான். (உருச)

வணிகரிற்பிறந்தரசரிற்புகுந்தனைவ ரநதிச்சடைமுடிப்பெருமான், பணியினின் றனையறத் தொடும்பழகினை பாக்கியவதியெனும் பெயரா, யணியுமைந்தருநிதியொடும்பெற்றினி துவந்தனையருங்கடைமுறைபோ ய்த், திணிவனம்புகுந்தடகருந்தினையயனெழுதியதெவர்கொலோசிதை ப்பார். (உருரு)

விடுத்தொழிந்தனைதனிதுறந்தீன்றதாய்வெய்துறவெய்துறமகனே
கெடுத்தொழிந்தனைவிலங்கொடும்வேடராற்கெடுதிவந்துறுவனகாணு

யடுத்தவாறினியாருணர்ந்துறைப்பவொன்றழுதலமரனேக்கி [வன்.
யெடுத்தவெந்துயர்க்கெல்லைகண்டிலனென விருந்தனனருந்துயர்ச்சிறு

மீண்டுமைந்தனைத் தழுவினள்பெருநிதி வேட்டன வேட்டன புரிந்தாள், பூண்டவன்பொடு மழுதழி கண்ணினள் புகைந்தெழு நெஞ்சொடும் புழுங்கி, மாண்டிறந்தனளாமெனு மரந்தையண் மைந்தநிற்பயந்தனளுறைகா, ஞண்டுபோகுதியெனவிடுத்தகற்றி னண்மைந்தனு மந்தகரகன்றான். (உருள)

தரவுகொச்சகக்கலிப்பா.

ஆனுப்பெருநிதியங்கைக்கொண்டவணகன்று
போனனடுவடவைபொங்குநெடுஞ்சுரவாய்
வானர்கணத்தோர்வழிமறுத்துவவ்வினராற்
றேனரலங்கற்சிறுவன்றிகைத்தழுதான். (உருஅ)

ஏங்கியழுதரற்றிவிம்மியெதிர்திரும்பிப்
பூங்குழலோதிப்பெருந்தாயுழைப்புகுந்தா
னேங்குசுரத்தென்னைப்பறித்தாரெனவுரைத்தான்
றங்குபெருநிதியம்பின்னுந்தரப்போனன். (உருகூ)

சேணர்நெடுநெறியிற்சென்றான்முனம்பறித்தார்
காணவழியொன்றுசென்றான்கடும்பாவம்
பூணவிருந்தவர்முன்பறித்துப்போயினர்
வாணட்கிடரிழையாபின்னுநிதிவவ்வினரால். (உசுo)

நின்றனழுதான்றிகைத்தானெடிதுயிர்த்தான்
பொன்றாதவண்ணந்துயர்க்கடலுட்புக்கிழிந்தா
னென்றனுமாகாவெனமறுத்துமொண்டொடிபாற்
சென்றாலினித்தருமோவென்னுத்தெருமந்தான். (உசுக)

கேதாரநாதன்றிருவடியின்கீழிறைக்கும்
போதானடைந்தபெரும்பொருளும்புண்ணியமும்
பாதாளவெங்கமரினிட்டீர்பழிபெற்றீர்
யீதாலிதுவிளைந்ததென்றொருசொல்லேற்றனனல். (உசுஉ)

பாலனழுதுதிரும்பிப்பதிபுகுந்தச்
சேலனையகண்ணாட்கதுபுகலத்தேமொழியு
நீலமணிமிடற்றானேன்பதனைநீயிருந்து
நூலுரைத்துக்காட்டுவரன்முறையேநோலென்றாள். (உசுங)

அன்னையுரைத்தமொழிமாறாதவணிருந்து
முன்னைவிதிப்படியேநோற்றான்முதுவனத்துத்

தன்னையொழியத்தனிவிடுத்துப்போமகனை
யென்னைவரக்காணேனென்றென்றழுதழைப்பாள். (உசரு)

தாளாரவிந்தச்சதுமுகத்தோனன்றிழைத்த
கோளானகரிழந்துகானங்குடிபுகுந்தேம்
வாளாவிடுத்தேன்மகனைவரக்காணேன்
கேளாய்தனிநின்றழுதரற்றக்கேளாயோ. (உசசு)

உந்தையெனைநீத்தொழியவுனைநோக்கி
மைந்தவுடற்பொறைகொண்டாற்றிவனம்புகுந்தேன்
சிந்தைதரியேனுனையிழந்துந்தீப்பாவி
நிந்தைசுமந்துவயிற்றேம்பிநின்றேனால். (உசஎ)

என்னுவழுதரற்றியேங்கியெரியின்மெழு
கன்னுளவலங்கூயலமந்தலறினளா
லின்னுவுழந்துவிரதமினிதிழைத்துப்
பொன்னூர்பொதியேந்திச்செல்வனெறிபுக்கான். (உசஅ)

முன்போயருநெறியிற்றேற்றமுதலனைத்தும்
பின்போநெறிக்கேபெறப்பெற்றான்கோமானு
மென்போடுருகியிதுவென்னையென்றயிாத்தா
னன்போடுகேதாரநாதனருளுணர்ந்தான். (உசகூ)

கூடுநிதியனைத்துங்கொண்டுகௌங்குழைய
மாடுசுமந்துசுமந்தீன்றாள்வனம்புகுந்தா
னோடரிக்கணல்லாளைக்காணுயிர்ப்பெறிந்தான்
கோடியநெஞ்சத்தனுயென்றழுதுகூவினான். (உஎ0)

கேட்டாளயர்ந்துகிடந்தோர்முழைபுக்காண்
மாட்டாளுயிர்த்தழைக்கவல்லாண்மகன்குரலென்
றேட்டாலெதிர்ந்தாளுடன்கண்டாளோர்மகனைத்
தாட்டாமரைக்கரத்தால்வாவித்தழீஇக்கொண்டாள். (உஎக)

மைந்தனிழைத்தவரத்தாலெதிர்ந்தபொரு
டந்துவிரதத்தலைநின்றாளாங்கவளும்
பைந்தொடியைநீத்ததனிச்செங்கோற்பார்த்திவனுஞ்
சிந்தையிரங்கிநெகிழ்ந்துருகிச்சிந்தித்தான். (உஎஉ)

பண்ணுங்கடகரியும்பாய்மாவுமாநிலத்தி
னெண்ணுந்தனிவேந்தர்யாருமுடனீண்ட
விண்ணுந்தொடநிவந்தவெற்படவிபுக்கனறாற்
பண்ணின்றசொல்லாட்கொணர்ந்துபதிபுக்கான். (உஎரு)

கோமாடக்காஞ்சிக்கொடிநகரக்கோவேந்தன்
வீமானனையவிழிமாதைப்பிரியானுய்ப்
பூமாநிலத்துநெடுநாட்புரந்தளித்துத்
தேமாரிகொன்றைநிலாச்சென்னிபதஞ்சேர்ந்தனனால். (உஎச)

வையம்புரந்தளிக்கும்வச்சிரதந்தனெனும்
பொய்யில்புலமைப்புரவலனும்பூங்கமலத்
தையலனையாளொடுநெடுநாட்டாரணியின்
மையில்வளம்புரந்துவடகயிலைமன்னினன். (உஎரு)

பாயதிரைப்பாற்கடற்பகுவாயப்பாமபணையின்
மேயவிழிதுயிற்றுமேலோனிதுநோற்றுத்
தூயதனிவைகுண்டம்பெற்றான்றொழுமடியார்க்
கேயபெரும்பதவியினும்புரிந்தனனால். (உஎசு)

உந்திக்கமலத்துறையுளோனிவ்விரதஞ்
சிந்தித்துநோற்றிவ்வுலகளிக்குஞ்சீர்பெற்று
னந்தப்பெரும்பேறதுவன்றியாரளித்தார்
செந்துப்பொழுக்கனையபுன்சடிலச்சென்னியீர். (உஎஎ)

மண்ணுலகமெய்திமகவானிதுநோற்று
னண்ணன்மால்யானையரசரடிபோற்ற
வெண்ணரியவின்பமினிதுவந்துபின்னாப்போய்
விண்ணுலகாண்டின்றளவும்வெள்வாரணமுகைப்பான். (உஎஅ)

மக்கட்பேறின்றிவிசுத்தனெனுமாமறையோன்
றொக்கதனிவிரதமீதிழைத்துத்தொல்லுலகிற்
புக்கமகவொருநூறெய்திக்கடைமுறைபோய்ச்
செக்காச்செழுஞ்சடையோன்சேவடிக்கீழ்வைகினன். (உஎகூ)

தீதோட நோற்றார்சிறந்தபெறற்கரும்பே
றீதோசிறிதேயறிந்ததெடுத்துரைத்தேன்
போதோடிருக்கும்புராதனற்கும்போக்கரிதான்
மாதோடிருக்கக்கொடுத்தவரவிரதம். (உஅ0)

கலிநிலைத்துறை.

இன்னுமுண்டொருவிரதமற்றெம்பிரார்க்கினிது
மன்னுமாமணவிரதமற்றதனிலைவகுப்பி
னன்னவூர்திக்குமளந்தறிவரிதெவரளப்பார்
பின்னல்வேணியீர்கேண்மினென்றதனிலைபேசும். (உஅக)

திருந்துபங்குனியுத்திரவைகலிற்சிறந்து
பொருந்துமாதொருபாகனைமணவணிபுரப்ப
விருந்துசிந்தனையிருத்தியீர்ம்புனல்குடைந்தேகி
வருந்தமக்குளங்கியதியைமுற்றுறவகுத்து. (உஅஉ)

எந்தைசேவடியருச்சனையியற்றுநராயின்
றந்தமீசனையுமையொடுஞ்சார்ந்தமைதழுவச்
சிந்தைசெய்தவன்றிருமணந்திருந்தியகோலம்
வந்தனைக்குரித்தாமெனவிதிமுறைவணங்கி. (உஅங)

ஈசனெம்பிரான்றிருவடியருச்சனையிலரோ
லாசறும்பசுந்தமனியத்தானுருவிமையப்
பாசிழைப்பொலந்தொடியொடும்வகுத்தபின்பாலா
லேசிலைந்தினுற்சுத்திசெய்திலங்குறவிளக்கி. (உஅச)

மாலைநாற்றியவிதானமண்டபத்தகத்தெய்தி
யேலநெற்படுத்தணிபுனற்கும்பமொன்றிருத்திக்
கோலமாத்தழைபெய்ததிற்கொழும்பொனுலியற்று
மாலகண்டனையுமையொடும்வரன்முறையமைத்து. (உஅரு)

தெரிந்தநான்மலரொடுத்தெடுத்தருச்சனைதிருத்திப்
புரிந்துபூசனைக்குளவெலாம்வரன்முறைபோக்கிப்
பரிந்துவெண்ணிறநறும்புகையெழுப்பிநம்பரனை
விரிந்தகங்கைவாரசடையனைவீழ்ந்துவீழ்ந்திறைஞ்சி. (உஅசு)

தெய்வமாமறைதெரிந்தவேதியன்றனைமனைவாழ்
தையலோடுநீவருகெனவாங்கவன்றனக்கு
மையநுண்ணிடையவட்குமுற்றளிப்பனவருளிப்
பொய்யிலன்பொடுமினிதுறப்போசனம்புரிந்து. (உஅஎ)

ஆலயம்புகுந்தீசற்குமுன்சொன்னவாற்றான்
மாலைதீபமேமுதலியயாவையும்வழங்கி
வேலைவென்றகணுமைமணவினையொடும்விமலற்
கோலநெஞ்சகத்திருத்தியாலயம்வலங்கொண்டு. (உஅகூ)

மனைபுகுந்தெழுங்கடுங்கதிர்குடகடல்வைக
வனையநன்னெறிக்கடன்முறையமைத்தபினருளாற்
றநயர்தங்கிளைநட்டவர்தம்மொடுந்தழுவிப்
புனிதவுண்டிகொண்டொருதனித்தருப்பைக்கட்பொருந்தி. ()

மற்றைவைகலிற்றுயிலொரீஇவருபுனலாடி
யுற்றவேதியற்கீசனையுமையொடுமொருங்கே

பொற்றசும்பொடுமுதலியகொடுத்தடிபோற்றிப்
பெற்றமேறியோன்றெண்டரோடருந்துறப்பெறுவார். (உகூ0)

செய்யதாமரைப்பீடிகையினிதுறைதேவி
பொய்யில்கேள்வியினோற்றனள்பாம்பணைப்புனிதன்
மெய்கொண்மார்பகமினிதுவீற்றிருந்தனள்விரும்பித்
தெய்வநோன்பிதனிலைமையார்முடிவுறத்தெரிப்பார். (உகூக)

திணிதடஞ்சினைக்கற்பகத்திருநிழலிறைவ
னணிதருங்கதிவிரதமீதிழைத்தானருளான்
மணிவடஞ்சுமந்திளகியவனமுலைதாங்கிப்
பணிநுசுப்புடைப்புலோமசையவளொடும்பயின்றான். (உகூஉ)

வேனிலங்கணைக்கிழவனிவ்விரதநோற்றவனாய்ப்
பானலங்கருங்கட்கடைகுழைவழிபரப்புங்
கானவாருழலிரதிவெம்முலைநலங்கவர்ந்தான்
மீனவாரகொடியுயர்த்திமூவுலகையும்வென்றான். (உகூ௩)

வையம்யாவையும்படைத்துயிரனைத்தையும்வழங்குஞ்
செய்யதாமரைக்கிழவனீதிழைத்தனன்சினவேன்
மையரித்தடங்கட்சிறுகுதலைநாமடந்தை
யெய்தாவகத்திருத்தினனிருந்தனனின்னும். (உகூச)

வானவாக்கினிதராமுது தவிவான்வழங்குந்
தானவப்பெயாச்சந்திரனோற்றனன்றவத்தான்
மேனிவந்தமூவொன்பதென்றெண்ணிடைவிரிந்த
பானலங்கருங்கண்ணியர்ப்புணர்ந்தனன்பரிவான். (உகூரு)

விரதமின்னனநோற்றவரிளநிலாமிலைச்சு
மரனடித்துணைபகுந்தவாளவிறந்தொழிந்தார்
சரதமீங்கிதுசத்தியஞ்சத்தியந்தவங்கூா
விரதமாதவத்தலைவிர்காளறிந்தவாவகுத்தேம். (உகூசு)

வெள்ளிவெண்பிறைக்கண்ணியோற்கினமொருவிரத
முள்ளவாறெடுத்துணர்த்துதுமினிதுகேட்டுவப்பீர்
தெள்ளுசிந்தையீராங்கதன்றிருப்பெயர்சிவன்பால்
வள்ளயிற்படைச்சூலத்தின்பெயரதுவழங்கின். (உகூஎ)

ஆயிரம்பெருங்கதிரவன்றென்றிசையகன்று
பாயவுத்தரம்படர்முதற்றிங்களிற்பதினான்
கேயபிற்றையினிருங்கதிர்கரக்குநாளெழுந்து
தூயதண்புனல்குடைந்துதங்குறையெலாந்தொலைத்து. (உகூஅ)

இழைத்தசெம்பொனுல்வெள்ளியாலாவதெம்பெருமான்
குழைத்தசெஞ்சுடர்த்திருவுருவியற்றிவெங்கொழுங்கூர்
தழைத்தமுத்தலைச்சூலமற்றுங்கதிற்சமைத்து
விழைத்தவன்பிஞேடெம்பிரான்மென்கரத்தமைத்து. (உகக)

முன்னுரைத்திடுவிரதநூன்முயற்சியின்முறையே
பொன்னின்முற்றியபரமனையமைத்தவன்பூசை
யன்னவாறமைத்தவன்றிருத்தொண்டர்பாலருளி
னன்னலம்புரிந்தப்படிநோற்பரானல்லோ. (௩00)

இந்தநோன்பிழைத்திருநிலத்தினிதுவாழ்ந்திலகு
சந்தவெம்முலையுமையொருபாகனைத்தமது
சிந்தையானினைந்தென்புறவுருகினர்சிறந்தார்
விந்தைகேள்வனும்விரிஞ்சனும்பெறப்பெறுவீடு. (௩0க)

இருங்கொடுஞ்சிறைக்கலுழனூர்ந்துகைத்தெழுமிறைவன்
வருந்தியீங்கிதுநோற்றனன்வாளெயிற்றசுரன்
பொருங்கடுஞ்சினக்காலநேமியைக்கரம்பொறுத்த
திருந்துநேமியிற்பிளந்தவனுருயிர்செகுத்தான். (௩0உ)

பெருந்தவம்புரிபரசுராமட்டெரும்பெயரோ
னிருந்துநோற்றனனிறைவனையிறைமனந்தணவா
னருஞ்சமந்தருகார்த்தவீரியன்றனையமாவாய்
வருந்தடக்கையாயிரந்தடிந்தாருயிர்மடித்தான். (௩0௩)

நீத்தமாமுகினிறத்திஞனுந்திரின்றெழுந்து
பூத்ததாமரைப்பொகுட்டிஞனுதரவெம்பிணியா
ஞுத்தழும்புறப்புலம்பினனடுங்கிநின்றிதுநோன்
பேத்திநோற்றனனப்பிணியொழிந்துவீற்றிருந்தான். (௩0ச)

தேவராயினுமிருநிலஞ்சிறந்தவரொனினும்
யாவராயினுமிடையறுப்பெரும்பிணியினராய்ப்
பாவராயுழந்திதுமுறைநோற்பரோற்பயின்ற
நோவொழிந்துபின்னிருங்கதிப்பெருநலனுகர்வார். (௩0ரு)

இத்தணித்திருநோன்பினையிருந்திறல்வீர
பத்திரப்பெரும்பெயரினன்பானுகம்பற்கன்
றுய்த்துரைத்தனனுங்கதுவியாதர்கேட்டுணர்த்த
மெய்த்திறத்தொடுமுணர்ந்தனன்யானுமிவ்விரதம். (௩0சு)

உரைத்தனஞ்சிவவிரதமற்றினமொருவிரத
நரைத்தவெள்விடையவற்குளதாங்கதுநவிற்றி

னிறைத்தவார்கடனிலத்திஞரளவெடுத்திசைப்டார்
விளைத்தவார்சடைக்குரவிகாளறிந்தவாவிரிப்பாம். (௩0எ)

இடபதிங்களிற்பூருவத்தட்டமியெதிரப்
படவராவணிபுனிதனைப்டனிவரைடயந்த
மடவனத்தினைப்பாய்விடைமேற்டமதியாக்
குடைநறும்புனல்புலரியினெழுந்துபோய்க்குடைந்து. (௩0அ)

ஆடகத்திஞல்வெள்ளியாலாவதாரணங்கை
மாடிருத்தியவரதனைவிடையின்மேல்வகுத்துக்
கூடுமைவகைக்கவ்வியடவித்திரங்கொடுத்து
நீடுகும்டமீப்பொருத்தியேமுடிப்டதுகியதி. (௩0௯)

முன்னரொய்தியவிதிமுறைமுயறசியிஞேற்றுக்
கன்னன்முப்டதுங்கழிந்தொழிகாரிருட்சங்கு
லென்னையாளுடைநாயகனிணையடியேந்தி
யுன்னருஞ்சிவகதையுணாந்தருந்துயிலொழிப்பாா. (௩௧0)

ஒழிந்தகங்குலினுதயவனெழுச்சிகண்டுடன்போய்ச்
சுழிந்ததண்புனறுளேந்துதங்கடன்முறைதொலேத்துப்
பொழிந்தவன்பொடுமாலயந்தொழுதுசூழபுரிந்து
வழிந்தீர்க்குடமுதலவேதியாக்கெனவழங்கி. (௩௧௧)

ஆங்கவர்க்கெனப்போசனமருத்தியபின்ன
ரோங்குபாரணஞ்சிவனடித்தொண்டரையொருங்கே
பாங்கிருத்தியேநுகாந்தவாக்காவனபகாந்து
தேங்குகங்கையஞ்சடையனைசசிந்தைசெய்திருப்டாா. (௩௧௨)

பாற்கடற்றுயில்பண்ணவன்பங்கயத்திறைவ
ஞற்றிசைப்டடுமெணமர்வானடக்குறுங்கதிர்கள்
வீற்றுவேறுளதேவரிவ்விரதநோற்றன்றே
போற்றருந்திறற்றெய்வவாகனத்தொடும்டொலிந்தார். (௩௧௩)

ஒருதனிக்குடைவிசசுவசேனனென்றெருருவ
னிருமையுந்தெரிவசிட்டஞல்விரதமீதிழைட்பப்
பொருவருந்திறற்காலமூன்றுணாந்தனன்கடைபோய்க்
கருமணித்தனிக்கண்டஞேடுறைந்தனன்கயிலே. (௩௧௪)

வீரவேற்படைவிதுருதனென்றெருருவேந்த
ஞர்தரும்பெருவிருப்பிஞலீதுநோற்றடைந்தான்
மூரியண்டமேமுதலியமூவுலகியாவும்
யாருமெய்துருக்காயசித்தியினெழுமியக்கம். (௩௧௫)

கடுத்தமுப்புரமெரிதருநகைதரக்கடிந்தோ
னெடுத்ததெய்வமாவிரதமோரொட்டையுமிசைத்தே
மடுத்துரைத்திடுவிரதமற்றறைகுதுமசலங்
கொடுத்தமென்மலர்க்கொம்பனுட்குளதொருவிரதம். (௩௧௬)

தினகரன்றெறுகதிர்விரிசித்திரைத்திங்க
ளனையதிங்கண்முற்றிதிதருவெள்ளிவந்தடுப்பப்
புனைபொலந்தொடியம்பிகைப்புந்திசிந்தித்து
நினையும்வைகறைதெளிபுனற்கங்கைநீராடி. (௩௧௭)

முறைதினக்கடன்முடிப்பனயாவையுமுடித்து
நறைமலர்த்தொடைமாலிகைமண்டபநாற்றி
மறைபகாந்திடுமந்திரவரன்முறைவழாது
நிறைதரும்புனறபூரணமணிக்குடநிரப்பி. (௩௧௮)

புதியபட்டுடைவிரித்தணிமணிக்குடம்பொதிந்து
மதிமுடிச்சடைப்பரமனோர்மருங்குறவாழும்
விதுநுதற்பசுங்கொடியதினுறைவதாவிரும்பிப்
பொதியவிழந்திடுநறுமலரருச்சனைபுரிந்து. (௩௧௯)

புரியவேணடுவயாவையும்விதிமுறைபோக்கி
யரிவைமுன்னரிற்சருக்கரையாரமுதமைத்துத்
தெரிமறைக்குலமங்கையரொண்மரைச்சிந்தித்
துருகுகாதலிற்பூசனைபுரிந்தவாக்குதவி. (௩௨௦)

கொடியிடைப்பசுங்கோமளையாலயங்குறுகி
விடுசுடர்ச்செழுந்தீபமேமுதலியவிதித்த
படியமைத்தவளாலயம்வலங்கொடுபணியா
வடிசின்மத்திமமுத்தமம்பலாதிகொண்டமைதல். (௩௨௧)

எடுத்தநாண்முதற்சுக்கிரனிந்தநோன்பியற்ற
வடித்தடங்கணுள்பார்ப்பதியெதிருறவணங்கித்
தொடுத்தநின்பெருவிரதமென்பெயரொடுஞ்சொல்லிப்
படுத்தவேண்டினனென்றனனுங்கதுபணித்தாள். (௩௨௨)

அன்றுதொட்டுவெண்கிழமையம்பிகைதருவாத்தாற்
பின்றுசுக்கிரவாரமென்றொருபெரும்பெயராய்
நின்றதீங்கிதுதிருமகனேற்றனனெறியான்
மன்றலந்துளவோன்றிருமார்பகமணந்தாள். (௩௨௩

வெள்ளிதழ்ப்பனித்தாமரைப்பொகுட்டுவீற்றிருந்தா
ளெள்ளருஞ்சதுமறைபகர்ந்தெடுத்தவிவ்விரத

முள்ளவாறிழைத்துந்தியந்தாமரையுறையுந்
தெள்ளுநான்மறையவன்றிருநாவகஞ்சிறந்தாள். (௩உச)

பகுத்தவைப்பசியுத்திரத்தின்னணம்பரிவாற்
றொகுத்துநோற்றுறினுமைதருமின்னருடொகுவார்
வகுத்துநோற்றனள்புலோமசைவானவர்க்கிறைவன்
மிகுத்தகாதலின்முயங்குறவினிதுவீற்றிருந்தாள். (௩உரு)

பெருகுகாதலிற்புரட்டைமுற்பிரதமைமுதலாய்
மருவிமுன்புகல்விதிமுறைமணிக்குடமமைத்துச்
சொரிநறுந்துணரருச்சனைவரன்முறைதொகுத்துப்
பரிவினெண்பகற்பலாதியுண்டருண்முறைபயில்வார். (௩உசு)

நடந்தநாள்கழித்தீற்றிடையெதிர்ந்தமாநவமி
தொடங்குபிற்றைநாண்மறையவர்ப்போசனந்தொகுத்து
வடங்கொள்பூண்முலைமறையவர்மடந்தையர்க்கினிது
நுடங்குகோசிகமளித்தபின்பாரணநுகர்வார். (௩உஎ)

சேந்ததாமரைத்தடங்கணுணத்திறநோற்று
மோந்தபோர்முகத்தசுரரைமுதலறமுருக்கி
வாய்ந்தனன்கலாசத்தியையடைந்தனன்மற்றோ
பூந்தடங்கணோர்பாக்கியசத்தியும்புரிந்தான். (௩உஅ)

இமையமீன்றெடுத்தளித்தவள்விரதமீதிழைத்தோ
ரமையநல்கியபெருவளந்துய்த்தனராகி
யுமைதரும்பெருங்கருணையாலருங்கதியுவந்தார்
தமையெடுத்தெடுத்துணாத்துவதியாருழைத்தகுமே. (௩உகு)

புலன்களைந்தையுமொருவழிநிறுத்தியபுனிதக்
குலங்கொணமாதவத்தலைவிர்காளுமையவட்குணிக்கு
நலங்கொண்மாதவவிரதமூன்றுள்ளனநவின்றே
மலங்குவார்சடையைங்கரன்விரதமுற்றறைவாம். (௩௩0)

மேடதிங்களிற்பூருவபக்கவெள்ளியினு
ளாடிருந்திமைமாநதிடலரியினுடிக்
கோடொர்கையுடைக்குடவயிற்றைங்கரக்களிற்றைத்
தேடரும்பொனுல்வெள்ளியாற்றிருவுருச்செய்து. (௩௩க)

முன்னுரைத்திடுவிரதத்தின்விதிமுறைநோக்கி
மன்னுமாலிகைப்பந்தரின்மணிக்குடமமைத்தாங்
கென்னையாளுடைக்களிற்றினையாங்கதினிறுத்திப்
பன்னுநூன்மொழிவரன்முறைநோற்பதுபரிசால். (௩௩உ)

தெங்கிளெண்பழமெட்பொரிமுதிரைதீங்கதலி
பைங்கரும்புவெள்ளிற்கனிசருக்கரைபலவின்
பொங்குதண்சுளை முதலியயாவையும்பொலித்து
வெங்கைமாமுகற்கமுதுசெய்வித்தருள்வேண்டி. (௩௩௩)

மடந்தைபாகன தாலயம்புகுந் தடிவருந்தத்
தொடங்குதெக்கணமைம்பதிற்றிரட்டியுந்தொலைத்துப்
படாந்தசெங்கதிர்ப்பரிதிபோய்க்குடகடல்படிந்தான்
மிடைந்தகங்குலிற்பலாதியுண்டிருட்படுவிடியல். (௩௩௪)

வைத்தபூரணமணிக்குடம்பரப்பியநெல்லோ
டுய்த்தநான்மறையவர்க்கெனவுதவிமற்றவர்க்கு
மெய்த்தசிந்தையிற்போசனமளித்தபின்விருப்பாற்
பத்தரோடிருந்தினிதெனப்பாரணம்பயில்வார். (௩௩௫)

அரிதினிப்படிநோற்றனனத்திரிமுனிவன்
விரிதருங்கலைச்சந்திரற்பயந்தனன்விரிபுன்
புரிசடைத்துருவாசனைமகவெனப்புரந்தான்
வரியராவணிந்தோனடிகடைமுறைவதிந்தான். (௩௩௬)

உந்தியங்கமலாலயத்தொருவனேற்றுலவா
வந்தணத்துவமடைந்தனனளகையம்பதியோ
னிந்தநோன்பிழைத்திருநிதிசிறந்தனனெந்தை
தந்திமாமுகனருளொடுமரசொடுஞ்சரிப்பான். (௩௩௭)

தேவனொன்டவர்முனிவரர்யாவருந்திரைநீர்ப்
பூவலம்படுமாக்களுநோற்றனாபொருகோட்
டாவுயாத்தருளெம்பிரானருமறைக்கெட்டாச்
சேவடித்துணையடைந்தனர்திருவருட்சிறப்பின். (௩௩௮)

எந்தைதந்திமாமுகவனுக்கினமொருவிரதஞ்
சிந்தைகூர்தருவிநாயகசதுர்த்தியாந்தினத்தின்
முந்துரைத்திடுவரன்முறைதும்பிமாமுகனைத்
தந்துசுற்றியமணிக்குடமீதுறத்தந்து. (௩௩௯)

பத்திரங்கணூறுவேழிஞற்றிருவடிபரவிச்
சித்தமென்புறக்குழைதரவருச்சனைசெய்யா
வுய்த்ததீங்கனிபண்டமற்றினையனவுவந்தே
யத்தனுலயந்தொழுதுமீண்டிருட்பொழுதகற்றி. (௩௪0)

கும்பமும்பொதியாடையும்நெற்பொரிக்குவையும்
விம்பமும்பெறவேதியர்க்கீந்துளவிருப்பாற்

றும்பிமாமுகற்றெழுதுபின்பாரணந்துய்ப்பா
ரிம்பர்வாழ்ந்துசென்றங்கவன்பதத்துவீற்றிருப்பார். (௩௪௧)

கீற்றிளம்பிறைச்சடிலியுமரகதங்கிளைத்துத்
தோற்றிளங்கொழுந்தனையளுங்கயிலையிற்றென்னுட்
சாற்றினக்கவருடலுந்தனிமுதற்றேவர்
போற்றிளந்தளிரடியினளினையனபுகல்வாள். (௩௪௨)

ஏற்றிருந்திவனுடலுமெம்பிரானிருவேந்
தோற்புவெல்வதுசொல்பவர்யாரொனலோடும்
பாற்பெருங்கடற்பாம்பணைப்பனித்துழாய்ப்படலைச்
சூற்பசும்புயலாங்கவணெய்தினன்றெழுவான். (௩௪௩)

அனையனெய்தலுமெம்பெருமாட்டியுமாலம்
புனைகளத்தனுமாங்கவன்சானறெனட்புகல
நனைநறுந்துழாய்நாயகனிருந்தனனயந்த
வினையினுடினாதோற்றனனென்னையாள்விமலன். (௩௪௪)

முகிழ்த்தமூரலனெம்பிரான்றிருமுகநோக்கி
நெகிழ்த்தசிந்தையணிமலநீதோற்றனையெனலு
நகைத்துநாயகன்கட்கடைமான்முகநடத்த
வகுத்தவார்குழலேற்றனையென்றனன்மாயோன். (௩௪௫)

மாயனவ்வுரைவழங்கலும்வரைபயந்தளித்த
தூயமென்கொடிவெகுண்டனளிருங்கமைதுறந்தாள்
சேயரித்தடங்கட்புனல்சிந்துபுசிதறிப்
போயரிச்சிலம்பரற்றுறநடந்தனள்புகுந்தாள். (௩௪௬)

நோக்கநோக்குறவிருந்தனைநோக்கினநுவலாய்
வாக்கினென்றுநின்மனத்தினென்றுமெனவலித்தாய்
பார்க்குமப்புலனிழந்துவெம்பாந்தளிற்பலவாய்ப்
போக்குமூழிபல்கழித்தியென்றுரைத்தனள்பூவை. (௩௪௭)

மொழிந்தவீற்றிடைமுளரிபூத்தெழுமழையுருவங்
கழிந்தொராயிரமியோசனைநெட்டுடல்காட்டிக்
குழிந்தகட்புலனிலனெனக்கொடியவெம்பசிதீர்ந்
தொழிந்துருவரிப்பாந்தளாய்க்கிடந்தனனுயங்கி. (௩௪௮)

ஏங்குசிந்தையன்வெருவருமுளத்தினனெதிரீர்
தேங்குகண்ணினன்செய்யுமாறேதெனத்தேராத்
தாங்குசெஞ்சடையரனடிதாழ்ந்தனனெடுமா
லாங்கதற்குநீயஞ்சலையெனச்சிவனருள்வான். (௩௪௯)

ஆவணித்தனித்துங்கள்ளேங்காககளிற்றி
ஞேவருந்தனிவிரதமோர்ந்துறவருஞ்சதுர்த்தி
மேவுமத்தனிவிரதநீவிருப்பொடுநோற்பிற்
றேவிசாபநீத்தொழிதருமுன்னுருசிறப்பாய். (ருo)

எனமொழிந்தருளெம்பிரான்றிருவருளியற்றிப்
புனநறுந்துழாய்க்கண்ணியோரேற்றனன்பொறிப்பாம்
புனையமெய்யொழிந்தலர்ந்தெழுதாமரைமலர்ந்த
கனைகருங்கடற்கார்மழைநிகர்த்தனன்கண்ணன். (ருக)

இழைக்குநோன்பிதுநோற்றனரிலங்கொளிக்கயிலைப்
புழைக்கரத்தனைவிண்ணவரருச்சனைபுரிந்தார்
தழைச்செவிச்சிறுபுகர்முகத்தைங்கரத்தந்தி
விழைத்தசிந்தையினடித்தனன்விண்ணவர்வியந்தார். (ருஉ)

தூங்குபண்டியுந்தொளைபடுதுதிக்கையுங்கரத்துத்
தாங்குபண்டமுந்தண்டைபம்பியகுறுந்தாளு
மாங்குநோக்கினனகைத்தனனம்புலிக்கடவு
டேங்குசீற்றமிக்கெழுந்தனன்கரிமுகச்சிறுவன். (ருங)

என்னைநோக்கினைநகைத்தனைதிங்கண்மற்றிதுநா
ளுன்னைநோக்கினருருப்பழிபாதகமுற்றுங்
கின்னலங்கடற்படிந்திடரொழிந்திலராகித்
தொன்னிலத்தவர்நகைதரக்கரங்கெனச்சுழல்வார். (ருச)

என்றுரைத்தனனைங்கரத்திபமுகக்கடவு
ளன்றுரைத்தனவறிந்திலனுகியாப்புரக்குங்
குன்றெடுத்தவனுவணிச்சதுர்த்தியிற்குடபா
னின்றெழுந்திடுமிளம்பிறைநோக்கினனின்றுன். (ருரு)

ஆதலாலவற்கெய்தியவரும்பழியுரைக்கே
தீதுதீர்ந்தொழிதுவாரகையெனுந்திருநகரின்
மாதலம்பொதுக்கடிந்துலகளிக்குநாண்மனுநூ
லோதுசத்திரசித்துவென்பானுளனொருவன். (ருசு)

அனையனுங்கணுற்றந்தரத்தவிரொளிவிரிக்குந்
துனைபசும்பரித்தேருடைச்சூரியற்றொழுது
வனைசிமந்தகமணிதரப்பெற்றனன்மன்னன்
றினமுமெண்கலப்பசும்பொனுங்கதுதரச்சிறந்தான். (ருஎ)

மணியினல்வளம்பெறப்பெறுமன்னனைவாவென்
றணிமதிற்பெருந்துவாரகையமர்ந்தருளமலன்

பணிபணிக்குடையாங்கவன்றனிமுகம்பாராத்
துணிவில்சீர் தருசிமந்தகந்தருதியென்றுரைப்ப. (௩௫௮)

தெய்வமாமணியான்றரச்சிறிதலசெங்க
ணையயான்றரிற்பிழைவருங்கேட்கலையகல்வான்
வெய்யவன்றிருவுருப்பிரிவிதனைநீவேண்டல்
செய்யதன்றெனமறுத்தனன்சத்திரசித்தன். (௩௫௯)

தருதியேலதுபெறுகுதுமன்றெனத்தடுத்தாற்
கருதிலேமதுபோதியென்றுரைத்தனன்கமலத்
திருவிணையகனுங்கவன்போயினன்றிகழும்
பருதிவானவன்மணிதரபலவளம்பயந்தான். (௩௬௦)

வளச்செருக்கினுற்றெய்வமாமணியினைப்பின்னேன்
களத்திலாரமிட்டணிந்தனனவனெழில்காண்பான்
றளப்பெரும்படைத்தானையோசூழவ ரத்தம்பி
யுளத்திஞேங்கியபரியுகைத்துயர்வனமடைந்தான். (௩௬௧)

அருவிமால்வரையருகுசென்றடைந்தனன்வேட்டத்
தொருவிநீத்தனசேனைதாஞெருவழித்தணந்தா
ணிருவிமால்வரையகன்முழையெரிவிழிப்பேழ்வாய்ப்
பொருகடுஞ்சினக்கோளரியெதிர்ந்த*தப்பொழுதின். (௩௬௨)

காலையாதவன்கதிரொளிபரப்பியகழுத்தின்
மாலைமாமணிநோக்கியவாளரிமடங்கல்
வேலைவெஞ்சினமீக்கொளவேந்தனைப்பாய்ந்து
கோலவெம்பரிகிழித்துடன்கொண்டதம்மணியை. (௩௬௩)

எடுத்தமாமணியுடன்செலுமடங்கலையெதிர்ந்து
கடுத்தவெஞ்சினக்கவிழ்தலைச்சாம்பவன்காணு
விடுதவள்ளுகிர்த்தடக்கையால்வெரிநுறப்பிடித்துப்
படுத்திமாமணிபறித்தனன்பாதலம்படர்ந்தான். (௩௬௪)

படர்ந்துபாதலம்புகுந்தனன்சாம்பவன்பரிவான்
மடந்தையீன்றருளொருதனிமகவுகண்வளரு
துடங்குதொட்டிலுட்டுக்கினஞேக்கினன்களிப்பான்
மிடைந்தபல்கதிர்மணியிஞல்விளைவதொன்றறியான். (௩௬௫)

வெம்புகானிடைப்பரிவிடுவேட்டமேற்சென்ற
தம்பியெய்திலனென்கொலோவெனமனந்தளரப்
பம்புசேனையோர்வனமெலாந்துருவினர்பார்த்தா
ரம்பொன்மாமுடியரசனைக்காண்கிலரகன்றுர். (௩௬௬)

---

* 'எழுந்த' எனவும்பாடம்.

எதிருமுன்னவற்கெதிர்ந்தனரொம்பியோவென்ன
வதிருமாடருவிப்பொருப்படவியுமடைந்த
வெதிரசைந்திடசாரலும்வெள்ளிடைப்பரபபுங்
கதிர்செய்மாமுடிவேந்தனைநேடலுங்காணேம். (௩௬எ)

என்றுரைத்தசொற்செவித்தொளையெரிநுழைந்தென்னச்
சென்றழற்படத்தீத்தலுஞ்சிந்தைவெந்துருகி
யொன்றுரைத்திலன்வெயர்த்தனனயர்த்தனனுலவா
நின்றுயிர்த்தனன்கண்கணீருவட்டெழநின்ருன். (௩௬அ)

என்னுயிர்த்துணைத்தம்பியையின்னுயிரொழித்து
மன்னுமாமணிகவர்ந்தனன்மழைமுகில்வண்ணன்
பின்னொருத்தரீங்கிதுசெயப்பெறுகிலாபெருநீர்த்
தொன்னிலம்புரபபவற்கிதுபிழையெனச்சொற்ருன். (௩௬௯)

இதுவுணர்ந்தனனுயிர்புரந்தெழுமுகில்வண்ணன்
கதுமெனப்புகுந்தவன்புகுநெடுவனைக்கானிற்
குதிரையின்குளம்படிச்சுவடோர்ந்தனன்குறுகி
யதிர்மணிக்கழலரசுபட்டுழிப்புகுந்தறிந்தான். (௩எ0)

வயங்குபொன்முடிபூழ்தியிற்புரண்டதும்வயிரத்
தயங்குதிண்புயம்வகிர்படப்பிளந்ததுந்தரைநீத்
தியங்குசோரிசோர்ந்திழிவதுநோக்கினனிவனைப்
பயம்படாதிதுசெய்ததாரொனமனம்பனித்தான். (௩எக)

மாயனத்தலைநின்றகன்றேகிவாளெயிற்றுச்
சீயவள்ளுகிர்ச்செம்புனற்சுவட்டடிதெரிய
வாயவெஞ்சினமடங்கல்கொன்றதுவெனவறிந்து
தீயவள்ளுகிர்க்கோளரியிறந்துழிச்சென்ருன். (௩எஉ)

இறந்துநீங்கியகோளரிநோக்கினனிதனை
மறந்துறந்துயிர்செகுத்ததாரொனமனத்தளந்தான்
புறந்திரிந்தனனுளியவெம்போத்தடிபோகச்
சிறந்தசிந்தையனுங்கதன்சுவட்டிடைச்சென்ருன். (௩எ௩)

சென்றபோத்தடிநெடுவனப்பிலத்துழைச்செல்ல
வொன்றியூடுபுக்குறற்கரும்பாதலத்துற்ரு
னன்றுதொட்டிலுட்டேக்கியசிமந்தகமதனைக்
கன்றுசிந்தையிற்பறித்தனன்கடனிறக்கடவுள். (௩எச)

தூங்குதொட்டினின்ருட்டியசுரிகுழற்சேடி
யேங்குநெஞ்சினளரற்றினண்முன்றில்வீழ்ந்திரங்கி

யோங்குவெங்குரலுணர்ந்தனன்சாம்பவனுற்றான்
வீங்குவெஞ்சினத்திருவர்க்கும்விளைந்தனவெம்போர். (௩௭௫)

ஒய்யெனப்புகுமிருவருமொன்பதிற்றிரட்டி
வைகல்வெஞ்சமர்விளைத்தனர்சாம்பவன்மருளாச்
செய்யசிந்தனைதெரிந்தனனுலகெலாந்திதிக்கு
மையனுங்கொலென்றயிர்த்தனனடைந்தனனச்சம். (௩௭௬)

உந்தியம்புயதிருந்துலகுயிரொலாமளிக்குந்
தந்தைதந்தையெனறுணர்ந்திலன்றுமறைததடங்கட்
பைந்துழாய்முடிப்பாப்பணைப்பள்ளியெம்பரனே
விந்தைகேள்வநின்சரணமேசரணெனவீழ்ந்தான். (௩௭௭)

தானுவாந்திடுதவத்தினுற்றனிப்பயந்தெடுத்த
தேனெனுஞ்சிறுகுதலையுஞ்சிமந்தகமணியு
ஞானநாயகபெறுதியென்றளித்தனனயப்பாற்
பூநனைந்தெழுதுளவினேன்பூதலம்புகுந்தான். (௩௭௮)

புகுந்துசத்திரசித்தனைவருகெனப்புகன்று
திகழ்ந்தமாமணிகொடுத்தனன்சிமந்தகமணிபோ
யகன்றவாறெலாமருளினனவனுளத்தடைத்து
மகிழ்ந்துமாமணியொடும்பெறவளித்தனன்மகளை. (௩௭௯)

திருமகட்குநாயகனுமற்றுவணித்திங்கள்
வருசதுர்த்தியினோக்கலுமிங்கனமயங்கி
யிருநிலத்தினேரிகழ்ச்சிபெறறொழிந்தனனென்றுற்
டெருகுமாதவத்துறையுளீர்காண்பரோபெரியோர். (௩௮0)

இதனைமாககழித்திங்களிற்சட்டியினிசைதத
விதிவழுக்குறுதன்பொடுநோற்பதும்விதியா
னுதிகொள்வேற்படைவசசிரமாலிநோற்றடுத்த
முதிராபெரும்பிணிச்சாகரங்கடந்தனன்முன்னாள். (௩௮௧

அன்றிமைந்தரிற்சிறந்தனனவனிகாத்தளித்து
வெனறிவெண்குடைவிளங்கினன்மென்மருங்கனுக்குங்
குன்றவெம்முலைத்திலோத்தமைமனையெனக்கொண்டா
னென்றுமீறிலாக்கயிலைபெற்றிருந்தனனின்னும். (௩௮௨)

உருக்குசெம்பொனைத்தொழுகுபுன்புரிசடையுடையீ
ரருட்பெருங்கடலங்கரன்விரதமுற்றறைந்தேந்
திருக்குவெள்ளெயிற்றசுரர்வெங்குலமுதறீர
முருக்குவேற்படையறுமுகற்குள்ளனமொழிவாம். (௩௮௩)

சுப்பிரமணிய விரதம் :- 3

ஐப்பசித்தலைச்சுக்கிரவாரத்தினலரி
யும்பவித்திடுகாலையிலொண்புனல்குடைந்து
கொற்கொள்வேற்படைக்குமரனையுளம்படக்குணியா
முற்செயப்படுதினக்குறைமுறையினுன்முடித்து. (௩அச)

ஒளிப்பசும்பொனூற்சூரடுமறுமுகனுருவந்
தெளித்தவன்பொடுமியற்றியபின்னரிற்றினைநீர்
நளிப்பசும்பொனிற்றசும்புநெற்பரப்பியநாப்பண்
குளிப்பவைத்துமாந்தழைமணிக்கும்பமேற்கொடுத்து. (௩அரு)

இயற்றுபொன்னுருக்கௌவியசுத்தியினிலக்கி
யுயர்த்துகும்பமீதமைத்துநூல்விதிமுறையுரைத்த
முயற்சியாரணமந்திரப்பவித்திரமுற்றச
செயப்படுந்திருவருச்சனைமுதலியதிருத்தி. (௩அசு)

மங்கைபாகனதாலயம்புகுந்துறவணங்கிப்
பொங்குதீபமேமுதலியவமுதொடும்பொலிவித்
தெங்களீசனைத்தெக்கணம்வலன்றிரிந்தேத்திக்
கங்குலிற்பெறுபலாதியுண்டத்தினங்கழித்து. (௩அஎ)

அற்றைநாட்படுக்கங்குனீத்தலரிவந்தெழுந்த
பிற்றைநாட்புனல்குடைந்துதங்குறைநிறைபின்னர்க்
கற்றைவாசடையெம்பிராற்கைதொழுதமைத்த
மற்றைவிம்பமுங்கும்பமுமறையவர்க்குதவி. (௩அஅ)

அடிசிலாரமுதாங்கவர்க்கினிதெனவருளிப்
படிசிரம்படப்படிந்தவாப்போக்கியபின்னாக்
குடிலவேணிநம்பரனடியவரொடுங்கூடிக்
கடிகையொன்பதிற்பாரணந்துய்த்துளங்களிப்பார். (௩அகூ)

ஈதுமுற்படுவிரதமற்றிதனையிப்பரிசே
யோதுசித்திரைமுதலியவருடமொன்றுற்ற
தீதில்கார்த்திகையாறிரண்டெய்துமத்தினத்திற்
காதுசூர்ப்பகையருள்பெறநோற்பதுகடனே. (௩கூ0)

முருகனன்புறுவிருச்சிகத்திங்களேமுதலாய்
வருடமொன்றினிற்சட்டிநாலாறவைவருநா
ளருளினிட்டடித்திருவுருக்கும்பமீதமைத்தே
யுருகுகாதலினேற்பவரும்பரிற்பொலிவார். (௩கூக)

நீலவண்டறைபசுந்துழாய்நெடும்புயல்வண்ணன்
கோலவுந்தியந்தாமரைநான்முகக்குரிசில்
காலமோர்ந்திவைவரன்முறைநோற்றனர்கடுங்கா
ராலமன்னவாளசுரரைக்கடந்தனரந்நாள். (ரு.கஉ)

முழுநிலாக்குடைமுசுகுந்தன்மனுமுறைபுரந்தோ
னெழுவுதிண்புயனேற்றனன்கணங்களுக்கிறையா
யொழுகுவெள்ளருவித்திருக்கயிலைபெற்றுயர்ந்தான்
றொழுதவத்தினீரவனையெத்தேவருந்தொழுவார். (ரு.கங)

நாரதப்பெரும்பெயரினோன்முதலநம்போல்வார்
பேரருட்பெறநோற்றனர்வரன்முறைபிழையார்
மேருமால்வரைமுதலிறந்திறப்பினும்விளியாச்
சார்வரும்பெரும்பதவிபெற்றின்னமுஞ்சரிப்பார். (ரு.கச)

இத்தனிப்பெருவிரதநோற்றிழைப்பவரிறவா
முத்திபெற்றவரொத்தனைபேரெனமொழிவா
மத்தனுறிருங்கயிலைவீற்றிருந்தனரவரைச்
சித்தமோரினுநம்முழைத்தீமையுஞ்சிதறும். (ரு.கரு)

ஆதலான்மொழிவிரதமூன்றவற்றினுளடிகா
ளோதிலொன்றெனுநோற்பதுவேண்டுமாலுமையாள்
காதன்மைந்தனைக்கருத்துறநினைப்பினுங்கதிமற்
றேதுவேண்டுதுமதுநமக்கெய்துவதெளிதே. (ரு.கசு)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

கடுங்காலக்கொடுவடவைக்கொழுந்தனையபுரிசடையீரகடனீர்ஞால
மடுங்காலத்திரிசூலப்படைமுதலோன்விரதமுதலறிந்தவெல்லா [ளஞ்
மொடுங்காதவழியுரைத்தேம்வயிரவற்கொன்றுளவிரதமுரைக்கேமுள்
சுடுங்காமத்தழலவிக்குநீரமையீர்கேண்மினெனச்சொல்லலுற்றான். ()

பூருவநின்றெழும்பரிதியுத்தரஞ்சென்றியங்கியதைப்புதியதிங்கட்
சாருமுதற்செவ்வாயிற்புலரியெழுந்தருநதியிற்றாழ்ந்தபின்ன
ரோர்வருதங்கருமமுடித்திரசதத்தாற்பொன்னினாலுருவச்சூலப்
போர்விளைத்துநிலம்புரக்கும்வயிரவனைத்திருவுருவம்பொலியச்செய்து

முன்புரைத்த பரிசுமணிப் பூரணகும்பந்திருத்தி முதல்வன் றன்னை, யன்புடனுங் கதினமைத்துப் பூசனைக்கென் றுரியவெலாமமைத்த பின்ன, ரொன்பெருக்கு முடிபுனைந்த சிவபெருமான் றிருக்கோயி லெய்திமைதீர், பொன்புரையு நெடுந்தீப முதலளித்து வலன்றிரிந்து பணிந்துபோற்றி. (ரு.கஅ)

பொருதிரைய் நெடும்பரவை புடைகிடக்கு நெடுஞாலம் பொதிந்த கங்கு, லொருபொழுதுண் டிருக்கவல்லோருபவாசத் தொழிந்த கங்கு லொழிந்தபின்னர், வருபுலரியெழுந்துநறும் புனலாடிச் செய்வசெய்து மதிப்பூங்கண்ணி, தருசடில மௌலிவிம்பங் கும்பமொடு மறையோர்க்குத் தானநல்கி. (சoo)

ஆங்கவர்க்கு வழிபாடு பலவியற்றிப் போசனந்தந் தளித்தபின்னர்த், தேங்குநதி மதிபுனைந்த செழுஞ்சடிலச் சிவபெருமா னடியார்க் கூவிப், பாங்கிருத்தி யறுசுவையிற் பாரணங்கொண் டினிதுவப்பர் பசியசட்டை, யோங்குவயி ரவக்கடவுட் குவந்திடுமா விரதமீதி னொன்றுண்டால். (சoக)

சித்திரைத்திங்களி னெடுத்தபரணிநா ளிவ்வாறு சிதையாவண்ணம், பத்திபடுகும்பவிம்பம் படநோற்ப தின்னுமொன்றைப் பசியின் வந்து, முத்திதரும் பரணிநாண் முறைநோற்ப திவ்வண்ண முயன்று நோற்பார், தத்தருவித் திருக்கயிலைப் பேரரசு தமதெனவீற் றிருப்பர் தப்பார். (சoஉ)

ஓராழித் தனித்தடந்தே ருதயவனோற் றொருமூவர் படையினாலும், போராதகஞ்சுகம்பெற் றினிதுவந்தா னுதலினெம் பெருமானோன்பு, சீராயமூன் றினின்மற் றொன்றேனு நோற்கினவர் தீமையெல்லா, மாராயினெரிபடுபஞ் சனமாயுங் கயிலையிற்சென் றடைவர்மாதோ. ()

ஈதுவயிரவக்கடவுட்கியன்றுநிகழந்திடுவிரதமிதுமுன்போகக்
காதுநெடுங்கொடுவடவைகொப்புளிக்குநெடுஞ்சரிகைக்கரத்தனுகித்
தீதிழைக்கும்பேரகந்தைத்தக்கனியற்றியவேள்விசிதையநூறிப்
போதருமெம்பரமனெந்தைவீரபத்ரற்குளவிரதம்புகலக்கேண்மின. ()

தெரிந்தெழுசித்திரைத்திங்கண் முற்படுசெவ் வாய்க்கிழமை விடியல்சென்று, பெருந்திரைநீர் குடைந்தெழுந்து முன்னியமக் குறைமுடித்தபின்னர் வெண்ணூல்,வரிந்தமணிக்குடமமைத்துப் பொன்னினாலெந்தைபிரான் வடிவத்தோடு, பொருந்துபது மையையந்தக் குடத்திருத்தி யருச்சனையும் புரிந்துபோற்றி. (சoரு)

கொள்ளைநீர்சடைக்கரந்தபரமனமர்ந்துடையதிருக்கோயில்புக்கு
வெள்ளநீரபிடேகமுதலியபூசனைக்குரியவிரும்பியீந்து
வள்ளைவார்குழையொருபாகத்தனலையஞ்சூழ்ந்துவணங்கிமீண்டு
நள்ளிராவுணவொழிவரல்லோற்பலாதிநுகர்ந்திருப்பர்நல்லோர். ()

காலையெழுந் தெம்மானைக் கருத்தமைத்துப் புனலாடிக் கருமமுற்றி, மாலைமணிக்குடத்தமைத்த பதுமைபோசனத்தோடு மறையோர்க்கீந்து, வேலைதரப் பரந்தெழுந்த காளகண்ட விடையோன்ற னடியார்க் கூவிப், பாலிருத்தி யறுசுவையிற் பாரணங்கொண் டினிதுவந்து பரிவர் மேலோர். (௪0௭)

ஆயிரநெட்டிதழ்விரிக்கு மம்புயவாசனத்திருக்கு மையன்செய்ய, பாயிரநூற்படிநோற்றுப் பசும்பலகைத் திறல்வீரபத்திரற்குக், காய்சினத்திறெடும்புகுந்து தக்கனெடுங் கொடியவெம்போர கடந்தனூன்று, மேயதடந் தேர்நடத்துந் தனிப்பாகு செலுத்திவென்றி விளங்காநின்றுன். (௪0அ)

இமையாத நாட்டங்க ளாயிரம்பெற் றுடையபிரா னிதனைநோற்று, னமையாதபெருவளத்தின் பெருஞ்சினைய கற்பகம்பெற் றடைந்தானன்றிச், சுமையாடராகிலத்தினீங்கிநனை நோற்றவா வெந்துயரந்தீர்ந்தா, ருமையாளை யொருமருங்கி னுடையபிரான் சேவடிபெற்றுய்ந்தாரன்றே. (௪0௯)

அருமறைநூ லந்தணர்நோற் றுதியுணாந் தறிஞானத் தடைந்தாரன்றிப், பொருகழன்மன் னவர்நோற்றுப் டகைசெகுத்துப் பொதுக்கடிந்து புரந்தார்மற்றை, யிருவருணத் தவர்நோற்றுப் பெருவளனு மிருங்கதியு மெய்தா நின்றா, கருணையுரு வெடுத்தனைய மாதவத்தீ ரதனிலைமை கழறற்பாற்றே. (௪க0)

கொடிப்புரிசை மூன்றுநகைத் தெரித்தபிரான விரதமுதற்குளிர்பூந்தோடு, விரித்தகம லாலயத்தோன் றெழுங்கடவுள் வீரபத்திர விரதமீறு, மெடுத்துமறை மொழியிருபத் தொன்றுநுமக் கிசைத்தனமற் றிவற்றைநோற்பான், றெடுக்குறினுங் கவைக்குள்ள தொன்மரபு விதித்தபடி சொல்லக்கேண்மின். (௪கக)

அரசரா தியமூன்று வருணத்தோர சங்கரசா தியரா லந்த, விரதநோற் றுறத்தொடங்கின் மறையோரக்கொண் டியற்றுவித்தல் விதியாலன்றிப், பரவையா கமத்துறையுட் படிந்துசிவ னருச்சனையிற் பரியுந்தெய்வக், குரவரா லவைநோற்க வேண்டுவரா கமங்களுமப் பரிசுகூறும். (௪க௨)

ஏழைபாகத்தரனைக்குறித்தெடுத்தவிரதமூவேழிவற்றுள்
வாழியோர்விரதமிழைத்துளரன்றியிழைப்பவர்க்குவழிபாடெய்தி
யாழிநீருலகத்திக்கதைகேட்போர்கேட்டவர்க்கண்டருளிற்றூழ்வோ
ருழியீற்றினுமுலவார்கடைமுறையிற்கயிலைபுகுந்துறைவரன்றே. ()

நோற்பவர்நோற் பவர்க்குரிய பகுந்தளிப்போர் நோற்பவரா னு வலுங்கேள்வி, யேற்பவரிக் கதைபடிப்போ ரிருசெவிதாழ்த், துளந்தா ழ்ப்போ ரிவைநோற்பித்த, போற்றரிய குரவரடிவீழ்ந்திறைஞ்சித்தமக் கியன்றபுரிந்தோர் செங்கண், மாற்பொருகோட் டிமிலேறுகடவுள்பி ரான்றிருக்கயிலை மன்னிவாழ்வார். (சுகசு)

சிவவிரதமான்மியச்சருக்க முற்றிற்று.

ஆகச்சருக்கம் கூ-இ திருவிருத்தம், தூருாசு.



## கO-வது சிவபுண்ணியமான்மியச்சருக்கம்.



கலிநிலைத்துறை.

முக்குறும்பெறிசிந்தனைமூசிவண்டரற்று
மைக்கருங்குழல்பாகன்மாமலரடிபதித்தீ
ரிக்கணஞ்சிவவிரதமுற்றிசைத்தனநுமக்குச்
செக்கரஞ்சடையெம்பிரான்புண்ணியந்தெரிக்கேம். (க)

எந்தையீசனுக்கிமயமீன்றளித்தபைங்கிளிக்குத்
தந்திமாமுகற்காறிருதடம்புயத்தவற்குச்
சிந்தைகூர்தருசிவகணத்தவாக்கெனச்சிறந்த
புந்திகூர்தருசிகரமுற்றுலயம்புரிவார். (உ)

நீடுகோபுரமண்டபமுதலியநிரப்பி
யாடுவெண்டிரைத்திருக்குளஞ்சாமரையலங்க
லூடுகூவனெய்த்தீபம்வெண்சாந்திவையுதவி
மாடுநின்றெழுநறும்புகைமுதலியவகுப்பார். (ந)

சாற்றுவெண்டுகில்வெண்குடைவாகனந்தாளம்
பூத்தசெம்மணிப்பொலன்கலனமுதிவைபொருந்த
வார்த்தருந்தொழிற்றுதியரன்புடனளிப்பார்
சேற்றசெந்நெலங்கழனிமற்றவர்க்கெனசசேர்ப்பார். (ச)

மாலைவெண்பிறைக்கண்ணியோன்றிருமுடிவதியச்
சீலவெண்மலர்நந்தனவனம்பலசெய்வார்
பாலலோசனற்கெனத்திருவிழாவுறப்பணிப்பா
ராலயம்புகுந்தரனடிவழுத்தியன்பளிப்பார். (ரு)

தொல்லையாலயமழிந்தனபுதுக்கிமென்றுவர்வாய்
வல்லிபாகனுக்கருச்சனைமுதலியவகுப்பார்

புல்லையேற்றுடையெம்பிராற்கடித்தொழில்புரிவாராக்
கல்லுறுத்துளம்விளக்கியகுரவராயவாக்கு. (சு)

மனையின்மாட்சிகொணடினிதிருந்தில்லறம்வளர்ப்பான்
வினையின்வேண்டுறவேண்டியயாவையும்விருப்பா
னினையுமன்பிறுற்பலபொருட்படுகுறைநிரப்பி
யனையவர்க்கெனவில்லெடுத்தகஞ்சிறந்தளிப்பார். (எ)

தன்னகப்படுகளங்கறீத்தளிட்டவர்தமைக்கண்
டின்னலத்தொடுமெதிரொழுந்திறைஞ்சிநின்றேத்திப்
பின்னலஞ்சடையெம்பிரானடியவர்பேரன்
புன்னியுன்னிநெஞ்சிளகிநின்றன்புடனுவப்பார். (அ)

ஈங்குறைத்திடுமிவறறினுட்டமக்கெனவியன்ற
தோங்குசிந்தையினொன்றிழைத்தார்களுமொலிநீர்
தேங்குசெஞ்சடையானுறைதிருநெடுங்கயிலை
தாங்குமுச்சிவீற்றிருந்தொழியாவளந்தழைப்பார. (கூ)

கோடிகற்பமக்கயிலைவீற்றிருந்துபைங்கொடியோர்
மாடிருத்தியமுக்கணன்மலரடிவதிவா
ரோடுநீடியபசும்பொனுமொக்கவேநோக்கி
நாடுவீரிவர்பெறும்பயன்யாவரோநவில்வார். (க0)

கலிவிருத்தம்.

என்றுசூதனுரைத்தனயாவையு
மொன்றுசோராவுறுதுற்றுறவோ்ரந்தரு
ணின்றநேயமுனிவராகீதியோ
யின்றுகேட்பதொன்றுண்டென்றிசைத்தனா. (கக)

தேவதேவனைத்தேவன்றிருவரு
ளாவதீதென்றறிவிக்குமையனே
மேவருந்திருவேடத்தினுண்பொரு
ளோவறத்தெளிந்தோர்களையோர்கிலேம். (கஉ)

எடுத்தமூவகையாகுமிவ்வுற்றைநெஞ்
சடுத்தறிந்திலமாதலினையநீ
விடுத்தகொன்றைமிலைச்சியவேணிநெஞ்
சொடுக்குதொண்டரியற்கையுரைத்தியால். (கங)

ஈதறிந்திலதிப்பிறப்பெய்திய
தீதுதீர்சிவபுண்ணியஞ்செய்வதம்

கோதுசிந்தையொருப்படுமோவெனச்
சூதமாமுனிசொல்லுதன்மேயினுன். (கச)

மாகரந்தணர்மற்றுளமானிடா
யோகஞானமுனிவருலப்பறு
நாகர்சித்தரியக்காநடுநிகழ்ந்
தேகுசங்கரசாதியிராக்கதா. (கரு)

சேணெறிக்கந்தருவாதைத்தியா
மாணெறிக்குடைமன்னரிவாகளி
னீணெடுர்திரைநேமியடுங்கடு
வூணுகர்ந்தவற்காட்படலுண்டரோ. (கசு)

வரமுனித்தலைவீரவவருணமாச்
சிரமமென்பதவாக்கிலைச்சேவுடை
யரனருச்சனையாவர்க்குமாமவா
பரமனென்னட்பணியப்படுவரால். (கஎ)

ஈசனெந்தைபிரானடிக்கீந்துணா
வாசநாண்மலரிட்டுவணங்குவார்
மாசிலாச்சிரமத்தின்வருணத்திற்
பேசிலாங்கவாபோற்றப்பெரியரே. (கஅ)

அன்னவாக்கதியாச்சிரமப்பெயா
மன்னுமீதென்மனச்செருக்கன்றிது
பன்னுநான்மறைமுற்றும்படிப்படி
சொன்னதாமிதுசத்தியஞ்சொற்றனம். (கசு)

செய்யமேனிச்சிவனடியார்க்கய
லெய்தக்காணுமிலக்கணம்பத்துள
மெய்யிலெய்துமிலக்கணமெய்ம்மைசா
லையிரண்டகத்துள்ளனமூன்றரோ. (உO)

அலக்கணீக்குமரனடியாாக்கென
விலக்கணங்களிருபத்துமூன்றுள
பலப்படுத்துமுதற்படுபத்தையும்
புலப்படுத்திநுமக்குப்புகலுவாம். (உக)

வாசப்பூதியுருத்திரமாமணி
பூசிப்பூணல்குரவனைப்பூசித்த
லாசைப்பாட்டிலானைப்புகழுத
லீசற்குள்ளனநாமமியம்புதல். (உஉ)

எந்தையீசனருச்சனையோம்புத
ருந்திரச்சிவதன்மம்புரிகுதன்
முந்தையோன்கதைகேட்டன்முறைமையாற்
புந்திகூரந்தரனலயம்போற்றுதல். (உ௩)

ஒத்தபத்தரிடத்தலதோரிடந்
துய்த்தனீத்தலத்தொண்டரிற்றெண்டராய்ச்
சித்தமன்புறவீதன்முன்செப்பிய
பத்துமிங்கிவைகாணப்படுதிரால். (உ௪)

தொண்டர்மெய்யிற்றுலங்குமிலக்கண
முண்டொர்பத்தென்றுரைத்ததுரைக்குதுங்
குண்டையூர்திசிவத்தியல்கூறுங்காற்
கண்டமுற்றெருருவிம்மிதங்காட்டுதல். (உ௫)

ஏத்துமெந்தையியற்கையுணாதொறு
நாத்துடித்தெழும்பாதனைகட்புறம்
பூத்தமுத்தந்துடித்தல்விபூதிகொண்
டார்த்தணிந்ததம்மங்கங்குலுங்குதல். (உ௬)

மயிர்ப்புறம்புளகித்தல்வரன்முறை
வெயர்த்தறன்வசமன்றிவிளம்புநாப்
பெயர்த்திடாதலானந்தப்பெருங்கணீ
ரயற்படுத்துதல்வாய்விட்டழுதலே. (உ௭)

பரவசத்தினனுகிப்படர்சடை
யரனுளம்படத்தன்னையயர்க்குதல்
விரவுபத்தும்விடுத்துரைத்தோமிவை
வரமுனித்தலைவீர்மனக்கொள்விரால். (உ௮)

உளத்திலக்கணமூன்றென்றுரைத்தன
மளக்கிலஞ்செழுத்துன்னலகப்பட
வளர்க்குமானதபூசனைமைக்கடுக்
களத்தனைத்தனையொன்றெனக்காண்குதல். (உ௯)

எம்மையாளுறுந்தொண்டர்க்கிலக்கண
மும்மையேழிரண்டுமொழிந்தன
மெய்ம்மையானந்தமெய்ப்பொருளோர்ந்தறி
செம்மையீருணர்ந்தீரினிச்செப்புவாம். (௩0)

பின்னுரைத்துளமூன்றும்பெரிதுளத்
துன்னியோம்பியவுத்தமரைப்பிறைப்

பொன்னுயிர்த்தபுரிசடைப்புங்கவ
னென்னவோர்ந்துளத்தெண்ணுவரொம்மனோர். (ருக)

எண்ணியோதுமிலக்கணம்யாவையு
நண்ணினாலராயினுநாயகன்
கண்ணெனத்தருமாமணிகைபுனை
வெண்ணிறப்பொடிதாங்கியவேடத்தோர். (ருஉ)

ஆசறுத்துவிளக்குமருட்சிவ
தேசிகற்பணிவோர்சிவதொண்டரைப்
பூசனைக்குரியாரெனப்போற்றுவோ
ரீசனேப்பரென்றேத்துவரொம்மனோர். (ருரு)

எடுத்தயாக்கையிடும்பையிகந்தவர்
தொடுத்தநல்லறத்தின்பமுந்துய்த்துநீர்
படுத்தவையப்பவித்திரமெய்திவாழ்ந்
தொடுக்குமைம்புலச்செய்கையொடுங்குநாள். (ருச)

கற்றைநல்லொளிதுற்றுங்கதிர்மணி
யுற்றமானநடுவகத்தும்பரிற்
பெற்றதேவவுருக்கொடுபேரொளி
யுற்றவெண்குடைமீச்சென்றொளிரவே. (ருரு)

வண்ணவால்வளைவானவர்மங்கையர்
வெண்ணிறக்கொடுஞ்சாமரைவீசிடக்
கண்ணெகிழ்ந்தலாகற்பகநாண்மலர்
விண்ணிழிந்துமிடைந்துநெருங்கவே. (ருசா)

விண்வருஞ்சிறுமெல்லியலாரிசை
பண்வரும்பலபாடலினாடிய
தண்வருஞ்சிறுதாமரைத்தாளிணைக்
கண்வருஞ்சிறுதண்டைகலிப்புற. (ருஎ)

தேவதுந்துமிதிக்களந்தேங்குறக்
காவலெண்மருங்கைதொழுதேத்துற
மேவருந்தனிவீணைதெறிப்பொலி
பாவரும்பல்லிசையொடும்பம்பவே. (ருஅ)

ஆழியந்தனித்தேருடையாதவன்
வாழிமாநிலத்தோர்வெள்ளைமாமதச்
சூழிவாரணத்தோனுலகத்துளோர்
பாழிநாண்மலரொந்தைபதத்துளோர். (ருகூ)

பணங்களாயிரந்தாங்கியபாப்பணை
மணங்கமழ்ந்ததுழாய்முடிவானவன்
கணங்கொணுட்டுறைதேவர்களந்தண
ரிணங்கினின்றெதிரோத்தியிரங்கவே. (சO)

வேதநாதம்வெளிப்படமென்மெலப்
போதல்செய்துகயிலைப்பொருப்புறை
நாதனைக்கட்புலப்படநண்ணுவார்
தீதுதீர்ந்தினிதின்பஞ்சிறப்பரால். (சக)

இப்பதஞ்சிவதொண்டரையேத்துறு
மப்பெயர்க்கென்றரனளித்தானெனிற்
செப்பருஞ்சிவதேசிகரல்லரோ
முப்பொருட்குமுதற்பொருளாகுவார். (சஉ)

ஆதலானம்மருந்தவத்தையர்கா
டீதுதீாசிவபுண்ணிச்செய்கையை
யோதலாவதன்றோர்ந்துணர்த்துது
மேதமோர்ந்தெறிசிந்தையிருத்துவீர். (சஙு)

என்னைநீர்சிவபுண்ணியத்தெய்திய
தொன்னிலைப்பொருள்சொல்லெனச்சொற்றபொற்
கன்னிதென்னிமயாசலக்காரிகை
மின்னுவாண்மழுவோனைவினயினுள். (சச)

கள்ளறுமலர்க்கற்றைசுமந்தெழு
மள்ளிருட்படுகூந்தலிமாசலைக்
குள்ளவாறுமுறையினுணாத்தினுன்
வெள்ளவார்சடைச்செனனிவிமலனே. (சரு)

**கலிநிலைத்துறை.**

கேட்டுவந்தருளுமையுளத்ததிசயங்கிளைப்ப
மீட்டுமெய்ப்புளகெழுந்தனளிருக்கைவிட்டிழிந்தா
டாட்டுணைத்தடந்தாமரைபடிந்தெழீஇத்தருணத்
தோட்டுமுண்டகத்தளிர்க்கரங்குவித்திவைசொன்னுள். (சசு)

அளப்பரும்பெருயோனிபுக்கருநரகடைந்து
துளக்கமெய்தியமன்னுயிர்வரன்முறைதொகுத்து
விளக்குபுண்ணியமியற்றுநராகினின்விரைப்பூந்
தளப்பணித்துணைத்தாமரைத்தாள்பெறவேண்டும். (சஎ)

அருளவேண்டுவதென்றனளிமயமீன்றளித்தாள்
பெருகுமாயிரமுகநதிமுடித்தருள்பெருமான்

மருவருங்குழலாயெமபுண்ணியமாக்கள்
கருதியோர்வதற்கரிதெனப்பின்னருங்கழறும். (சஅ)

உரைத்துற்றசிவபுண்ணியமெனச்சிலவுளவால்
வரைக்கொழுந்துயிர்த்துதவியமரகதக்கொம்பே
நிரைத்தவால்வளைநினக்கவைநிகழ்த்துதுமென்ன
விரைத்தவார்சடைப்பனிப்பிறைக்கண்ணியோன்விளம்பும். (சகூ)

சினகராலயந்தூர்ப்பதுதிருமெழுக்கிடுதல்
புனன்முகந்தெமையாட்டுவித்தெமக்கெனப்புரித
றினனுமாலயத்தகவையிலெழுந்தபுற்சீத்த
னளைநறுந்துணர்நாண்மலரொடுத்துடனல்கல். (ருO)

இவையுளப்படுத்திரங்கினராகிநின்றியல்வா
ரவமதிப்பறவறிவுபெற்றவ்வறிவதனாற்
றவறில்பக்குவமடைந்துளத்தூய்மையுந்தழுவிச்
சிவகதிப்படுபுண்ணியஞ்சிலசிலதெரிவார். (ருக)

பாதகர்க்கெனினுஞ்சிவபுண்ணியம்பலித்தாற்
றீதகற்றிடுமாதலாலாங்கதுசெய்தாற்
போதமுற்றிடும்புண்ணியம்புலப்படுமென்று
ஞதிநாயகிக்காங்கவையறைந்தனநவில்வாம். (ருஉ)

இந்தியங்களையவித்திரும்புலன்கடந்திருக்கு
மந்தணீரருமாதவக்கொழுந்தெனுமடிகா
ளெந்தையெம்பெருமான்சிவபுண்ணியத்தியலா
வந்தகாதையொன்றுளததுவகுப்பொடுவகுப்பாம். (ருங)

நீடுபுண்ணியப்பெருந்தவமுயற்சியானெடுநீர்
மாடுசூழ்கிடந்தளவறுவளந்தருவனப்பா
னூடுவிண்ணவரிழிந்துறவேண்டிநின்றொருங்கே
நாடிநோற்பதுகௌசலமென்பதோர்நாடு. (ருச)

அன்னநாட்டகத்தகலியவெண்குடைநிழற்கீழ்
மன்னுமின்னுயிர்தன்னுயிராமெனவளர்ப்பான்
பொன்னிலங்கியகளைகழற்புனைநறுந்தொடையான்
மின்னுயிர்த்தவேற்கௌசிகனென்றொருவேந்தன். (ருரு)

அனையவேந்தனிற்றேன்றினராருயிரனையார்
புனைநறுங்குழற்பூவைமென்குதலையர்நால்வர்
வனசமாளிகைமடந்தையர்நால்வரோவிரதி
யினையநால்வரோவெனப்புவியேத்துறுமெழிலார். (ருசு)

கடிகொணுண்மலர்க்கற்பகநாட்டகந்துறந்து
வடிவிஞல்வரும்வந்திழிந்தார்கொலோமடவார்
படிவமுற்றுறவிலக்கணப்பகுதிசேர்வழாது
முடிவினுன்முகன்றிருத்தியதியாதெனமொழிவாம். (௫௭)

மகளிர்நால்வரின்முந்துறத்தோன்றியமகட்குப்
புகறரும்பெயரயையெனப்பணித்தனன்புதுப்பூ
முகைநறுங்குழன்மூவர்க்குந்தனித்தனிமொழிந்தா
ணிகலருந்தனவரும்புபூத்திளகியதிவர்க்கு. (௫௮)

பொருதுவென்றவேல்கறைத்துளிபொதுளியவென்ன
விருதடங்கணுஞ்செவ்வரியிடைபடச்சிதறிக்
கருகுவாணெடுங்கட்கடைகுழைபடக்கடந்த
பருவநோக்கினன்கௌசலன்பார்த்திபர்பெருமான். (௫௯)

உருவமங்கையர்மணவினைப்பொலிதருமுருவங்
கருணைகூர்தரக்கண்டுகண்களிப்பதுகருதா
விருநிலத்துளவேந்தைவருதிரொன்றெழுதிச
சுருதிமங்கலநாட்கணித்தறிந்தனன்றூயோன். (௬0)

மழைக்குலம்படிவந்தெழுமணிமதிட்புரிசை
யுழைப்படும்புரம்புதுக்குவானுழையருக்குரைத்தான்
றழைப்பசுங்கதிர்தடவுதன்கோயிலஞெருபா
லிழைத்தொடாசசியுட்சயமரமண்டபமெடுத்தார். (௬க)

எடுத்தமண்டபத்தகவயினரிசுமந்தெடுக்கப்
படுத்தவாசனம்பற்பலபடுத்தனர்பசும்பொ
னுடுக்கைகொய்யகமீப்படநாற்றினருவரி
கொடுத்தமுத்தணிதொடுத்தனரிளநிலாக்கொழிப்ப. (௬உ)

பானிலாப்பனிக்கற்றையிற்படுத்தனகவரி
மேனிலாப்படக்குச்சொடுந்தூக்கினர்விரிபூங்
கானநாண்மலர்மாலிகைநிறைத்தனர்கணித்த
மோனைமங்கலத்தியற்றுவயாவையுமுடித்தார். (௬௩)

இரங்குவெண்டிரைபுடைபடுமிருநிலப்பரப்பி
னரங்கடிந்தவேற்பார்த்திபர்யாவருமடைந்தா
கரங்கொண்மும்மதக்களிற்றெடுங்கொய்யுளைக்கலினக்
குரந்தலத்துருப்புரவியங்கடலொடுங்குறுகி. (௬௪)

எதிருமன்னவர்க்கணுக்குவையளப்பினுமெண்ணு
வதிருமார்கலித்தானையானெதிர்புகுந்தடைந்து





முதிருமன்புடனளவளாயினியனமொழிந்து
கதிர்செய்மாமுடியரசனைக்கடிநகர்கொணர்ந்தான். (சுரு)

வயங்குமாமுடிமன்னவர்யாவர்க்குமமைக்கா
ரியங்குமாளிகையிருக்கைவேறினிதினிதமைத்து
முயங்குநல்விருந்தமைப்பனமுறையறிந்துதவித்
தயங்குமண்டபத்தனையரையுடன்கொடுசார்ந்தான். (சுசு)

அழைத்தமைத்திடுவாளரிமடங்கலாசனத்தி
னிழைத்தமாமுடியரசரையினிதுகொண்டிருத்தி
மழைத்தவார்குழன்மகளிர்க்குமணவணிதிருத்திக்
குழைத்தமென்மலர்மாலிகையவர்கரங்கொடுத்து. (சுஎ)

மாதராயிரஞ்சூழ்வரமண்டபத்துய்த்தான்
பேதைநால்வருமன்னவர்யாரையும்பிறழ்ந்த
காதலிற்கருங்கட்கடையெறிந்தனர்காணுச்
சீதமாலிகைநால்வர்தங்கழுத்திடைச்செறித்தார். (சுஅ)

அன்னமன்னவர்நால்வரின்முன்பிறந்தமைந்த
கன்னிமாமயிற்சாயலாளையெனுங்கன்னி
மின்னுயிர்த்தழல்விழித்தவேனிடத்தததுவேந்தர்
மன்னவன்மகேந்திரன்களத்தணிந்தனண்மாலை. (சுகூ)

பொன்னையன்னவட்கிளையவளுவந்துகாம்போச
மன்னர்மன்னவன்சானந்தற்கணிந்தனண்மாலை
பின்னவட்கிளையாளந்தநெடுநிலப்பெருமான்
றுன்னரும்புகழ்மாலிமார்பணிந்தனடொங்கல். (எ0)

உரைத்தமூவர்க்கும்பின்னரினுதிததிடுமொருத்தி
வரைத்தடம்புயக்கொங்கணதேயத்துமன்னன்
விரைத்ததாமரைவிசாலநேத்திரனெனும்விறலோற்
கிரைத்தகாதலினணிந்தனளிலங்குதாரலங்கல். (எக)

இனையநால்வருமாலையிட்டரசர்பாலிருப்ப
வனையகண்டுகண்களித்தனன்மணவினையயர்ந்து
புனைபொலன்கலன்முதலியகொடுத்தருள்புரிந்தான்
மனையின்மாட்சியினிருந்தனரவண்சிலவைகல். (எஉ)

மதிப்பெருங்குடைவேந்தர்க்குவேண்டுவவழங்கிப்
பதிக்கணேகுதிர்நீரெனப்பணித்தனன்பணிப்ப
வதிர்க்குமாழியந்தேரொடுநால்வருமகன்றூர்
விதிர்த்தவாட்படைகொட்புறுதானைசூழ்பிடைய. (எங)

தேரதிர்ப்பினும்புரவியஞ்சிரிப்பினுந்தனிக்கை
கார்முழக்கினும்பல்லியத்துவைப்பினுங்கடனீர்ப்
பார்சுமக்குறுமனரந்தனும்பதைப்புறப்படர்ந்தார்
தார்நெறித்தலையெதிர்ந்தனன்கோசிகத்தவத்தோன். (எச)

சென்றெதிர்ந்திடுபெருந்தவக்கோசிகச்செல்வ
னின்றுவேந்தருக்கொருமொழிநிகழ்த்துவான்விளித்தான்
வென்றிவேந்தர்மற்றமலையிற்கேட்டிலாவெகுண்டான்
குன்றுறுத்தவற்கிருபுருரங்களுங்குனிந்த. (எரு)

கொடிக்கொழும்புகையிருவிழிகொழுந்துவிட்டெழுந்த
பொடித்தரும்பினவெயர்த்துளிபொருகதிர்ப்பருதி
வெடித்தவெங்கதிரொடுக்கினன்மீண்டனன்விரிநீர்ப்
படித்தலம்புதைத்திருண்டதுகொதித்ததுபரவை. (எசு)

வாம்பரித்தடந்தேருறைமன்னருமனையார்
தேம்புசிற்றிடைத்தேவியாநால்வருந்தீரக்
கூம்புடைக்கொடித்தோமுதற்சேனையுங்குழுவும்
சாம்பராயினவருந்தவன்கடுஞ்சினத்தழலால். (எஎ)

என்கொலீதெனவெருவினாநோக்கினரெதிரந்த
பொன்செய்மாமுடியரசனைநோக்குபுபுகல்வான்
மின்செய்வேற்படையரசர்காணும்மெதிர்விளித்தேம்
புன்சிரிப்பினீர்கேட்டெமைநோக்கிலீர்போலும். (எஅ)

ஆதலானுமக்கிருசெவிகேட்கலவாக
தீதுதீர்தருகட்புலந்தெரியலவாக
மாதரின்னலமணந்துறுதொழிகரீமணந்தாற்
பேதைகாணுமர்முடித்தலைவெடித்தறப்பிளக்க. (எகூ)

நாடுமெப்பெருநகரமுமகரமுநீத்துக்
காடுபோகுதிரொன்றுருத்தருந்தவன்கழுறு
நீடுநன்னெறிமாதவமுளவெலாநெடுங்கூத்
தாடுதன்னுடையாச்சிரமம்புகுந்தடைந்தான். (அ௦)

வேந்தர்நால்வருமப்புலமொழிந்தனர்விளைப்பூங்
காந்தண்மெல்விரற்றேவியருநெறிகாட்டப்
போந்துபல்வளைமிடைபடுமடவியுட்புகுந்து
நீந்துறுப்பெருந்துயர்க்கடல்படிந்தனர்நெடுநாள். (அக)

வேறு.

ஆடும்புனற்றுள்ளியருவிப்பெருஞ்சாரல்வெங்கானகத்
துண்டவுப்பில்பசும்புற்கையினிதுண்டுவக்கின்றநா

ணீடும்பொலங்கோமுடித்தெய்வமலையத்துகிறைமாதவ
ஞடுந்தமிழ்க்கும்பமுனியக்கடுங்கானநடுவெய்தினுன். (அஉ)

செல்லுந்தமிழ்க்கும்பமுனிவற்பணிந்தொன்றுசெய்தேமலேம்
புல்லுங்கடுஞ்சாபமுனிகோசிகன்றந்துபோனுனினிச்
சொல்லும்பெருஞ்சாபமுனையன்றியெவரோதுடைப்பாரொரு
வல்லென்றமுலேமாதராசர்த்தொழச்சொல்லிவழிபட்டனர். (அங)

அக்காலேயிகன்மன்னர்தொழுபைங்கழற்காலடற்சோரிவாய்
கக்காடனெடுவேலிஞெருநால்வர்தொழுதுற்றகவல்கண்ணுரு
மைக்காளகண்டத்தரற்கொப்புவரினறதமிழ்மாதவ
னெக்கானுளங்கண் கள்பனிமல்கநனினின்றுநினேகின்றனன். (அச)

என்னேயிவர்க்கிக்கடுஞ்சாபமொழிகின்றதெதுகொண்டெனு
வுன்னுவுணர்ந்தெந்தைசிவபுண்ணியத்தன்றியொழியாதெனச்
சொன்னுனவர்க்கன்னதறிவானெமக்கின்றுசொல்லாயெனப்
பன்னுகசென்னிப்பரற்கானவழிபாடுபகாகின்றனன். (அரு)

பொருதண்புனற்கீசகக்கோனகாசசெய்யபோராழியான்
செருவென்றுவக்கின்றசாதாரனென்னுந்திறற்கோமகன்
வருதிங்களொருகொம்பெடுத்தன்னமுகமங்கைமயில்போலுவா
ளிருகுங்குமக்கொங்கைமூழ்கிக்கிடப்பான்வெளிக்கெய்துருன். (அசு)

அன்னுனிருக்குந்திருக்கோயினெடுவாயிலவணெய்தினுன்
பன்னுளிழைக்குந்தவந்தானுருக்கொண்டபடிபோலுவான்
முன்னுவசிட்டன்புகுந்தானதாசற்குமொழிதந்திலாா
பின்னுலுகன்னாற்புறம்போகவறிவுற்றபின்னெய்தினுன். (அஎ)

வேரித்தடந்தாமநெடுவேலிளங்கோவெருக்கொண்டிவ
னீரப்பசுந்தாமரைத்தாள்பணிந்தானெழுந்துற்றனன்
மூரற்கடுந்தீமுகத்தானழற்முன்முனிந்தானரோ
வாரிப்பெரும்பூதலப்பூதமிருள்பட்டுமருள்பட்டதே. (அஅ)

பேராழிவையம்புரக்குஞ்செருக்கிற்பெரும்பேதையா
யோராதகாமக்களிப்பாலெமைச்சற்றுமுளமெண்ணிலாய்
வாராடிளங்கொங்கையவளோடுமொருநீயும்வனவேடனுய்ச்
சூராடிருங்கானகஞ்சேறியென்றுனறத்தொல்லேயோன். (அகூ)

நின்னுடுகாடாகிமிடைதந்தவனவேய்நிரைக்குன்றெழ
வந்நாடகத்துள்ளவனைவோருமழல்வாய்வயக்கோளரி
செந்நாய்பொறிப்புண்டரீகஞ்சினப்பல்லமுதலானமாக்
கொன்னுருகிர்க்கங்கமுதலாயபுள்ளாகெனக்கூறினுன். (கூ0)

உடுக்கும்பசும்பீதகக்கோசிகம்பீலியுடையானதாற்
ெறாடுக்கின்றமுத்தாரம்வெண்குன்றியாகித்துவன்றுற்றவாற்
படுக்கின்றமுத்தக்கழற்சோகியாகிப்பதம்புக்கதா
லெடுக்குந்தவத்திற்குமேலென்பதுண்டோவிசைத்தோதவே. (கூக)

ஒளிரும்பசும்பொற்றொடர்த்தாலிபுலிவாளெயிற்றொத்ததாற்
றளிருண்டபொன்மேனிகருகிப்பொலஞ்சேலைதழைபட்டதாற்
குளிருந்தளிர்ச்செங்கைநிரைசங்குசங்கானகுழையூடிலாய்
மிளிருங்கயற்கண்ணிபால்வேடுவத்தன்மைவெளிபட்டதே. (கூஉ)

திரைவேலிநெடுமாநிலத்தெவ்வர்பரவந்தசினவேலினன்
வரைவேடனுருவெய்திமனையாளொடுங்கானவனமெய்தினன்
உரையாமுனம்பெற்றகொலைவேடனிலைகண்டுறத்தாறினன்
புரைதீர்தவந்தொற்றுகொள்கொம்பெனுந்தெய்வமுனிபோயினன். ()

வேறு.

கெழுமுமாளிகைக்கீசகப்புரத்துளமாக்கள்
கழுகுமாந்தையுங்கங்கமுங்கம்புளுங்கொடியு
மொழுகுசிச்சிலுஞ்சிரலையுமொண்சிறைபபுறவு
மெழுவுமற்றுளபறவையுமாகிவிண்ணெழுந்தார். (கூ௩)

முடங்குவாளெயிற்றடுசினவேங்கையுமுழைவாண்
மடங்கலாளியும்வல்லுளைப்பன்றியும்பகுவாய்ப்
படங்கொள்பாந்தளும்பல்லுகிர்ப்பதத்தசெந்நாயுங்
கடங்கவிழ்த்தெழுகளிறுமொத்தவ்வனங்கலந்தார். (கூ௫)

எழுதிநோக்கினுமொப்புறுவிஞ்சிசூழ்நகரம்
பழுவமூடியவனமெனப்பல்சிறப்பொழிந்து
தழுவுமன்னவன்கோயிலுட்கழுதினஞ்சரிப்பப்
பொழுதுறுவகையிருள்படப்புன்மரம்பொதிந்த. (கூசு)

நீண்டமாமனைதொடர்படர்கிரிகளாய்நிவந்த
வாண்டமைந்தெழுமுளியரிற்குறுமுயலடைந்த
வேண்டருஞ்சிறப்பெய்தியவெண்ணிலாமுன்றிற்
றாண்டருஞ்சினப்படுபுலிபிணவுகண்டுயில்வ. (கூஎ)

நீடுகோபுரங்கொடுமுடிநெடுவரையாகி
யூடுபாந்தள்புக்குறங்குவவோரிநின்றழைப்பப்
பாடுபோக்கியசாளரமுழையெனப்பகுத்த
மாடமாளிகைபொற்றையாய்க்கொழுங்கொடிவளைத்த. (கூஅ)

மணநறுந்துணர்வனமெலாம்பகன்றையாய்மலர்ந்த
துணரவிழ்ந்தலர்மாதவிகாஞ்சொறிதுணர்த்த

விரைவிழ்ந்தலர்பூங்கமுகீக்தெனவிலிர்த்த
டனைநெடுஞ்சினைமாம்பொழில்காஞ்சிரைபழுத்த. (௯௯)

கலைநிலாப்படுவெண்பளிக்கறைமுகட்டுச்சி
கொலைமதக்களிறழித்தெழுங்கோளரிக்குறுந்தா
ளலைபசும்புனற்குருதிதோய்ந்தவணவணமைத்த
நிலைநெடும்புனற்றாமரைமலர்ந்தனநிகர்த்த. (௧௦௦)

ஒடுக்கிதழ்ப்படுதாமரைகாந்தளொத்துடைந்த
மடற்பொதிந்தெழுமல்லிவெண்காந்தளாய்மலர்ந்த
வெடித்ததண்புனல்கானலொத்தெல்லைநீத்திறந்த
வடித்துபானலுமழைநிறக்குறிஞ்சியொத்தலர்ந்த (௧௦௧)

முழங்குபைங்கழற்கோமகனாடகமுகப்பிற்
றழங்குபல்லியங்களிறெனநாடகச்சதியின்
வழங்குமாடலைமிதிக்குநர்மயிலெனக்குயிலா
லெழுந்தபாடலினாடகந்தனிமைகண்டிருக்கும். (௧௦௨)

இன்னதன்மையொத்திருந்தனவாசியிலிருக்கை
யன்னவேடனொத்தகன்றவனடவியுட்சரியா
வின்னலங்கடற்படிந்தவணியங்குறுமேல்வை
பன்னுமாதவத்திரணவிந்தவ்வனம்படர்ந்தான். (௧௦௩)

அடைந்தமாதவத்தலைவனையரசனுமவளும்
படிந்துதம்முடிமண்ணுறப்பணிந்தனர்பணியா
மிடைந்தபுன்சடையருந்தவவசிட்டனால்விளைந்த
திடைந்தசிந்தையினெடுத்தெடுத்தியம்பினரிரந்து. (௧௦௪)

கேட்டுநின்றருண்முனிவரற்கின்னருள்கிளைப்பத்
தோட்டலங்கலீர்நும்முழைப்பாதகந்தொலைவான்
கோட்டுவெள்விடையவனருட்புண்ணியங்குணியா
வீட்டுசிந்தையினியற்றுதிரெனவெடுத்திசைத்தான். (௧௦௫)

இவரையன்னவன்பின்னருநோக்கிமற்றீங்குச்
சிவனதாலயமுண்டுகொலென்றலுஞ்செறிந்த
கவனவேடனுமனைவியுந்தொழுதுளங்களிப்பார்
தவமுயற்சியீருளதெனச்சாற்றினரவர்க்கு. (௧௦௬)

இத்தலத்தினுக்கயல்பிரமேச்சுரமென்னு
மத்தனாலயமுளதெனவருந்தவத்தலைவன்
பத்தியிற்சிவனாலயம்புகுந்துநீர்புரிவான்
முத்தர்வேண்டுறுமருஞ்செயற்பணிவிடைமுயல்வீர். (௧௦௭)

புரிந்தமாமதிற்புறத்துளபுற்சிதைத்தெடுத்துஞ்
சரிந்துவீழ்சருககற்றியுந்தனித்திருமுன்றிற்
பரிந்தவன்பினிற்றுகடுடைத்தகற்றியும்பழங்க
ணிரிந்துபோதரச்சந்நிதிதிருமெழுக்கிட்டும். (க0அ)

அலங்கனுண்மலருதவியுமரனபிடேகக்
கலங்கொணர்ந்தவற்குதவியுங்கடிமதிட்கிளைத்த
குலங்கொள்வல்லிவோபிடுங்கியுமெம்பிரான்கோயில்
வலன்றிரிந்துநின்றெடுத்தெடுத்தினிதகமகிழ்ந்தும். (க0கூ)

கருத்தினெம்பிரான்றிருவடிகாந்துறக்கருதி
யிருத்திராங்கவணிப்பெருஞ்சாபநீத்தொழியு
மருத்திமாநகர்முன்னையிற்சிறப்புடைத்தாகுந்
திருத்துநின்னுடையரசுசெங்கோன்முறைசெல்லும். (கக0)

என்றுரைத்தனன்றிரணவிந்திருந்தவச்செல்வ
னன்றவர்க்களித்தாச்சிரமத்துநீத்தகன்றுன்
மன்றலங்குழன்மனைவியுந்தானுமாய்வடபாற்
குன்றவில்லிபொற்கோயிலிற்குறுகினன்புகுந்தான். (கக௧)

உரைத்தமாதவனுரைப்படியெம்பிராற்குவப்பி
னிரைத்தவன்பினோடென்பறவுருகினரியற்றிக்
கரைத்தகட்புனலரும்புறக்கனிந்தனாகவலாா
நிரைத்தகங்குல்பன்னென்றுபிற்படுத்தலுநிமலன். (ககஉ)

ஓதுசாபநீத்தின்னுருமுன்னுருவுதவிப்
போதுமாநகர்முன்னினுஞ்சிறப்பெனப்புரிந்து
காதன்மாக்களுமன்பதையுருக்கொடுகளிப்பத்
தீதுதீர்ந்துறத்திருவுளநெகிழ்ந்தருள்செய்தான். (ககஙு)

தடக்கைவேந்தனுந்தேவியுந்தன்னகரடைந்து
திடப்பெருந்தனித்திகிரியாற்கோமுறைசெலுத்தி
மடக்கொழுங்கொடிபாகனைவரன்முறைவழுத்தி
யிடர்ப்பெரும்பிறப்பொழிந்துபோய்க்கயிலைவீற்றிருந்தார். ()

ஏறுகைத்திடுமெம்பிராற்கினியனவியற்றுங்
கூறருஞ்சிவபுண்ணியநீவிருங்குணிப்பி
னூறுநீங்கியிக்கொடும்பெருஞ்சாபநீத்தொழிவீர்
வேறொழித்துறாதென்றனனருந்தவவேந்தன். (ககரு)

ஏழையேஞ்சிவபுண்ணியமியற்றுவான்முயல
வாழிமாதவவரன்முறைவழங்குதல்வேண்டும்

ஊழிநாயகற்கினியெனவுணர்ந்திலேமென்று
மாழையொண்கணூர் தம்மொடும்பணிந்தனர்மன்னர். (ககசு)

இரந்துமுத்தமிழ்த்தலைவனையெடுத்தெடுத்தேத்திப்
புரிந்துபோற்றுறுமந்நிலைமழவிடைப்புனிதன்
கரந்தையஞ்சடைப்பரனமுதேச்சுரன்கருணை
சுரந்தளித்துறப்பெருஞ்சிவதேசிகன்றேன்ற. (ககஎ)

தெய்வ்வேதியன்றேன்றலுஞ்செழுந்தமிழ்ப்புனித
னைவருந்தனிச்சிந்தையோடெதிர்ந்தனனவைதீர்
பொய்யின்மாதவன்றன்னெடுமளவளாய்ப்பொறைகூ
ரையநின்னுடைப்பெருமையாரளவறிந்திசைப்பார். (ககஅ)

மரபினேங்கியகொடுமுடிப்புட்பமால்வரையிற்
குரவர்கோத்திரத்துதித்தனைமறைக்குலக்கொழுந்தே
பரவிநின்னுழைவேண்டுவதுண்டதுபணிப்பாய்
புரவுபூண்டவரிவர்க்குவந்துறுதுயர்புகல்வான். (ககக)

தெளித்தமாதவக்கோசிகனடுசினத்தீயாற்
களித்தயானையுஞ்சேனையுஞ்சாம்பராய்க்கழிய
வெளிப்படும்புலனிழந்திருசெவிப்புலன்வீயக்
குளிர்த்தகல்லருவிப்புனங்குறுகினரிவர்கள். (கஉ0)

எந்தைநீயினியின்னருளிவர்க்கெனவீந்து
முந்தையோன்சிவபுண்ணியமுயற்சியின்முயலத்
தந்துமாபெருஞ்சாபநீத்தருளெனப்புகலாச்
செந்தமிழ்க்கடற்குறுமுனிகயிலைபோய்ச்சிறந்தான். (கஉக)

அரசர்நால்வருந்தேவியர்நால்வருமருநூற்
குரவனைப்பணிந்தேத்தினராங்கவன்கொடுபோய்ப்
புரவலர்க்கமுதேச்சுரங்காட்டலும்புகுந்தார்
பரமனைத்திருச்சந்நிதிமண்ணுறப்பணிந்தார். (கஉஉ)

பரசிநின்றிரந்தழுதழுதிரங்குதல்பார்த்து
குரவனுங்கவர்க்கரசர்கள்கொடிநெடும்புரிசைப்
புரமெரித்தவனடியவர்க்கெளியநீர்புன்கண்
டரவருந்துறுதெழுதிறென்றேர்கதைசாற்றும். (கஉ௩)

கருணைமெய்யுருவெடுத்தனகாசிபத்தவத்தோ
னருகுமுற்கலனெனும்பெயரந்தணனருநூற்
சுருதிகேட்டிருந்தோதினனேதலுந்துளிபட்
டொருவுநாப்புனறெறித்தலுங்காசிபனுருத்தான். (கஉச)

பத்தியும்பயமுந்தெரிந்துணர்ந்திலேபசுநூற்
பித்தனையினெனின்னுடைநாவகம்பிதிர்ந்த
தொத்துபுன்றுளியெம்முழைத்தெறித்தலாற்றுறவோ
யித்துணைக்கரும்பகடெனப்போதியென்றிசைத்தான். (கஉ௫)

எடுத்தமெய்யிழந்திருமருப்பொருதனிப்பகடாய்
விடுத்தபைம்புலினூர்ப்புறமேய்ந்தனன்றிரிவான்
றொடுத்ததொல்லைநாட்கழித்தனனொருதினந்தொடுநீர்க்
கடுத்தனிக்கறைக்கண்டனோராலயங்காணு. (கஉ௬)

ஆதியெந்தைசத்தீச்சுரத்தகவயினடைந்து
சீதவார்பசும்புற்படமேய்ந்துசூழ்திரிந்து
வீதியங்ஙனமும்முறைசூழ்ந்துமெல்லியற்கோர்
பாதியீந்தவன்சந்நிதிகிடந்ததப்பகடு. (கஉ௭)

ஆலயம்பசும்புற்றிரளழித்ததனுனு
மாலமும்முறைவந்ததுவலன்றிரிந்ததுவே
போலுமென்பதனுனுமப்புராரிசந்நிதிக்கே
யேலவீழ்ந்ததுவணங்கலொத்ததுவெனவாகும். (கஉ௮)

உமைக்குநாயகன்றிருவுளமிரங்கியதொருங்கே
யமைத்தசாபநீத்தவ்வுருவடைந்தனனந்நா
ளிமைப்பின்முக்கணனெம்பிரான்சந்நிதியிகவான்
சமைத்தனூன்முறைவலன்றிரிந்தேத்தினன்சரிப்பான். (கஉ௯)

ஈதுநோக்கினின்றதிசயமுலகுளோரெய்த
யாதுமொன்றறிந்தியற்றுறுதிப்பகடிழைத்த
தீதுதீர்ந்ததென்றூற்சிவபுண்ணியப்பெருமை
யோதவேண்டுமின்யாவரோயளவறுத்துரைப்பார். (க௩0)

வருதிர்நீவிரொன்றுரைத்தனனொருவனுண்மலாத்தார்
தருதிரொன்றனனொருவர்போய்த்தடம்புனல்கொணர்மி
னொருவரிங்குழைவாரமுற்றிழைத்திர்மற்றொருவர்
பருகுமென்கனிதருதிரீசனுக்கெனப்பணித்தான். (க௩க)

சொற்றநால்வகைப்பணிவிடைக்கேற்பனதொகுத்து
மற்றைநால்வர்க்குமுதவினனுங்கவர்வாங்கிக்
கற்றைவார்சடையெம்பிரான்பணிவிடைகருதி
முற்றிழைத்தனர்வலன்றிரிந்தேத்தினர்முறையால். (க௩உ)

இனையநால்வருமீசனுக்கிவைபுரிந்தேத்த
வினைதவச்சிவதேசிகன்மழவிடைக்கொடியோன்

புனைமலர்ப்பதமருச்சனைவரன்முறைபுரிந்தான்
கனைகதிர்ப்படுமூவெழுவைகலுங்கழிந்த. (கஙங)

அடுத்தவைகலினால்வருங்கட்புலனடைந்தார்
கெடுத்திடுஞ்செவிமெல்லெனவுரைப்பதுங்கேட்டார்
தொடுத்தசாபநாட்டலையுளபெருநலந்தோன்ற
வெடுத்ததுன்பொழிந்தரனருட்பிறந்ததெண்மருக்கும். (கஙச)

சாபந்தீர்தரப்பின்னருமெண்மருந்தழுவித்
தீபம்போற்றினர்வலன்றிரிந்தேத்தினர்முனைவன்
கோபந்தீத்திடப்பொடிந்தெழுபதாதிகைகூடத்
தாபந்தீர்ந்தனர்குரவனைச்சென்றடிதாழ்ந்தார். (கஙரு)

எந்தைநின்னருளியற்கையினினிதுபெற்றுயர்ந்தே
முய்ந்தனம்பழிபாதகமொழிந்தனமென்னாச்
சிந்தைநெக்குநெக்கிரங்கினராங்கதுதெரிந்தா
னந்தணாளனுமாங்கவர்க்கின்னணமறைவான். (கஙசு)

இனித்தடம்பதியெய்திநும்மரசியலிருக்கை
பணித்தவெண்குடைமீச்செலக்கோமுறைபுரித்துக்
கனித்தசிந்தையினருட்சிவபுண்ணியங்கருதித்
தனித்தவாழிகொண்டிகலறத்தராதலம்புரப்பீர். (கஙஎ)

என்றுரைத்தசொற்கேட்டலுமெம்பிராற்கினிது
நன்றுவேண்டியவமுதொடுயாவையுநல்கி
யன்றுரைத்ததங்குருமொழிவழிதிறம்பலராய்ச்
சென்றுமாநகர்நால்வருமடைந்தனர்சிறந்தார். (கஙஅ)

மதுக்கமழ்ந்தலர்கொன்றையான்றிருவருள்வழாது
பொதுக்கடிந்துலகளித்தனரின்னுயிர்புரந்தார்
புதுப்பசும்பனித்தாமவேற்புரவலர்மீண்டு
விதுக்கொழுந்தணிவேணியோற்பணிந்திடைவீழ்ந்தார். (கஙகூ)

சிறக்குமெம்பிரானினிதெழுந்தருடிருக்கோயிற்
பறப்படும்படுவனமெலாமுதலறப்போக்கி
யறப்பயன்றெரிமறைவலோர்க்ககரமுற்றளித்தார்
துறக்குமந்திரவீதியுநான்கெனத்தொகுத்தார். (கசO)

திசைபிளந்துவைத்தனையநீடெருத்தெருத்தோறும்
வசையின்மாடமுஞ்சூளிகைமாளிகைபொருப்பு
மிசையுமன்றமுஞ்சதுக்கமுமுறைமுறையியற்றிக்
[illegible]. (கசக)

வருணநான்குளசாதியும்வகுத்தனர்மற்றைப்
பெருவளந்தருமரபினோரளவறப்பெருக்கிப்
பொருபெருங்கடலெடுப்பினும்புகலரிதெனலா
யருநெடுங்கொடிக்கொம்மைசூழிஞ்சியுமமைத்தார். (கசஉ)

அன்னமாநகர்க்கரும்பெருஞ்சாபநீத்தளித்த
மன்னுநான்மறைத்தேசிகன்றிருப்பெயர்வழங்கத்
துன்னருங்குருதன்மியமெனும்பெயர்தொகுத்தார்
பொன்னகர்ப்படுகாவெலாமாற்கெனப்புரிந்தார். (கசஙு)

இருமருப்புருடிமிலுடைச்சேவுயர்த்திடுவோ
னருடரத்திருக்கோபுரமுதலியயாவு
முருகுகாதலினமைத்தனரொம்பிராற்குதவித்
தருபொலன்கலன்யாவையுமளவறத்தந்தார். (கசச)

மாரிமுற்றுறவறப்பினும்வறப்புறாப்பெருநீ
ரோரிகீழ்ப்படுசெந்நெலங்கழனிகளியாவும்
வாரிவெவ்விடமறைகறைக்களத்தற்குவழங்கிப்
பேரியோங்கியதிருவிழாநடத்தினர்பெயர்ந்தார். (கசரு)

மல்குமாணிதிப்பெருக்கமுமகப்பெறுவளனு
நல்குபுண்ணியநலனெடுசிறந்தனாகடுங்க
ணல்குசிந்தையராயுலகளித்தனரலாத்தேன்
பில்குதாமவேனுல்வரும்பேரரசுவந்தார். (கசசு)

உவந்தகாலையினல்வருமோரதினமொருங்கே
பவந்தொலைத்திடுபரிசெலாமுறைமுறைபகராக்
கவாந்தசிந்தனைகளிப்புறவிருத்தலுங்கண்டா
ரிவாந்தனூற்றுருவாசனுங்கெதிருறவெழுந்தார். (கசஎ)

எழுந்தசிந்தையினுவகைநின்றிழைத்தலுமறைநூற்
கொழுந்தைமாதவங்குடிபுகுமொருவனைக்குலத்தாள்
விழுந்துகோமுடிமண்ணுறவணங்கினாவியந்தார்
தொழுந்தகைத்தனிமுனிவனுமாசிகள்சொன்னான். (கசஅ)

செய்யவேண்டுறுகடன்முறையாவையுஞ்செய்தா
ளையனைக்கொணர்ந்துவிரொளிமடங்கலாசனத்து
நொய்திலுய்த்தனர்வரன்முறைதொழுதனாநோக்கா
வெய்கொள்வேற்படைமன்னர்வாய்புதைத்தயனின்றார். (கசகூ)

அடைபெறுந்துளித்திவிரியமலங்கல்வெண்குடையுஞ்
சிறப்புடைத்தெனமுனிவரன்கேட்டலுஞ்செழுநான்

மறைப்பெரும்பொருளுணர்ந்தவவாழியவாழி
பெறற்கருந்தவத்தலைவநின்பெருமையினென்றூர். (கருO)

எனவுரைத்தனர்பின்னருமுனிவனையிறைஞ்சி
மனவுமாமுடிமன்னவர்நால்வருமறையோய்
முனமிழைத்திடுபவத்தொடருண்டுகொன்முனிவன்
சினவலிற்பெருஞ்சாபம்வந்தடுத்ததுதெரியேம். (கருக)

மூன்றுகாலமுங்காலமீறுறப்படுமுடிவுந்
தோன்றநின்றனைகோசிகன்சொற்புனைசாப
மேன்றுநிற்பதற்கேதுவேதியம்புகியென்று
ரான்றமாதவத்தலைவனுமளந்தறிந்துரைப்பான். (கருஉ)

அறுசீர்க்கழி நெடிலாசிரியவிருத்தம்.

தேங்குதடந்திரைபுரட்டுநதியுடுக்கப்படுயவனதேயமந்நாட்
டோங்குமாதித்தபுரமெனப்படுவதொருநகரமுளதாலந்தண்
பூங்கமலைசிறப்புடையந்நகாவணிகர்பெருமரபிற்போந்தோனீந்து [ல்
வாங்குபெருநிதிசிறப்பினுயர்ந்தவன்விச்சுவவசுவோர்வணிகனுண்டா

அக்குலக்கோ வணிகனுழையவதரிததுப் பிறந்தனிர்நீர் நால்விர ந்நாள், மிக்குயர்ந்த நிதியுமக்கு வேறளிப்பக்குலத்தொழிலால் விளங் காநின்றீர், தொக்கபெருந் திருநகரி ஞதித்தேச்சுரற்கடிமைத் தொண் டுபூண்டோன், றக்கபெரு மறைக்குலத்தி னவதரித்தோ ரொருவனுள னும்மைச்சார்ந்தான். (கருச)

எம்பெருமான் பணிவிடைக்கென் றுமதிடத்து வருந்திநடந் திளை ப்பநீருஞ், செம்பொனளிக் குதுமென்ன வாங்கவற்குத் தரங்கொடுத் துச் செப்பாநின்றீ, ரம்பொனளித் திலிரொருநா ளுமதருகி னவனிரங் கியழைப்பக் கேளீர், வெம்பிவெதும பினனவனை முகநோக்கீ ரவனமு து மீண்டானன்றே. (கருரு)

வீயாதபெருஞ்செல்வநிதிப்பெருக்கினம்மைவிழிவிடுத்துநோக்கா
ராயாதபேராசைதருமனனேயடங்குதியென்றடங்காநின்ருன்
பாயாவெண்டிரைபுரட்டுநெடும்பரவைக்கலநடத்திப் படர்ந்தீர்பன்னுட்
போயாடுதிரைக்கடலுட்கரைகாணீர்நெடுமெசகுபுகுந்தீரன்றே. (கருசு)

போதற்கென் றயனடத்துந் திசைகாணீர் மழைநெடுநாட் பொதி ந்தகங்கு, லூதைக்கொண் டெழுஞ்சுழல்காற் றெடுத்தெறியக் கலன் கவிழ வொருங்கு மாண்டீர், மாதைப்பாங் கமைத்தபிரான் றிருப்பணி க்கு நிதிதருது மென்றவாக்காற், கோழைப்பொன் முடிவேந்தர் குல த்துதித்தீர் கொடாநிதியங் கடலில்வீழ்த்தீர். (கருஎ)

எந்தைபிரான் றிருத்தொண்டிற் குரியவனென் றெடுத்தழைப்பக் கேளீராகிச், சிந்தைமயக் குற்றதனாற் செவிடுபட்ட ரவனைமுகந் தெரியநோக்கந், துந்திலிரா தலினிருகட் புலனிழந்தீ ரதுமுன்னைத் தன்மையிற்ரா, வந்திவண்ணற் கியற்றுசிவ புண்ணியத்தாற் சாபமொழிந் தகற்றினீரால். (கருஅ)

ஈதுரைத்ததுருவாசமுனிமொழிகேட்டினிதுவந்துபுளகமெய்தித்
தீதவித்தமுனிவரற்குவேண்டுறுபூசனைபுரியச்செல்லாநின்றான்
பூதலமன்னுயிர்புரந்தோர்நெடுங்காலம்பிற்படப்போய்க்கயிலைமன்னிக்
காதுமழுப்படைவிடையோன்பரிபுரச்சேவடிக்கமலங்கரந்தாரன்றே.

தாதுலாமலரிதழிச்சடைமுடியோன்புண்ணியத்தினியன்றதன்மை
சூதமாமுனிவனவர்க்கிவ்வண்ணமெடுத்துரைப்பத்துளக்கமெய்தா [ம்
வாதிநாயகன்சரிதையினிதுணரந்தேமெனத்தெளிந்தாரன்றோரம்பொ
போதினான்முகற்குவமைதனிச்சான்றமுதல்வனின்னும்புகல்வதானான்.

தருநான்குபெருவளனும்பெறப்புரக்குந்திருநாடச்சம்புநாட்டி
னொருவாதபேரழகுதரவருமாயாபுரத்திற்குவமைசொல்லிற்
கருகாதமணிச்சுடிகைநாகநாட்டினுநிலத்துங்கடவுட்டாருப்
பெருவானநெடுமுகட்டுமெடுத்துரைக்கினதற்குநிகாபேசலாமோ. ()

ஊழிநாட்பெருமழையினுவட்டெடுக்கும்பிரளயத்தாலுலகத்தோடிப்
பாழிமாநகரிறக்குமெனவன்றேசுரும்பரற்றும்பசுந்துழாயோ [ற்
றூழிசூழ்நிலமுழுதுமிதன்பொருட்டாலெடுத்ததுதரத்தமைத்தானென்
சூழுநீரகழுடுத்தநெடும்புரிசைநகர்ச்சிறப்புச்சொல்லலாமே. (கசுஉ)

கொடியாடு நெடும்புரிசைக் கோபுரத்தி னெடுத்தமைத்த குடுமி யொற்றைச், சுடராழித் தோப்புரவிக் குரமிடறு மெனவெருவித் துளங்குவெய்யோ, னெடுவாயிற் புழைநுழைந்து மீச்செலப்போய் நிவந்தனமே ருவுக்கொப்பென்று, லடலாட கப்பொருப்பு நான்குளவா மெனிற்சிறிதொப் பாகுமன்றே. (கசுங)

ஈர்ந்தறுக்கப் படுபடிகச் சுவரொழுட்பி யிருமருங்கும் வீதிகாட் டிச், சார்ந்தபுடை புடையெடுத்த தவளமாளிகைவரிப்பந் தடிக்குநல் லார், சோர்ந்தவரிப் பந்துதைந்து விண்முகட்டி னணவுதொறுஞ் சுவர்க்கமாத, ரார்ந்தவரி வளைக்கரந்தொட் டடித்துறமீண் டிவர்கர த்தி னயர்க்குமன்றே. (கசுச)

காரளகப் பணிப்படலைச் சுமையெடுத்துக் களங்குழையப் புளக ம்பூத்த, வாரளவு முலைச்சுமையின் மருங்கனுங்கப் புகுந்துபுனற் றுளைந்தமாதர், பேரொளிமா மணித்தொடையல் கழித்தனர்போ

யினர்பிறழ்ந்த வெயிலால்வாளிட், டிரிருட்கங் குற்பொழுதுங் குவிந்தி லநின் றலர்ந்தனபூங் கமலமெல்லாம். (௧௧௫)

இழைத்தபசும் பொற்றகட்டி னிடைகுயிற்று மனவுவிடுத் திமை க்குஞ்சோதி, தழைத்தெழவின் முகடணவுஞ் சாளரமா ளிகைமுகட் டுத் தடவுங்கொண்டூமுக், குழைத்தநவ கிரணமெடுத் தாகாய மெழு க்கியதிற் றேன்றுங்கோல, வுழைப்புரிசை நகரொழிய யோசனைசென் றலதுதம துருவங்காட்டா. (௧௧௬)

கொய்யுளைய நெடும்புரவிக் குரவடிம்பு படமிதிக்குங் கரடக்கோ ட்டு,மையன்மதக் களிறுசெற்றி யெடுத்திறைத்தும் விண்ணளந்து மய ங்குந்தூளி, செய்குடிமிநெடுமாடக் கொடிமழைகீண் டெடுத்திறைத்த திவலைசிந்தப், பையகீழ் நிலம்படிந்து பசைந்துபரிக் குரம்படத்தூள் படுவபின்னும். (௧௬௭)

புதையுமிருட் படலைகிழித் தெழுந்தகதி ருதயநெடுங் குடபாற்போ தத், ததையிருளிற் கொழுநரிட மேகலைநூ புரம்புலம்பத் தளிர்க்கை நல்லா, ரிதயமெதிா முன்னடப்பப் பின்னடப்பார் மகளிர்வெறுத் திட் ட பைம்பூண், கதிரொளிப்பா டகச்சிறுதா ளூறுத்தாது பரப்புதளிர் கடுக்குமன்றே. (௧௬௮)

பகையரச ருடற்பிளவு படுத்தடுக்கும் பணைக்கோட்டுப் பருமயா னைத், தகையழிமும் மதச்சேறு நெடும்புரவி வாயுமிழ்ந்து தந்தநீரு, முகிணகையார் வெறுத்தெறிமா லிகைசோர்ந்த நறுந்தேனு முழவுத் தோளா, ரிகலொளிமார் பணிகுழம்பு மறுகுநிறைந் தியங்குநர்கா லிழு க்குமன்றே. (௧௬௯)

தூங்குமதக் கலுழிநெடு வரைமுழக்குந் தொகுபுரவிச் சிரிப்புமன் ன, வோங்கியபல் லியத்துவைப்பு மாடரங்கி னெழுமுழக்கி னொலியுந ல்லோர், வீங்கியகின் னரக்கருவிப் பாடலினோ தையுமறையோர் வேத கீதத், தேங்கிசையு மொருவழிக்கொண் டெழுகடலின் முழக்கொழிய வெழுந்து விம்மும். (௧௭0)

வேறு.

அன்னமாநகர்க்குவேந்தனலங்கலந்தடந்தோளேந்தி
மின்னுயிர்த்திமைக்கும்பைம்பூண்வெண்குடைத்தனிச்செங்கோலான்
மன்னுயிர்க்குயிரோயன்னானளிர்திளைவளரகமெல்லாந்
தன்னுடைத்திகிரிசெல்லநின்றசற்புத்தியென்பான். (௧௭௧)

முற்றடம்புயத்துவேந்தனுங்கவன்மனையின்மாட்சிப்
பொற்றொடிப்பயந்தமைந்தரொண்மரப்புதுப்பூங்கோதை
பெற்றிடுபுதல்விமற்றையொருத்தியப்பெருஞ்சீர்நோக்கிக்
கொற்றவன்மகிழ்ச்சிகூரவளர்ந்தனர்குவவுத்தோளார். (௧௭௨)

வீமனென்றிறவர்க்குமுன்னோற்குரைத்தனன்வெறிவண்டாடுந்
தாமவேற்குமராக்கின்னே தனித்தனிநாமஞ்சொற்றான்
பூமருங்குழற்குமாரியெனும்பெயாபுகன்றான்வெற்றி
நாமவேலரசர்கோமானுயிர்புரந்தளிக்குநாளில். (கஎங)

பொருகழற்குமரர்யாருமெதிரொடொருந்தெவ்வரோததச்
செருமுகச்சீயமானாசிறுகொழுங்குதலைச்செவவாய
மருமலர்க்குழலியீசன்புண்ணியமரபினோங்கி
யுருகுபேரன்பினின்றாளவணிலையுரைக்கலாமே. (கஎச)

ஈங்கிவரியலுநாளிலிகலொழித்திமைக்கும்வேலோன்
பாங்குநீருடுத்தவையமொன்பதிற்பகுத்துப்டைம்பொற்
பூங்கழற்குமரர்க்கெட்டும்புரிந்தனன்பொறிவண்டேதுந்
தேங்குழற்கொருபங்கீந்துதவத்தின்மேற்செல்லாகினரான். (கஎரு)

செயற்கருந்தவத்துமுறறியன்னவன்கயிலைசென்றான்
கயற்கடலுலகமெல்லாமெண்மருங்காத்தாரந்த
முயற்கறையொழிந்ததிங்கண்முகத்தினளாலம்பூதத
புயற்படுகளத்தற்கேயந்தபுண்ணியமரபினின்றாள். (கஎசு)

தவளவெண்ணீற்றுவேடந்தாங்கினளாகித்திங்க
ளிவர்தருஞ்சடிலிநாமத்திரங்கியவுளத்தளாகிச்
சிவபெரும்புண்ணியத்துச்செய்வனசெய்துநின்றா
ளுவருடைநெடுநீராடையுலகெலாந்தொழுதறகொத்தாள். (கஎஎ)

மின்னென நுடங்குகின்றமென்மருங்கியறகைநோக்கிட்
பன்னருந்தவததரோழுமுனிவரும்பரிவினெயதி
யன்னைநின்னறத்தின்வாழ்க்கையழகிதென்றறைந்தாகஞ்சம்
பொன்னுயிரத்தனையாள்போற்றும்வானமுறைபோற்றிநின்றாள். ()

அணங்குருவிரப்பவேண்டுமணங்கனுய்நின்றநின்னும்
பணங்கிளரரவவேணிப்பண்ணவற்கெனலாய்நின்ற
குணந்தருபுண்ணியத்தாலுலகுகைகூடப்பநின்றாய்
மணங்கிளரலங்கலோதிநின்னெக்குமகளிராயாரோ. (கஎகூ)

என்றலுமெதிர்ந்துநின்றமுனிவரரொழுவாதம்பா
லொன்றியவுளத்தினன்புமீக்கொளவுருகாநின்றாள்
பொன்றவழ்சடிலமூர்த்தாற்புனிதாகாள்புகலிற்பேதை
யின்றெனக்கெளியவன்றேபுண்ணியத்தியற்கையென்னா. (கஅ0)

அலங்கலேடவிழ்ந்தவோதியுமையிடத்தமைத்தவைய
னலங்கிளர்புண்ணியத்தின்பெருமிதரவையிற்றீரப்

புலம்படவுணர்ந்தாமேலோயானறுர்புகல்வமதல்லா
மிலங்குறக்கேட்டதுண்டிதியம்புதிரொளியற்கென்றாள். (கஅக)

கேட்டருண்முனிவர்யாருங்கிளர்முடிச்சடிலஞ்சாய்த்தார்
வாட்டடங்கண்ணிதன்பாற்கோதமன்வகுப்பதானன்
றேட்டவிழலங்கலோதிசொல்வனகேட்டியென்றான்
பூட்டுறுகற்பினின்றடொழுதுவாய்புதைத்துநின்றாள். (கஅஉ)

பழனநீரவேலிசூழும்பாஞ்சாலமென்னுநாட்டிற்
றழுனிநீரிஞ்சிசுற்றுஞ்சோபனநகரத்துள்ளான்
மழலையின்மறைகற்றேதுமாதவன்மறையோன்பெற்ற
னிழைபொருதிதலைக்கொங்கைச்சுந்தரியென்பாடன்னை. (கஅஙூ)

புகன்மறைமுழுதுமோதுங்கீரமாபுரத்தினுள்ளோ
னகையுறுகுணத்தின்மிக்கபுட்கரனவ்வியுண்க
ணிகலிளங்கொங்கையாளைமணந்தனனிருந்தானந்நாட்
டகையறுகாமவேட்கைமிக்கெழச்சரியாநின்றாள். (கஅச)

அயலொருமனையினுள்ளவேதியனழிந்தசிந்தை
மயலுறுமனத்தனகாமவேட்கையனவனைவவ்விக்
கயல்பொருங்கண்ணிகூடப்புணர்ந்தனளகணவன்கண்டான்
றுயல்வருகயிற்றாற்கட்டியடித்தனன்றுயரம்பாரான். (கஅரு)

அதுமனத்தடைத்துப்பன்னுள்வைகினளவனையோர்நாட்
கதுமெனவாலந்தீற்றிக்கோறலுங்கயிறுநீத்து
விதவையாட்க்களவிற்புல்லுமவனையும்விடுத்தாளல்லள்
வதிதருகருப்பமெல்லாஞ்சிதைத்தணன்மருந்துமாந்தி. (கஅசு)

அளவறுகருப்பமங்ஙனழித்தனளழியாதுற்று
விளைதருகருப்பமொன்றான்வீங்கியவுதரநோக்கி
வளைதருசுற்றத்துள்ளோராகழிபடமாநகரநீததுத்
துளிரியனடந்துவேறோர்நாட்டகஞ்சாரலுற்றாள். (கஅஎ)

அந்நகரிருந்துபெற்றமதலையையாலமூட்டி
மன்னுயிரழித்துவேறோமறையவர்ப்புணர்ந்துவைகி
யின்னலங்கொடுக்குநாளிலிருநிதிப்பெருக்கநோக்கிப்
புன்னிலைநஞ்சிட்டன்னுனிதிகவாந்தாவிபோக்கி. (கஅஅ)

மற்றொருமறையோன்றன்னைமாநிதியீட்டநோக்கிப்
பற்றினளவனையந்தப்பரிசினாற்கோறலுற்று
னிற்றிலதவனதாவியோர்பகலிவனைக்கொண்டு
பிறிறையங்கானம்புக்காள்புணர்ந்தனன்மயக்கிப்புல்லி. (கஅகூ)

அரிகிழற்படைவார்ந்தபுன்மணலகவைதுஞ்ச
வெரிதருநெஞ்சினோங்கியோர்சிலையேந்திச்சென்னி
நெரிதரவீழ்த்துக்கொன்றுநீணிதிகவார்ந்துகொண்டாள்
விரிதருகவிகைவேந்தனுணர்ந்தெரிவிழித்துநோக்கி. (ககO)

அனையவடன்னைப்பற்றிக்கொணாகெனக்கொணர்ந்தாரந்தப்
புனையிழைமுலையுமூக்கும்போக்குதிரொன்னப்போக்க
வினையிருந்துடற்றக்கைகாலற்றவளோடுமேவி
நனைமதுநுகர்ந்துதின்னுப்புலவெலாநயந்துதின்றாள். (ககக)

ஒருகரமொருகாலுஞ்சியிழந்தவனொருவன்றன்னை
மருவினளவளாற்செய்யாப்பாதகமில்லைமண்ணி
லிருவருநடக்குநாளிற்றம்மிலோரிகலுண்டாகக்
குருதிநீத்தறுத்தகையாற்குத்தினவளுமாண்டாள். (ககஉ)

பாதகியிறந்தபின்னர்மறலிதன்பணியாற்றென்பாற்
றூதர்விட்டெடியும்பாசந்தொகுத்துறக்கழுத்திட்டீர்த்துத்
தீதுறுநிரயத்திட்டார்சிவகணத்தலைவாசீறி
மாதரன்னவளைக்கொண்டுமானமுய்ந்தகன்றார்மன்னே. (ககங)

தொடாந்தனாமறலிதென்பாற்றூதரன்னவரையெல்லாங்
கடந்தனரிவளைக்கொண்டுகயிலையங்கிரியிற்புக்கார்
படர்ந்தெழுசடிலமோலிப்பரன்றிருமுன்னராக்க
மடந்தைபாாவதிக்குத்தோழியாமெனவதிந்தாளன்றே. (ககச)

தென்புலத்தலைவன்றூதர்சென்றனாசிவகணத்தோ
ரன்பறக்கடிந்தவாறுபுகன்றனரதுகாலதது
முன்புறச்சித்திரகுத்தற்கொணர்கெனமொழியவந்தா
னின்கணக்களவாற்செய்தபுண்ணியநிகழ்த்தியென்றான். (ககரு)

வெய்துறுபாவமெல்லாமொருவழிக்கொண்டமேனி
யெய்துறுமிவளாற்செய்ததருமமொன்றில்லையென்றான்
பெய்கழற்றருமனோராவிருந்தனனிருந்தபின்னா
மொய்நருசடிலமோலிநாரதமுனிவன்சென்றான். (ககசு)

சென்றவற்கெதிர்ந்துமற்றைத்தென்புலக்கிழவனெய்தி
யன்றவற்கென்னவேண்டுமெருச்சனைபுரிந்தானைய
வின்றிவணடைந்ததென்னையென்றலுமிரட்டைமேருக்
குன்றினுமுயர்தோளாயோரதிசயங்கொண்டுபுக்கேன். (ககஎ)

அதிசயமென்கொலையவருடியென்றறைந்தானந்த
முதியமாதவனும்தென்பான்முதல்வனுக்குரைக்குமுன்னைச்

சதுர்மறைக்குலத்திலுள்ளாளொருத்தியைத்தருணவேணி
மதிமுடியவன்பாலுய்த்துவந்துறைகணத்தர்சொல்வார். (ககூஅ)

நெடுநிலத்திவளாலுள்ளபாதகநிகழ்த்திற்றெண்ணீர்
படுகடன்மணலையெண்ணினெண்ணுறுமென்றார்பன்னாட்
டொடுசனனத்திலுற்றநல்வினைத்தொடர்ச்சிதன்னால்
விடுசுடர்க்கயிலைபெற்றாளென்றனாவிடுத்துச்சொல்வார். (ககூகூ)

வேதகோத்திரதத்திலுள்ளவேதியனொருவன்றன்னைத்
தீதுறுவனத்திற்கொண்டுசென்றவற்புணர்ந்தபின்னர்க்
காதுறுசினத்திற்கல்லிற்கொன்றனள்போலுமக்க
லாதிறையவன்றன்கோயிற்றிருப்பணிக்கடைந்ததென்றார். (உ00)

அன்னவள்கையிற்றீண்டியெடுத்தகல்லரன்பொற்கோயிற்
சன்னிதிக்காவதாகவாதலாற்றறுகணுட்டி
முன்னிழைத்திட்டபாவமுடிந்ததென்றுரைத்தாரன்னோர்
சொன்னதுகேட்டுநின்பாற்சொல்லுவான்றொடாங்தேமென்றான். ()

நாரதனுரைப்பக்கேட்டுத்தென்றிசைநடுவனோர்ந்து
டாரியாயிருந்துகொன்றபாதகிபெற்றபேற்றால்
வேரியஞ்சடிலமோலிபுண்ணியம்விருப்பிற்செய்த
போபெறும்பெருமையெம்மாற்பேசுதற்கெளியவன்றே. (உ0உ)

எனவெடுத்தியம்பிச்சென்றநாரதற்கியன்றசெய்
ணனையவன்போகத்தன்னினதிசயமடைந்தா
புனையிழைமடந்தைபாகன்புண்ணியம்புரிந்துநின்
வினைபடுபஞ்சிற்றீயின்விளிவதுதிண்ணமென்றான். (உ0௩)

கொழுங்கொடிப்பவளவேணிக்கோதமனுரைத்தபின்னர்த்
தொழுந்தகைக்குமாரிதன்பாற்காசிபன்றொகுப்பதானு
னழுங்குறுபவந்தீர்வேதாரணியமென்றுரைக்கப்பட்ட
செழுங்கொடிநகாப்போகாங்கனெனுமொருசினவேல்வேந்தன். (உ0ச)

அறனிதுபாவமீதென்றறிந்துலகளித்தல்செய்யா
னிறைகடந்துரப்பிக்கொள்ளுமன்னுயிர்க்கிடுக்கணுக்கான்
மறனெடுபழகிவாழும்வள்ளுகிராப்புலியேறனையான்
பொறைசிறிதுணரான்றெய்வம்போற்றலன்கருணைநீத்தான். (உ0ரு)

கருமமீறொழியத்துஞ்சுங்காலையிற்றென்பாற்செல்வன்
பொருகழற்றூதர்புக்கார்புயத்துணைபொருந்தவீக்கி
மருமமுற்றிடித்துக்கொண்டுசென்றனர்மறலிதானுந்
தெருமருநிரயத்திட்டானிடைத்தனள்வருத்திச்சின்னான். (உ0சு)

கண்ணுதற்கடவுளேவக்கயிலையங்கிரியிறாதா
துண்ணெணுமுழக்கததோடுதென்றிசைதொடாந்துசென்று
ரெண்ணருகிரயத்தாழ்ந்தவிவற்பிடித்தெடுத்துச்செம்பொ
னண்ணலந்தனிமானத்தினமைத்தனரகன்றபோனா (உ0எ)

போதருநெறியிற்பற்றிப்புகுந்தனாதென்பாற்றாதா
தீதறுசிவகணத்துச்செல்வரைப்பின்சென்றேத்தி
யாதிவன்றருமஞ்செய்ததுணாத்திரென்றிரந்துகேட்ப
மாதொருபாகன்றாதரவனிலைவகுட்பதானா. (உ0அ)

இத்திறத்திவன்செய்பாவமெண்ணிறந்துளவென்றாலும்
பத்தியினிவன்பாறரேன்றுங்கனகனென்றுளனோபால
னத்தனைமணவிற்கோட்டியருச்சனைவிளையாட்டுற்றன
முத்தனோர்ந்திவன்பால்வெள்ளிக்கயிலையின்முதன்மையீந்தான் (உ0கூ)

பெறறனனதனுல்வெள்ளிப்பொருப்டென்பேசமீண்டாா
குற்றடுதகையாதென்பாற்றருமனைக்குறுகியன்னா
சொற்றனவனைததுஞ்சொல்லத் துன்னெனததுணுக்கங்கொண்டான
கற்றைவாாசடையோனறன்மைநினைந்துளங்கனிவதானுன். (உக0)

**கலிவிருத்தம்.**

என்றுகாசிபனசொல்லியிறுத்தனன்
றன்றுணைச்சமதக்கினிசாற்றுவான்
மன்றலோதிவரனுடைப்புண்ணிய
மொன்றுகேட்டியென்றன்னவட்கோதுவான். (உகக)

தழைநெடுங்கொடிச்சந்திரமாநகா
மழைபடுங்கைமதிமானெனுமிரு
குழைமுகத்தனிவேந்தனக்கோமகன
விழைவமைசசனவிசுததனென்பானுளன். (உகஉ)

உரைக்குமன்னவன்றன்னுழைத்தோன்றிய
வரைக்குலப்புயமைந்தரிருவரி
னிரைத்தெழுந்துற்குணனெனுமோாமகன்
றரைத்தலத்துராசாரனென்றோமகன. (உகங)

எடுத்துரைக்குமிவாகளியறகையைப்
படுத்துணாந்தனனருதையிப்பாதகா
விடுக்குநீமையயொன்னவிடுததுவே
றடுத்திருந்தனனன்னவரோாந்தனா. (உகச)

தூர்த்தநம்முழைத்தண்ணளியற்றன
ஆயர்க்குதாம்வயிரேம்புதற்கொன்றிலை

மந்திவல்லிருளாறலைந்தாருயிர்
சிந்திவவ்விதிரிதுமென்றேகினர். (உகரு)

செல்லருங்கடுங்கானகத்தீநெறி
புல்லியோர்ந்துபதுக்கைபுகுந்திருந்
தெல்லைநோக்கியிடைபகுந்தாருழை
யொல்லைசென்றுயிரபோக்கிக்கவர்குவார (உகசு)

அற்றநோக்கிக்கவாந்துயிராசறச்
செற்றதெத்தனையென்னென்றுசெப்புசே
னுற்றநாளிலொருகிழட்டந்தணன்
சுற்றிறக்குஞ்சுமையொடுதோன்றினன். (உகஎ)

இருமருங்குமிவாகளிருந்தன
ரருநெறிப்படவந்தணனெய்தலுந்
திருகுசீற்றந்தலைக்கொளசசென்றனா
டருவரற்புரிந்தாங்கவற்பற்றினா. (உகஅ)

பற்றியெற்றிப்பறித்துப்பரட்டடி
முற்றுறப்புடைத்தாரகொண்டுமுன்னினு
துற்றுறுங்கடுங்கானிடைத்தோளினை
யிற்றுறக்கொடிகட்டியிறுக்கினா. (உகக)

கட்டுறுத்தசுமைக்கட்டறுத்தன
ரிட்டபண்டமெடுத்துக்கவாந்தனா
சுட்டமைத்தகற்சுண்ணமிருந்தெடா
விட்டெறிந்தனாவெங்கடுங்காட்டரோ. (உஉ0)

இன்னவாறிவாசெய்யுமிடும்டையை
மன்னாமன்னன்மதிமானுணாந்தன
னன்னவாப்பிடித்தான்மழுவாளினுற்
பின்னமாக்கியுரம்பிளந்தானரோ. (உஉக)

காலதண்டஞ்சுழற்றிக்கடுந்திறற்
சூலமேந்தியதென்றிசைத்தூதுவ
ராலகாலமெனவுருத்தார்பவப்
பாலமன்னவரைக்கொடுபாறினா. (உஉஉ)

அந்தகன்றிருமுன்னர்க்கருகுற
முந்திநிற்பவிடுத்தனர்முன்னவன்
சிந்தைகூாந்தறிசித்திரகுத்தனை
யிந்தவீங்கிவர்செய்தனயாவென்றான். (உஉங)

புண்ணியப்பொருளொன்றும்புரிந்திலர்
அண்ணகன்றெழுகாணிற்பறித்தெறி
சுண்ணமற்றெரூர்சுருதிவல்லானெடுத்
தண்ணன்முக்கணனாலயத்தெய்துறு. (உஉச)

அன்றெடுத்தகற்சுண்ணமழித்திலை
தின்றுமிக்கதுசேவுயர்த்தோன்மதிற்
குன்றிடுக்கினிழுகியகொள்கையா
லின்றிவர்க்கிடரில்லையென்றனரோ. (உஉரு)

என்னுமாத்திரையெந்தைபிரானரு
டுன்னுதூதாதொடர்ந்துபடாந்தனர்
பொன்னிலங்குறுமானமபொருத்திறு
ரின்னதீரத்தவற்கொண்டகன்றேகினா. (உஉசு)

பின்னெழுந்துவணங்கிப்பெருந்திசைத்
தென்னகாக்கிறைசென்றனன்கைதொழா
வென்னுடைப்பெருந்தூதரியற்றிய
புன்னிலைப்பெருந்தீமைபொறுத்திரால். (உஉஎ)

என்னப்போற்றியிறைஞ்சியெழுந்தனன்
கன்னற்சாடன்கனற்படமாட்டியோன
முன்னாக்கொண்டுவிடுத்தனாமுக்கணன
றன்னெப்பாயொருசாரபிருந்தாரரோ. (உஉஅ)

ஆதலிற்சிவபுண்ணியம்யாவையு
மோதிமுற்றுமொழிக்கட்படுவதோ
வீதிவெண்பிறைசென்னிமிலைச்சியோன்
மூதுணாந்தவரன்றிமொழிவரோ. (உஉகூ)

என்னவைத்திடுமீற்றிடைக்கோசிகன
கன்னிதன்முகநோக்கிக்கழறுவான்
பன்னுமாதவத்தொல்லையாபண்புடைய
பொன்னகாக்குப்புரந்தரனுதியோா. (உகூ0)

சித்தாகிம்புருடச்சிறப்போபெரு
வித்தியாதரர்வீணையர்மேவரப்
பைத்தபாம்பணைப்பள்ளியனுந்தியி
னுய்த்தெழுந்தமுளரியுறையுளோன். (உகூக)

ஏமகூடத்தினிதிருந்தாரவண்
யாமுமெய்திப்பரசியிருந்தனங்

காமமொண்பிறைக்கண்ணிகணத்துளா
ளுமடேவற்சதவிர்த்தயனண்ணினுன். (உநஉ)

உரைத்தமால்வரையோரமருங்காகமுற்
றிரைத்தெழுந்தகணத்தொடுமெய்தலும்
விரைப்பசும்பனித்தாமரைமேலுளா
னிரைக்கணத்தொடெழுந்தனனின்றனன். (உநந)

நின்றநான்முகத்தேவனிறைபடுந்
தன்றளிர்க்கரங்கூப்பிய தன்மையை
யொன்றுநோக்கலனுகியொருதனிக்
குன்றவில்லிகயிலைகுறுகினுன். (உநச)

பினனிருந்தன னுன்முகன்பேரற
மன்னுமாதவாசுற்றுறவைகினு
ரன்னகாலையினந்தணனைத்தொழா
வென்னையீதென்றியானும்வினுயினென் (உநரு)

நீயெழுந்தனைநிற்கவுநோக்கலன்
போயொழிந்தனன்யாதிவன்புண்ணிய
மாயவேண்டுதுமென்னலுமம்புயத்
தூயநாதனவனிலைசொல்லுவான். (உநசு)

வேறு.

வண்டமிழ்ப்பரவுசாமந்தமாநகருளான்
விண்டநூல்புனைசதாவிந்துவென்பானிவ
னெண்டரம்கரியதோராவறுமைபெறறெய்தினுன்
றண்டலைக்கழனிபுக்குழுதொழிற்சாபினுன். (உநஎ)

பழமறைக்குலமுதித்தனனிவன்பரிவினு
லுழுதொழிற்பரிசுபெற்றெழிகலான்வறுமைநே.
யெழுமருப்பொருகரும்பகடுளானிதனையப்
பொழுதுவிற்குதுமெனப்பசியொடும்போயினுன் (உநஅ)

கொள்கிலாரதனைநல்குரவொடும்பசியொடு
முன்புகாவொருதறிப்பகடணைத்துறுதலும்
வள்படுங்கொடியவால்வரிவிரிச்சிகமடுந்
தெள்விடம்புகமடுத்தலுமவன்றெருமரா. (உநகூ)

கைத்தலங்குலைதரச்சுழல்வருங்கண்முகிழத்
துய்த்துறங்கிலனுயிர்ப்பொறைதுறந்தானரோ
வத்தலைப்பகடுகட்டறுதரப்புறமுலாய்
மத்தமர்மதமுழந்தயலெலாமறிதர. (உசo)

சேவுயர்த்தவர்திருப்பணிவிடைக்குளபகட்
டாவிரீத்தனுமரன்பணிவிடைக்கண்மினூர்
மேவரக்கொடுசகட்டுற்விசித்தனர்தனித்
தேவனுக்கொருபகற்சிலையிழுத்திட்டதால். (உசக)

அப்பெரும்பகடரன்பணிவிடைக்குதவலா
னிப்பெரும்பதவிபெற்றிறைகணத்தலைவனுய்ச்
செப்பருந்துளமுடிச்செங்கணுன்முதலினூர்
துப்புறும்டரிவ்னுற்ருெழுவிருந்தானரோ. (உசஉ)

இன்னணஞ்சதுமுகத்தவனிசைத்தானெனப்
பொன்னையன்னவளொடுங்கோசிகன்புகறலு
மன்னமன்னவளுவந்ததிசயத்தெய்தினுள்
பின்னர்நின்றுளபரத்துவனிப்பேசுவான். (உசங)

தாதெருப்படுகுடிற்ருெறுவதிற்றலைவனிற்
போதுமோசிறுவனுடுறுதெருப்பறலயிற்
காதலிற்கண்ணுதற்புனிதனைக்கருதியென்
னுதனியென்னவோர்சிலையைமுன்னட்டனன். (உசச)

மற்றுமச்சிறுகலான்மதிளெடுத்தைதயனைச்
சுற்றுமுற்றுறவகுத்திழிபுனற்ருெள்ளியே
முற்றுமென்சந்தெனப்புனைசெய்வான்முளியரிற்
றுற்றுபன்மலரொடுத்தணிமுடிச்சொரிகுவான். (உசரு)

மணலெடுத்தலரொருக்கடைவகுத்திதுவனக்
குணவெனத்தொழுதிழைத்தாடுநாளுமையிடக்
கணபணச்சடிலிபேரருளொடுங்கருதுரு
விணைமருப்பேறுகைத்தினிதெழுந்தருளினுன். (உசசு)

மைந்தனைக்கருணையான்மருவுறத்தழுவிநீ
தந்தவற்புதமெமக்கெனவுரைத்தனனவன்
சிந்தையிற்களியின்வைத்திடுசிலைச்செழுமணிச்
சுந்தரச்சோதிபெற்றிடவளித்துதவினுன். (உசஎ)

அவனடுக்கியசிலைக்கோபுரத்தயன்மதிட்
கவரொளிக்கதிர்மணிக்குலமெனக்கருதுமுக்
குவைநிதிக்கிழவனிற்பொதிநிதிக்குவையெலா
மிவனுறப்பெறவளித்துதவினுனிறைவனே. (உசஅ)

என்னையாளீசனப்புதல்வனுலெய்துமத்
துன்னருங்கோயிலுட்சோதிமாமயமெனு

மன்னினுனுலகுளோர்மாலைவெண்கவிகையோர்
பன்னுமாதவமுனித்தலைவரும்பரசினூர். (உசகூ)

நின்னுடைக்குலமுதற்கிளையுளாய்நெடுநிலம்
பன்னுசீர்நந்தகோபாலன்வந்தவதரித்
தன்னவன்பானறுந்துளவினூனவதரித்
தின்னதீர்பெருவளம்பெறுதியென்றேத்தினூர். (உரு0)

இற்றைநாண்முதலுனக்கிடுகுறிப்பெயர்கெடச்
சொற்றனஞ்சீகரன்பெயரொனச்சொல்லினூர்
மற்றைமைந்தனேயடிக்கடிதொழாவாழ்த்தினூர்
பொற்றடம்புவியுளோர்முனிவரும்போயினூர். (உருக)

சீகரப்பெயருடைசசிறுவனுந்திரைபொருஞ்
சாகரப்பெருநிலப்பலவளந்தழுவினூ
ளுகரத்தின்பமுறறனுபவித்தணிபிறைச்
சேகரச்சடிலிதென்கயிலைசென்றண்மினூன். (உருஉ)

கலிநிலைத்துறை.

நெறிந்தபுன்சடைநிலவணிசென்னியோன்பெருமை
யறிந்துசெய்குநர்பெறுவமற்றுங்கவனல்லாற்
பிறிந்துறப்பிரித்துரைக்குநர்யாவரோயறப்பாற்
செறிந்தசிந்தையாயென்றனனருந்தவச்செல்வன். (உருங)

முனிவரோழ்வரும்வரன்முறையிவ்வுழிமொழிந்தார்
கனியுமன்பினள்கட்புனலரும்புறக்கனிந்தா
ளினியசொல்லிமற்றுங்கவர்ப்பணிந்துறவிரங்கித்
புனிதமாதவருளநெகிழ்ந்தாசிகளபுகன்றூர். (உருச)

ஏறுமால்விடையெம்பிரான்றிருவருளெய்தி
யூறுநீங்கியசெல்வியாய்ப்பெருவளனுவந்து
சீறருஞ்சிவபுண்ணியத்தொழுகுதியென்று
ராறறிந்தநூலந்தணத்தருந்தவரகன்றூர். (உருரு)

திருந்துமாதவருரைத்தனவுளத்தொடுஞ்செறித்தாண்
முருந்தவாணகைக்குமாரிமுன்னையிற்குழைந்துருகிப்
பெருந்தடந்திரைநெடுநிலப்பேரறம்வளர்த்தா
டருந்தவக்கொழுந்தனையளால்வளர்ந்ததுதருமம். (உருசு)

ஆலயம்பலவமைத்தனடிருக்குளமமைத்தாண்
மாலைநந்தனவனமெலாமொருங்குறவகுத்தா
ளோலிடும்புனற்கூவலுமெம்பிராற்குவப்பக்
காலையங்கதிர்புரைமணிக்கலன்களுமளித்தாள். (உருஎ)

ஆயதுமொழிதலுமசித்தன்பின்னுநீர்
போய்விலையவருழைப்போட்டுத்தோட்டம்புக்
கேயனூறிருங்கனியெடுத்துவம்மினென்
றேய்வறுவெகுளியினுணாக்கப்போயினர். (அ௨)

அவ்வுழிபுகுந்தனரமைச்சனுணையான்
வெவ்வழியொழுக்கத்தார்விரகிலோமெனச்
செவ்வழியுளத்தவருரைப்பசீறிணு
ருவ்வழியுணர்ந்திலர்படப்பையுள்புகா. (அ௩)

எறிந்தனரிருங்குலையெடுத்துமீண்டுற
மறிந்தனராங்கதுமறையவர்க்கெலாஞ்
செறிந்துறவழங்கினர்கவ்வைதீர்ந்தன
ருறுந்துயாநரகிழிந்துழைப்பதோர்கிலார். (அ௪)

மேற்படுத்தெறிந்திடுவிலைகையேந்திலாா
பாற்படுபூதியான்பரிப்பிலந்தணர்
வேற்படையரசவைமேவிக்கூறிணா
நூற்றடமார்பினவைவநோக்கிலான். (அ௫)

ஈங்கிவன்சிவனிடத்திழைத்ததீமைகண்
டாங்கவருரைத்தசொற்கேட்டிலாமையாற்
றுங்கியதடஞ்சினைத்தருவினீழல்வா
யோங்கிவன்றுதையைநிரயத்துய்த்தவை. (அ௬)

வயக்கடும்புரவியிம்மன்னன்மன்னிய
கயக்கொடும்பிணியினுற்கழிந்துமாண்டனன்
சயக்கொடுங்கதையினுரியமதண்டத்தா
ரியக்கொடும்புயம்பிணித்துடன்கொண்டேகிணா. (அ௭)

தந்தைவீழ்நிரயமுந்தனக்குவாய்த்துறச்
செந்தழல்வயிரவான்கழுவிற்றீகின்று
ணந்தரத்தியம்புநன்னுட்டையன்னவன்
கொந்தளக்குழலியைக்குறும்புகொண்டதால். (அஅ)

அழிகவுள்யானையாற்கமைச்சினேங்கிய
மொழிமறையசித்தனைமன்னன்முன்னரின்
விழிசெகுத்தெடுத்தயல்விடுத்துப்போக்கிணு
ரிழிதகன்றன்னுயிரிறந்துமாண்டனன். (அ௯)

அவனையுந்தென்புலத்தரசனுணையாற்
கவரொரிகொழுந்தெழுந்தெரியுங்கன்ணகன்

பவாகுழிநரகிடைப்படுத்திடுரவ
ணிவருட லுறுதியிற்றழியுமிவ்வாழும். (கய0)

புரிதருமவன்றருபுண்ணியத்தினு
லுரியவெந்நரகொழிந்தும்பரெய்திய
பரிவுடைத்தாதையைப்பண்டுபோலெடுத்
தெரிதருநரகிடையிழிச்சினுரரோ. (கயக)

வாழையின்றீங்கனிவழங்கினல்லது
சூழிருந்தடிசிலுந்துய்க்கிலேமெனப்
பாழவயிறேம்பினேர் பண்ணவன்பழ
மூழ்முறைகொணாந்துளோருரைத்துக்காட்டினேன். (கயஉ)

யாவருமிப்பெருநிரயமெய்தினர்
மேவருந்துயரொழிந்தின்றுமீண்டிலார்
சேவருமெம்பிரான்சிவத்துரோகத்தாற்
பாவியாடங்ஙனபிறவும்பன்னுவாம். (கயங)

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

புலங்களோரைந்துங்காந்துப்பொதுநின்றபுலமைத்தன்மை
நலங்கிளர்பெருந்தவத்துநவையறுங்குணத்தீரொந்தைக்
கிலங்கொளிபரிகலத்தினமுதினுக்கியைந்துவிட்ட
நிலங்கவாந்தெடுத்தோரின்னும்படுவனநிகழ்த்தக்கேண்மின். (கயச)

செந்நெலங்கழனிவேலிச்சிங்கலமென்னுந்தேயத்
தந்நிலத்தகவையிற்பூச்சக்கரமென்னுமூதூ
ரந்நகர்சவிதாவென்னுமறையவனன்பாற்றேன்றி
மன்னியபுதல்வாமூவரிவரொடுமகிழ்ந்துவாழ்வான். (கயரு)

அனையவன்றன்பாறற்றேன்றியருமறைமுழுதுமோதுந்
தநயரின்முன்னவற்குத்தன்மியனென்னுநாமம்
புனைதரமொழிந்தானன்னேன்றனையுணாபுலமைத்தன்மை
நினைவுறத்தெரிந்தான்சைவநிலைதருவரம்பினின்றன். (கயசு)

தன்னுடைநிலனுந்தேடும்பொருளுமத்தழற்கட்பால
முன்னவற்குதவினோடளித்தனன்றவத்தைமுன்னி
யுன்னருவெதிரிவெங்கானடைந்தனனுழிந்தசின்ன
ளந்நிலம்பொன்னேர்பூட்டியரீச்சுராக்குமூவ தானுர். (கயஎ)

அத்தலையுணர்ந்துவேதமளந்தறிசவிதாவென்போன்
செய்த்தலையுழுதபொன்னேர்மறித்தனன்சினமீக்கொண்டா

ளித்தலையானுமீன்றமதலையரிவருமுள்ளேம்
பித்தனீதிழைத்தானென்றானுமக்கதுபிலப்பதன்றே. (௯௮)

ஆவணமாட்சியெம்பாலகப்படநீங்களீது
கோவிலுக்குழுதனன்றேவெளியவர்குடியிராரோ
பாவியர்செய்தசெய்தீரின்னுயிர்பறிப்பதல்லா
லாவிகொண்டிருப்பதோரினருமறைக்குலத்துளேனே. (௯௯)

எனும்வழக்கெடுத்துக்கூறியிருமையரிகலுங்காலை
மனுமுறைமரபிற்சொல்லுமன்றமுற்றிருந்துளோர்பா
லனுதரித்திதனைச்சொன்னாலாங்கவராறுத்துச்சொன்ன
பனுவலினிற்றுமென்றானந்தணனதனைப்பாரான். (௧00)

எந்தைபொற்கோயிற்செய்கைசெய்பவரிவனைக்கொண்டு
பைந்துணரலங்கற்றிணடோட்பார்த்திபன்முன்னர்சென்றார்
தந்தமிலெடுத்தவெல்லாமொழிந்தனர்தனிசசெங்கோலோ
னந்தணனவனைநோக்கிச்சுளிந்தனனறைவதானான். (௧0௧)

ஈசனுக்கிதுவென்றோரா வெணணினுமெம்பிரான்றன்
பூசனைக்குரித்தாமண்ணிறபொழிபுனல்விணணிற்செல்லி
ஞசறத்திரும்புமஃதென்றச்செறுவானுக்காக்கிக்
காய்சினத்திவனைநோக்க * மறையவன்கழன்றுபோனான். (௧0௨)

பற்பகலொழிந்தபின்னர்வளைபொரப்பணைத்துவீங்கு
மற்பொருதிரடோள்வேந்தனிறந்தனன்வையமெல்லாங்
கொற்கொள்வேலரசாகொண்டாமறையவன்குற்றநோக்கான்
வற்புறுமனத்தனுகிவளவயலெடுத்துக்கொண்டான். (௧0௩)

இளகிலாப்புனைந்தவேணியெம்பிரான்கோயிற்செய்கை
வளமுறப்பரிப்போர்சென்றுமன்னவற்குரைப்பமன்ன
னுளநெகிழ்ந்திரங்கியந்தவேதியற்குளையச்சொல்லி
வளவயறிருப்பியீசற்காக்கினன்மறுத்துஞ்சொல்வான். (௧0௪)

இற்றைநாளளவும்பெற்றவிடுசிலவொழியப்போக்கி
மற்றையசெந்நெலெல்லாம்வழக்கிஞலெடுத்துக்காட்டிப்
பெற்றவேறுகைத்தோற்கென்னவாக்கினன்பெரிதுநல்கி
யுற்றவன்றன்னையிந்நாடொழிதரப்போதியென்றான். (௧0௫)

அந்நிலைநாடுநீங்கிச்சேணெறியரிதிற்சென்று
ளின்னலங்கடலுட்டாழ்ந்துமகதனுடிறுத்தானுங்கண்

* "விளையவன்" என்றும் பாடம்.

மன்னவற்கண்டுசொல்லுமாசிகண்மரபிற்சொன்ஞன்
பின்னரிணிகழ்ந்தவெல்லாமவனுழைப்பெரிதுசொன்ஞன். (௧0௬)

ஓர்பொழுதொருநாளெம்பாலாசிவந்துறைத்துப்போதி
நேர்வரவுனக்குவேண்டும்யாவையுநிரப்பித்தந்து
ஞரகத்திருத்துமென்ருன்மன்னவனுரைத்தவாய்மை
சோர்வறவுணர்ந்துகொண்டான்றுலைந்தனசிலநாளங்ஙன். (௧0௭)

ஈதறிந்தரசற்புல்லியிவனிலைசொல்லியின்றிப்
போதிவற்கோறியென்றுன்புரகிதவிசாந்தனென்போன்
றீதுறுசிவத்துரோகாத்தீண்டலுமாகாகோறற்
கேதுவேதென்னிலின்னேயென்னுயிரிறப்பனென்றுன். (௧0௮)

ஆங்கதற்கரசனெவ்வானறிந்தனன்விசாந்தனென்போன்
பாங்குறுமொருவன்கையினுந்தகம்பறறிவாங்கி
யோஙகுறவெறிதலோடுமுருண்டதம்மறையோன்சென்னி
வீங்குறுதடந்தோள்வேந்தன்வெகுண்டெரிவிழித்துநின்ருன். (௧0௯)

அடைக்கலம்யானேயாகவடைந்தனன்மறையோனசென்னி
புடைத்துமண்கிடப்பவாளாலெறிந்தனையென்னப்பொங்க
விடைக்குலம்வெகுண்டாலென்னவிசாந்தகன்வெகுணடுவேந்த
னுடைத்தடமகுடச்சென்னிதன்னையுமுருட்டிவீழ்த்தான். (௧௧0)

சாந்தகன்பிரமைகொணடானென்றுளஞ்சலித்துப்பொங்கி
வேந்தாகோன்சேனையாவும்விசாந்தகற்பிடித்துக்கொல்வா
னேய்ந்தெதிரெழுந்தகாலேந்தம்பிலோரிகலுண்டாகச்
சேந்தகட்கடைத்தீப்பொங்கவினைத்தனர்திமிலத்திணபோா. (௧௧௧)

கையற்றுாகால்களறறுாகழுத்தற்றுர்கவசத்தோடு
மெய்யற்றுர்பயங்களறறுாவிரலற்றுாமிடலொன்றற்றுா
தொய்யற்செஞ்சோாிபாயத்துடித்தனாதொலைந்துமாண்டார்
தையற்பங்குடையோன்றன்மையாவரேசாறறபாலாா. (௧௧உ)

தந்தைபட்டிறந்தவாறுமறையவற்றடிந்தவாறு
முந்துறுஞ்சேனைதம்மிற்பொருதறமுடிந்தவாறுஞ்
சிந்தைபெற்றுணாந்தான்வேந்தன்சிறுவனுங்கெழுந்துசென்ருன்
பைந்துணரலங்கறறிண்டோள்விசாந்தகற்பணிந்துநின்ருன். (௧௧௩)

என்னைகொலிதுமற்றென்றுமறிந்திலனிசைத்தியென்னப்
பின்னரும்பணியநோக்கிவிசாந்தகன்பேசக்கேட்டா
னென்னையாளமலன்செய்கையீதெனவறிந்தானீங்கென்
றன்னையுங்கோறியென்னுக்குமானுமகுடஞ்சாய்த்தான். (௧௧௪)

அவ்வழியிரங்கிநோக்கிவிசாந்தகனருளுநெஞ்சன்
செவ்வழியுளத்தோய்நன்றுன்றிறத்துளசெய்கையென்னு
வெவ்வழிநினக்குவேண்டுமியம்புதியென்னலோடும்
வெவ்வழிச்சேனைதம்மில்விளிந்துறுதளித்தியென்றான். (௧௧௫)

வாலிளங்குமரன்கூறக்கேட்டனன்மறையோனெந்தை
பாலலோசனனைநெஞ்சம்படுத்திநின்றிரக்கங்கூர்ந்தா
னுலியசேனைதம்மாறெழிந்துகையயாந்துநின்ற
மேலெழநறும்பூமாரிபொழிந்தனர்விண்ணுளோர்கள். (௧௧௬)

எண்டிசையீறுகாறுமெழுந்தெதிரமுழக்கங்காட்டி
மண்டுதுந்துமியிருபாப்புச்செவிபுகவானத்தூடு
கொண்டிறக்கினர்பொன்மானங்கணத்தவாகுறுநின்றா
கண்டவர்விசாந்தறபோற்றிக்கைகுவித்திணையசொல்வார். (௧௧௭)

பத்தியும்பயமும்பத்திவயிரமுமுலகத்துன்னை
யொத்துளரிற்றைநாளுமொருவரைக்கண்டிலேம்யா
முத்திவித்தாகநின்றநந்திசொன்மொழியால்வந்தே
மததநீமானந்தாங்கக்கைலைவந்தடைதியென்றார். (௧௧௮)

தாங்குறுமானத்தேறித்தன்னுயிராக்கிளைகளோடு
மோங்கினனும்பர்சசென்றானிந்திரனுவந்துவாழ்ததத்
தேங்குநீர்ப்பவளவேணியெம்பிரான்றிருமுன்சென்றான்
பூங்கழலிமையோரோத்தக்கைலைபுக்கிருந்தானன்றே. (௧௧௯)

தேவனுக்களித்தநன்னீாச்செந்நெலங்கழனிச்செய்வேட்
டாவியமறையோன்மைந்தரிருவரோடலங்குசெந்தீ
மேவியநிரயம்புக்கானீங்கிவன்விரும்பிசசென்ற
கோவியன்மகதர்கோனுமக்கொடுநிரயம்புக்கான். (௧௨௦)

இப்பெருங்காதைகேட்டுமீர்ஞ்சடைமுநிவீரொந்தை
செப்பருஞ்சிவத்துரோகஞ்செய்வரோசெய்தாரொன்னி
லொப்பரும்பத்தர்வாழுமூரகம்புகுதலாகா
வெப்பருநிரயத்தாழ்வாமீட்கலாநெறியுமுண்டோ. (௧௨௧)

கலிவிருத்தம்.

இக்கதைமுற்றுமிசைத்தனமீச
னக்கினிமேனிகுளிர்ப்புறவமிர்தந்
தொக்கபசுக்கவர்தீமைசுமந்தோர்
புக்கதுயர்க்கொடுழப்பதுபுகல்வாம். (௧௨௨)

பாண்டவனென்றொருபார்த்திவனன்னோற்
காண்டகைமைந்தரருந்திறலைவர்
காண்டகைமுன்னவனன்புகனிந்தே
மூண்டெழுசிந்தையன்வெந்திறன்மொய்ம்பன். (கஉங)

கருணைமுழங்குபெருங்கடலன்னான்
றருமநிரப்பியசாலிநிகாபபா
னொருவனுயிர்ப்பொறையாருயிரொப்பா
னருமகரக்கடல்வையமளிப்பான். (கஉச)

தருமனெனும்பெயர்தந்துயிரன்னா
ரொருவருதம்பியர்நால்வரொடும்போய்த்
துருவுசினத்துரியோதனனைச்செற்
றிருநிலமுற்றுமெதிர்ந்துறவாழவான். (கஉரு)

நீடவிரித்தநெடுங்குடைநீழ
லாடரவுசசியகன்புவிபன்னா
ளோடநடத்தியுடம்பொடுமும்ப
ரோடவிழ்தாமனெதிர்ந்திடுமெல்லை. (கஉசு)

தென்றிசையாளிதிரண்டதுணைத்தோட்
குன்றனசித்திரகுத்தனொடும்போய்த்
தன்றனிமைந்தனெனததருதருமற்
கன்றெதிர்சென்றிவையன்பினுரைப்பான். (கஉஎ)

சததியமன்றியசத்தியமறியீா
பத்திநெடும்பணபந்திநெடும்பா
ருய்த்தொருகவிகைநிழற்றியுவந்தீா
முந்தலைவோருமுவப்பமுயன்றீர். (கஉஅ)

பாரதமுற்றியசேனைபடுப்பான்
காரமுகில்வண்ணனுரைப்படிகண்ணுற்
றோர்வறநின்றதுரோணனுடன்பைந்
தாரபுனையசுவத்தாமனிறந்தான். (கஉகூ)

என்னவுரைத்திடுபொய்ம்மைதுடைப்பான்
பின்னனொடுத்தொருபேரினிசைக்குங்
கன்னமதக்கரியென்றுகழன்றீ
ரன்னதொர்பொய்ம்மையடைந்ததுநும்மை. (கஙO)

ஓதியபொய்ம்மையினுவியொழிந்து
காதுகளத்தினநேகர்கழிந்தா

நீதொழியத்தகுமென்னகரன்னமிப்
போதுதிரொன்றுபுகன்றிடுமெல்லை. (கஙக)

தந்தையுரைத்தவுளங்கொடுதருமர்
புந்திமகிழ்ந்தொருதென்றிசைபுக்கா
ரந்தநிலத்தனலாச்சியமென்னும்
வெந்தழனிரயம்விழித்தெதிகண்டார். (கஙஉ)

அந்நிரயத்தினருந்துயரெய்தா
வின்னலுழக்குமிவற்குளதீமை
யென்னிவன்யாவனெனத்திகழ்தென்பான்
மன்னவனைக்கைவணங்கிமொழிந்தார். (கஙங)

மைந்தனுரைத்தமனக்கொடுமேறலி
யிந்தவிவன்சிவபாதகனிவனுல்
வந்தசிவத்துரோகம்புகல்வாமென்
றுந்துசினங்கொடுரைக்குவதானன். (கஙச)

கலிநிலைத்துறை.

கோடுநீணதிபுடைபடுகுஞ்சரமென்னு
நாடதிற்படுவசுதையென்றொருதிருநகர
மூடதிற்பெருநான்மறைக்குலத்துளோனொருவ
னீடுறானெறியறத்தொடுமொருதனிநின்றான். (கஙரு)

வேதகோத்திரத்துதித்துளவிப்பிரமணியென்
றோதுநீதியனியறகையையிந்திரனுணர்ந்தான்
போதன்மேயிவற்றழீஇக்கொடுவிண்ணகம்புகுவா
னூதவன்புரையாரமொன்றவன்களத்தணிந்தான். (கஙசு)

ஆரமொன்றளித்தருமறையவன்றனைநோக்கிப்
பேரொளிப்புனையாரமீந்தவிரொளிபிறக்கச்
சோர்பசும்பொனுயிரமொருவைகலிற்சுரக்கும்
பாரகத்ததுகொண்டுநீபேரறம்பரிப்பாய். (கஙஎ)

என்றுபோக்கினனிந்திரன்வேதியனெய்தி
யன்றுநான்முதல்வைகலொன்றுயிரம்பசும்பொன்
றுன்றுபேரொளிப்புனைகலன்சுரந்திடப்பெற்று
னின்றுபுண்ணியமெவற்றையும்புரிந்தனனெடுநாள். (கஙஅ)

பரக்கும்வெண்டிரைபடுகடனெடுநிலப்பரப்பிற்
சுரக்குமாவினமந்தணர்க்களவறத்தொகுத்தா

ணிரக்குமாத்தொறுவவற்றிடைநிலாக்கொழுந்திதழி
சுரக்கும்வார்சடையவன்பசுவொன்றுபோய்க்கரப்ப. (௧௩௯)

எடுத்தநீரொடுமறையவர்க்குதவுமானினத்தோ
டடுத்தணிர்தசூலாவையுமாங்கவர்க்களித்தான்
கடுக்களத்தனுலயம்பரிக்குநரதுகண்டார்
திடுக்கமெய்தினரோடினரப்பசுச்செறுத்தார். (௧௪0)

செறுத்தகாலையிலப்பசுவேற்றவன்றிரும்பி
வெறுத்தசிந்தையின்விப்பிரமணிதிறத்துரைப்பக்
கறுத்தசிந்தையன்வெகுண்டனன்பாதகங்கருதான்
மறுக்களத்தனதாலயத்தவர்க்கிதுவலிப்பான். (௧௪௧)

வைகலாயிரம்பசும்பொனெம்பாற்றரவழங்கிச்
செய்கலன்புரிந்தளித்நனன்பரந்சரன்சிவனுக்
கெய்துமென்னுமையோர்பசுத்தந்துநிலிழிபோ
வெய்துரைத்தனிரழிவழக்கெனுசசொலாவிடுத்தான். (௧௪௨)

ஐயனுலயம்பரிக்குநரரசவைபுகுந்தார்
மைவருங்களத்தார்வசந்தேச்சுரர்க்குளதாங்
தெய்வமாப்பசுப்பிடித்தொருமறையவன்செங்கைப்
பெய்யுநீரொடுங்கொடுத்தனன்விப்பிரமணியே. (௧௪௩)

என்னுமவ்வுரைகேட்டனுங்கேட்டிலார்போல
மன்னனெனுறுமுறறுரைத்திலன்புரோகிதமறையோ
னன்னகாலையிலரசனுக்கடுத்தடுத்துரைத்தான்
மின்னுவேணியனுலயச்சுரபிமீட்டளிப்பான். (௧௪௪)

இருக்களந்தறிபுரோகிதமறையவனிசைத்த
கருத்திலொன்றுமுற்றுணர்ந்திலன்கனைகழல்வேந்த
னுருத்தெழுந்தனன்சிவத்துரோகத்தனையொருங்கே
முருக்கியாருயிர்முடித்துறநான்மறைமொழிந்த. (௧௪௫)

ஆதலாலிவற்கோறியென்றிசைத்தனனரச
ஞேதுநான்மறையமைச்சனைநோக்கினனும்பர்த்
தாதுலாவருங்கற்பகவாசவன்றனக்கென்
றேதிலாரமொன்றளித்தவன்றழீஇக்கொளவிருந்தான். ()

அச்சிறப்புடையந்தணனுருயிரவனபான
மெய்ச்சிறப்பறவிளித்துமேல்விளைவனயாதோ
கொச்சைமக்களினுரைத்தனைவருவனகுணியா
விச்சைகற்றுணர்ந்தளந்தறியுணர்வெலாம்விடுத்தாய். (௧௪௭)

என்றிழித்தனனிவனுரையாவையுமிறைவன்
ஞென்றுதொட்டரனடிமைபூண்டொழுகியதுயோ
னின்றிவன்றிறத்திருப்பினுந்தீண்டினுமெரிவாய்
தென்றிசைப்படுநிரயமுற்றிழிவதுதிண்ணம். (கசஅ)

பூதிவேண்டியுமுருத்திரமாமணிபுனைந்து
மாதியஞ்செழுத்துணர்ந்துமுற்றருந்தவம்யாவுஞ்
சேதியாவருஞ்சிவத்துரோகத்தினைத்தெரியா
னேதிலானிவன்றன்மைநன்றலவெனவிகழ்ந்தான். (கசகூ)

நோக்கினுன்றனிநொறில்டரியரசனைத்தெளிநீர்
தேக்குசெஞ்சடையவற்கடாசசிவத்துரோகங்க
ளாக்குவாரதற்கியைகுவாரனைவர்த்தொடினும்
வாக்கினுலுரைத்திடினும்வந்தடுக்குமாநிரயம். (கடு௦)

என்றுரைத்தனனெழுந்தனனிடையிடைகானஞ்
சென்றுபுக்கனன்புரோகிதன்செஞ்சடைப்பவளக்
குன்றமன்னவன்கோயிலார்கோவியனுணராப்
புன்ஞெழிற்புலேவேந்தனென்றனைவரும்போனர். (கடுக)

மின்னலங்கொளிவேற்படைவேந்தனுநெடுங்கான்
மன்னுமாமறைப்புரோகிதன்றன்னுழைவருவான்
சொன்னதாதனைவிடுத்தலுமன்னவன்சுளியாத்
துன்னருங்கடுங்கானகத்திருந்துநாடொலேத்தான். (கடுஉ)

கள்ளிகாய்வெடித்தெழுதருஞ்சில்லொலிகலிக்கு
முள்ளுடைக்கொடுங்கானகத்திருத்தலுமுனோநா
ளுள்ளசெம்பொனற்ஞெழிதரவறுமையினுழந்தான்
வெள்ளைவாரணனுங்கதுவுணர்ந்தனன்விரைவான். (கடுங)

ஈர்ஞ்சடைப்பரனெம்பிராற்கினியனின்றுழக்குங்
கூர்ந்தநல்குரவென்றெழுந்தவ்வனங்குறுகி
நேர்ந்துதெய்வமாச்சுரபிதந்தகன்றனனினையா
வோர்ந்தயாவையும்புரோகிதற்குதவெனவுரைத்து. (கடுச)

சுரபியன்னவற்கிந்திரனளித்ததுந்தொலையாப்
பரவுநல்வளமாங்கதுபயப்பதும்பகர்ந்தா
ரரசர்கோமகனளவறுசேனைகொண்டகன்று
புரகிதற்கொணர்ந்திருத்துவானெடுநெறிபுகுந்தான். (கடுடு)

புகுந்தமன்னவன்கனப்பெருஞ்சேனையுட்புடைவீழ்
பகுந்துபாய்மதப்பணைமருப்பொருத்தன்மால்யானை

மிகுந்தழும்மதநிரையழிதரத்தனிவேந்தன்
ஞெருந்திறற்படையனைத்தையுநிலனுறத்துவைத்து. (கரு௬)

புரைபடுங்கரங்காலொடுமருப்பொடும்புகுந்தோர்
வரைதிரிந்தெனவுழக்கியமன்னவன்சேனை
தரைபடுத்திய தடுதிறற்றனிக்குடைவேந்தை
யரைபடுத்திய தகனிலத்தக்கடுங்களிறு. (கரு௭)

ஒழிந்தசேனையுங்காவலர்யாவருமொருங்கே
யிழிந்தகட்புனலாறலைத்தெழவழுதிரங்கிப்
பொழிந்ததுன்பொடுமாநகர்புகுந்தனர்புலம்பி
யழிந்ததண்டமென்றெழுந்தனவழுகுரலமலை. (கரு௮)

கனைபொலன்கழலரசுபட்டிறந்தமைகாணு
வினைதருந்தனிக்குமரனையிவரரசிருத்தித்
துனைகடும்பரிச்சேனையர்யாவருந்தொழுதா
ரனையனவ்வரசிருந்தினிதளித்தனனவனி. (கரு௯)

நடந்தநாள்பலநண்ணருஞ்சின்னெறியடவி
யடைந்துபுக்குநல்லமைச்சுடையந்தணர்கொணர்வான்
றொடர்ந்தநால்வரைவிடுத்தலுஞ்சென்றனர்தொழுதார்
படர்ந்தகாரணமென்னெனத்தனித்தனிப்பகர்வார். (கசு0)

தெளித்தவெண்குடைவேந்தனிசெல்வனத்தெதிர்ந்து
விளித்தல்வேண்டினன்மேவலும்வெகுளிவேகத்தாற்
களித்தழும்மதக்களிறுசெற்றிறந்தனன்காணு
வளித்தவன்பினேடெழுது * மீண்டடைந்ததவ்வனிகம். (கசுக)

அன்னவன்றனிக்குமரனவ்வரசுகொண்டிருந்தா
னின்னைவேண்டுறுமன்புடைநிலைமையனுன்
பின்னரொங்களைநின்னுழைவிடுத்தனன்பெரியோ
யென்னவன்னவனுங்கவர்க்கெடுத்தெடுத்தியம்பும். (கசுஉ)

செயற்கருந்தனிச்சிவத்துரோகஞ்செயுந்தீயோ
னயர்த்தசிந்தையன்விப்பிரமணியெனுமவனை
வயக்குவாளெறிந்துயிர்செகுத்தீர்ந்திடின்வருதுங்
கயக்கருங்கடனிலர்தனைக்கைதொழத்தகுமால். (கசுங)

ஓவில்வெண்குடைப்புடிநிழலின்னுயிரோங்கு
மூவருந்தனித்திருவருள்புரிகுவர்முறையாற்

* "டெழுந்த மீண்ட" என்றும் பாடம்.

றேவர்யாவருஞ்செல்வனைத்தொழுவர்நீணிலத்துத்
தாவிலன்புடையறங்களுந்தனித்தனித்தழைக்கும். (௧௬௪)

விலங்கொழுக்குடைவிப்பிரமணியைவெள்ளொளிவிட்
டலங்குவாளெறிந்தாருயிரகற்றுவானறைவீர்
பொலன்கழற்றனிக்குமரன்மாட்டினிதுறப்புகுவேம்
வலங்கொண்மொய்ம்பினீரன்றெனில்வருகலமென்றான். (௧௬௫)

நல்லொழுக்குடைப்புரோகிதனுரைத்தமைநவின்றார்
மல்லொழுக்குடை வரைப்புயன்சித்திரசேனன்
புல்லொழுக்குடைவிப்பிரமணிவரப்புகன்றான்
சொல்லொழுக்குடைமறையவர்யாரையுந்தொகுத்தான். (௧௬௬)

அந்தணர்குழாமடைந்திடுமரசவையரசன்
வெந்தசிந்தையன்விப்பிரமணிமுகநோக்கி
யெந்தையாக்கவாகள்வனீசெய்வனயாவுஞ்
செந்துவர்ச்சடையவர்க்கருளன்றெனச்சீறி. (௧௬௭)

கண்ணினோக்கினுநின்பெயருரைக்கினுங்கருத்தி
னெண்ணிநோக்கினுநரகமல்லாற்பிறிதில்லை
வண்ணமாநகர்வேதியர்க்கேளெனவழங்கி
வெண்ணிலாப்பொழிநெடுங்குடைப்புரவலன்வெகுண்டான். ()

கொண்டுபோதிரென்றுரைத்தனனேவலர்குறுகி
தன்டுதாங்கினர்பிடித்துருத்தங்கர்தணந்தார்
மண்டைதுண்டுறவிப்பிரமணியுயிர்மடித்தார்
திண்டிறற்பரிக்குமரனுமனமகிழ்சிறந்தான். (௧௬௯)

கண்ணோராயிரமுடையவன்கண்டுகண்களித்தான்
மண்ணகத்திழிந்தேத்தினன்குமரனைவழுத்தி
யெண்ணிவிப்பிரமணிக்கருளாரமுற்றெடுத்தா
னண்ணல்வேற்படையரசிளங்கோளரிக்களித்தான். (௧௭0)

இதுவுணர்ந்தனர்புரோகிதனிருத்தலுந்தூதர்
புதுமொழிந்துறக்கேட்டனன்மயிர்ப்புறம்பொடித்தான்
கதுமெனப்புகுந்தெய்தினனரசனைக்கண்டா
னதுவுணர்ந்திருந்தளவளாய்மகிழ்ந்தனனமைச்சன். (௧௭௧)

தாரைநீரொடுமாத்தரவேற்றவன்றவழ்ந்த
கார்தொடுங்கொடிக்கச்சதேயத்துளவசுவுக்
கீரவெண்ணிலாக்கொழுந்தணியெம்பிரான்சுரபி
யோர்வில்சிந்தையாய்விடுதியென்றெழுதினரோலை. (௧௭௨)

எழுதுமோலைகையேற்றிலனீசனுக்கீர்ம்பால்
மொழியுமப்பசுவிடுத்திலன்புரவலன்வெகுண்டான்
வழுவறுங்குணக்கச்சதேயத்துளமன்னற்
கொழுகுமன்புகொண்டெழுதினன்விடுத்தனனோலை. (௧௭௩)

செறிந்தவார்கழற்சித்திரசேனனீட்டவிழா
வறிந்தவாசகத்தாங்கவற்பிடித்தசைத்தனுப்பி
நெறிந்தபான்முலையாவொடும்விடுத்தனனிறைவண்
டெறிந்துலாவருந்தாரினன்முன்னரினிறுத்தார். (௧௭௪)

இறுத்தகாலையினப்பசுவீசனுக்கீந்தான்
கறுத்தசிந்தையின்வசுவிருகணபறித்தெறிந்தா
னிறுத்தகோமுறைதழைதரவறத்தொடுநின்றான்
வெறுத்ததீவினைக்கீழபபட வெண்குடைவிரித்தான். (௧௭௫)

கட்புலங்கடந்தேகியகடுங்கண்மாமறையோ
னுட்புலங்கலைந்திறந்தனனெமருருத்தெழுந்து
கொட்புறும்புயம்பிணித்தனரிறுக்கினாகொணர்ந்தார்
தட்பநீங்கனலாச்சியத்திட்டனாசலித்து. (௧௭௬)

பரமனாலயப்பசுப்பிடித்தளித்தவனதனை
விரவுசிந்தையினுணர்ந்துமீட்டளித்துறுவேந்த
னிரவுநன்பகலுங்கனலாச்சியமெனுமிந்
நரகுவீழ்ந்தனர்கற்பமோராயிரநடந்த. (௧௭௭)

இன்னரன்றியுமீங்கிவர்குலத்துளோராயாருந்
துன்னரும்பெருநரகுவீழ்ந்தளவினொடொலைப்பா
றொன்னவெந்திறலந்தகனியம்புறக்கேட்டா
ரன்னகேட்டுழித்தருமருமதிசயமடைந்தார. (௧௭௮)

உரைத்தபொய்மையாற்றருமருநரகுகண்டொழித்தார்
நிரைத்தமாமணிமானமீச்சிறந்தனர்நிரைத்து
விரைத்தபூமழையிழிதரவிண்ணவர்வியப்ப
விரைத்தவன்பொடுங்கற்பகநீழல்வீற்றிருந்தார். (௧௭௯)

காதையின்னமொன்றுளததுபுகல்வதுகருதித்
தீதின்மாதவர்கேண்மினென்றருந்தவத்திருத்துஞ்
சூதமாமுனிசொற்றனனுங்கவர்தொகுப்பா
யேதின்மாக்கதையென்றலுமெடுத்தெடுத்திசைப்பான். (௧௮௦)

தொல்லைநேமியோனுந்தியந்தாமரைத்தூயோ
னெல்லைகாண்பருமுலகெலாங்காண்பதற்கெண்ணி

யொல்லையோதிமமுகைத்தெழுந்தவ்வழியொருங்கே
செல்லநோக்கினன்கடைமுறையடைந்தனன்றென்பால் (கஅக)

செல்லுமத்திசைநரகெலாமொருங்குறத்தெரிந்தா
னல்லன்மன்பதையலமரவெருவிநெஞ்சழிந்தான்
சொல்லுமாத்திரைவிண்புகுமனத்தொடுஞ்சுழலா
நில்லிதற்கயல்போகலையென்றனனிமலன். (கஅஉ)

ஆதிநான்முகத்தந்தணனுரைத்தலுமன்ன
மேதிதற்கயலென்னலுமென்றுகைத்தவற்குத்
தீதிழைத்திடுசிவத்துரோகரைத்தெறுநிரையம்
போதலாங்கவர்க்கான்பரிதென்றனன்புனிதன். (கஅங)

செய்தபாதகமெவற்றினுஞ்சிவத்துரோகங்கள்
வெய்துகொல்லெனப்பின்னருமோதிமம்வினவக்
கொய்துரைப்பனமறைகளுமாகமக்குலமு
முய்தரும்பலபுராணமுமுரைப்பனவுணராய். (கஅச)

உருத்தபாதகமென்றுளயாவையுமொருங்கே
திருத்துமன்னவர்புண்ணியத்தாலவைதீருஞ்
செருக்குவார்சடையெம்பிரான்சிவத்துரோகங்கள்
கருத்தினோர்ந்துசெய்யெவற்றினுங்கழியுமோகழியா. (கஅரு)

என்றெடுத்தெடுத்திசைப்பனமறைகளும்யாவு
மின்றவர்சசெலநோக்கினும்பழிவருமெமக்கு
நின்றுமீளுதியென்றனனெடுமலர்க்கிழவ
னன்றுவெண்சிறையன்னமற்றயற்கிதுசொல்லும். (கஅசு)

கொழுந்துவிட்டெரிவடவையங்கொழுந்தழனடுவ
ணெழுந்தவச்சிரநெடுந்தறிக்கரம்பிணித்திறுக்க
வழுங்குமெய்துடித்தரற்றினனொருவனீங்கிவனு
லொழுங்கறப்படுபாதகமிதுவெனவுரைப்பாய். (கஅஎ)

எனப்புகன்றிடுமோதிமததெதிருறநோக்கி
யுனக்குரைக்குதுமீங்கிவன்றன்மையென்றுரைப்பான்
புனற்படுஞ்சவுராட்டரநாட்டகம்பொருந்தி
மனக்குவப்பனபுரிவதுசவுரமாநகரம். (கஅஅ)

அந்தமாநகர்ப்பரதவர்கோத்திரத்தமைந்தான்
சிந்தைநல்லொழுக்குணர்ந்துறச்செலுத்தியசெல்வன்
விந்தைபூசனையுவப்பினுலிருக்கிதிமிகையா
லுந்துசிந்தையன்சுத்தனென்றொருபெயருடையான். (கஅகூ)

தருமநீதியன்றயவினூற்றுயினுமூரிய
ஞொருவருந்தனித்தொழிற்படுத்தொருவனைப்படுத்தான்
றுருவுநாள்பலகழிந்தபின்றெருகடலேறிப்
பொருவருங்குலவாணிபத்தொருநெறிபோனான். (ககூ0)

ஓட்டுவெண்டிரைநெடுங்கடனடுவகத்துற்றான்
மூட்டுதீவினையிருந்தவமுழக்கெழும்புயலா
னீட்டுமாருதமலைப்புறநெடுங்கலங்கவிழ்ந்து
மாட்டிருந்திரையெடுத்தெடுத்தெற்றவு * மருண்டான். (ககூக)

கருங்கடற்கலங்கவிழ்தரவெருவருங்காலை
முருங்குமுத்தலைச்சூற்படைக்கொற்றவைமுன்னி
வருந்துருவழியக்கலனவனொடும்வருத்தித்
திருந்துசிந்தையன்போயினனிதியொடுஞ்சிறந்தான். (ககூஉ)

வகுத்தவங்கமுமேறியமாக்களும்வங்கந்
தொகுத்தபல்பொருள்யாவையுந்தோமறக்கிடைத்தான்
பகுத்தசூற்படைக்கவுரியாற்பயந்தனனென்று
நெகிழ்த்தசிந்தையானெடுநிலந்தொழுதுறநின்றான். (ககூங)

ஆயகாலையினன்னவன்கடிமனையகத்துத்
தூயமங்கலமணவினையாதரத்தொடுத்தான்
வாயில்காவணம்வகுத்தனன்வேண்டுவவருத்தி
மேயபோனகமமைத்தனன்குலத்துளோர்வியப்ப. (ககூச)

தூரியம்பலமுழங்குறச்சுரிமுகமிரங்க
வூரியாவருமிடைந்துறநான்மறையொழுங்கா
மூரிவேதியர்வரன்முறைமொழிதரமுயன்று
பூரிகோடியின்மேற்செலமணவினைபுரிந்தான். (ககூரு)

பாடுமின்குரல்வயிரியர்கண்ணுளார்பரதத்
தாடுகோகிலக்குதலையர்பூகதரடைந்தா
ரோடவிழ்ந்தலரிதழியஞ்சடைமுடியெம்மா
னீடுமாலயத்தாதியர்யாவருநிறைந்தார். (ககூசா)

செல்லலின்றவர்க்கினியனவடிசிலுஞ்சிறப்பு
மல்லலோங்குறப்புரிந்தனன்மணவினைமுற்று
மெல்லைநாட்சவுரோச்சரத்தாதியெம்பெருமான்
புல்லமுத்திரைபொறுத்தவட்களித்தனன்புந்தி. (ககூஎ)

---

* "தெடுத்தெடுத் தெறிதர" எனவும் பாடம்.

அளவறுந்தனமளித்தனனுங்கவட்கயர்ந்து
புளகவெம்முலைத்துயின்றனன்வெள்ளிடைப்புகுதா
னிளகுநெஞ்சினன்விடுத்திலனவளையாதுணர்ந்தார்
தளவவாணகையிடத்திறேனுலயத்தவர்கள். (கக அ)

ஆவினேற்றிறேனுலயப்பரிகலத்தவளை
வாவுசிந்தையின்மனையகத்திருத்துதல்வழக்கோ
மேவுமன்னவள்வெளிவரவிடுத்தியென்றிசைத்தார்
பாவியன்னனைவிடுத்திலனுசையுட்படலால். (ககக)

அலங்குபொன்முடியரசனுக்குரைத்தனரரசன்
வலங்கொடேரால்மைச்சனைவரவழைத்தருளி
நலந்தருஞ்சவுரேச்சுரத்தாதியைநயப்பான்
விலங்குசிந்தையன்விடுத்திலன்போலுமோவினைஞன். (௨௧0)

நீயவட்புகுந்தக்குலத்தாதியைநிமலன்
கோயிலுட்படவிடுததனைவருகெனக்குணியா
வேயவேந்தனைத்தொழுதனனமைச்சனுமெழுந்து
போயவற்குரைத்துருத்தனனுங்கவள்பொருட்டான். (௨0க)

அரசராற்றியகடன்முறையுணாந்துசொல்லமைச்சைப்
பரவிவேண்டியபசும்பொனுற்றன்வசப்படுத்தான்
விரசிமீண்டனனமைச்சனுமாநிதிவிருப்பா
லுறவுவேந்தனுக்கருஞ்சினமாற்றிநின்றுரைத்தான். (௨0௨)

அற்றநோக்கினின்றளிபவனிருநிலத்தெவர்க்கும்
பெற்றதாயினுமுரியனிட்பெரும்பிழைபொறுத்தான்
மற்றுரைப்பதென்கோடியின்மேற்செலவழங்கு
மிற்றையின்றுகொணடொழிதியென்றமைச்சனுமிரந்தான். ()

எதிரமைச்சனையழுலெழவெகுண்டனனிறைவ
னிதிவிருப்பினுலுரைத்தனைநிளாப்புனைவேணிக்
கதிர்மழுப்படையெம்பிரான்றிருவருள்கறுப்பி
னதிர்பகட்டுடையந்தகன்படுப்பதொன்றறியாய். (௨0௪)

போதியீசனதாலயப்பணிவிடைபுரியுந்
தாதியின்றுவிடுக்குதியெனுமுறைசாற்று
நீதிநேர்ந்துடன்விடுக்கினன்றல்லதுநிகழ்த்திற்
பாதகத்தனவ்வணிகனைக்கொணர்கெனப்பணித்தான். (௨0௫)

மொழிந்ததொன்றுமுற்றுணர்ந்திலனமைச்சனுமுறைமை
கழிந்தமாநிதிவிருப்பினுலாங்கதுகருதாப்

பொழிர்தமாமணிக்கனைகழற்புரவலன்பொருமா
வெழுந்தசீற்றமிக்கெழுந்தனன்வணிகனில்லிடத்து. (உ0சு)

உருத்தசீற்றமிக்குருவுகொண்டனையவற்கொருங்கே
பெருத்தசேனையும்பிறகுறவணிகனிற்புகுந்து
மருத்தவார்குழற்றுதிபைவம்மெனவருத்தி
யருத்தியீசனதாலயம்புகுந்துறவளித்தான். (உ0எ)

பின்னரன்னவன்சிலதியர்யாரையும்பிறையூர்
பொன்னின்வாசடையெம்பிராற்காக்கியபுனித
னின்னசெய்துருவமைச்சனையுயிரொழிதகழா
மன்னுநாய்களைவாளெறிந்தாருயிர்மடித்தான். (உ0அ)

அனையரீங்கிவர்வச்சிரமதலையுறறழுங்கக்
கனைகொழுந்தழலாங்கவர்மெய்யுறக்கழிந்த
நனைநினைந்துளிசெய்யினுலெழுவனநம்பற்
கினையசெய்குநாபடுவனகொடுநரகிப்பால். (உ0கூ)

என்றனைத்தொடுநிகழ்த்தினன்கமலவீட்டிறைவ
னன்றுணர்ந்துளவோதிமமச்சமுற்றனுங்கி
நின்றுமீண்டதுநெடுமலர்ப்பீடிகைநிமலன்
சென்றுதன்னுடைப்பதவிவீற்றிருந்தகஞ்சிறந்தான். (உக0)

என்பயாவையுஞ்சூதமாமுனியெடுத்தியம்ப
வன்பினேர்ந்ததிமுனிவராதிசயமடைந்தார்
முன்புமுப்புரமெரித்தவன்முறைபிறழாது
நன்பகறகழிதரசசெலவரிதெனநவின்றார். (உகக)

அளவையீதுகொன்டமைந்ததோவவமதித்தனராய்ப்
பிளவிளம்பிறைக்கண்ணியோற்பேணலராகி
யுளநிகழ்ந்துளவிகழ்ச்சியாலொழிவறுநிரையத்
திளகுறுதொழிபதகரையிசைப்பனகேண்மின். (உகஉ)

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

பகருமெண்வகையோகமுந்தனித்தனிப்பயின்றியல்சிவயோகி
புகலுமாகமமடந்தருநாவினன்புண்ணியப்பொருப்பன்ன
னிகலுமுக்குறும்பெறிதருசதானந்தனெனும்பெயர்ச்சிறப்புற்றோ
னகிலமோர்பதிஞன்கினுமொல்லைசென்றமிந்தொருகணத்தெய்தும். ()

வையம்யாவையுமொல்லைசென்றகனிலமன்பதைப்பரப்பெல்லாஞ்
செய்தயாவையுமன்னர்செங்கோன்முறையாவையுந்தெரிந்தீண்டப்

பைதரும்பணிவேணியோன்சந்நிதிப்பகர்ந்தரும்படந்தாங்கப்
பெய்தமாநிலக்கண்ணுறவிண்ணுறப்பெயர்ந்தனரொருகாலம் (உகச)

மேருமால்வரைசூழ்வருமூலகெலாம்விண்படர்ந்தெழுந்துற்முன்
சார்வருந்தனித்தென்றிசையடைந்தனனத்திசைத்தனிநாதன்
வார்கழற்றிறலந்தகனெதிர்ந்தனன்யோகியைவழிபட்டான்
பேரொளிப்புனையாசனத்திருத்தினன்செய்வனபலபேணி. (உகரு)

மயிலையோர்புடையமைத்தருளெம்பிரான்வளரொளிப்பழங்காலக்
கயிலைநீத்திவணடைந்தனையான்செயக்கடவதித்தவமன்றே
யெயிலெரிதவற்காட்படுமவர்பெறும்பேறுபெற்றனனென்னு
வயிலெயிற்படையந்தகனுரைத்தலுமருந்தவனுரைசெய்வான். (உகசு)

உலகம்யாவையுமொல்லைசென்றடைந்தனமுன்னுடைத்தென்பால்வந்
தலகினீணீரையப்பரப்பறிகுவானடைந்தனமரற்போற்றுப்
புலையர்தீங்குறுநரகெலாங்காட்டுதியென்றலும்பொறிகாலுங்
கொலைசெய்முத்தலைச்சூற்படையந்தகன்றொழுதுடன்கொடுபோனன்.

கூசுவெந்தழலொழுகுறக்காச்சியகொடுநுனையுடக்கிட்ட
வூசியெங்கணுநிரைத்ததிறேட்டலுமுள்ளுடல்புதைந்தூன்ற
வாசையெங்கணுமழுகுரலலைப்புறவலறுவாரவர்புன்றேன்
மூசுவெந்தழல்வெதுப்பியகுறட்டொடும்பிடுங்குவார்முனிந்திட்டார்.

ஒழுகுசோரியொத்துருக்கியசெம்பினிட்டமுக்குவருடற்புன்றேன்
முழுகிவெந்துறவெடிப்பதுவெண்ணிணங்கொதிப்பதுமூளைச்சே [கிக்
கிழுகுவெண்ணெயொத்துருகுவதிவைபொருதெழுதொறுமிவைநோக்
கழுநுனைப்படைகோத்தெடுத்தமுக்குவர்கண்மணிவெடித்தோட. ()

இறுக்குபாசமிட்டிருமருங்கமைத்தனர்கிடத்திநெட்டீர்வாளிட்
டறுப்பர்செந்தழலொழுகுறக்காச்சியசலாகைகொண்டவர்நாசி
நிறுப்பரன்னவர்செவித்தொளைசுறுக்கொளநிறுத்துவர்நெடுங்கூடம்
பொறுப்பர்மற்றவர்கவுட்புறநெரிதரப்புடைப்பர்தென்புலத்தூதர். ()

கருவியூழ்முறைபற்பலநிரைத்ததிற்கிடத்தியக்கருவிக்கூ
ருருவியோடநீடிரத்திடைக்கூடமிட்டோச்சுவர்புலந்தோறுங்
குருதிபீர்விடக்கதைமடுத்திறுக்குவர்கொழுந்தழற்பிழம்பேந்திப்
பருகவாய்மடுத்துறுக்குவர்பருகுறார்நாப்பிடுங்குவர்பல்கால். (உஉக)

ஒல்லைமாநிலத்துயிர்செகுத்துண்டவர்வருதிறொன்றுறுத்தன்னோர்
பல்லுநாவும்வெந்துருகிவெம்புகையெழக்காச்சியதழற்பாளஞ்
செல்லவாய்மடுத்திருங்கதையோச்சுவர்செலுத்துவர்மணிப்பாச
மல்லன்மாக்களைத்திறுக்குவர்தழற்பாலுரிஞ்சுறவலித்தீர்ப்பார். (உஉஉ)

என்புதோறசைநரம்பிவைதெரிவுறுதிருந்தழலிருப்புச்செக்
கன்பிலாரூடலனைபடத்திருக்குவர்பிறர்மனையகவிப்போம்
புன்புலைப்படுபாதகர்நெஞ்சொடுபுயத்துணைபுகைமண்ட
வன்பொறித்தழற்றூணகந்தழுவுறப்பிணிக்குவர்மணிப்பாசம். (உஉ௩)

குருக்களந்தணர்மேலவர்க்கான்குறினெழுதராக்கொடியோரை
யிருப்புவெந்தகடழலெழக்காச்சிமீதிருத்துவரொளியோரை
வெருக்கொளப்புரிபடிறரையடுசினவெள்ளெயிற்றிரும்பார்ந்த
ளுருத்துயிர்ப்பெறிநெடுந்தொலைப்பிலத்திடைவீழ்த்துவருறுக்குற்று.()

ஆறலைத்தரும்பொருள்கவர்பதகரையருந்தசையெயிறூன்றக்
கூறுசெய்துணுங்கழுதுறுநரகிடைக்குப்புறப்பிடருந்திச்
சீறியொன்றொடொன்றிகலியன்னவாபுலாறின்பனதெரிகிற்பா
ரேறெறிந்தலைக்கழுநுனைக்கிட த்துவரொரியெழவிழிக்கின்றார். (உஉரு)

குதைக்கொடுஞ்சிலைப்பகழியிற்கானமாக்கொன்றுதின்றுறப்பெல்லா
முதைப்பவீங்கியநிணத்தசையரிந்தரிந்திருப்பகல்வறுத்தொண்பற்
புதைக்கவவ்வுறச்சுடச்சுடத்தீற்றலும்வாய்ப்புழைப்புகைமண்டிச்
சிதைத்தநாசியின்புறம்புகவுயிர்த்துயிர்த்தாற்றுவர்சிலதீயோர். ()

மாதிரஞ்சுழல்புட்குலம்படுப்பவர்மறிதிரைபொருநீர்வாழ்
சாதிதூண்டிலிற்படுப்பவரணரியிற்சங்கிலிமுடக்கேற்றி
மீதுகற்றறிவிட்டமிட்டசைத்தவர்கீழ்ப்படவெகுளித்தீ
யோதுநெய்சொரிந்தெழுப்புவரவருடம்புருகியநிணஞ்சோர. (உஉஎ)

செருமுகந்தணித்தருளியவேந்தைத்தெவ்வடுந்திறநோக்கி
வெருவியோடியபதகரைச்சுழல்வழிவீங்கிருணிரையத்துக்
கருவிகாதுறச்சுற்றுறவிடுத்தனர்கன்றொழித்தினங்கங்குற்
றுருவுகள்வரைக்கற்கறை * மடக்கியிட்டிடிபடத்துவைக்கின்றார். ()

ஒறுத்தநல்குரவுடற்றுறவிரப்பவர்க்குதவியதுதவாது
மறுத்தபாதகரடைக்கலப்பொருள்கவர்வஞ்சகரினையோரைத்
தெறுப்பதங்குழிதிரைந்தெழுநரகிடைவீழ்த்தலுஞ்சினவாலிற்
சுறுக்கொளுந்தொறுமோவெனவரற்றுவர்துள்ளுவர்துடிப்புற்றார். ()

இனையர்யாரையுங்காட்டுறநோக்கினனருந்தவச்சிவயோகி
யனையதுன்புழந்தலமராலுளத்தடைத்திரங்கினனதுநோக்கி
வனைபொலன்கழலந்தகனெந்தைநீயிதற்கிரங்கினைவாளா
நினையுநெஞ்சமுரடுக்குறுமிங்கிதற்கப்புறநெடுங்கும்பி. (உ௩0)

* கல்லுரல்.

என்றுரைத்தனனந்தகனுலகெலாமேத்துறுஞ்சிவயோகி
நின்றுநோக்கினனீங்கிவண்வருகெனப்பின்னருநிகழ்த்தாமுன்
சென்றுநோக்கினன்வடவையங்கொடுந்தழனடுவுறத்தீகின்று
ரன்றரற்றுறப்பிளந்தவாய்தொறுந்தழற்கொழுந்துதீத்தழல்வாரை.()

காரிருட்பிழம்படைத்தவெம்பிலத்திடைக்கடுங்கனனெடுஞ்சீற்றச்
சாரைவாளராவென்புடனிறுக்குறச்சுற்றியத்தறுகண்ணோர்
சோரிவாய்மடுத்துறிஞ்சுவவாணுனைசெவித்தொளைதொளைத்தொட்டி
யீரநாக்கடித்தெயிற்றொடுமிறுக்குறவென்பெழவுயிர்ப்போரை. (உ௯உ)

சுரித்தநெட்டுடனெளித்தகாரட்டையங்கும்பியுட்டொலைவின்றி
விரித்தபாழிவாய்விழுங்கவுங்கக்கவும்பற்பலகடித்தீர்த்தங்
குரித்தசோரிவாய்மடுக்கவுந்தசைகழிந்தொழுகவுமுடற்காந்தி
யெரிப்பவுங்கிடந்தரற்றியக்கும்பியுண்முழுகிநின்றெழுவாரை. (உ௯௩)

அடுத்தயோசனையித்தனையகல்மென்றளப்பருஞ்சலக்கும்பி
யெடுத்தவள்ளுகிர்ப்பகுத்தவாய்நெட்டுடலிடங்கரினிடைப்பட்டு
படுத்தகாலொடுகைகடித்தருந்துறப்பதைத்தவைக்காற்றுராய்க்
கடுத்தசிந்தையினெடுத்தெடுத்தழைத்துவீழ்ந்தேக்குறக்கழிவாரை. ()

ஓர்கைகீழ்ப்படக்கிடத்துவரடிக்குறங்கோரடிமிதித்தூன்றி
வாரியோர்குறங்கிசித்துறப்பிளந்தறையோச்சுவாவகைப்பட்ட
பேருடற்பகைமுன்னையதாதலின்பிடித்தெடுத்தழன்மாட்டிச்
சோரிதூங்குறப்புரட்டுவரின்னணமடர்த்துறத்துயர்வாரை. (உ௯௫)

வாகுமூலமிட்டிருங்கயிறிறுக்குறவரிந்திறைவரையாத்துச்
சேகுநுண்ணுனையூசிவெள்ளுகிரிடைசெலுத்துவர்வடவைச்சூ
டேகுறுதடுமணற்குகையிறக்குவரிங்கிவைபொறுத்தாற்று
தாகுலத்தொடுமழுதழுதரற்றிநின்றலமரலுறுவாரை. (உ௯௬)

நோக்கினுன்சிவயோகிநின்றவருழக்கிருந்துயாநுதலிபபண
டாக்குமாநிரையக்கொடுவெம்மைகணடறிந்தனனிவைக்கப்பாற்
றுக்கழற்பெருஞ்சாடிநெய்கொதித்தெழத்தழற்சிகைபுகைமண்ட
மேக்குயர்ந்தமூக்குயிரப்புறுதத்தழனெய்யிடைமிதக்கின்றா. (உ௯௭)

கொதிக்குநெய்யிடைக்குட்புறக்கிடத்தினருயிரத்திலர்கொடிதுற்றார்
மதிக்கினீங்கிவர்யாவரொன்றுணர்ந்திலமறலிமற்றுரையென்ன
விதிக்குமேல்விதியுணர்த்தியநாயகவெய்துறுமிவரிந்தப்
பதிக்குமுந்தரசறிவருந்தன்மையரொன்றனன்பணிந்தன்றுன். (உ௯அ)

பவத்துரோகரிற்பாதகர்படுவனமேற்படப்படுகின்றூர் [பக்
சிவத்துரோகரொன் றுரைப்பரொன்றவர்க்கெதிர் தென்றிசையவன்செப்

கவர்த்தவார்சடையோகிசெங்கரங்கொடுகண்புதைத்தலமந்தா
னுவர்த்தவோர்பொடித்துடனடுக்குற்றனனுளத்தொடுமெறுகுற்றான். ()

வெறுத்தசிந்தனையோகியுத்தரதிசைமீண்டனன்றனிச்செங்கோல்
பொறுத்ததென்றிசைநாயகன்பின்னரும் யோகிபொற்பதம்போற்றிச்
செறுத்தபாதகரிவாரிலைநான்முகச்செல்வனைவினவுற்றான்
மறுத்துரைப்பனகேட்குதியறிவனே வுணர்த்துவன்மனக்கொள்வாய்.

கலிநிலைத்துறை.

என்றான்மறலிப்பெயரோனனிநிற்றியென்று
னின்றான்மறையோகிநெடுந்தொளைநீளநாளப்
பொன்றாட்பொகுட்டாசனனான்முகனுடுபுக்கா
னன்றாரணவெல்லைகடந்தவனுங்கெதிர்ந்தான். (உசக)

எய்தப்பெறுமாதவம்யாவரிழைத்ததென்னுச்
செய்தற்குரித்தாகியயாவையுஞ்செய்தமைத்தான்
மைதக்ககளத்தரனென்னுழைவந்தவாபோன்
மொய்பொற்சடையோகநெடுந்தவமுன்னினுயால். (உசஉ)

என்னப்புகழ்நான்முகவந்தணனேத்திநிற்பத்
துன்னற்சடையோகியவற்கெதிர்சொல்வதானுன்
றென்னற்றிசையெய்தினமத்திசைத்தீயகும்பி
யின்னற்படுவார்க்குளருந்துயரொய்திநின்றார். (உசங)

அவர்செய்தனவந்தகன்றானுமறிந்ததன்று
லிவர்யாவரிழைத்தனயாகொலுரைத்தியென்றான்
றுவரா யிரந்தோடுடைத்தாமரைத்தூயசெல்வன்
கவராசடையோகியுரைத்தகருத்தளந்தான். (உசச)

உள்ளத்துளியற்றியயாவுமுணர்ந்துகண்டா
னெள்ளப்படுபாதகர்தந்நிலையாதுரோரான்
றள்ளற்கருமாதவநின்னுழைசாற்றிலன்னோ
ரள்ளற்குழிப்பட்டதுயானறிந்தல்லவென்றான். (உசரு)

என்போலியர்யாவர்படைத்தவர்யாதுகால
முன்போனதுணர்ந்திலன்கற்பமுடிந்ததொன்றோ
நின்போலியர்க்கல்லதுதொன்மைநிகழ்த்தலாமே
மின்போற்சடையாயெனவேதன்விளம்பிவிட்டான். (உசசு)

அக்காலையெழுந்தனனாயிரம்வாய்விரிக்கும்
பைக்கார்விடப்பாம்பணிமாதவன்பாற்கடற்கே

புக்கானவனுங்கெதிர்கண்டெதிர்போகலுற்றான்
மிக்கானெதிர்வெய்தினினெய்தினன்வேதயோகி. (உசஎ)

யோகத்குவப்புற்றனயாவுமுவந்துசெய்தான்
வேகத்தனியோகியுமுள்ளம்வியப்பளின்று
னைகைப்படவென்னுழைவந்ததுனைத்தியென்று
ஆகத்தணையோன்சிவயோகிகவிற்றுவானுல். (உசஅ)

தென்றிக்கினிரும்படரெய்தியதீமையாளர்
பொன்றப்படுதீமைவிளுவலும்பூந்துழாயோ
னென்றுற்றுணர்ந்தோர்ந்தனனுள்ளமற்றென்றுமெய்தான்
சென்றிற்றதுசிந்தனையுந்தெருமந்துநின்றான். (உசக)

என்னலறியப்படுபாதகரல்லரின்னோர்
முன்னாள்கழித்தார்களனென்போலியர்முற்றியிற்றே
ரன்னோரறிவார்கொலதிந்நிலைமையசெய்ய
பொன்னார்சடைமாதவவென்றுபுகன்றுவிட்டான். (உருo)

பாலாழியராவணைதுஞ்சியபச்சைமாயோற்
கேலாதனவுற்றுணர்ந்தேகியெவர்க்குமெட்டா
காலாரணவெல்லைகடந்துறைநம்பனம்பொற்
சேலார்விழிபங்கனிருந்துழிச்சென்றுபுக்கான். (உருக)

இமையக்கிரியெய்தருமாதவத்தெய்திநின்ற
வுமைபக்கமுமக்கணிதோளுமுருத்தநஞ்ச
மமையத்தருகண்டமுநெற்றியலர்ந்தகண்ணுங்
குமையப்படுவேணிவயங்குமதிக்கொழுந்தும். (உருஉ)

கண்டானெதிர்கண்டுகனிந்துகனிந்தசிந்தை
விண்டானருளெந்தைபரிந்தருள்வெள்ளவாரி
யுண்டானுடைந்தாடினன்பாடினனுள்ளநெக்கான்
பண்டாரணவெல்லைகடந்தபதம்பணிந்தான். (உருங)

எங்குற்றனையெய்தியதென்னைகொலென்றுரோமை
பங்குற்றவனோதலும்பாவர்கிடந்ததென்பா
லங்குற்றனன்மாசிளையப்பரப்பாயவெல்லாஞ்
செங்கட்டிறலந்தகன்காட்டினன்சென்றுகண்டேன். (உருச)

அத்தென்புலத்தாழ்நிரையத்திலழுந்துவோரின்
முத்தன்சிவபாதகமுற்றமுடித்துநின்றார்
தத்துண்டுபடுந்துயர்கண்டுநரிக்கிலாமை
யித்தன்மையர்யாதெனக்கூறுமதற்றிசைத்தான். (உருரு)

யானோவறிகின்றிலன்யானிவணெய்துமுன்ன
ரானாகிளையத்திலழுந்துகின்றார்களென்றான்
றேனார்கமலத்தவற்கேட்புழிச்செய்கைமுற்றிப்
போனான்முகற்குந்தெரியாதவர்புன்மையென்றான். (உருசு)

பையாயிரந்தாங்கியபாம்பணைப்பள்ளியானு
மையாதனதுள்ளமளந்தறியாமைசொற்றான்
மையார்களத்தெந்தையன்னோர்புரிவன்கணென்றும்
பெய்யாவொருங்கேயுணர்த்தென்றடிபேணிநின்றான். (உருஎ)

வெள்ளேறுயர்த்தோன்சிவயோகிவிளம்புமாற்ற
முள்ளாவுணர்ந்தோர்தனிநந்தியுரைத்தியென்ன
வெள்ளாமறையோகிவினையதியாதுமுள்ளங்
கொள்ளாவுணராவெடுத்தோதவரங்கொடுத்தான். (உருஅ)

அதுகாலையினந்தியருந்தவயோகியோடும்
விதுவாசடையெந்தைபிரான்விடைபெற்றகன்றான்
புதுமாமணிக்கோபுரமாளிகைகொண்டுபுக்கான்
பதுமாசனமண்டபத்தன்புபகர்ந்திருந்தான். (உருகூ)

அவ்வெல்லையரும்பவிழ்குல்லையலங்கலோனுஞ்
செவ்வேரிநறுவிரிதாமரைசெல்வனோடு
மெவவேலையுமெண்ணுறுமன்பினனாகிநன்னீர
தவ்வாவிளைசசென்னிபதந்தொழவந்துசார்ந்தான். (உசு0)

வெள்ளைக்கயிலைக்கிரிவாயிலின்மேவிநின்றார்
வள்ளற்றிறனந்தியைக்காண்கிலர்வாயிலுற்றார்
தள்ளற்கருமாதவயோகியுந்தானுமாக
வுள்ளத்தினுவப்பொடும்வேறிடத்துய்த்திருந்தார். (உசுக)

என்றன்னவரோதியசொற்கொடெழுந்துபோகிக்
குன்றன்னநிரைத்தெழுமாளிகைக்கோயில்புக்கா
ரன்றன்னவரெய்தியிருந்துழியன்பினுற்றார்
வன்றிண்புயநந்தியையன்பின்வழுத்தினூரால். (உசுஉ)

செந்தாமரைமேலுறைமங்கைசிறந்தமார்பற்
கந்தாமரைமேலுறைநான்முகற்கன்புகூராப்
பிந்தாவருண்மாதவயோகியிற்பேணல்செய்யா
நந்தாவருணந்தியிருப்பிடநல்கினானல். (உசுங)

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

புலக்கவேண்டுறுமாக்கதையிதுவெனப்புகலினும்பால்
விலக்கறவிரும்பிமற்றும்விரிக்குதும்விறுதியென்னு
நலத்தகைநந்திகேட்பச்சதாநந்தனவைதீர்யோகி
யுலப்பறுதவத்தினின்றேனிகழ்ந்தவையுரைப்பதானான். (உசுச)

பைக்கடும்பாந்தளேந்துமுலகெலாம்படர்ந்துமற்றைத்
தெக்கணநிரையங்காண்பான்சென்றனன்சிகரத்திண்டோண்
மிக்குயர்தருமச்செங்கோல்வேந்தனுற்றெதிர்ந்தானன்னோன்
றொக்குறுநிரையமெல்லாமுடன்கொடுதொகுத்துச்சொன்னான். ()

அன்னவனோடும்பாவாபடுவனவமையநோக்கித்
தென்னிலைநிரையமுற்றுங்கண்டனன்றீமையாளர்
புன்னிலைநிரையத்தாழ்ந்துபடுவனபுகலினம்மா
வென்னுளந்துணுக்கமெய்தும்யாதெனவுரைக்கற்பால. (உசுசு)

ஆயவர்தம்மின்மற்றோரருநரகடைந்தபாவத்
தீயரைச்செம்பினூற்றுங்கடாரத்தினெய்யிற்சேர்த்திக்
காயெரிநெய்யிற்காச்சிக்கொதியெழமிதப்பக்கண்ணுற்
றேயவாமறலியேனும்வெருக்கொளுமிடரினூறுறுவர். (உசுஎ)

காய்ச்சியசலாகைகண்ணினூசியிற்காதிற்காந்தப்
பாய்ச்சினாமயிர்க்காறேறும்பன்னூசியூசிமாட்டி
மீச்செலாதுறப்புத்தோறுமவெவ்விருப்பாப்புமிட்டா
ராச்சியவனலிற்குப்புற்றுங்கவர்கிடப்பதானார். (உசுஅ)

ஈங்கிவர்யார்கொலென்னவெம்மனோர்க்கறியவொண்ணாத்
தீங்குளரவர்களென்றானிவணுறைதிசைமுகத்தோன்
வீங்குநீருலகக்காவலிவனொடும்வினவவின்னோர்
யாங்ஙனமறிவதெம்மாலறிவதற்கெளியவன்றே. (உசுகூ)

என்றெடுத்தியம்பிவிட்டானீங்கிவாதீமையோர்வான்
பொன்றழையிதழிபூத்தபுரிசடைப்புனிதற்போற்றி
நின்றனனிகழ்த்தியென்னநிகழ்த்தினனின்னையென்று
னன்றவனுரைப்பக்கேட்டநந்திமுறறறைவதானான். (உஎ௦)

மெலியவரொளிமைநோக்கிவேதநூன்மரபினின்று
வலிகெழுதறுகட்பாவமறத்துறையகற்றிவாழ்வோன்
கலிகெழுகடலந்தானைக்கனைகழல்விசுவசேன
னொலிபுனலுடுத்தவிஞ்சிவிதற்பநாட்டொருசெங்கோலான். (உஎக)

ஆங்கவனகன்றுவேட்டத்தெழுந்தனனருவிக்குன்றப்
பாங்கலடவனம்புக்கேகிப்பல்விலங்கொறுத்துமீண்டா
ஞேங்கருஞ்சுரத்துமுன்னிவேடைகொண்டுயங்கலுற்றான்
றேங்குநீர்ச்சடிலத்தோன்சித்தேச்சுரஞ்சென்றுவீழ்ந்தான். (உளஉ)

வீழ்ந்துறுவேந்தர்வேந்தன்மெல்லடிவருடிநீவத்
தாழ்ந்துறுகருத்தனுகிக்கிடத்தலுந்தானேச்செல்வா
போழ்ந்துறுமனத்தராகிவருந்தினாபுலம்புகொண்டாா
சூழ்ந்தனருடம்புநீவித்திமிர்ந்துறத்தொடங்குகின்றாா. (உளஙு)

முருகிஞெண்கனியுமற்றையெண்ணையுநாடமுன்னி
யொருவருங்கொணாந்தாரல்லாசெய்வதொன்றுணராார்நின்றார்
செருகியசடிலவேணிசினகரத்தகவைசென்று
ரொருதனித்தகளியென்ணெயக்கனியுடன்கொண்டுற்றார். (உளசு)

உடைத்தனர்முருகிஞெண்காயரசனதுடலந்தீற்றித்
துடைத்தனரென்ணெயதொட்டுத்திமிர்ந்தனாதனைக்கோட்டு
விடைக்கொடியுயர்த்தோன்கோயில்பரிக்குநர்வேந்தற்கீது
கடைப்படவுரைத்தாரொன்றுங்கேட்டிலன்கழற்கால்வேந்தன். (உளரு)

ஆயதுகழிந்தபின்னாநாள்பலவகற்றியன்னோன்
பாய்திரையுலகக்கோன்மைபரித்துயிரிறந்தனூன்று
* காய்சினமறலிதூதாகடுகினாகழுத்திட்டீர்த்த
பாசவெங்கயிற்றூற்பற்றிசசென்றனர்பதகன்றன்னை. (உளசா)

கோடியோர்நாலேழாயகும்பியுட்கிடத்திப்பின்னா
வீடிலாத்தவத்தோயிந்தவெந்துயருழக்கவிட்டாா
நாடியக்காலத்திட்டதூதருநமனும்போனா
நீடியகற்பங்கோடிகழிந்தனகாலநீத்து. (உளள)

பல்லுயிருலகத்தோடுபடைத்துறுபதுமத்தோனு
மெல்லொளிபரப்புநேமியீாந்துழாயலங்கலோனுஞ்
செல்லுறுகாலத்தோடுஞ்சென்றனரளவையற்றார்
சொல்லுவதெங்ஙனூழிதொலைந்தனசொல்லற்பாற்றே. (உளஅ)

ஈங்கிவன்பகலினீரேழிந்திரரிறப்பர்செய்ய
தேங்கமழ்கமலச்செல்வாசென்றனரிலக்கமற்றே
ராங்கவரிறந்ததென்னுலளப்பரிதையவென்றான்
பூங்கழலலங்கனந்திமுடித்திலன்புகல்வதானுன். (உளகூ)

---

* "காய்சினமுற்ற" எனவும் பாடம்.

வேந்தனோடுழவாத்துன்பமுழப்புறவெய்யவெந்தீக்
காந்துறநெய்யிற்றோய்வாரன்னவாகேளீர்கண்ணுற்
றோய்ந்தவர்புன்மைத்தொன்மையறிகுவதரற்கலாஞு
ளோய்ந்தவர்க்குரைக்கலாமேயென்றனனுணாவுமிக்கான். (உ௮௦)

அறிந்தனனனைத்துங்கேட்டானருந்தவயோகியங்கம்
பொறிந்தெழுமயிர்க்கால்பொங்கப்பொருமினன்புகல்வதானுன்
பிறிந்தவர்க்கருகாயுற்றபெருந்துயர்நரகினுற்றூ
மறிந்தவர்படுவசொல்லின்மனந்துளக்குறுவதென்றான். (உ௮௧)

உருக்கியசெம்பொனேந்தியொன்பதுதொளையும்வாக்கிக்
கருக்கியபொதிந்தவாக்கைப்புன்றசைகருவிநாட்டி
யிருத்துவராரிவரீர்வரின்னலீதிழைப்பரின்னோ
பெருக்கியபாவமீதென்றுணர்த்துதிபெரியோயென்றான். (உ௮௨)

எனச்சிவயோகிகேட்டுவினவலுமிருந்தநந்தி
மனக்கினிதுணாந்துநோக்கியவாகிலைவகுப்பதானுன்
கனப்புயலணவுமிஞ்சிக்கலிங்கநாட்டரசர்கோமா
னனைத்தொடைநெடுவேற்சந்த்ராங்கதனெனுநாமவேலான். (உ௮௩)

உவன்பெறுமதலைவீரக்கிராதனென்றொருபேருற்றோ
னிவந்தவெண்கவிகையந்தமைந்தற்குநிறுவிப்போனு
னவந்தொலைத்தயனைநோக்கியருந்தவமாற்றிநின்று
தவந்தருபுனிதவேந்தனுன்முகனுலகஞ்சார்ந்தான். (உ௮௪)

அன்னவன்புதல்வன்வீரக்கிராதனின்றவனிகாத்து
மன்னுயிரபுரந்துநீதிவரம்பினின்றரசுசெய்தான்
றன்னுழைவிரும்பியாகவேச்சுரனெனுமோர்தன்மைத்
தொன்னிலைமறையோனேற்பானினைந்துளந்துணிந்துசெல்வான். ()

செல்லுமாநகரத்தோராபாற்பழமறைதெரிந்துபோற்றிச்
சொல்லியபரமசோமேச்சுரர்திருக்கோயில்போற்றிப்
புல்லவேறுயர்த்தோற்போற்றிச்சைவதேசிகனைப்போற்றி
மல்லிகைமாலைவேந்தற்கருளெனமறையோன்கேட்ப. (உ௮௬)

கொடுத்தனனுவந்துசைவதேசிகன்கொடுக்குங்காலைத்
தொடுத்தணிபொன்னூலந்தத்தொங்கலிற்றுவண்டுசெல்ல
விடுத்திவரறியார்கொண்டுவேந்தன்முன்புகுந்தான்வேதம்
படுத்துணர்மறையோனுசிபகர்ந்தவன்கழுத்திலிட்டான். (உ௮௭)

உவப்புடையரசனேக்கியொளிகெழுபசும்பொற்பூணு
லெவர்க்குளதென்னஙின்னதென்றனன்மறையோன்வேந்த

னிவப்புறுதோளுனூலுநோக்கினனெகிழ்ந்தசிந்தை
கவர்த்திலன்மறையோற்பாரத்துத்தன்னுளங்களிப்புக்கொண்டான். ()

ஈந்தனனிதியமந்தவேதியனிருகையேந்திப்
போந்தனன்போந்தபின்னரரறகணிபொன்னூல்காணர்
காந்தியமனத்தராகியரசன்முற்கடிதுபுக்கார
வேந்தநம்பரமர்பொன்னூல்வேதியன்கொணர்ந்தானன்றே. (உ௮௯)

தொடைபடுமாலையோடுதுளங்கொளிப்பசியபொன்னூன்
மிடைபடக்கிடந்ததந்தவேதியன்கொணர்ந்துதந்தான்
மடலுடையலங்கன்மாரபதருதியென்றுரைப்பவாளா
கடைபடக்கேட்டுங்கேளாரொத்தனன்கழற்கால்வேந்தன். (உ௯௦)

மறுகினரொந்தைகோயில்பரிப்பவாமன்னன்செய்கை
குறுகினருரைத்தாரசைவதேசிகன்குழைந்தசிந்தை
தெறுசினமெடுப்பவேந்தன்றன்னுழைச்சென்றனனன்றே
னுறுமணித்தவிசினன்பினிருத்தினனுவகைகூர்ந்தான். (உ௯௧)

அந்தணனரசற்பார்த்துவேதியற்கருளினீந்த
பைந்துணரலங்கலோடுமரனணிபசும்பொற்பூணூல்
வந்தது திரும்பவந்தமால்விடையவற்கீகென்னத
நந்திலையாயின்மீளாப்படுகுழிநிரையஞ்சார்வாய். (உ௯௨)

இன்னணஞ்சிவத்துரோகத்தவாபடுநிரையமெய்து
மன்னவன்கதையொன்றுண்டாற்கேண்மதிகாமரூபி
யென்னுநாட்டரசனீன்றவசுவெனுமதலையெந்தை
பொன்னவிரசடையோன்கோயில்புகுந்திருந்தாடலுற்றான். (உ௯௩)

வெண்மணலிழைத்துக்கூட்டியாடுறுமெல்லைவேந்தன்
கண்மணியனையபாலனோர்பணங்கணணிற்காணு
வுண்மகிழ்ந்தெடுத்துக்கைக்கொண்டோடிஞனிலவுகாலுந்
தண்மணிக்கழற்காற்பெற்றதந்தைபாற்கொடுத்துநின்றான். (உ௯௪)

ஈன்றசேயெடுக்கப்பெற்றவோர்பணமங்கையேந்தித்
தான்றனிக்கருவூலத்தினளித்தனன்றருணவேணி
மூன்றுகட்பெருமாற்கென்னப்பரிப்பவர்கேட்டுமுன்னிக்
கான்றொளியலங்குபைம்பொற்கழலரசருகுசென்றார். (உ௯௫)

சேவுயர்பெருமானெம்மான்சினகரத்தகவையுள்ள
யாவுமப்பரமற்கல்லாலரசருக்குரியவன்றாற்
கோவிளங்குமரனுங்கணெடுத்தனன்கொணர்ந்துநின்பா
லீவதப்பணத்தையீசற்களித்தியென்றிரப்பவன்னோன். (உ௯௬)

என்னிளங்குமரன்முன்னரொடுத்ததொன்றீயோமென்னத்
தன்னுடைக்கருவூலத்தினளித்தலுந்தழற்கட்பெம்மான்
முன்னவன்முனிவிற்கோயின்முழங்கழற்கொழுந்தீவேவ
வங்கிலேயொதுக்கியாவுங்கள்வராலழிந்தவன்றே. (உ௯எ)

ஓர்பணமீசறகென்றுவுதவிலனுடைமையாவுஞ்
சோர்வுறவறுமையெய்தித்துயருழந்திடுக்கணுற்றான்
பாரரசொழிந்துதன்னாள்கழிந்தனன்மறலிபாசத்
தீர்வையிற்றென்பாற்சென்றுவெந்நரகிடைப்பட்டானல். (உ௯அ)

பின்னரசியற்றிநின்றானவனுழைப்பிறந்தபாலன்
றன்னையும்பகைத்தவேந்தா தனிச்சிரந்துணிப்பத்தானும்
துன்னருநிரையம்புக்குத துயருழந்தழியாநின்றா
னின்னலுற்றிவர்வீழ்கும்பிக்கொடுமையாரிசைக்கற்பாலார். (உ௯௯)

என்றெடுத்தெடுத்துசைவதேசிகனியம்பக்கேளாக்
குன்றெடுத்தனையதோளான்குணித்திலனுளத்திலொன்று
மன்றவற்கமைச்சினின்றார்க்குறைத்தனனவர்க்குமுள்ளஞ்
சென்றிலபொன்னூலீசற்களித்திலர்தறுகட்டீயோர். (௩00)

அரசனுங்கொடியனன்றோனமைச்சருமறமொன்றோரார்
புரகிதனிவரிற்பாவியென்றகம்பொருமாநின்று
பரகதியுணர்ந்தசைவதேசிகன்பரிவிற்போனன்
வரதனுக்கலங்குபொன்னூல்வேறுறவகுத்துக்கொண்டான். (௩0௧)

போயதுசிலநாளந்தப்பொன்னவிர்புரிநூல்பூண்ட
தீயவல்லரசன்மேனிபுழுக்குலந்திளைப்பசெந்நீர்
பாய்தரக்குட்டம்பற்றியிறந்தனன்பாசம்வீசிக்
காய்சினமறலிதூதர்தெழித்தனாகழுத்திட்டார்த்து. (௩0௨)

வயங்கொளிப்பொன்னூலீந்துமாநிதியேற்றவன்கட்
கயங்கெழுசிந்தையோனுமமைச்சருங்கழற்கால்வேந்தற்
கியங்கியசிந்தைக்கேய்ந்தபுரகிதனென்றுளோனு
முயங்குநாள்கழியச்சென்றார்தென்புலமறலிமூதூர். (௩0௩)

கொற்றவன்றந்தையுந்திக்கமலத்தோன்கொடுத்தநாடு
பெற்றவணிருந்தான்றன்னையீங்கிவர்கிளையைப்பேழ்வாய்
கற்றிரளனையதிண்டோட்கடுந்திறற்காலதூதர்
பற்றினர்கொண்டுசென்றுபடுகுழிநிரையத்திட்டார். (௩0௪)

ஆயிடைத்தென்பாலெய்தியருநரகுழப்பக்கண்டு
நீயெடுத்துரைத்தோரின்றோன்றனனந்திநீண்ட

காயெரிசடிலயோகிகண்ணுதற்பரன்பாலுள்ளம்
போயுறப்பொருமலுற்றுமயிர்ப்புறம்பொடிப்பதானான். (௩0ரு)

கலிநிலைத்துறை.

எல்லைநீந்தெழுமூவகையினிருந்தமாயோகிக்
கல்லிநாண்மலர்நான்முகற்கைம்படைபொறுத்த
குல்லையோற்கிருசெவித்தலங்குளிரப்புறநந்தி
மல்லன்மாக்கதைபின்னுமொன்றெடுத்தனன்வகுப்பான். (௩0சு)

ஆடெரிப்படுசெய்யிடைக்கிடப்பவர்க்கயலோரா
மாடுவெவ்வழற்கொழுந்துறத்துடித்தனாமருள்வார்
கோடுசிந்தையிற்களங்கறுத்தொழித்தருள்குரவர்
தேடருந்திருவுளங்கறுத்திடப்புரிதீயோர். (௩0எ)

அனையாசெய்கைமுற்றறைகுதுமருந்தவகேட்டி
நனைநறும்பொழிற்கவுளதேயத்தொருநகரங்
கனைபெரும்புனலுடுத்ததுகவுளமென்றுளதால்
வினைஞனத்திருநகர்க்குளாவணிகனோவெய்யோன். (௩0அ)

வணிகனன்னவன்பெறுபெயர்பெருநிதிவரதன்
றணிவில்வெங்கதிர்க்கடவுளைத்தினந்தொழுந்தகையான்
பணிசெய்பீடமண்ணொழித்ததுசெங்கலிற்படுப்பான்
றுணிவுகொண்டனன்செங்கலெங்குளவெனத்துணிவான். (௩0௯)

கோளவெற்புறைபழமறைச்சைவகோத்திரத்தோன்
மூளதாமரைக்கிழவனுக்குவமைசான்றுடையோன்
வாளராவணிபரமாகோளேச்சுராமலாத்தாண்
மூளுமன்பினிற்பரவுதற்புருடன்மூட்புடையோன். (௩௧0)

ஈசனைத்தினமருச்சனைசெய்வதற்கிசைந்து
பூசனைப்பெருந்திருமடம்புதிதெடுத்தருள
வாசறுத்தசெங்கற்குவைகிடப்பனவறிந்தான்
றேசிகற்கதுவிலைகொடுத்தெடுத்திடச்சென்றான். (௩௧௧)

சென்றுபோற்றினன்சேவடிபணிந்தனன்செய்யோ
யென்றினைத்தொழும்பீடமொன்றெடுப்பதற்கியைந்தே
னின்றதற்குளவிலையெலாமளிக்குவனென்னாத்
துன்றுசெங்கலீந்தருளெனப்பின்னருந்தொழுதான். (௩௧உ)

குரவனுங்கதுகொடுப்பதுபொருந்திலன்வணிகன்
விரவுசிந்தனைவெள்குறமீண்டனனிவனைப்

பரவிநங்குருவென்பதும்பழியெனமதித்தான்
புரவலற்குளமருத்துவனிவற்கெதிர்புகுந்தான். (௩௧௩)

அருகுநோக்கினன்வணிகனையருங்கவலெய்தி
யொருவருந்துயரொய்தினையென்கொலென்றுரைப்பக்
குருவின்மாட்டுறச்சென்றதும்புகன்றதுங்குரவன்
மருவுசெங்கன்மற்றிலையெனவுரைத்ததும்வகுத்தான். (௩௧௪)

நீயதற்குளம்வருந்தலையவர்க்குநாளிகழத்தி
யாயசெங்கலீந்திடப்புரிகுவனெனவடைந்தான்
றூயதேசிகன்மருத்துவன்சொன்மறுத்துருத்தான்
போயினனதுவணிகனுக்குரைத்தபின்புகல்வான். (௩௧௫)

உள்ளமோர்ந்துணாகுரவனீதுரைத்தனனென்னு
வள்ளனீயதுமனக்கொளலாங்கவன்மனையி
னெள்ளருங்குவைச்செங்கன்மறறியாவையுநாளைக்
கொள்ளைபோவனகாண்டியென்றுரைத்தனன்கொடியோன். ()

ஈதுரைத்தனன்போயினன்மருத்துவனிதுநா
ளோதுவெண்குடைப்புரவலனொருத்தன்மால்யானை
காதுவெம்பிணியுடற்றுறக்கவளமுண்ணாது
மீதெழுஞ்செவிதாழ்த்ததுதுணைவிழிவிளாத்த. (௩௧௭)

கொற்றவற்குரைத்தவன்றனிப்பணிதலைகொள்ளா
வற்றைநாளிராமருத்துவன்யாங்கெனவடைந்து
தெற்றெனக்கொணர்ந்தரசுவாக்காட்டலுந்தீயோன்
பெற்றசெங்கலிற்பிழைக்குமிக்களிறெனப்பேச. (௩௧௮)

பாகராரிருட்படுமழைக்கங்குலிறறேடிப்
போகவெங்குளசெங்கலென்றயிாத்தலும்பொலிந்த
தாகநங்குருமடத்திடைக்கிடப்பதென்றறைந்தா
ஞேகையுற்றனரெடுத்தனரோடினரொருங்கே. (௩௧௯)

எடுத்தசெங்கலையிடித்திரொன்றுரைத்தனன்யார்க்குங்
கொடுத்தனன்சிலவிடித்தனன்மருந்தொடுங்கூட்டிக்
கடுப்புறுங்கறையடியொடுமெருத்தமுட்கழுத்து
மடுத்தெடுதெடுத்தொற்றுவித்திருந்தனன்மருத்தன். (௩௨௦)

செயற்கருந்திறமியாவையுஞ்செய்தனர்சினவெங்
கயக்கடுங்களிறொருத்தல்பட்டிறந்ததுகங்குல்
வயக்கொடும்படைமன்னவற்குரைத்தனன்மன்னன்
பெயர்த்துரைத்திலன்வருத்தமீப்பிறந்தெழவிருந்தான். (௩௨௧)

குணக்கருங்கடற்பரிதிவந்தெழுந்ததுகுரவன்
புணர்த்ததுன்பொடுமரசனிற்புகுந்தனன்புரபபான்
வணக்கமுற்றளித்திருத்தலுமன்னனைநோக்கி
யுணர்த்துவான்றனசெங்கலுற்றெடுத்தவாறுணர. (௩உஉ)

வந்துகேட்டனன்செங்கலீகெனநிதிவரதன்
றந்திடப்படாதென்றனமவறகெனசசாந்து
முந்தியெம்வயிற்செங்கல்கேட்டனைறமுனிந்தேம்
வெந்தசிந்தையின்மருத்துவனித்திறம்விளைத்தான். (௩உ௩)

எடுத்தசீற்றமிக்கெம்மடத்தகவையின்முன்றிற்
படுத்தசெங்கலையரசுவாப்படுபிணிக்கென்ன
விடுத்தபாகராலெடுத்தறமுடித்தனன்வேந்தே
யடுத்தவாறிதென்றறைந்தனனருமறைப்புனிதன். (௩உ௪)

ஓர்ந்திருந்தனனெற்றுறைந்தியாவையுமுணர்ந்தா
ஞர்ந்தமாநிதிவரதனைக்கொணாமினென்றறைந்தான்
வார்ந்தவாளெறிந்தவனுயிர்செகுத்திடவலித்தான்
சூர்ந்தசிந்தையருழையர்கொண்டவன்சிரங்குறைத்தார். (௩உ௫)

பருமயானையின்பாகரைமருத்துவன்பணியாற்
றுருவுசெங்கலன்றெடுத்தவாயாரையுந்துணித்துக்
குருவின்முன்னரின்மருத்துவற்கொணர்கெனக்கொணர்வான்
வெருவியோடினருழையராங்கவற்கொடுவிடுத்தார். (௩உ௬)

எங்களீசனுக்கருச்சனைபுரியுமெங்குரவா
செங்கணீநிதிவரதனுக்காச்சிதைவுறுத்தாய்
வெங்கயப்பிணிசெங்கலால்விளியுமோவருமம்
பொங்குசிந்தையாலீங்கிதுபுரிந்தனைபோலும். (௩உ௭)

என்றுவெஞ்சினத்தெரியெழவிழித்தனனிவனைக்
கொன்றுதீாதிரொன்றுறைத்தலுமமைச்சுளோாகுறுகித்
துன்றுபைங்கழலரசனைத்தொழுதனரொருபா
னின்றுவாய்புதைத்தவனிலைநிகழத்துவதானர். (௩உ௮)

அரசநின்னுழையரும்பிணியுடற்றுறுமந்நாள்
பரவுமிந்திரன்பதியகன்றிப்பதிபடர்ந்தார்
வரமருத்துவர்நினதுநோயொழித்தனர்வானம்
விரைவினேகுவானுணர்ந்தவரோகுறும்வேலை. (௩உ௯)

யாமெலாமுணர்ந்திங்கிலப்பெரும்பிணியொழிப்பான்
றூமனாலொருமருத்துவற்றருதிரொன்றிரப்ப

வேமுறும்படிசோபரியெனுமிவன்றன்னைச்
சேமமாய்நமக்களித்தனராங்கவர்சென்றார். (௩௩0)

அன்றுதொட்டுநின்குடைநிழலவனியினுள்ளோ
ரின்றும்வெம்பிணிதெறுதரவிறந்தவரில்லை
கொன்றுதீர்ந்திடிலிவனிகர்குவலயத்துளரோ
வென்றிறைஞ்சினர்நகைவிளைத்தரசனீதுரைப்பான். (௩௩க)

மேல்விளைந்தனவிளைகின்றவிளைவனயாவும்
பாலுணர்ந்தறியமைச்சர்நும்போலிதுபகரார்
காலமோர்ந்தறிகுரவரிற்பிழைத்தவர்கருங்கார்
நீலகண்டனிற்பிழைத்தவர்நிரையமுற்றழிவார். (௩௩உ)

ஆதலாலிவனுயிர்செகுத்திலமெனிலழல்வாய்த்
தீதுறுங்குழிநிரையமுற்றிழிவதுதிண்ண
நீதியோர்ந்திலீரொன்றமைசசுரைத்தனனீத்தான்
போதிர்கொண்டெனவுரைததனனறமெலாமபுரப்போன். ()

பகுத்துரைத்தனயாவையுமரசனுட்படானென்
றுகுத்தசிந்தையரமைச்சரொன்றுரைத்திலர்போனார்
தொகுத்தபாதகமருத்துவன்மணித்தலைதுமித்துச்
செகுத்துநீங்கினரரசனுமகமகிழ்சிறந்தான். (௩௩௪)

அடிகள்போதிரொன்றிசைத்தவர்க்காவனபுரிந்து
படிமுடித்தலைபடப்பணிந்தெழுந்தனன்பலகாற்
றொடிபொலிந்துறுதடக்கையான்றுளங்கொளிப்பொன்னன்
முடிவறப்படுசெங்கல்செய்தெடுத்தனன்முறையால். (௩௩௫)

சைவதேசிகற்களித்தவனிணையடித்தலத்துப்
பெய்தசிந்தையிற்பணிந்தனன்பணிதலும்பெருவான்
றெய்வதுந்துபிமுழங்கினதிசைமுகத்தவனும்
மைவரும்புயல்வண்ணனும்வானுளோரெவரும். (௩௩௬)

சோனைமென்மலர்ப்பூமழைசொரிந்தனர்துவன்றி
வானடைந்தனாமன்னவற்கினிதருள்வழங்கி
யேனைமன்னரினின்னையொத்துளரெவரொன்றார்
கானலர்ந்ததார்வேந்தனுந்தொழுதுளங்களித்தான். (௩௩௭)

நினக்குவேண்டுறுவரமெதுநிகழ்த்துதியென்று
மனத்துணர்ந்தறமன்னனிம்மாநிலப்பரப்பி
னினக்கொடும்பிணியிலவெனவருளுதிரொன்றான்
புனத்துழாய்முகிலயனிதுவழங்கினர்போனார். (௩௩௮)

அரசுவாப்பயிற்றியபெரும்பாகருமங்காட்
குரவுனிற்படுசெங்கல்கொண்டளித்திடுமெவரு
மரபினீங்கியவணிகனுமருத்துவனவனும்
நிரையமெய்தினரருந்துயருடற்றுறநின்றா. (௩௩௯)

அந்தநால்வருஞ்சிவத்துரோகியரவாக்கருகே
வெந்தசிந்தையின்வெந்துயருழந்தனர்மீளார்
பைந்துணர்த்தொடைவெண்குடைப்பார்த்திபர்பெருமா
னெந்தைசைவநூலோங்குறவிருங்லம்புரந்தான். (௩௪௦)

இத்திறத்தனவாங்கவரியற்றியதென்று
மெய்த்திறத்தவயோகிபால்விரித்தனனந்தி
யத்திறந்தெரியோகியுமதிசயமடைந்தான்
மைத்தனிக்களனியற்கையைவெருக்கொடுமதித்தான். (௩௪க)

உருகுகாதலினுருத்திரவக்கம்வெண்ணீறு
பெருகுகாதலிற்புனைசிவனடியரிற்பிழைத்தார்
திருகுவெஞ்சினமறலிபாற்றென்புலமடைந்து
பொருகொடுஞ்சுழல்நிரையம்வீழ்ந்துழப்பதுபுகல்வாம். (௩௪உ)

செங்நெல்வேலிசூழ்கிடந்துளசிந்துதேயத்து
மன்னுமாநகர்சானந்தமதனிலைவகுப்பின்
மின்னிமைத்திடுநவமணிக்காந்தியின்விளங்கு
மன்னமாநகர்க்கரனெனுந்தனிக்குடையரசன். (௩௪௩)

இரங்குசிந்தையனிகலொழிகுணத்தினனென்றும்
பரந்தெரிந்துளசைவநூலிடையறப்பயில்வான்
புரங்கடந்தவரடியரிற்பொழியுமன்பினனுய்ச்
சிரந்தலத்துறப்படிந்தெழுமியற்கையிற்சிறந்தான். (௩௪௪)

விழிக்குமாயிரங்கண்ணுடைவிண்ணுடைவேந்தன்
வழிப்புலஞ்செலமாதவமியற்றினனெடுநாட்
கொழித்தவன்பொடுமிந்திரனுங்கவறகுறுகி
யொழிப்பருந்தவமியற்றினையென்கொலென்றுரைப்ப. (௩௪௫)

மகப்பெருந்தனிவேந்தனைமன்னவனோக்கி
யகத்துநின்னலதுணர்ந்திலன்யானெனவருளி
மிகப்படுந்திறற்குலிசம்வேண்டினனெனவிளம்ப
நகைக்கொடுந்தனிக்குலிசமீந்தாங்கவனடந்தான். (௩௪௬)

வாங்கினனுலகொருகுடைநிழற்றியமன்னன்
பூங்கழற்றெழுமன்னரைக்கொடுவனம்போக்கித்

தேங்குநேமிசூழ்நெடுநிலமொருதனிச்சிறந்தா
ஞேங்குசைவமுற்றேங்கிடப்புரந்தனனுரவோன். (௩சஎ)

இதுவுணர்ந்தனனிவனெடுமிகலெடுத்துடற்று
மதுவெனும்பெயர்வனைகழன்மன்னனீங்கிவனே
பொதுவொழிந்திடப்புரப்பவனெனப்பொருன்பொருமிக்
கதுமெனப்புகுந்தசுரவேந்தனையுளங்கருதி. (௩சஅ)

அரியமாதவமியற்றினனுங்கவனடைந்து
புரியவேண்டுவதியாதெனவசுரர்கோன்புகல
விரிகடுந்திறற்சேனைகொண்டென்னெடுமேவி
விரிகழற்கரன்றன்னெடுமெண்டமாமலைந்து. (௩சக)

எனதுவெண்குடையெனக்கென் வாக்கிமற்றவனைத்
துணைகடுந்திறற்சேனையைத்துணித்தனையாகி
நினதுமாநகர்போகுதியென்றவனிகழ்த்த
வினவிநின்றவனதுவுணர்ந்தெரியெழவிழித்தான். (௩௫௦)

கரனெனும்பெயர்வேந்தனைமுதலறக்களைந்து
விரவுசேனையுமடித்தவன்வெண்குடையுனக்குத்
தரநினைந்தனனென்றுதன்னுடைப்பெருந்தானை
வரவுரைத்தலுமடைந்தனரளவொழிவாததார். (௩௫க)

மழைக்குலந்தழீஇயெழுமோர்காலையின்வழங்கத்
தழைத்தபேரொலிப்பிரளயமொருவழித்தவழ்ந்தாங்
கிழைத்தமாதவப்பெருமையரிருஞ்சினத்தெதிர்ந்தார்
முழைப்படும்பிலவாயினரிடிக்குரன்முழக்கா. (௩௫உ)

முளைத்தவெண்பிறைமுழுமுகிற்செருகியவன்ன
வளைத்தவாளெயிற்றடுசினக்கடுந்திறன்மறவ
ருளைத்தவாரிதியுலகெலா.மொருதனியொருங்கே
திளைத்துவாய்ப்பெயுந்திறலினர்வடவையிற்றீயோர். (௩௫௩)

படர்ந்தசெக்கரிற்படர்ந்தெழுகுஞ்சியாமேருக்
குடங்கைகொண்டெடுத்தாடுறுங்கொள்கையர்கடைநாட்
டொடர்ந்தவெள்ளநீர்புறவடிதோய்கலர்தொக்கா
ரடைந்தசேனைமுற்றளப்புறினயனுக்குமரிய. (௩௫ச)

எடுத்தசக்கரந்தோமரங்குந்தம்விட்டெறிவேல்
பிடித்தகூர்மழுப்பிண்டிபாலங்கொடுங்கலப்பை
யடுத்ததண்டுகார்முகப்படை.பொறுத்தனரழல்கான்
மடித்தவாயினர்மின்னெனத்துடித்துறும்வாளர். (௩௫௫)

வந்திறைத்தனர்நோக்கினன்றகுவர்கோனரசு
சிந்தைமிக்கெழுஞ்சினத்தினனவனொடுஞ்சென்றான்
சந்தவார்பொழிலுடுத்தசானந்தமாநகர்சூழ்
மந்தரம்பொருகொடிநகரிஞ்சிசூழ்வளைத்தார். (௩௫௬)

ஈதுணர்ந்தனன்றனிக்குடைக்கரசனனுமிறைவன்
யாதுசெய்துமென்றிருந்தனன்வெருவருமெல்லை
யோதுவெஞ்சினத்தெய்தினன்விசயனென்றொருவ
னீதிவேந்தனைக்குறுகினனிவையிவைநிகழ்த்தும். (௩௫௭)

என்னைநீமதித்திருந்தனையிப்பெருஞ்சேனை
முன்னர்யான்புகின்முதலறமுடிவதுசரத
மன்னசிந்தையினையுறலாதிநாட்டொடங்கி
யுன்னுமானிடமடங்கலினருச்சனைக்குரியேன். (௩௫௮)

வருதியென்றலுங்கணத்திடையெய்தும்வாளசுரர்
குருதியூற்றறக்குடிப்பதுமடுத்தவெஞ்சேனை
யொருகைவாரிவாய்ப்பெய்வதுதீயரொங்கொளிப்பார்
கருதியோராபுடைநின்றுநீயதனிலைகாண்டி. (௩௫௯)

நினக்குவசசிரமளித்தவற்கடும்பகைநீச
ரினத்தொடின்றொடுமுடிவதுகாண்டியாலிறைவ
நினைத்தகாரியமுடிக்குவனெழுகெனநிகழ்த்தக்
கனைபொலன்கழன்மன்னனோர்ந்தெழுந்தனன்காண்பான். (௩௬0)

வகுத்தசேனைகொண்டரசனோர்மருங்குநின்றொழியத்
தொகுத்தமந்திரத்துண்மைதன்னுளத்தொடுந்தோய
நெகிழததசிந்தையினின்றனன்விசயனந்நிலையிற்
செகுத்தசீற்றமிக்கெழுந்ததுமானிடச்சீயம். (௩௬௧)

கைகளாயிரமாயிரங்காவதங்கடந்த
மொய்கொளம்புயந்திகந்தமுற்றுறிஞ்சினமுடிபோய்
வெய்யவின்முகடளந்ததுவெள்ளெயிற்றகல்வாய்ப்
பையராமுடிநெடுநிலம்புதைத்தனபதங்கள். (௩௬௨)

வாரிவாயிலிட்டதுக்குறுமாதிரப்பொருப்பிற்
சோரிதூங்குறப்புரட்டுறுந்தொளைத்துணைநாசி
சேரவாங்கிமீண்டுயிர்த்திடுஞ்சினவுகிர்க்கரத்தாற்
பேருடற்பொறைநுளம்பெனக்குழம்பெழப்பிசையும். (௩௬௩)

தின்னுமென்புடனெறுக்கெனக்கறித்திடுஞ்சினத்திற்
றென்னிலம்படத்தேய்த்திடுமவுணர்தந்தொகையைப்

புன்னுனிப்பனிசினைதந்தெனப்புறப்படத்திடறுங்
கின்னகங்கொடுபொதுத்திடுங்கிள்ளுபுகினைக்கும். (௩௬௪)

கொடுங்கைமாகரிகோடுதொட்டிழுத்தொருகோடி
நெடுங்கையானைமத்தகம்பிளந்தோச்சுறுநெடுநீர்க்
கிடங்குபோய்விழவூதுறுங்கிளர்பெருஞ்சேனை
நடந்துகொன்றிடுங்குருதியாறிடையறநடக்கும். (௩௬௫)

அளவில்சேனைகொண்டெறும்வலித்தடக்கையினடக்கி
வளைதடங்கடற்குமிழிகின்றிரைத்தெழமாட்டுங்
கிளைநெடுந்தலைகடித்துமிழ்ந்தெதிருறக்கிடைத்தார்
முளையெயிற்றடிபொதுத்துறுங்கடற்படமுழங்கும். (௩௬௬)

அதிர்பெருங்குரலானைகொண்டு நீகவெஞ்சேனைக்
குதிரைமாக்கடல்குழப்பிடுங்குதிரைகொப்புளித்த
வுதிரவாற்றிடைத்தேர்புதைத்தமிழ்த்திடுமொழித்து
மதுகையாருயிர்குடித்ததம்மானிடமடங்கல். (௩௬௭)

பொருசினத்தெழுமசுரர்கோன்றிரட்படைபோக்கி
யொருவனுகியோட்டெடுத்தனனெருதனிக்கவிகைக்
கருணைவேந்தனுமுவகையங்கடலொடுகளித்தான்
மருவருந்திறல்விசயனைத்தொழுதனன்வழுத்தி. (௩௬௮)

ஆயகாலையின்மானிடமடங்கலையகற்றி
மேயதிண்டிறல்விசயனும்வெள்ளவெம்படையுந்
தூயவேந்தனுமீணடனர்தொன்னகரடைந்தார்
போயொளிக்கதிரணிமணிமண்டபம்புகுந்தார். (௩௬௯)

விசையனைத்தனியாசனத்திருத்தினன்வேந்தன்
வசையிலன்பொடும்வழுத்தினனெங்குலமன்னர்க்
கசைவிலாப்புகழளித்தனையெனவளவளாவிக்
குசைநெடும்பரிப்புரவலன்வேண்டுவகொடுத்தான். (௩௭0)

இறந்துநாள்பலகழிந்தனவிருங்கழலிறைவன்
சிறந்துமன்பதைபுரக்குநாள்விசயனிற்சிறந்து
பிறந்தமைந்தனோர்சூரனென்றுளனவன்பிறழாத்
துறந்தசிந்தையன்பிறர்மனையகவுறுந்தொழிலான். (௩௭௧)

இயங்குநானையிணிந்நகர்ச்சிவனடிக்கமல
முயங்குசிந்தையன்றருமனென்றுளனொருமுதியோன்
வயங்குவெண்டுகளுருத்திரமாமணிவனைவான்
மயங்குகொன்றையோன்சைவநூல்வளர்த்தவன்சரிப்பான். ()

சரிக்குமன்னவன்றன்மனைக்களவழிச்சார்ந்து
சரித்தவார்குழற்றேவைகைகற்பழித்தனன்சூரன்
விரித்தவார்கலையுருத்திரமென்மணிபொதிந்து
பொருத்திவைத்தவையவனெடுத்துடன்கொடுபோனான். (௩எ௩)

மறுத்துநோக்கலுங்கண்டிலன்றருமனம்மனையா
ளிறுத்தசிந்தையட்கேட்டலுமாங்கவளிசையாள்
கறுத்தநெஞ்சகச்சூரனக்கலையெடுத்துடப்பப்
பொறுத்துருனிதுவென்கலையென்றெதிர்புகன்றான். (௩எச)

தருமனுங்கதுவுறாத்தலுந்தழல்விழிபுரட்டி
வெருவநோக்கினனுருத்தனன்வெந்திறற்சூர
னொருவியாங்கவன்றுதைபாலுறாத்தலுமவனைக்
கருதிநோக்கிலனன்னவன் திறற்களியால். (௩எரு)

இனியிதற்குநாஞ்செய்குவதேதுவெனவெண்ணிப்
பனிநெடுங்குடைவேந்தனுக்கீங்கிதுபகர்ந்தா
னனையவேந்தனுஞ்சூரனையிரந்திரந்தருள
வினையிருந்தவாவரசனோர்ந்துறாத்தனவினவான். (௩எசு)

போதியென்றுறாத்தடுதிறல்விசயனிற்புகன்றான்
காதுவெஞ்சினந்தலைக்கொளததருமனைக்கண்ணுற்
றேதுநீதிவிட்டுறாத்தனனுருத்தனன்விசயன்
மீதிவர்ந்தெழுகவிகையன்பின்னரும்விளம்பும். (௩எஎ)

என்பெருக்கணியெம்பிரானடியவர்க்கென்றுத்
துன்பிழைத்தவரிழிந்துறுநிரையம்வாய்திறவா
வன்பிழைத்தவர்கயிலைவீற்றிருப்பவரவற்றை
முன்புறாததிடுசுருதியாலுணர்கெனமொழிந்தான். (௩எஅ)

சைவமாரிவனரிவன்றறுகணன்பாவி
வையம்யாவையுங்கங்குலிற்கவாந்தெழுமறவன்
மைவருங்குழற்கணிகையர்மனைதொறுஞ்சுழல்வான்
பொய்வழங்குவன்புலையரிற்புலவுணும்புலையன். (௩எக)

இவனைவேண்டினையிருந்தவத்தீன்றவென்மதலை
யவனைவேண்டலையவமதித்தனையெனவழலாக்
கவர்தடம்புயவேந்தனைக்கணித்திலன்விசயன்
புவனநாதனைக்கைதொழாதெழுந்தனன்போனான். (௩அ0)

கரியகண்டனைப்பணிந்தவனருச்சனைகருதி
யுரியநீறணிந்துருத்திரமாமணிபுனைந்த

பெரியரும்பரிற்பெரியரென்றுளத்தொடும்பேறு
வரிநெடுஞ்சிலைச்சூரனைத்துணித்திடமதியா. (ஙஅக)

ஏவலாளரிற்சூரனைக்கொணர்திரென்றிசைத்தான்
வ்ரவியோடினர்கொணர்ந்தனர்விடுத்தலுமன்னன்
பாவியீங்கிவன்றனைக்கொடுபடுகளத்திருத்தி
யாவிவீட்டுதியொன்றுரைத்துருத்துநின்றழன்றான். (ஙஅஉ)

பிணித்திறுக்கினர்மணிநெடுந்தாம்பொடும்பிணித்துத்
தணிப்பருஞ்சினத்தொடுமடுங்கொலைக்களஞ்சார்ந்தார்
திணித்தபாதகனெஞ்சகமழுக்கொடுசிதைத்தா
ரணித்துரைத்திடக்கடுந்திறல்விசயனீதறிந்தான். (ஙஅங)

எழுந்தசீற்றமிக்கெழுந்தனனரசனையெதிர்ந்தான்
மொழிந்துறுதனயாவையும்பற்பலமொழிந்தா
னழுங்குசிந்தனைத்தருமனையருகுகண்டறிந்தான்
முழங்கிமுட்டினுனின்னுயிர்முடிக்குவனென்றான். (ஙஅச)

வேந்தநின்னுடைக்கவிகையுமடுபுயவிறலும்
வாய்ந்தசெல்வமும்யான்றரவந்தனமதியா
யேந்தலென்னுயிர்ப்புதல்வனைக்கொன்றனையினிநீ
போந்தபேரரசளிக்குவையென்றனன்போனன். (ஙஅரு)

பாவமோர்ந்திலன்சிவனடியானெனப்பாரான்
வீவதாக்குவனெனக்குறித்தென்னையும்வெருவா
னுவதேதெனவிருந்தவாளரசனெஞ்சழன்று
காவல்செய்தவன்மனைவயிற்பொருளெலாங்கவர்ந்தான். (ஙஅசு)

வேனில்வேளையோர்விழித்தழன்மாட்டியவிமலற்
கானதொண்டனைப்போற்றினனுடையுமணியு
மேனையாவையுங்கொடுத்தனனேகுதியென்றான்
மானவேற்படைவிசயனெஞ்சகத்திதுமதித்தான். (ஙஅஎ)

வரம்பிகந்தனனரசனெனமனையகம்புகுந்து
கரந்தியாவையுமெடுத்திடப்பணித்தனன்கண்ணுற்
றிரங்கியீங்கிவன்மனைவிவீழ்ந்தாற்றுறவிவனைச்
சிரந்துணிப்பதுபுரிவனென்றரசவைசென்றான். (ஙஅஅ)

சென்றுநின்றுளமந்திரத்தொருவழிசெலுத்த
வன்றடக்கையிற்பிறந்ததுமானிடமடங்க
லன்றகண்டமுந்திசைகளுமதிர்ந்திடவதிரா
வொன்றியோர்ந்துறநின்றதவ்வுறுசினமடங்கல். (ஙஅகூ)

வெற்றிவேற்படைவிசையனைநோக்கிவெண்கோட்டுப்
பெற்றமூர்ந்தவனடியரிற்பிழைத்தனையுலவா
துற்பாதகனுனைவிடேனென்றுருத்தெழுந்து
தெற்றெனப்புகுந்தெடுத்துயிர்குடித்ததச்சீயம். (௩கூ0)

விளங்குவாட்படைவேந்தநீவெள்விடையவன்று
ளளந்தறிந்தனையடியருக்கடியனுமானு
யுளங்கொளன்பொடுஞ்சைவனூலோங்குறவோங்கித்
துளங்குவெண்குடைநிழற்றுதியெனப்பலசொல்லி. (௩கூக)

நீறுகண்டிகைதரித்தவர்க்காண்குறினெகிழா
ஆறுமன்பினேடுவப்புறினெண்மணிக்கயிலை
யேறுயர்த்தவனிருங்கதியெய்துவையெமக்குங்
கூறிலக்கதிகிடைப்பரிதெனமனக்கோடி. (௩கூஉ)

எண்ணிலூழ்பலவிருநிலம்புரக்குதியிடையே
யண்ணனின்னுழையரந்தையாரியற்றினுமந்நாட்
கண்ணுறப்பெறிற்கதுமெனவருதுமென்றிசைத்து
மண்ணகந்தொழமறைந்ததுமானிடமடங்கல். (௩கூ௩)

முக்கணெம்பிரானடியவர்ப்பிழைத்திவைமுயன்ற
மிக்கதின்டிறல்விசையனும்விசையனின்றுதவப்
புக்கமைந்தனுஞ்சிவத்துரோகர்க்கொருபுடையே
தொக்கவெந்தழற்கும்பியுட்கிடந்துளந்துயர்வார். (௩கூச)

நரகமன்னவருழக்குவதிதுவெனநந்தி
பரவருஞ்சிவயோகிமுற்றுணர்ந்துளம்பதைத்தா
னரகராவெனவுச்சிகைகூப்பினனயர்ந்தான்
விரதனூன்முறையாங்கவன்விரித்தனவியந்து. (௩கூ௫)

## கலிவிருத்தம்.

இவையுரைத்தனவன்றியுமெம்பிரா
னவையறுங்குணக்கேள்விநடத்துத
மவையுணர்ந்தறிவீரெனவாகமச்
சுவைதெரிந்தறிநந்திதுளக்குவான். (௩கூ௬)

அரனைமுக்கணவனையறிந்துள
குரவனைத்திருநீற்றைவெண்கோவிடைப்
பரனுருத்திரமாமணியைப்பரந்
தரவருந்தனித்தொண்டுசெய்சைவரை. (௩கூ௭)

வந்தியாதுமறுநிலைநின்றுளஞ்
சிந்தியாதிகழ்தீமையர்தென்புலத்
தந்தகன்படராலழிந்தள்ளல்வா
யுந்தவீழ்ந்துபடுவதுணர்குவீர். (கூகூஅ)

சோனமென்றொருநாட்டகத்தொன்னக
ரானசோனமதிலிருந்தாருயிர்
மானவெண்குடைநீழல்வளர்க்குவான்
கானவார்தொடைவேந்தன்கலாதரன். (கூகூகூ)

கலைகள்யாவுமொருநெறிகற்றுணர்
நிலையினின்றவனீதியினீங்கலான்
கொலைமழுப்படையெந்தைகுரைகழ
றலைசுமக்குறுஞ்சைவத்தலைமையான். (சOO)

இகலுமன்னரெரிமிடைகூரனகம்
புகவிழிக்கும்புகர்முகவேலினேன்
றகைபெருங்குணத்தன்மையன்றென்மைசா
லகனிலம்பொதுப்போக்கியளிக்குவான். (சOக)

இனையதன்மையனீர்ந்திழைத்தேற்றிய
புனைமணித்தனியாசனமீப்பொலிந்
தனையெனச்சுரந்தாரருணல்கியக்
கனைகழற்றனிவேந்துறுங்காலையில். (சOஉ)

அந்தரத்தினியங்குமருந்தவா
சிந்தைகூர்சிவயோகிகள்சித்தாகள்
பந்தநீக்குந்துறவுறுபண்பினர்
முந்தினாரவன்பேரவைமுன்னினர். (சOஙு)

அன்னகாலையருங்கலையாவையும்
பன்னியோர்ந்தபசுபதிபாரதி
துன்னினனத்தொடுகழல்வேந்தனு
முன்னரெய்தியருச்சனைமுற்றினன். (சOச)

அன்பினோடரியாசனத்தேற்றினா
னென்புறக்கனிந்தேற்றியிரங்கினன்
புன்புரிச்சடைப்புங்கவனைத்தொழு
முன்பினன்னவற்காசிமொழிந்தனன். (சOரு)

அக்கணத்தினரசவையாயிடைப்
புக்கிருந்தவர்யாவரும்போற்றினர்

மிக்கெழுந்துயர்வெண்குடைவேந்தனை
யொக்கநோக்கியுணர்த்துதன்மேயினுன். (சOசு)

கட்புலந்தெரியேனுதற்கண்ணனை
யுட்புலத்திஞெருசாருணர்ந்துளேன்
கொட்புறும்பரிக்கோமுடிவேந்தவோர
நுட்பவுண்மைநொடிவதுகேளெனு. (சOஎ)

சைவமேசமயந்தனிக்கண்ணுதற்
றெய்வமேபரஞ்சேவுயர்த்தெம்பிரான்
வையம்யாவையுமன்பதையாவையு
செய்யுமெள்ளுமெனநிறைந்தானரோ. (சOஅ)

செய்யப்பட்டனசெய்பவன்செய்தொழிற
கையப்பாடிலவாயகருவிக
ளுய்யப்பட்டனயார்க்குமொருமொழி
தையற்பாகன்றழுவினின்றுனரோ. (சOகூ)

ஆதியாகியயறசமயம்புகப்
பேதியாநின்றபெந்தமுமாயிஞ
ஞேதியோதியுணருமுணாச்சியுட்
சேதியாவருந்தெய்வமுமாயினுன். (சகO)

ஓடுதேரகத்தூருவாணியிற்
கூடுதோறுங்கொழுஞ்சுடராயுட
ஞடுபூதமொரைாந்தவனுயினுன்
வீடுகாலமிறந்தொழிமெய்மையான். (சகக)

திங்களாயிரங்கோடிசிறந்தெனப்
பொங்குவெள்ளொளிபூத்தகயிலையா
னங்கணுதனருச்சனையல்லது
செங்கண்மாயனுமற்ருென்றுஞ்செய்கலான். (சகஉ)

ஆகையாலவற்காட்படவேண்டிஞே
ரோகநாதனிவனலதில்லென
வோகையன்பினருச்சனையோம்பியத்
தோகைபாகனைக்கைதொழுதேத்திஞர். (சகந)

எந்தையீசனருச்சனையெய்திஞேர்
சிந்தைகூர்சிவவேடஞ்சிறந்தவர்
முந்தையோன்சிவகாதைமொழிந்தவ
ருய்ந்ததொண்டர்க்கடிமையுவந்துளோர். (சகச)

இவரைநோக்கியிருங்கமலாசனன்
பவளவெண்டிரைப்பாற்கடனாயகன்
கவர்தடஞ்சினைக்கற்பகக்கோமக
னெவருமேத்தியிரங்குதல்வேண்டுமால். (௪௧௫)

ஈசனை தததங்களசிந்தையிருத்தினோர்
பூசுநீறுபொலியப்புனைந்தவ
ராசைமீக்கொண்டரனையடிக்கடி
பேசியன்புபிறக்கப்பெருக்கியோர். (௪௧௬)

ஈசனன்றிமுதன்மையரில்லெனப்
பேசினானிவைபேசலும்போரவை
பூசலுள்ளம்பொறாமையிற்பொங்கினான்
வாசுதேவனெனுமோர்வயிணவன். (௪௧௭)

சீடரோடுமரசவைசென்றொரு
மாடிருந்தனன்மன்னனைநோக்குறு
வோடுகொண்டிரந்துண்டுழல்வான்றனை
வீடுசென்னெறிதாவெனவேணடுமோ. (௪௧௮)

இங்கிருந்தவனின்னணமோதிய
புங்கவற்குப்புலித்தோலுடையொரு
மங்கையோடுமயங்குறுவான்சிரக்
கங்கைகொண்டிடுகாடுறைந்தாடுவான். (௪௧௯)

தாமதக்குணஞ்சார்ந்துளன்கைதொடா
வீமமாலையெலும்பணிதாங்கினான்
காமுறப்புல்லெருக்கணிகண்ணியா
னுமைக்கினத்தோடுநடஞ்செய்வான். (௪௨௦)

என்றெடுத்தவனோதியிசைத்தன
சென்றுறுதுசெவித்தொளைபொத்தினு
னன்றகம்பொறுத்தாற்றலனாயுளங்
குன்றிமன்னனைப்பார்த்திவைகூறுவான். (௪௨௧)

பெருக்குமண்டப்பிரளயமெய்துநாண்
முருக்கிமுன்னரரிமுதலோருயி
ரருக்கியச்சுடுகாட்டினின்றாடினா
னிருக்குணர்ந்தறியாப்பிறப்பீறிலான். (௪௨௨)

அளவிறந்தொழிநான்முகத்தந்தணர்
துளவநாண்மலர்த்தொங்கலொண்ணில

ருளரிறந்தவராங்கவரோங்குடற்
றளருமென்பணிமாலைதரித்தனன். (சஉங)

ஆதிகாலத்தரிபிரமற்குள
சோதியென்புதொடுத்தணிந்தானவா
சாதல்காட்டியுந்தன்னிலைகாட்டியு
மோதவேலையுலகுக்குணர்த்துவான். (சஉச)

ஏழைபாகத்திருத்தினனெம்பிரான்
வாழிமாநிலமன்னுயிர்யாவையுங்
கேழ்கிளர்ந்துபிறவிகிளைத்தெழச
சூழினங்கதுநான்மறைசொல்லுமே. (சஉரு)

முப்புரந்தெறுமுக்கணன்றன்மையை
யொப்பவோர்ந்திலராகியுருத்தெழு
வெப்பவெந்தழற்கும்பியுள்வீழ்ந்தனர்
செப்பருங்கணக்கற்றிடுதீமையோர். (சஉசா)

எடுத்தசீற்றத்ததீசியிருந்தவ
னெடுக்கில்பூதியுருத்திரமாமணி
தடுத்தணிந்திலீரொன்றிடுசாபநீர்
விடுத்துணர்ந்திலீரன்னும்விடுத்திரோ. (சஉஎ)

ஆங்கவன்சொலுமன்றுதொட்டின்றள
வோங்குதண்டொருமூன்றென்றெடுத்தநீர்
தாங்குகங்கைசசடைமுடிப்புங்கவன்
பூங்கழற்கயலாயப்புறம்போயினீர். (சஉஅ)

ஆரவத்தரரிபிரமாதியர்
சாரவுற்றுழித்தக்கன்மகத்திடை
வீரபத்திரன்பத்திரவெற்றியைச
சோரவிட்டிவைசொல்லத்தொடங்கினீர். (சஉகூ)

ஓதுநீதியுருத்திரமாமணி
பூதியோடுபுனையலர்க்காண்குறின்
காதுஞாளிவளர்ப்பவர்க்கண்ணுறுந்
தீதுசேர்குவர்திண்மையிதுண்மையால். (சங0)

நீறுபூசியுருத்திரநீண்மணி
பூறுமன்பினணியாருடன்சில
கூறினும்மவர்கொள்கையுரைப்பினும்
வேறுபாதகஞ்செய்யவும்வேண்டுமோ. (சஙக)

ஆயநின்னையருகுறலஞ்சுதூக்
தீயபாதகநின்செயலோதினு
மேயவின்னலிழைக்குநிரையம்வீழ்ந்
தோய்வில்காலமுழக்குவதுண்மையால். (௪௩௨)

உண்மையீதென்றுரைத்தனனுன்மறைப்
பண்வருஞ்சொற்பசுபதிபாரதி
கண்மயஞ்சிறிதின்றிக்கருத்தழி
வண்மைபெற்றவயிணவகேசரி. (௪௩௩)

மாடிருந்தனன்மாமணியென்பதோர்
கோடுகாய்ப்பனகோமயஞ்சுட்டுற
வீடுசாம்பர்வீபூதியிவற்றினாற்
றேடுவீடுசிறந்தவர்யாவரே. (௪௩௪)

தேம்புகானகத்தீயிடைமாமரஞ்
சாம்பராவததுவுந்தரிப்பரோ
லோம்புஞானத்துயர்ந்தவரோவென
வாம்பரித்திறன்மன்னவற்கோதினன். (௪௩௫)

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

கேசரியுரைத்தவாய்மைபசுபதிகேட்டுப்பின்னர்
மூசியசினத்தனாகியாங்கவன்முகத்தைநோக்கி
யீசனையறியாய்ஞானமெதுவழித்தென்றுநோக்காய்
கூசலையெடுத்தவெல்லாம்பித்துறக்குழறுகின்றாய். (௪௩௬)

உருத்திரமணியுநீறுமொருங்கெடுத்தணிவோர்தம்மைக்
கருத்துறநினைப்பினீசன்கழலிணைக்குரியராவா
ரருத்தியினணியார்யாவராயினும்புலையராவர்
திருத்தறமொழிந்தாய்நீயும்புலையரிற்றீயனென்றான். (௪௩௭)

வனைகழலரசகேட்டியென்றனனவன்கட்டைய
வினைபுரிபாதகரோனும்விபூதியுமணியும்பூணிற்
புனைபுரிசடிலவேணியெந்தையிற்பொலிவரென்று
நினைதொறுமறைகள்யாவுமெடுத்திதுநிகழ்த்துமென்றான். ()

ஆகமமறைகள்யாவுமளந்தறிந்தரனையன்றி
யேகமொன்றிலையென்றோதவுணர்ந்திலையிவர்களேழை
பாகனையுணரார்மற்றைப்பதிபசுபாசமோரா
மோகமாமறலநோக்கியிருந்தனைமுதல்வவென்றான். (௪௩௯)

பசுபதியுரைத்தலோடுமவனெடும்பயின்றசீடன்
வசுவெனுமறையவன்றன்குரவனைமறுத்துச்சொல்வா
னுசிதநீயுரைப்பமுற்றுங்கேட்குநரொருவர்க்காணே
னிசிவருமதற்குமுன்னமேகுதிநிமலவென்றான். (சசு0)

அன்னவனுரைத்தலோடும்பசுபதியவனைநோக்கிப்
புன்னிலையாளரீசற்புகழ்ந்துறுதிகழக்கேட்டு
மின்னுயிர்பொறுக்கலாற்றேனிவர்க்கெதிர்புகல்வனென்றான்
பின்னருமவனைநோக்கிவசுவிதுபேசலுற்றான். (சசுக)

செய்தவர்செய்ததீமையடைகுவர்செய்கையோரார்
வைதவர்நரகுவீழ்ந்துமறுகுவரெவர்க்குமொக்கு
முய்தவத்தலைவபோதியென்றவனுரைப்பத்தீயோர்
மைதவழகளத்தாற்சொல்லும்புன்மைநீமதித்திலாயால். (சசுஉ)

என்றவனுரைத்தலோடுஞ்சீடனென்றிருந்தபாவி
யின்றிவணிகலாநிற்றியாணிதுவொழிந்தேனென்னச்
சென்றனனதனைநோக்கிச்சிரித்தனாசிறுமைசூர்ந்தோ
ரன்றொருமறையோன்சாந்தனுங்கவர்க்கருகுசார்ந்தான். (சசுங)

வேதமோர்நான்குமற்றையாகமவிரியன்முற்று
மோதுவித்துணர்த்திவிட்டாயாங்கவனுன்னைப்பேணன்
போதலும்வருந்தேலையநின்னடிபோற்றிநின்றேன்
கோதறுகுணத்தோயென்னைச்சீடரிற்கோடியென்றான். (சசுச)

நின்னடிதொழுதுநிற்பின்வேதமுநெறியினிற்கும்
பொன்னவிர்சடையோனெந்தைபுராணமும்புல்லாநின்றே
னன்னவைகருதிநின்பாலடைந்தனனெளியனேனுக்
கின்னருள்புரிதியென்றானுங்கவனிசைவதானன். (சசுரு)

சாந்தநீயுரைத்தவாய்மைநன்றனைத்தந்ததாதை
யேந்துநீர்ச்சடிலத்தோன்றாளிருத்தியகருத்தினீயும்
வாய்ந்தபேரன்பினெந்தைமலரடிக்குரியனானை
யேய்ந்தநின்செய்கைநன்மைத்தன்மையென்றிசைப்பதானன். ()

அந்நிலைமாறுபாட்டினரசவையிருந்தோர்தம்முட்
பன்னருமறைமுற்றோராப்பத்திரனென்போனைநோக்கிப்
புன்னனைப்பணியிற்கங்கைபொறுத்தவப்புனிதற்போற்றி
யுன்னருந்தகைமைசான்றபசுபதிக்குரைப்பதானன். (சசுஎ)

தரித்தநூன்மறையோனிந்தச்சாந்தனற்குலத்துட்டோன்றிச்
சரிப்பதுபுல்லொழுக்கிற்கணிகையர்தடக்தோள்சாரும்

விரித்தறிசுருதியோரான்கொலையஞ்சான்வெகுளிதீரா
னெரிப்படுவிரகனென்னென்றியைந்தனைமுதியோயென்றான். ()

பத்திரன்பகரநோக்கிப்பசுபதிபரமன்றொண்ட
ரெத்திறம்புரிந்தாரோனுமிலங்கொளிநீறுசாத்தி
யுத்தமற்குறித்துப்பூண்டவுருத்திரமணியாற்றீமை
யத்தனைபரிதிநோக்கும்பனியினீத்தழியுமென்றான். (சசகூ)

கண்டிகைநீறுதாங்கிக்கண்ணுதற்பரமற்போற்றுந்
தொண்டரையிகழ்வார்மீளாத்தொடுகுழிநிரையஞ்சார்வார்
பண்டருஞ்சுருதியின்னபகர்வதுபழியாநின்றாய்
கொண்டனைமறலிதென்பானிரையவெங்கொடுமையென்றான். ()

ஒருகுடையரசற்பாராவேந்தநீயொலிநீர்வேணிக்
கருமணிமிடற்றினோனைத்தொண்டரைக்கடவுட்டன்மை
தருமணியதனைநீற்றைப்பழித்தவித்தறுகணோனைக்
குருவெனவுணராவிட்டுநீத்தவக்கொடியோன்றன்னை. (சருக)

ஆயவிந்நால்வர்தம்மையாருயிரழித்திலாயேற்
றீயவெந்நரகத்தாழ்வாயடைந்தனைசிவத்துரோகம்
போயதுகழிவதன்றேயென்றனன்புலமைமிக்கான்
மீயுயர்கவிகைவேந்தனவர்க்கெதிர்விளம்பலுற்றான். (சருஉ)

கறைபடுகளத்தற்கன்புபூணநீயொன்றுங்காணாய்
மறைபடுவிழிபெற்றிந்தவயிணவக்குலத்தையெல்லாந்
துறையறமுடித்தியென்றான்சொலத்தகாதென்றுவிட்டா
னிறைகுணத்தலைவனெந்தைசேவடிநினைந்துநின்றான். (சருங)

அக்கணலரனைநோக்கியாங்கவனருளினோக்கி
முகக்கணல்விளங்காநின்றான்சைவநூன்முதன்மைசான்றோன்
புகப்படுவெகுளிமிக்குவயிணவர்ப்பொருதுநோக்கி
யுகப்படுமிடிவீழ்ந்தாவியுடம்பொடுமொழிதிரென்றான் (சருச)

அடிகளிதியம்பவானத்தார்குரலசனிவைய
மிடிபடமுழங்கிவீழவிறந்தனரிவற்றைநோக்கி
முடிநெடுமோலிவேந்தன்வெருவறமுதியோனோக்கி
கடிகமழலங்கலோய்நீகாத்தவமாதியென்றான். (சருரு)

ஆண்டவனுரைத்தலோடுமரசனுமவனைப்போற்றாள்
பூண்டனன்கிடந்தனுயேன்புன்மைநீபொறுத்தியென்று
வேண்டினனிரப்பக்கண்டும்வெகுண்டனன்சிவத்துரோகர்
மீண்டுறுநிரையஞ்சாரார்மீள்கலாநிரையஞ்சார்வார். (சருசு)

வேதசித்தாந்தமற்றையாகமவிதிகள்யாவுந்
தீதுறுசிவத்துரோகந்தீாவனசெப்புருவா
னீதுயரொழிவாயல்லையென்றனனிமலன்மற்றைப்
பூதலவேந்தர்கோமான்கழுதையாய்க்கதறிப்போனான். (சருஎ)

பரந்தெரிந்துணர்ந்தஞானப்பசுபதிசாந்தனோடும்
புரந்தரனளித்ததன்மைநினைந்தருள்பொருமப்போனான்
கரந்துருமிடித்துவீழவிறந்தவர்தம்மைக்கால
னுரம்படப்புடைத்துவீக்கித்தென்றிசையுடன்கொண்டெய்த்தான். ()

நீடியதென்பாற்றிக்கினிழைத்திடுமிருபத்தெட்டுக்
கோடிவெங்கிரையத்திட்டுக்கொடிதுறுஞ்சிவத்துரோகர்
பாடுறுநரகிற்கோர்பாற்பதகரிந்நல்வர்தம்மை
யோடுறுதலைகீழாகநிறுத்தினருடற்றுகின்றா. (சருக)

புலப்படுதுவாரமென்பதொன்பதும்பொங்கிப்பொங்கி
யுலப்பறுகிருமிகிண்டவுயிர்த்திலராகியோய்வா
ரலைத்தெழுகழுகுகாகம்பருந்துவீழ்ந்தவரதாக்கை
யலைத்துறப்பிடுங்கியுண்ணவருந்துயருழப்பரின்னும். (சகூ௦)

கழிந்திடுகற்பங்கோடிகோடிமேற்கழிந்தவின்னு
மொழிந்திலவொன்னநந்தியெடுத்தெடுத்துவகைசூர
மொழிந்தனனனைத்துங்கேட்டமுனிவரன்முழுதானந்தம்
பொழிந்தபேருவகைபொங்கக்கட்புனல்பொருமாநின்றான். (சகூக)

சொற்றனகாதைநமுற்றுமுணர்ந்தனையினமுஞ்சொல்வா
னுற்றதோர்காதையுண்டுகேட்டியாலொலிநீருந்தி
முற்றியகொடிக்கோட்டிஞ்சிக்கலிங்கநாட்டகத்துமுந்நீர்
பெற்றவெண்கலைவெண்டிங்கட்பெருங்குடைத்தனிக்கோல்வேந்தன். ()

இருதடம்புயத்துவையமேந்துகாலிங்கனென்போ
னருமையினறங்களாற்றியருந்தவமுயன்றுபெற்ற
வொருதனிக்குமரன்றன்பேர்விராதனென்றுரைக்கப்பெற்றான்
பொருகழலரசாக்கோம்புமுயிரொனபொலியாநின்றான். (சகூ௩)

அந்தணீருலகங்காக்குமரசர்கோனமைச்சினின்ற
மந்திரியரிதிறபெற்றமதலையாங்கவன்றனுமஞ்
சந்திரனவன்றன்வாயிற்புரகிதன்றவத்தினீன்ற
சுந்தரத்தடந்தோட்பாலனருமறைச்சுனந்தனென்போன். (சகூச)

மாமுடியரசர்கோமான்வாயில்காப்புரியோனுள்ள
மேமுறப்பயந்துபெற்றசுகந்தனுங்கினையர்நால்வர்

காமருசிறப்பின்மிக்கார்கருப்புவிற்காமனெப்பார்
பூமருநதிகளாடிப்புகுந்துறக்கருத்தினோர்ந்தார். (௪௬௫)

ஈதவர்கருத்தினெண்ணியருந்தவத்தீறுபெற்ற
தாதையர்க்குறுகியன்னோர்தனித்தனிவினவிக்கேட்ப
மாதுயருழப்பதானூர்மதலையர்க்குறித்துநோக்கிப்
போதிரொன்றுரைப்பமாழ்கியொருவழிபொருந்தினால். (௪௬௬)

பொதிகிழிநிதியமன்னோரவரவர்போதற்கீந்தார்
மதியுரைத்தரிதிற்புல்லிமைந்தரைவாழத்திவிட்டா
ரதிர்கழலரசர்கோமான்மாநகரகன்றூர்முன்னை
விதியிருந்துடற்றசசென்றூர்தமக்கெனவிளைவதோரார். (௪௬௭)

இனையவர்நால்வரோகிச்சுரோச்சுரத்திருவத்தாரந்தப்
புனைசடைமகுடகோடிப்புனிதனைத்தொழுதுபின்ன
ரனையமாநகரத்தோர்பாலயின்றனரதுகாலத்துத்
துனைபரியிரவிசென்றூன்றெடுகடற்குடபாற்றிக்கின். (௪௬௮)

கள்வராற்பயமுண்டென்னுங்கருததினர்குமரனந்த
வெள்விடையவன்பொற்கோயிற்றுயின்றனன்விசாலவெற்பு
வள்ளியோர்மரபிற்சைவதேசிகன்மடத்தினோர்பா
லுள்புகுந்துறக்கமுற்றூனமைசசர்கோனுவந்தபாலன். (௪௬௯)

புரகிதன்புதல்வனந்தவனம்படுபுரையுட்புக்கா
னிரவுகண்டுயிலப்பெற்றூன்மற்றையோனெந்தைமுன்னர்
விரைபுனற்கரையினோர்பாற்படிவிழிமுகிழ்த்தான்வெய்யோ
னிரைதிரைக்கடற்கணுற்றூன்விடிந்ததுநிமிரந்தகங்குல். (௪எ0)

விடியலினெழுந்துநால்வரொருநெறிவிரவியந்தக்
கடிநகரொழியச்சென்றூகாவதங்கடந்தபின்னர்
வடிமறைபயின்றதெய்வக்கவுதமர்வரவுநோக்கிப்
படிமுடிதடவவீழ்ந்துபணிந்தனரபாலர்நால்வா. (௪எக)

மாதவத்தலைவனந்தமைந்தரைவரவுநோக்கிப்
போதுவதியாங்கணென்றூனுங்கவர்தொழுதுபோற்றிக்
கோதறுகுணத்தோய்தெய்வக்குளிர்புனனதிகளாடித்
தீதவித்திடுதலோர்ந்தேமென்றனர்சிறுவர்யாரும். (௪எ௨)

அருந்தவத்தலைவனுள்ளத்தணிமணிமுறுவல்பூத்தான்
வருந்தினனிவரைநோக்கிமைந்தர்காள்வருதிரொன்று
விருங்கதிரின்றுபோமுனும்முயிரிழப்பீரொங்ஙன்
பொருந்திரைநதிகளாடிப்புகுவதுபுகலுமென்றூன். (௪எ௩)

எளியமின்றிறக்கவெய் துங்காரணமென்னையென்ன
விளிபடுநென்னற்கங்குல்விழிமுகிழ்த்துறங்குங்காலை
நெளியரவணிந்தவேணிநிமலனுக்காகாசெய்தீர்
வெளிபடவுரைக்குமன்னகேட்கெனவிளம்பலுற்றான். (௪௭௪)

ஒருவனாலயத்துட்டுஞ்சமயிராகழிந்துகுதலானு
மொருவனக்குரவனில்லிற்றம்பலிட்டுமிழ்தலானு
மொருவனுண்மலராப்பூங்காவினுமிழ்தலுந்திருநீக்குட்டத்
தொருவன்மூக்கொழுக்குச்சிந்தியிடுதலுமுடையீர்பாவம். (௪௭௫)

என்றவனுரைப்பக்கேளாநால்வருமிகந்தவுள்ளத்
தொன்றுமுற்றுணராராகிப்போயினரொருங்குசென்றார்
பொன்றிணிகழற்கான்மைந்தன்றலையிடிபொருந்திப்பட்டா
னன்றுமற்றொருவன்கண்டமடைந்துயிரிறந்தானன்றே. (௪௭௬)

மற்றையோன்றனதுநாசிவழித்தொளைகுருதிகால
விற்றனனொருவன்றன்னுப்புறப்படவிறந்தானின்னே
ரற்றைநாளிறப்புநோக்கியடுதிறன்மறலிதூதர்
பற்றினர்பிடித்துக்கொண்டாரிறுக்கினாபாசம்வீக்கி. (௪௭௭)

அரசிளங்குமரற்கியமுருக்கிமோந்துச்சியப்பா
விரவுசெப்புருக்கமைச்சன்பாலகன்வாயில்விட்டுப்
புரகிதன்மகனைநாக்குவாங்கிநின்றரிந்துபோக்கி
மரபின்மற்றவற்குநாசிகாச்சியசலாகைமாட்டி. (௪௭௮)

விழுத்துறுநிரையத்துந்திவீழ்த்தினாவெங்கட்டே
தொழுக்கமிலனையநால்வர்க்குய்யுநாளொருநாளுண்டே
விழுத்தவத்தலைவவென்றானந்தியவ்விரதநோன்மை
பழுத்தமெய்த்தலைவன்முத்தன்செய்கையைப்பரிவினோந்தான். ()

நந்தியீதுரைப்பக்கேட்டயோகியுநளினபீடத்
தந்தணனவனுங்குல்லையலங்கலந்தோளினானும்
வெந்தசிந்தையராயங்கம்விதிர்விதிர்த்தசசங்கூர்ந்தா
சிந்தைமுற்றுணர்ந்தேமற்றசெப்பலைசெல்வவென்றார். (௪௮0)

எழுந்தனரனையநால்வரீங்கிவரியற்றுபாவம்
மொழிந்துறக்கேட்டனம்பான்முற்றுறுமுற்றுறுமை
கொழுந்திளந்திங்களேந்துகொடிசசடைப்பரனையெய்தித்
தொழுந்திறனுணர்ந்தாசெல்லுமுன்னரோதொடர்ந்ததுள்ளம். ()

எம்பிரானியற்கைமுற்றுமெடுத்தெடுத்திசைத்ததேவர்
தம்பிராற்குரியனோடும்புகுந்தனர்தனைப்பூங்கொன்றை

வம்புலாஞ்சடிலிபொற்றாள்வணங்கியோர்மருங்குநின்றார்
கொம்பொருபுடையோன்பார்க்குந்தொறுந்தொறுங்கூப்புங்கையார்.

தாழ்சடைப்பரமநாதன்சதானந்தன்வதனநோக்கி
யூழ்முறைக்காதைமுற்றுமுனக்குரைத்தனனேயென்ன
வாழிநீயுரைப்பக்கேட்குந்தன்மையின்வகுத்தானன்னோர்
சூழ்வினைத்தொன்மையெல்லாமென்றடிதொழுதுநின்றான். (சஅங)

அத்தலையவனைநோக்கியரனுவப்பருளாநின்றான்
முத்தனைமுறையிற்றாழ்ந்துமூவரும்புறத்துப்போனார்
கைத்தலைப்பிரம்புதாங்கிநந்திவெங்கணத்தர்சூழ
சித்திரசசிகரவாயிலிருந்தனன்சிறப்புமிக்கான். (சஅச)

இன்னவைநந்தியன்னோர்க்கிசைத்தவையெடுத்துக்காட்டிச்
சொன்னவச்சூதற்போற்றியருந்தவர்துளக்கங்கொண்டா
ரென்னையாளுடையோற்காகாவியற்றுறுதியங்குகாலம்
பின்னுறக்கழிப்பதம்மாவரிதெனப்பேதுற்றாரால். (சஅரு)

ஐயநீயுரைத்தமுற்றுமுணர்ந்தனமறியாதின்னோர்க்
கெய்தியபாவந்தன்னாலிப்பெருநிரையமுற்றா
ருய்திறமொழிந்துநெஞ்சமுணர்ந்துணராமையானுஞ்
செய்துறுசிவத்துரோகத்தியன்றவாசெப்புகென்றார். (சஅசா)

நல்லவாகேட்டிரொன்றுநகைபுரிமுகத்தனாகி
யெல்லவாங்குடிலவேணிச்சூதனுறறிசைப்பதானான்
றொல்லைநாட்சைவநீதிசசோமசன்மாவென்றுளனோ
னெல்லையாகமங்கடோய்ந்தசிவசன்மாவென்றுளோனும். (சஅஎ)

வரநதிபுனைந்தவேணிவானவற்கடிமைபூண்டோர்ப்
பரவியவுளத்தானீறுகண்டிகைபரமென்றோர்ந்து
தரவருஞ்செய்கைபெற்றோரருச்சனைதவறார்தெய்வக்
குரவரிற்பிழையார்சைவக்கொழுந்தெழவளர்த்துநின்றார். (சஅஅ)

இயங்குநாளொருநாளெந்தையாலயமிறைஞ்சவெய்தி
முயங்குபேரன்பினோடும்வலன்றிரிமுறைமைமுற்றிப்
புயங்கவேணியனைமுன்னர்ப்பணிந்தெழுந்தகத்துப்புக்கார்
வியந்தெழுவிம்மலோடுமெய்ப்புளகெழுந்துநின்றார். (சஅகூ)

ஏற்றுடையவனைப்போற்றுமிருவரிலொருவன்மெய்யிற்
காற்றுறத்தீபமொன்றுசிதைந்ததுகண்டுநின்று
மாற்றமொன்றுரையாதுற்றான்மற்றவனிணையாமீண்டான்
கூற்றிவையுணர்ந்துசீற்றக்கொடுமையின்மகுடஞ்சாய்த்தான். (சகூ0)

நாள்பலகழிந்தபின்னரிறந்தனர்நமன்பாற்றூதர்
மூளிருஞ்சினத்தராகிப்பிடித்தனர்முழங்கைமுட்ட
நீளிருங்கயிற்றிற்பற்றியிறுக்கினர்கிறுத்தகில்லார்
வாளெறியெயிற்றுப்பேழ்வாய்மறலிபாற்கொணர்ந்துவிட்டார். ()

வெய்யவர்நிரையமெல்லாம்வீழ்ந்துறக்குளித்தார்பின்னர்
நெய்யுறுவிளக்கமெய்யிற்காற்றினுனிறுத்திச்சென்றோன்
செய்யதீபத்தைக்காணுதேகலுமனையன்செங்கண்
கையறுகாதநான்குவளர்ந்ததோர்கணத்தினுள்ளே. (௪௯௨)

நோக்கிநின்றதனைச்சொல்லாமற்றையோனுெடியப்பட்ட
நாக்குமவ்வளவையாகவளர்ந்ததுநரியும்நாயு
மேக்குயர்பருந்துங்காகபடலமுங்கழுகும்வீழ்ந்து
தேக்கெழுகுருதிமாந்திப்பிடிங்கின்றின்னநின்றார். (௪௯௩)

இற்றைநாளளவுந்துன்பமுழக்குவரிவர்களீண்டு
கற்பமோர்கோடிமேலுங்கழிந்தனகருப்புக்கோல
விறபடையவனைச்செற்றோன்றன்னிலைவிரும்பிப்போற்றும்
பொற்பினுெருவனெந்தையாலயம்போறறப்புக்கான். (௪௯௪)

நெய்யிடுதீபமிற்றதிரியொடும்பொலியநேர்ந்து
கையினுறறூண்டவன்றோன்காரத்துகிரகத்துட்டோய்ந்த
பெய்துளிநறுநெய்துஞ்சியுறைந்ததுபின்னரெய்தி
யொய்யெனப்பொலிந்தவெஞ்சோறளவலுமுருகித்தோய. (௪௯௫)

நுகாந்தனனடிசிலந்தநெய்யொடுநுகராநின்றோ
னிகந்தனனுவிதென்பாறறூதாவந்திடித்துப்பொங்கித்
தகர்ந்திடசென்னியோச்சிப்புடைத்தனர்தடக்கைத்தாம்பா
னெகிழ்ந்துறுதிறுக்கிக்கொண்டுசென்றடுநிரையத்திட்டார். (௪௯௬)

பாதலநிரையத்தாழ்ந்துபற்பகலிறந்தபின்னர்ப்
பூதலப்பிறப்பினுயிறபிறந்தனனீதுபோக
வாதியம்பரமற்காளாயடித்தொழிற்றென்டுபூண்டோ
னோதருமதிமானென்னும்பெருங்குணச்சைவயோகி. (௪௯௭)

வைகலுமீசற்கானமஞ்சனம்பொலியவேண்டு
நெய்யிலையடைக்காய்மஞ்சட்காப்பிவையிளநீரின்ன
பைப்பயவிரப்பினீட்டிப்பணிவிடைக்குரித்தாய்நிற்பான்
சைவநூலுணர்ந்துபூதிசாதனத்தலைமைசார்வான். (௪௯௮)

இப்பரிசியற்றுநாளிலெம்பிரானபிடேகத்தி
னப்பொழியிளநீர்பன்னுளகவைதொட்டெடுத்துத்தின்பா

னெப்புறுகாலம்போக்கியொழிந்தனனுவிதென்பாற்
செப்புருக்கனையகண்ணூர்வளைத்தனர்தெழிக்குஞ்சொல்லார். (௪௯௯)

பற்றினர்பற்றிவீசுபாசத்தாலிருகைமாட்டிச்
சுற்றினர்துரத்தித்தென்பாற்சுடுதழனிரையத்திட்டா
ரிற்றிதுகிடக்கமற்றோர்வணிகனீராறுபொற்றேட்
கொற்றவேள்குமரற்காட்பட்டொருகுறுங்கொள்கைபெற்றான். (௫00)

காலையினெழுந்துசெய்யுஞ்செய்வினைகழிந்தகாலை
யாலயங்குறுகிச்சூழ்வந்தறுமுகற்பணியாநிற்பான்
கோலவேலெந்தைகோயிற்*பசிரிகைக்கொண்டுசெல்வான்
பாலெழுமடிசிலோடுநுகர்ந்தனனளவில்பன்னாள். (௫0௧)

தன்னுயிர்க்களவையெய்தியிறந்துழித்தறுகட்டேர்
பின்னுறுமணித்தாம்பிட்டுப்பின்னுறப்பிணித்துச்சென்றார்
தென்னிலைநிரையத்திட்டாராதலாறசிவத்துரோக
மென்நிலையெய்துமோமற்றறிந்திலம்யாமுமின்னும். (௫0௨)

சினவிடையவனூற்பெற்றபாதகத்தீமைமற்றீ
தெனவெடுத்துரைப்பச்சூதன்கேட்டருளிருடிசசெல்வர்
மனனடுக்குற்றாரெங்ஙன்மாதவம்பயில்வதென்றார்
புனையிழைபாகற்காகாபுரிந்திடாதிருந்துபோற்றி. (௫0௩)

அரிதரிதம்மவென்னவதிசயமடைந்தார்யாரும்
பரிவினஞ்செழுத்தையோராந்திப்பாதகந்தொலையாநின்றார்
புரிசடைச்சூதனின்னோர்படுவனபுகன்றபாவ
மிரியவஞ்செழுத்தைநெஞ்சத்திருத்தியென்புருகநின்றான். (௫0௪)

சிவத்துரோகிகளெய்து நரகவேதனைச் சருக்க
முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௧௨ - க்குத் திருவிருத்தம் ௨௪௯.

## ௧௩ - வது சிவபூசை மான்மியச்சருக்கம்.

எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

தொன்மையாவையுமுணர்ந்தறிநிறைகுணத் துரிசறுபெருந்தவமுடை [யீர்
வன்மைமாநரகுழந்திடுபாதகர்மரபெடுத்துணர்த்தினமின்னுஞ்
சின்மையத்திருவுருவெனநின்றவச்சிவனடியருச்சனைபுரியுந் [ல்.
தன்மையோதுதுமொருவழிநிறுத்தத்தும்வரன்முறைகேட்டுறத்தகுமா

* ஓர்வகைக்கீரை.

அரனருச்சனைபுரிதிறங்கேட்டுறினுடராநெடுமுடிகிடந்த
வுரவுநீணிலப்பஞ்சமாபாதகராயினுமுருத்திரவக்கம்
பரவுபூதியஞ்செழுத்திவைகினைந்துருப்பாதகராயினும்படிமேல்
விரவுறுஞ்சராசரங்களாங்கவரடிவேண்டுறுமிருங்கதிவேண்டி. (௨)

முற்றொடங்கியகாலமாபிரளயமுற்றுறவெந்தையெம்பெருமா
னிற்றுறுருவுயிர்த்தொகையெலாந்தன்னுழைக்கரந்தனனற்றைநாளிரவிற்
கற்றைவார்குழற்சத்தியொடருநடத்தாண்டவங்கருணையிறபுரியு
முற்றகங்குலீறெம்பிரானிறப்புறுஞானசத்தியைப்புரிந்துதவும். (௩)

வாமமேமுதற் சைவமீறுட்படு சமயங்களாறையும் வகுத்துக், காமரண்டமென் ணிறந்தன புரிந்துமும் முதன்மையா யோரையுங் காட்டித், தோமின்முத்தொழி லவர்க்களித் துருத்திர கணங்களைத் தொகுத்துவா னவரை, மாமுனிப்பெருந் தலைவரை மக்களை மரங்களை மலைகளைவகுத்து. (௪)

ஆறொடைந்தெனுமுருத்திரருருத்திரகணங்கள்பூதங்கண்மறறசுரர்
மாறில்பல்லுயிர்த்தொகுதிகளாங்கவைவழங்குறுபுவனங்கள்யாவு
மூறுசிந்தையினினைத்துளவாக்கிமற்றுள்ளவையாவையுமொருங்கவ்
வாறுசத்தியுண்டாக்குறவருத்தியாங்கவையெலாம்வந்துழிமகிழும். ()

பின்னரொள்ளிதழப்பசுந்துழாயலங்கலந்தேவனைப்பிரமனைச்சுரரை
மன்னுமாமுனித்தலைவரையாகமபுராணசாத்திரமருமறைநூல்
பன்னியோதுவித்தரிமுதற்றேவரைப்பார்த்தெமைப்பத்தியினிரங்கி
நன்னலந்தருமருச்சனைபுரிகுதியென்றனன்பரகதிநாதன். (௬)

இரங்குபத்தியினெவ்வளவியற்றினீரவவளவிருங்கதிதருது
மரங்குதீவினையொழிந்திடவருச்சனைபுரிபவர்யாமென்பதறிவீர்
கரங்குவித்தியலருசசனையுவப்புளோம்யாமெனக்கண்ணுதற்கடவுட்
பரன்பகுத்துறவாங்கவற்கரிமுதறறேவாகளின்னணம்பகர்வார். (௭)

உலகம்யாவையுமண்டமுமீங்கிவைக்குள்ளனசரிப்பனயாவு
நிலவுவேணியாய்நீயெனப்புகல்வதுசுருதியுமாகமநெறியு
மலகினின்குணமளந்துபூசிப்பதற்கெங்ஙனமறிகுதுமெளியேம்
புலவநின்னருளெங்ஙனம்புகுதுமென்றிரத்தலுமெம்பிரான்புகலும். ()

எத்திறத்துளமூர்த்தியினுயினுமெமையுணர்ந்தருச்சனையியற்றின்
முத்திநல்குதுமாங்கதிற்பவித்திரமுழுமுதலிலிங்கவர்ச்சனையே
பத்தியிற்சிறுபச்சிலையாயினும்பனிமலர்ச்சிற்றிதழெனினுஞ் [பார்.
சுத்தமென்புனற்றுள்ளியாயினுமதிற்றொகுப்பவொமக்கெனத்தொகுப்

உருவமாகியவிலிங்கமுற்பவித்திறையொருவலமென்றுமுற்றுளமாற்
கருதியங்கத்தினருச்சனைமந்திரக்கடன்முறையியற்றினுமன்றேன்
மருவுபத்தியினியற்றினுமாங்கவர்மரபுளோர்கோடியரோடும்
பெருகுநன்னலக்கதிபெறவருளுதுமென்பதுமறைகளும்பேசும். (௧0)

என்னவெம்பிரா னெடுத்துரைத்தருளிய கேட்டலுமரிமுதலெ வரு,மன்னதன்மைய விலிங்கத்தினளவையு மாங்கதன்றேற்றமுமறி வான், பொன்னலங்கொளிப் புரிசடைவானவ புகறியென்றிசைத்தலும் புனித, பன்னகப்பெரும்பள்ளியோன் முதலவர்க்காங்கதன் றனிநிலை பகர்வான். (௧௧)

உரைக்கவேண்டுவ தன்றதுவாயினு மதனிலையொருங்குறக்கேண் மி, னிரைத்தவார்கட னிலத்துளோர் நம்முதல்யாவாக்கு மறிவதற் கெளிதோ, வரைத்துருமறைமுடியினு முடிவுருவதனிலை வரன்முறை வகுப்பி, னிரைத்தடுக்கிய முத்தொழில்யாவையு மதனுழை யல்லது நீங்கா. (௧௨)

வாக்கினுலுரைப்பரிதியாமென்றுநன்மாண்புடைச்சிவலிங்கமென்று
நீக்கமன்றதனிலைமைசொற்றுதுமருநெறிதருபரவிந்துவென்றும்
பாக்கியப்பரநாதமென்றுஞ்சொலப்படுவனவபரவிந்தென்று
நோக்கிலப்பெயர்நாதமென்றுஞ்சொலப்படுவனவாங்கவைநொடியின்.

ஆயநான்கினிலபரவிந்துவுமபரப்பெயர்நாதமுமுதலா
வேயவப்பரவிந்துவுமப்பெயாநாதமுமிவைக்குமேலாகச
சேயகாலமும்பிரிந்துறுதிப்பரிசிருக்குமாலச்சிவலிங்கந்
தூயவாகியபிரணவவேதியினுதமாய்த்தோன்றுவதுரைப்பின். (௧௪)

விந்துநாதமாய்ப் பொலிதருலிங்கத்தின் விழுத்தக வுண்மையா யுறைவோ, மிந்தவிப்பரி சுறைசிவ லிங்கதனை யருசசனை யெவர்புரிந் திடினு, மந்தநாளவர்க் கெம்முழைக்காட்சிதந் தளிக்குது மாங்கவர்கே ட்ட, சிந்தையோர்ந்தனவீகுதுமீங்கிது சத்தியமென்பனதெரிவீர். ()

அருச்சனைக்குரித் தாயிலிங்கத்திடை யுறைந்தனமொருகண மக லேம், தெரிக்கினெள்ளுமெண் ணெயுமெனச்சிறந்தனங் காண்பனயா வையுஞ் சிதைந்து, பரிக்குமாங்கதன் றன்னிடை லயிக்கையா லிலிங்க மென்றுரைத்திடப்படுமா, லரிப்பெரும்பெயர்முதலினோ ருயிர்த்தொ கை யாவையுமதனுழையடங்கும். (௧௬)

இன்னணந்தனிவேதியோடிருந்துறையிலிங்கத்தின்யாமிறையகலே
மன்னருபியாயிருக்குதுமாதலினவிர்மணியாடகம்வெள்ளி

பன்னருஞ்சிலைமண்மரஞ்சந்தனம்பஃறுளியிரதமென்றிவற்றான்
மன்னுசூத்திரமைந்தொடுமிலிங்கமொன்றியற்றினாருச்சனைவகுப்பின்.

கோடிவேள்வியு மளவொழிதானமும் விதிமுறையியற்றியோர் கொடுத்தோர், நாடியோர்ந்திலிங் கார்ச்சனை புரிபயனடைவரோ நன் குறத் தெரிப்பி, னேடவிழ்ந்தபூ வொன்றிடப் பெறுபயனெய்துறாராங் கவரினையோா, வீடுவேண்டியோர்க் களிப்டாயாமிருந்துழி வெம்பிறப் பொழிந்தினி திருப்பார். (௧௮)

மொழிந்ததெய்வ லிங்கத்திடைச சதாசிவமூர்த்தமா யினிதுவந் திருப்போம், பொழிந்தபதியிற் பூசனைபுரிபவா பொருபுனற்காசிகே தார, மிழிந்ததெள்ளரு வியவிருத்தாசலஞ் சிதம்பரமருணையெப்பவ முங், கழிந்ததென்கயிலாய மையாறுவெண் காடுதென் மதுரையம் மருதூர். (௧௯)

குடந்தைசீசைலப் பருப்பதங் காஞ்சிரா மேச்சுர மண்டகூடங்க, ளுடன்படுந்திருக் கயிலையோ ரிரண்டுபொன் மேருவி னுச்சிமற் றிவற் றின், மடந்தையோடுநங் கணத்தொடு மைந்தொழில் வகுத்தினிதுண் மையாயுறைவோ, மிடம்படுந்தல மிதுவென வுளத்துணர்ந் தெண்ணி யெம் மருச்சனைபுரிவீர். (௨0)

ஆதிநாளையினரிமுதற்றேவர்கண்முனிவரர்யாவருமன்பால்
வேதியோடுமுற்றுறுசிவலிங்கத்தினருச்சனைவேண்டினர்விரும்பி
யோதுமித்தலந்தொறுமலைதொறுநீரொழுகியாதிக்கரைதோறு
நீதியோடுநின்றினிதுபூசித்தவர்நினைந்தனயாவையுஞ்சிறந்தார். (௨௧)

அனையர்யாவரு மித்தலத்தருச்சனை யாற்றினர் பெற்றனர்யாவு, நினையுநீதியி னுரைத்துமென் றெம்பிரானவர்க்கென நிகழ்த்திய வுண் மை, வனையும்வார்சடைப் புனிதர்கா ணும்முழையந்நிலை வரன்முறை வகுபபாம், விளவியன்புறக் கேண்மினென் றருந்தவச சூதமாமுனிவ ரன் விளம்பும். (௨௨)

கலிநிலைத்துறை.

மூசுசுரும்பூடாடுதுழாயோர்முகில்வண்ணன
காசிபுகுந்தூழ்கோடிகடப்பக்கருதானின்
றேசிறவத்தாலுண்மைசிறந்தானெம்மானைப்
பூசைபுரிந்தானன்பொடுமாகம்புளகுற்றான். (௨௩)

எந்தைபிரானாலன்புசிறந்தானிதுகாலத்
தந்தமில்வைகுண்டப்பதமுற்றானதுமற்றோர்
நந்துகடும்போராழிநகைக்குஞ்சுடர்வைவா
டந்தொருதண்டங்கார்முகநல்கத்தனைபெற்றான். (௨௪)

கோவையிதழ்ச்செங்கோல்வளைமென்கைக்குளிர்போதிற்
பாவைதனக்குப்பாரியெனப்பெற்றனனம்பொற்
பூவிலிருக்குநான்முகன்மற்றைப்புவனத்தோர்
தேவர்வணங்கப்பல்லுயிர்நல்குந்திதிபெற்ருன். (உரு)

எடுத்துவிரிக்குந்திண்சிறைமேருவெடுக்கும்போர்
மிடுக்கினெடுங்கலுழக்கொடிபெற்ருன்வெய்யோரைக்
கடுக்குமிருந்திறல்பெற்றனனூழிக்கதிரோய்க்கு
முடுக்கைசிறந்தானென்னினியன்ஞேற்குதவாத (உசு)

நாளநெடுந்தாட்சேயநறும்பூநளினத்தோன்
மூளுறுமன்பிற்கச்சிபுகுந்தம்முதல்வோனைக்
கோளறுமென்பூவர்ச்சனைசெய்துக்குறைமுற்றித்
தாளிணைபற்றுந்தொண்டருவக்குந்தலைநின்ருன். (உஎ)

வையகமுற்றுமண்டதையாவும்மரபோடுஞ்
செய்துமுடிக்குந்திண்மைசிறந்தான்மறையெல்லாங்
கொய்துதெரிக்குங்கூரறிவுற்ருனளவில்லா
மைதவழ்கண்டத்தெந்தையளிக்கும்வரம்பெற்ருன். (உஅ)

வெள்ளையிதழ்ப்பைந்தாமரைமங்கைவிருப்புற்ருன்
கள்ளவிழ்கற்பத்தேவர்வணங்குங்கதிபெற்ருன்
கொள்ளைநெடும்பாலாழியெனுந்திண்குடைபெற்ருன்
றுள்ளுதிரைக்கற்றைக்கவரிப்பொற்றெகைபெற்ருன். (உகூ)

திண்சிறையன்னத்தூர்திசிறந்தானழிவில்லாப்
பண்பொடுபிரமபதத்தலைநின்ருன்முனிவோர்தந்
நண்பின்வணங்குந்தன்மையடைந்தானவையற்ருன்
வெண்பிறைவேணித்தேவனையின்னும்விருப்புற்ருன். (௩௦)

சீருலவெறபிற்சென்றுதவத்தின்செயன்முற்றி
மாகபுரக்கோனிந்திரனந்நாள்வழிபட்டான்
பாகடுவெள்ளைப்பாய்பகடெய்திப்பயனுய்க்குஞ்
சாகைவிடுக்குங்கற்பகநாடுந்தனிபெற்ருன் (௩க)

பொன்ஞெளிபொங்குபுலோமசைதந்தபுதுக்காமத்
தின்னலமன்பினுகர்ந்தனன்வானவரொவருந்தம்
மின்ஞெளிமாமுடிதாழவிழுந்தெழவிரிசெம்பொற்
றுன்னரியாசனமீதுபொலிந்துதுலங்குற்ருன். (௩உ)

வால்வளைசெம்பொற்ருமரைசிந்தாமணிதேனுக்
கோலியவச்சிரமுதலியவெம்படைகைக்கொண்டா

ணுநெடுங்குடைசாமரைமற்றிவையனையாவுஞ்
சால்புறமால்விடையோனருளோடுந்தானின்றான். (௩௩)

பாடுறுகீதப்பண்மொழியோரறுபத்தாறு
கோடியரம்பையர்சூழ்வரவின்னுங்குணதிக்கி
னீடுதனிக்கோல்சென்றுறநின்றானிறைசெல்வத்
தோடமுதப்பேருண்டியுவந்தானொழிவற்றான். (௩௪)

செந்தழல்வானவனெம்பெருமானடிசிந்தித்து
வந்தருணாசலவெற்பிடையன்பொடுவழிபட்டான்
வெந்தகர்வாகனம்வேற்படைபெற்றனனிருகொங்கை
மந்தரமன்னசுவாகாதேவிதன்மணமுற்றான். (௩௫)

தென்கீழமூலைபுரந்துதனிக்கோல்செலநின்றான்
மின்கீழ்போகவிளங்குமெயிற்றுத்தென்பாலோன்
றன்கீழெவருந்தொழவருடருகேதாரம்போய்ப்
பொன்கீறியவன்சடிலத்தரனைப்பூசித்தான். (௩௬)

தன்னகமுள்ளப்பட்டனயாவுந்தரநின்றான்
பின்னருகைக்குஞ்செங்கட்பகடுபெறப்பெற்றான்
மின்னடுபாசந்தண்டுகிடைத்தான்விரிவேணித்
துன்னருமுனிவரரேழவர்க்கன்றுசமஞ்சொற்றான். (௩௭)

புண்ணியபாவங்கண்டறமுற்றும்புரிவோரை
விண்ணுலகாளவிடுப்பதுமற்றுளவெம்பாவங்
கண்ணியபாவரைவெந்நிரையச்செங்கனலூடே
நண்ணவிடுப்பதுமன்னவனுணனவையற்றான். (௩௮)

வன்றொளைவெண்பற்சேடன்முடிப்பூவலயத்துத்
தென்றிசைமுற்றுந்தன்னொருசெங்கோல்செலநின்றா
னின்றளவுஞ்செம்பொற்கிரிவில்லோனிருபாதந்
தன்றனியுசசிக்கொண்டுசுமக்குந்தலைநின்றான். (௩௯)

நிருதிப்பேரோனெந்தைபிரானடிநெடுநீழல்
கருதித்தென்கோகன்னமடைந்தானொருகாலஞ்
சுருதிச்சொல்லான்மென்மலரிட்டுத்தொழுதுற்றா
னொருதுற்றெம்மானன்னவனுக்கன்றெதிருற்றான். (௪௦)

ஈயப்பட்டவரங்களனைத்தையுமெதிரேற்றான்
மாயப்பட்டுத்தெவ்வர்விழத்தெறுவாள்பெற்றா
னாயப்பட்டறியாநிதிபெற்றானசுரர்க்கோர்
தாயொத்துப்பேரரசுசெலுத்துந்தகையானான். (௪௧)

வருணன்சம்புவனத்தானைப்போய்வழிபட்டுச்
சுருளுந்தெண்டிரைவேலைபுரக்குந்தொழில்பெற்றான்
மருளுந்திண்சுறவூர்தியனாகவரம்பெற்றான்
பொருவும்பாசங்கொண்டுகுடக்குப்புரவுற்றான். (சஉ)

வேளைத்தீப்படநெற்றிவிழித்தருள்விடையோனைக்
காளத்தியில்வழிபட்டனனனிலக்கடவுட்கோ
வாளப்புவிபடுமன்பதைமனநினைவினைவிற்போய்
மீளப்படுவதுதன்னலதிலையெனும்விறல்பெற்றான். (சங)

ஏழுவகைத்தாம்வாயுவினுக்கோரிறையானான்
யாழினெடுங்கொடியாயுதமுற்றான்வடமேல்பா
லூழ்முறையின்னும்போரசுற்றானெழிவற்றான்
பாழிவயக்கலையூர்திகிடைத்தாரபகையற்றான். (சச)

சித்தவடச்சித்தேசுராபொற்சேவடியெண்ணிப்
பத்திபயக்கச்சென்றுகுபேரன்பணிதந்தா
னத்தனையொக்குந்தோழமைகொண்டானருள்பெற்றா
னத்தமுதற்கோமாநிதியெல்லாநனிபெற்றான். (சரு)

எண்ணிநினைந்தவரம்பலயாவையுமெய்துற்றான்
மண்ணியபுட்பகம்வாகனமாகவழங்குறறான்
றிண்ணியவெங்கதையாயுதமெய்துசிறப்புற்றா
னண்ணனெடுங்குடையுத்தரதேயமளிக்கின்றான். (சசு)

வடகீழமூலைப்பதியீசானன்வன்மீகப்
படவாரூர்வாழெந்தைபிரானைப்பணிவுற்று
மடலாமென்பூவர்ச்சனைசெய்தான்மகிழ்பெற்றான்
விடமார்கண்டன்வேண்டியவென்னைவிளம்பென்றான். (சஎ)

ஈசானத்தோனெந்தைபிரானுலருளெய்திப்
பேசாநின்றானின்னுருவின்மைபெறவேண்டு
மூசாநிற்கும்பன்னகம்வெண்பிறைமுகிழ்கொன்றை
கூசாநிற்குங்கங்கைபொறுக்குங்குளிர்வேணி. (சஅ)

மழுமானங்கைமுச்சிகைநெடுவேன்மழவேறு
தொழுவார்நின்னைத்தொழுமுறையென்னைத்தொழுதன்மை
வழுவாதீகுதியென்றனன்வடகீழ்த்திசைபோயிப்
பொழுதேயாளுதியென்றருளோடும்புரிகென்றான். (சகூ)

அன்னதுகேளாவெந்தைபிரான்மற்றவனுக்குச்
சொன்னவையாவுந்தந்துகடைப்பாற்றரிசற்றோ

யென்னுழைவாவென்றின்னருள்செயதானினிதுற்று
னின்னுநெடும்பேராழிபுரந்தானிகலற்றுன். (௫0)

வேறு.

உலகெலாந்தனித்திகிரியினலங்குதேருருட்டிச்
சுலவுகாரிருட்பிழம்பறுதுயிர்க்கருள்சுரக்கு
மலரிவானவன்கசியின்முளரிகொண்டரனை
மலர்சிலம்படியருச்சனைவரன்முறைவகுத்தான். (௫௧)

ஏழுபசும்பரிநுகம்பிணித்தெழுதருமிரவி
யூழிருக்குநான்மண்டலமெனப்பொலிந்துற்றுன்
பாழிமாநிலங்கைதொழப்பசுங்கதிர்பரப்பிக்
கேழ்கிளர்ந்தெழுவடவரைவலம்வரக்கிடைத்தான். (௫௨)

திருந்துமாத்திரையிருத்தைநாட்டிங்களாண்டிருந்து
பொருந்துகாலமற்றியாவையும்புலப்படப்புரிந்தான்
கருந்தடங்கணுளிடதரன்கண்ணெனச்சிறந்தா
னிருந்தகோட்கிறைதானெனப்பொலிந்தனனின்னும். (௫௩)

கும்பகோணத்துமழவிடையிறைவனைக்குறுகிச்
செம்பொருடகப்பரிபுரசசேவடிபூசித்
தும்பர்வெண்ணிலாக்கடவுண்மற்றுடுக்களுக்கிறையாய்ப்
பம்புவெண்கதிரினியதெள்ளமுதெனப்பயந்தான். (௫௪)

மேருமால்வரைவலம்வரக்கிடைத்தனன்விமல
ஞர்கொழுஞ்சடையணிதரச்சிறந்தனனுலகத்
தோரொலாந்தொழுந்தன்மைபெற்றுயர்ந்தனனெருங்கே
தேரினின்னுயிர்குளிரப்புறச்சீதளஞ்சிறந்தான். (௫௫)

பூமனன்னெறிப்புந்திகன்வியாழமென்புனிதன்
வாமசுக்கிரன்கதிர்மகனிங்கிவர்மருதூர்
தோமில்கூடல்வேதாரணிபழுமரச்சோலைக்
காமர்நன்னகர்திருவையாறடைந்தனர்கருதி. (௫௬)

அரனையேத்தினாவரன்முறையருச்சனையயர்ந்தா
ரிரவிமண்டலஞ்சந்திரமண்டலமிவற்றிற்
குரவுமேற்பதஞ்சிறந்தனருலகெலாமுவந்து
பரவியேத்துறப்பொலிந்தனரொழிந்தனர்பாவம். (௫௭)

நன்மையாவனநளிகடனெடுநிலத்தெவர்க்கும்
புன்மையாவனயாவையுங்கொடுப்பவப்புவியோ

ரின்மைசொற்றுநின்றேத்துறவெய்தினரிவர்க
டொன்மையோனடித்தாமரைவரன்முறைதொழுவார். (௫அ)

சொற்றவேழ்வரிலிருவருஞ்சுராசுரர்க்குணர்த்தப்
பெற்றடைந்தனர்மற்றையோர்பெருமையிற்சிறந்தார்
கொற்றமுத்தலையயிற்படைக்குழகனுக்கினிதி
னுற்றபூசனைப்பவித்திரப்பெருமையாருரைப்பார். (௫௯)

தீதின்மாதவக்கோசிகனத்திரிசிவன்றுட்
போதுணர்ந்தறிகவுதமன்பரத்துவன்புலமை
மூதுறுஞ்சமதக்கினிவசிட்டன்முற்றுணர்ந்து
வேதமோர்ந்தறிகாசிபனெனப்படுமேலோர். (௬0)

இன்னமாதவமுனிவரரோழ்வருமெதிர்ந்து
பொன்னலங்குசிற்றம்பலத்தரனடிபூசித
துன்னருங்கலையாகமமுதன்முற்றுணர்ந்தார்
துன்னருங்கிரகங்கட்குமேற்பதந்தொக்கார். (௬௧)

காலம்யாவையுமளவைகண்டொழித்துறுகடைபோய்ப்
பாலலோசனன்பதம்பெறுதன்மையும்படயர்தா
ராலகண்டனதிணையடியருச்சனையயர்ந்து
மூலநாயகனளித்தனவின்னமுமொழிவாம். (௬௨)

நிரந்தவாரகடனெடுநிலப்பரப்பெலாங்கிழற்றிப்
பரந்தவெண்குடைவேந்தனுத்தரன்பரதனுக்குப்
புரந்தவில்லறமாட்சியிற்புகுந்தனரிருவ
ரரங்கடிந்தவேற்றடங்கணாமடப்பிடியனையார். (௬௩)

இருவரீங்கிவரிருந்தவமரிதிழைத்தீன்ற
கருணைமைந்தரோரிருவரக்கான்முளையவரின்
மருவுமுன்னவன்மதலையம்மணிமுடிவேந்தன்
றிருமடித்தலையிருத்தலுஞ்சீறினளிளையாள். (௬௪)

சில்லரிச்சிலம்பரற்றுறவோடினள்சென்றாள்
மல்லலம்புயத்தவன்றிருமடித்தலையிருக்குஞ்
செல்வனைக்கரந்தொட்டிழுத்தகற்றினள்சினத்தால்
வல்லைகொண்டுதன்சிறுவனையிருத்தினண்மடியில். (௬௫)

அழுதுகண்பிசைந்தடிக்கடிபொருமினனவனை
யெழுதருங்குடைவேந்தவைநோக்கிலனிரங்கி
விழுமெழுந்தனையீன்றவட்குறாத்தனன்வீழ்ந்து
புழுதிமெய்படப்புரண்டனன்பொறுக்கலன்புதல்வன். (௬௬)

எடுத்தெடுத தணைத்தாற்றினன் மடித்தலையிருத்தித்
தொழுடித்தளிர்க்கையாற்கட்புனன்முறைமுறைதுடைத்துப்
பொடிப்புரண்டனநீவினளகம்பொருள்பொருமி
வடித்தடங்கணுண்மைந்தனுக்கினையனவகுப்பாள். (சுஎ)

என்னைசெய்துமற்றுந்தைதன்னிலையழிந்திவட்குத்
தன்னையீந்தனன்மன்மயறள்ளுறத்தளாந்தா
னுன்னைநோக்கலனுளநெகிழ்ந்தானலனுனக்குப்
பின்னல்வேணியோன்றிருவருளிரங்குமேற்பிழைத்தி. (சுஅ)

அந்திவண்ணனுக்கருச்சனைபுரிந்தனளாகி
மைந்தனோடுயர்ந்திழைத்தனளீதுகாண்மகனே
முந்தைவானவர்யாரினுமுதன்மையோராதற்
கெந்தைநல்லருளல்லவேன்முடிவதொன்றில்லை. (சுகூ)

ஆயினெம்பிரான்மலரடியருச்சனைக்குரித்தாய்
நீயும்வேண்டுவயாவையும்பெறுகெனநிகழத்தப்
போயினன்சிறுபுதல்வனுங்காசிடுக்கடைந்தான்
பாயவெள்விடையவனடியருச்சனைபயின்றான். (எ0)

சிறுவனின்னணமருசசனைபுரிதலுஞ்செழுநீர்
மறுவறும்பிறைவேணியோன்மழவிடையுகைத்துக்
குறுகினனவட்குறுகலுமென்புறக்குழைந்தான்
பெறலரும்பதத்தாமரைவீழ்ந்தனன்பிள்ளை. (எக)

ஆடினனழுதான்சிரித்தானழுதாடிப்
பாடினனின்றுபற்பலகுழறினன்பகர்ந்தா
னோடினன்குதித்தான்மயிர்ப்புளகெறிந்துயிர்த்தான்
வீடினன்பிழைத்தானெனுந்தன்மையின்வியந்தான். (எஉ)

மூக்கணோக்கினன் * முகிணகைபூத்தனனிவனை
யொக்கநோக்கினன்வேண்டியவுணர்ந்தெனவுணாத்த
நெக்கசிந்தையனுச்சிகைகூட்புறநின்றான்
மிக்கெழுந்தபேருவகையானினையனவிளம்பும். (எ௩)

துவாக்கொழுங்கொடிவேணியோய்நின்னடிதொழுதே
னெவர்க்குமேற்படு † பதவியின்றருளுதற்கெனலும்
கவர்த்தமுத்தலைச்சூலிமற்றுமகதுகருதி
நிவப்புறுங்கனகாசலப்பீடிகைநிறுவி. (எச)

* "முழுநகை" எனவும்பாடம்.
† "பதவியினெனிர்வதற் கெனலும்" எனவும் பாடம்.

நின்றகோட்களுமுனிவரரெழுவருநிற்க
வொன்றிமேற்படுபதவிபெற்றுயர்ந்துறவுதவி
யென்றும்வெண்மதிக்கடவுளுங்கிரகங்கள்யாவு
மின்றுமன்னவன்பணிப்படிதிரிதரவிசைத்தான். (௭௫)

காலசக்கரமுதலியவரங்களுங்கருதிப்
பாலலோசனனளித்தருங்கயிலையிறபடர்ந்தான்
சால்புறுந்தனித்துருவனென்றொருபெயர்தரித்தான்
மேலுறும்பதத்தின்னமுமிருந்தனன்வியப்பால். (௭௬)

திருக்குடந்தையினெம்பிரான்சேவடிபூசித்
துருக்குசிந்தையினூரகர்கோனெடுநிலமணைத்து
மிருக்குவெம்பணமாயிரமெடுத்தனனிருந்தான்
கருத்தினோர்ந்தறிகலையெலாமொருங்குறக்களித்தான். (௭௭)

புரித்தவேணியெம்பரமனையருச்சனைபுரிந்து
தெரிப்பரும்பதமடைந்தனரொண்ணிலர்சிறந்தார்
தரித்தமாதவத்தலைவிர்காளாங்கவர்தன்மை
விரிக்கினெம்முழையடங்குமோயாாகொலோவிரிப்பார். (௭௮)

படப்பெரும்புவியிலிங்கமும்பால்வளைகோலி
நடத்துவெண்டிரைப்பொன்னியேமுதலியநதிப்பா
லிடத்திலிங்கமும்வடவரைமுதலவெற்பெல்லா
மடுத்தலிங்கமும்பவித்திரமெனத்தொழுதடைந்தார். (௭௯)

தேவாகின்னரரியக்கர்கிம்புருடர்காந்தருவா
மேவருந்தவமுனிவரர்சித்தாவெள்ளெயிற்றுப்
பாவகாரியரிருதாவித்தியாதராபடப்பாம்
பாவதாகியவெண்மருமருச்சனையயர்ந்தார். (௮0)

கருடர்மானிடரரக்கர்மண்புரந்தருள்கமஞ்சூல்
வருடமெண்டிசைமநுவரைமால்வரைக்குலங்கள்
பொருவரும்பதம்புகுந்ததுமருவலாபுரந்தீத்
தொருவுமெம்பிரானருசசனையன்றிவேறுளதோ. (௮௧)

முத்திநான்கினத்தருமமேமுதலியநான்கி
னைத்தைவேண்டினராங்கவரெய்துதற்கரிதோ
வத்தனுடகப்பரிபுரச்சேவடிக்கமைந்த
சுத்திகொண்டிருந்தருண்முறையருச்சனைதொகுப்பின். (௮௨)

மன்னர்மன்னராய்நெடுநிலமன்பதைபுரப்பா
ருன்னருங்கதிபுகுந்திருந்தின்னலமுவப்பார்

பின்னர்மைந்தராய்மாநிதிப்பெருக்கினுற்சிறந்தா
ரென்னையாளுடைநாயகன்பூசனையிழைத்து. (அ௩)

அலங்குபேரழகருநிதியசத்தியமின்மை
நலந்தருங்கொடைசீர்த்திசெய்ந்நன்றியோரந்தறித
லுலம்பொருங்களிருடலம்புரவிதேரொலிநீர
வலங்கொண்மாநகாமாளிகையளவொழிவளங்கள். (அச)

உரைத்தவீங்கிவையாவையுமெம்பிராற்குவகை
யிரைத்தெழும்படிவரன்முறையருச்சனையிழைத்தார்
கரைத்தவன்பொடும்பெறறனாகணக்கிலரன்னோர்
விரைத்தமென்மலர்பூசையிற்பெற்றனவிரிப்பாம். (அரு)

ஆதிநாளையிற்பாற்கடற்பாப்பணையமலன்
மாதுபாகனைமலரடியருச்சனைவகுத்தா
னேதவேலைநீருலகெலாமொருகுடைநிழற்றிப்
பேதைமாரொடுஞ்சிறந்தனன்பெருநிதிப்பெருக்கான். (அசு)

செருக்கிருந்தவாவுணாந்தவோருந்தவச்செல்வ
னுருத்தலாலாசொழிந்துமாநிதிப்பெருக்கொழிந்தா
னெருக்குவாாசடையெம்பிரானருச்சனையியற்றித்
திருத்துமாநிலந்தரசொடுமுன்னரிற்சிறந்தான். (எ)

மடலொராயிரத்தாமரைப்பொகுட்டுறைமறையோன்
கடவுண்மாட்பநிகாழியிற்கண்ணுதற்பரனைப்
புடவிபோற்றுறப்பூசனைநாள்பலபுரிந்தான்
படவராவணிசெஞ்ஞியோனெதிர்ந்துறட்பணிந்தான். (அஅ)

அருத்திகூர்தரவெம்முழையருச்சனையாந்தாய்
கருத்திரோர்நனைவெதுவெனக்கண்ணுதல்வினவ
மருத்தவார்சடைப்புங்கவவாணவமயக்காற்
செருக்கெழுந்தனனதுகொடுவயிரவசசெல்வன. (அசு)

சிந்தைசீறியென்சிரத்தினோர்சிரங்குறைத்தெழுந்தா
னந்தநான்முதலின்றுகாறவலமுற்றடைந்தே
னெந்தையாருயிர்படைப்பனமயங்கினேனெனக்கு
முந்துசெய்வினைமுயற்சிதந்தருளெனமொழிந்தான். (௯0)

அயனுரைத்தசொற்கேட்டலுமெம்பிரானவற்கு
மயர்வொழிந்துறவரம்புரிந்தகன்றனன்மறையோன்
கயனெடுங்கடலுலகமும்பல்லுயிர்க்கணமும்
பயமொழித்துவீற்றிருந்தனன்முன்னரிற்படைத்தான். (௯க)

அரிக்குமாயிரந்தோட்டுடையம்புயத்தவற்குங்
கரித்தசிந்தையிணுணவமீக்கொளக்கனன்ருர்
தெரித்தநான்மறைபிரணவமீங்கிவைதெரியா
விரித்துணர்த்திமற்றவரடுபேரமாவிலக்கி. (௬௨)

பாரையாருயிர்ப்பரப்பினைப்பகிரண்டபபரபபை
மேருமால்வரைமுதலியவெற்பினைவிரிந்த
நீரைவானவரொவரையுமீன்றயனின்ரு
ஞேரினன்னவன்யாவனென்றுணர்ந்திலீர்போலும். (௬௩)

என்றுரைத்தனயாவையுமாணவச்செருக்கா
ளென்றுமோர்ந்திலானன்னவையெம்பிரானுணரக்
கன்றுவெஞ்சினவயிரவக்கடவுளைக்காட்டிச்
சென்றுநீயவர்செருக்கொழித்தருளெனச்சென்ருன். (௬௪)

விரவுநான்மறையந்தணன்றன்றுழைவெகுண்டோர்
சிரமரிந்தெழுசெந்நிறக்குருதியந்திரைநீர்க்
கரகபாலத்தினேற்றலுங்கரந்நதக்கபாலத்
திரள்குறுந்துளியொன்றெனுமில்லையசிரத்தில். (௬௫)

வேதநான்முகன்மயக்கமுற்றநந்நிலைவீழ்ந்தான்
காதுசூற்படைவயிரவனுங்கதுகாணுப்
போதமன்னவற்களித்தரிநாட்டகம்புகுந்தான்
ருதுலாந்துழாய்நெடுமுடியவற்கெதிர்சாரந்தான். (௬௬)

முத்தலைக்கழுவாங்கவனெற்றியின்முற்றக்
குத்தியேறறினன்மடமடதநொழுகியகுருதி
பத்தவாயிரமாண்டதுகபாலத்துப்பாயந்த
மத்தமாமதமொழிந்துறமயங்கினன்மாயன். (௬௭)

பாய்ந்தசோரியைக்கபாலமும்படசையறப்பருகக்
காய்ந்தவெவவிரும்பொழுக்கியபுனலெனக்காணு
ஞேய்ந்தமாயவற்குணாச்சிதந்நகன்றனனுரவோ
னேய்ந்தவெஞ்செருச்செருக்கொழிந்திருந்தனரிவர்கள். (௬௮)

என்னெனப்படுமாணவப்பாதகமிறப்ப
மன்னுதண்பணைமாமருதூரிடைமாயோன்
முன்னவற்பணிந்தருச்சனைபுரிந்தனன்முறையாற்
பொன்னின்வார்சடையெம்பிரானவற்கருள்புரிந்தான். (௬௯)

தானலாதிலையெனவுணர்பாதகந்தவிர்ந்து
மேனிலத்தவைகுண்டமுற்றடைந்தனன்விமலன்

கானநாண்மலர்ப்பழமறைப்பீடிகைக்கடவு
ளேனைமாமுகநான்கொடுமிருந்தனனின்னும். (௧00)

முன்னொர்காலத்தினரிபிரமாக்கமர்மூளா
வன்னவாக்குளவத்திரமெதிருடன்றமரா
வென்னையாளுடைநாயகனிடையழற்பிழம்பா
யுன்னிநின்றவரத்திரந்திருவுருவொளித்தான். (௧0௧)

என்றகாரணமுன்பெடுத்துமக்கெனவிசைததே
மொன்றவோர்ந்தனிரருச்சனைமுறையினிங்குரைத்தே
மன்றியிவனுமோரருந்துழாயலங்கலோற்கடுத்த
புன்றொழிற்படிறெம்பிரானொழித்தமைபுகல்வாம். (௧0௨)

வளைத்தவாளெயிற்றசுரருமதுமலருழ்த்துக்
கிளைத்தகற்பகநாடருமடுகளங்கெழுமி
விளைப்பருஞ்சமர்விளைத்தலும்விண்ணவாவெருவித்
தளைத்தபூந்துழாய்க்கண்ணியோற்சரணெனச்சார்ந்தார். (௧0௩)

திருதராலுடைந்திருந்திசைநெடுந்தொலைசென்றே
மொருவரஞ்சலிரொன்றுநின்றுரைட்டவரிமேலங்
கருதிமற்றிதுகாத்தியேலெம்முயிர்காத்தி
மருவருந்துழாயலங்கலோயென்றவாவணங்க. (௧0௪)

இரங்குசிந்தையனெறும்வலிக்கலுழன்மீதெழுந்தா
னரங்குவெஞ்சமரடுகளத்தசுரரைமுரிக்கிப்
பரந்துபோகியதிசையெலாம்படாந்தனன்சிலாபோ
யுரந்துணுக்குறட்பிருகுவாச்சிரமமுற்றொளித்தார். (௧0௫)

தொடாந்துசென்றனன்றிகிரிகொண்டோச்சியதுழாயோன்
படாந்தபுன்சடைப்பிருகுவோர்மாதவபன்னி
யடைந்துபுக்கனரடைக்கலங்காத்தனளவனை
மிடைந்தகுல்லையோய்கோறலையென்றெதிர்விலக்க. (௧0௬)

எழுந்துசீற்றமிக்காங்கவளுரைத்தனவிகந்து
கொழுங்கதிரப்படைத்திகிரிகொண்டவளுயிர்குறைத்தான்
செழும்பசும்புனற்குருதியஞ்சேற்றிடைக்கலாபத்
தொழுங்குமாமயில்கிடந்தெனசசோாந்தனளுறங்கி. (௧0௭)

போர்க்கடுந்திறலசுரரையுள்ளுறப்புகுதா
வீர்த்தசோரிநின்றலைப்புறத்தொலைத்தனனெழுந்தான்
கார்த்தடங்கடற்படிந்தெழுகார்மழைவண்ண
ஞர்த்தவெஞ்சிறைப்புள்ளரசுகைத்தனனகன்முன். (௧0௮)

முதிருமாதவப்பிருகுநான்மறைக்கொருமுதல்வன்
கதிரொளிப்பசுந்தருப்பையுஞ்சமிதையுங்கைக்கொண்
டெதிருமாச்சிரமப்புறத்தின்னுயிர்ப்பன்னி
யுதிரவாரியுட்கிடப்பதுகண்டுநின்றுயிரத்தான். (௧0௯)

ஆர்கொலீதிழைத்தாரெனவகக்கணுலளந்தான்
போர்கொணேமியான்புரிந்தனனென்பதுதெரிந்தான்
வார்கொள்வெம்முலைப்பன்னியைநோக்குறுமருளும்
வேர்கொழுந்துறத்தெருமருமொருதனிவெதும்பும். (௧௧0)

இனையபுன்றொழிலியற்றியோனிருந்துயாக்கெல்லை
யனையனாகியிந்நிலத்திடையளவறுபிறப்பின்
வினையுழந்துதன்னுருயிர்க்குயிரெனமேவும்
மனையிழந்துறவருந்தவென்றுனைத்தனன்மறையோன். (௧௧௧)

உரைத்தசாபமுற்றுடற்றலும்புணரியோட்டெழுப்பி
யிரைத்தபாற்கடற்பள்ளியோன்காஞ்சிபுக்கிருந்து
திரைக்கொழும்புனற்சென்னிதாளருச்சனைசெய்தா
னரைத்தவெள்விடையெம்பிரானவற்கெதிரநடந்தான். (௧௧உ)

வணங்குசென்னியனழுதிழிகண்ணினன்வருந்தி
யுணங்குசிந்தையன்றொழுதனனிற்றலுமொருபா
லணங்கிருத்தியோன்வேணடியவென்கொலென்றருள
மணந்தமாதவன்சாபமுற்றிடுதுயாவருத்தான். (௧௧௩)

பின்னும்வேண்டியயாவையுமுறைமுறைபேசக்
கன்னல்வில்லிசெற்றோங்கியதழனுதற்கண்ணன்
மின்னலங்கொளித்திகிரியானருச்சனைவிரும்பிச்
சொன்னயாவையுமளித்தனன்றிருவருள்சுரந்து. (௧௧௪)

அன்றுமாயவற்கருள்வரமளித்தபின்பிருகு
கன்றுவெஞ்சினச்சாபத்தாற்கடனெடும்புவியி
னின்றுபத்தவதாரமுநிகழுமானினக்கே
யென்றுரைத்தனன்பின்னருமெம்பிரானிசைக்கும். (௧௧௫)

ஈதிரோவதாரதநின்னுயிர்க்குயிரா
மாதுநீத்தறவருந்துதிவருந்தியபின்னர்த்
தீதுதீர்ந்தவட்சேர்குதியென்றனனெம்மான்
போதினுன்முகற்பயந்தவன்பணிந்தெதிர்புகலும். (௧௧௬)

எடுத்தபத்தவதாரத்தினெழுமதச்செருக்கா
லடுத்தபாவநீத்தருடரவேண்டுமென்றிரப்பக்

கடுக்கரந்துறைமணிமிடற்றெம்பிரான்கருதிக்
கொடுத்தகன்றெழுந்தருளினன்கயிலையங்குவட்டில். (௧௧௭)

சிவபூசை மான்மியச்சருக்க முற்றிற்று.

ஆக சருக்கம் ௧௩-க்குத் திருவிருத்தம் - ௨௬௧௦.

## ௧௪-வது. மச்சாவதாரச் சருக்கம்.

காலமீண்டிடை கழிந்தனசிலவதுகாலத்
தாலமோருருவெடுத்தனவசுரரிற்றென்றிக்
கோலவாளெயிற்றடுசினக்கோமகன்கொழுந்தீப்
பாலலோசனறகுறித்துநின்றருந்தவம்பயின்றுன். (௧)

தேவர்யாரையுநோக்கிநின்றருந்தவந்திருத்தி
யாவவேண்டுவவெறும்வலித்திறனொடுமெதிர்ந்தான்
பாவமோருருத்திரண்டெனவுறுட்பினன்பகரின்
மேவுதென்றிசைநமற்குமோர்நமனெனும்வெய்யோன். (௨)

செருவினெற்றுவாரின்மையாற்றினவுறுந்திரடோ
ளொருவன்மேருவையிடுக்குறுமிடுக்கினனுவரி
யிருநிலத்தினும்வானவருலகினுமிவைக்கீழ
வருநிலத்தினுமெதிர்க்குநரில்லெனமதித்தான். (௩)

ஒற்றைநாளநாட்டாமரையவற்கெதிருற்றுன்
மற்றையாங்கவன்வெருவரமயங்கினனதுகண்
டிற்றிதோவிவன்றிறமெனவிரங்கினனிகந்தான்
பற்றிநான்முகனுன்மறைக்குலமெலாம்பறித்தான். (௪)

பறித்தநான்மறைகொண்டெழுந்திருங்கடல்பாய்ந்தான்
வெறித்திருந்தனன்சதுமுகத்தந்தணன்வெருவி
நறைப்பசுந்துழாய்த்திருமகணுயகற்குறுகிக்
குறித்துரைத்தனனங்கவனடுசினங்கொண்டான். (௫)

மானயோசனையளவொழிமெய்யுருவாய்ந்த
மீனமாயினனெடுங்கடற்பரவையின்வீழ்ந்து
கானவெண்டிரைக்கருங்கடலளறெழக்கலக்கிப்
போனவாளெயிற்றசுரனைத்தடவுறும்புகுந்து. (௬)

நினக்குவேண்டியவென்னெனமுக்கணனிகழ்த்த
மனக்கொடுந்திறன்மயக்கநீத்தக்கயல்வடிவந்
தனைக்குறித்தெனைவணங்கினோரிருங்கதிதழுவப்
புனற்கொடுஞ்சடையெம்பிரானருளெனப்புகன்றான். (உ௪)

கேட்டநல்வரமங்கிலேகிடைத்துறவழங்கி
வாட்டடங்கணுண்மருங்கினேன்கயிலைபோய்மறைந்தா
னேட்டிருந்துழாயலங்கலோனவ்வுருவிகந்து
நீட்டிருஞ்சிறைக்கலுழன்மீப்பொலிந்தனனின்றான். (உ௫)

தடங்கொடுஞ்சினைக்கற்பகநாடருந்தணந்தார்
திடங்கொடாமரைநான்முகச்செல்வனுமெதிர
மடந்தைதாமரைமாளிகைமாதுலாமார்பன்
படங்கொள்பாப்பணைப்பள்ளியோன்றன்னுழைப்படர்ந்தான். ()

மச்சாவதாரச் சருக்க முற்றிற்று.

---

ஆக சருக்கம் ௧௪-க்குத் திருவிருத்தம் உ௬௩௬.

---

## ௧௫-வது. கூர்மாவதாரச்சருக்கம்.

கலிநிலைத்துறை.

கற்பகத்தருநாட்டவாயாவருங்கவாத்த
மற்பகுத்ததோள்வாளெயிற்றசுரருமருவி
நற்படப்பலமொழிந்தனர்நட்டனராகி
முற்படச்சதக்கிருதுவுக்கினையனமொழிவார். (௧)

நாவளந்துறுநாடபடநாதினைமூபபுச்
சாவடைந்துறுத்தன்மையினிற்பனதழுவாப்
பாவவெண்டிரைப்பால்படுபடுகடல்கடைந்து
மேவுதெள்ளமுதெடுத்தியாமயின்றுறவேண்டும். (உ)

என்றுரைப்படவொருமொழிகொண்டியைந்தெழுந்தார்
சென்றுமந்தரந்திருப்பினர்பிடுங்கினர்திரும்பி
யன்றுபாற்கடலகவைநட்டரவிடைபிணித்து
நின்றுவாங்கலுஞ்சாய்ந்ததுநெடுமுடிச்சிகரம். (௩)

அடித்தலம்பொருதக்கிரியகனிலப்பரப்பை
யிடித்துநேடரும்பாதலத்திருந்ததுநோக்கி

யெடுத்ததங்களாலாவதொன்றில்லெனவிகழ்ந்தார்
தொடுத்தபைந்துழாய்நெடுமுடியவனுழைத்தொக்கார். (ச)

உலகெலாம்பதத்தளவையிட்டுண்டுமிழ்ந்தளித்தா
யலகில்பல்லுயிர்த்தொகைதொறுமமர்ந்தனையைய
பலவுயிர்க்குமவ்வினைப்படிநுகர்வனபகிர்ந்தாய்
திலமுநெய்யுமொத்திருந்தனைநின்னையார்தெரிப்பார். (ரு)

கண்ணிற்காண்பனயாவையுங்கட்புலன்கதுவா
தெண்ணிற்காண்பனயாவுநீயாயினையெந்தாய்
மண்ணிற்காண்பனவானிடைக்காண்பனமயங்க
வுண்ணிற்பாயுனையாவரேயளவையிட்டுரைப்பார். (சு)

ஆடகப்பொருப்பெடுத்துளவளவொழியண்டந்
தோடகப்படமுந்தியந்தாமரைதோன்றப்
பாடிருக்குணர்நான்முகச்செல்வனைப்பயந்தா
யூடிவைக்கெலாமுட்படுகருவியொத்துயர்ந்தாய். (எ)

இடுக்கணென்பதொன்றெம்முழையெய்துநாளெந்தா
யடுத்தொழித்துநின்றருளளிக்குதியன்றே
தொடுத்தவான்றுணைநின்னலதிலையெனத்தொழுதார்
கடுப்படம்படுபாப்பணையெம்பிரான்கழறும். (அ)

விரும்பிவேண்டுவதென்னைகொல்விண்ணகங்கலக்கி
வருந்தவைத்தவருளர்கொலோவழங்குதிரென்றுன்
முருந்தவாணகைமுகின்முலைத்திருமகட்கிறைவா
பரிந்துடைபடுபதோர்காரணமுளதெனப்பணிந்தார். (கூ)

மொழிதிரொன்றலுந்தொழுதனர்நரைதிரைமூப்பிற்
கழியுமாக்கைபெற்றிருந்தனமத்துயர்கடப்பச்
சுழிதடந்திரைப்பாற்கடலமுதெழச்சுழல
வெழுதடங்கிரிகிறுத்திவாசுகிபிணித்திழுத்தேம். (கo)

அந்தமந்தரநெடுகிலமிடித்துவீழந்தாழ்ந்த
தெந்தைநின்னலதெமக்கெனவிசைவதொன்றுண்டோ
வந்துநோக்கியம்மாக்கடல்கடைந்தமுதெடுத்துத்
தந்தெமக்குயிர்தருதியென்றிரந்தடிதாழ்ந்தார். (கக)

ஈரப்பைந்துழாயெம்பிரான்றிருவருளிரங்கிப்
பாரத்திண்சிறைப்புட்பிடர்சேவடிபதித்தான்
வேரிக்கற்பகநாடருமசுரரும்வியந்தார்
மூரித்தெண்டிரைப்பாற்கடல்குறுகினர்முன்னி. (கஉ)

கண்டுவெஞ்சிறைக்கலுழனீத்திழிந்தனன்கண்ணன்
றிண்டிறற்பெருங்கமடமாய்த்திருவுருச்சிறந்தான்
கொண்டமேற்புறமிலக்கயோசனையிடங்கொண்டு
மண்டுபாற்கடல்படிந்துவீழ்மந்தரமெழுப்பி. (கங)

முதுகுமந்தரநிறுவுறவாசுகிமுறுக்கிக்
கதுமெனக்கடைந்திழுத்தனர்கலங்குபாற்கடற்பான்
மதுகைமந்தரஞ்சாய்ந்ததுவண்டுழாய்க்கமட
மதுவுணர்ந்ததுபிறந்ததுதிருக்கரமநந்தம். (கச)

வெற்பினுச்சிதொட்டமுக்கினசிலகரம்விண்ணோ
ரற்பினீர்த்தனரொருபுறமசுரரீர்த்தயர்ந்தார்
கற்பினுங்கவர்க்கொருபுறமுதவியக்கமட
முற்புறந்தொடுத்திழுத்தனதிருக்கரமுளரி. (கரு)

கடைந்தகாலைநுண்டிவலைவெங்கனமீத்தெறிப்ப
வுடைந்துபாற்கடல்சுழன்றதுமழுப்படையொருவற்
கடைந்துசொற்றிதுபுரிந்திலராதலினதன்பாற்
குடைந்தெழுந்ததுகருநிறக்கொடுவிடங்கொதித்து. (கசா)

வடவைகாளிமம்பொதிந்தெனமணிநிறக்கமஞ்சூற்
படர்கொழும்புயல்பரந்தெனப்பருதியிற்றொலைந்து
மிடைபடுங்கருங்கங்குல்வந்திறுத்தெனவிரிநீர்
புடைபடத்தவழ்ந்தெழுந்ததுகொடுவிடம்பொங்கி. (கஎ)

வெருவியோடினர்விண்ணவரசுரர்விண்புரந்த
கருவிமாமழைவண்ணனும்புகலிடங்காணா
ணொருவிநீங்கியவிண்ணவரொருவழிக்குழுமித்
திருவினயகதடுததியென்றலுமவன்செப்பும். (கஅ)

என்னையொப்பவராயிரகோடியரெனினு
முன்னருங்கொடுவிடத்தினையெதிர்ப்பவருளரோ
பின்னல்வேணியோன்றிருவருளுளதெனிற்பிழைப்பே
மன்னதில்லையேலெங்கனம்பிழைத்துமென்றறைந்தான். (ககூ)

அந்தரத்துளவானவரடுதிறலசுர
ரிந்திரப்பெரும்பெயரினோனயனையீன்றளித்தோ
னுந்துவெம்பயத்தோடினர்கயிலைசென்றுற்றா
ரெந்தையெம்பிராற்கடைக்கலமபயமென்றிரந்தார். (உ0)

வேதநாயகவிளங்கொளிவெவ்வழற்பிழம்பாஞ்
சோதிநாயகசுடர்க்கொடிமாதகம்படர்ந்த

பாதிநாயகபராபரபழமறைக்கெட்டா
வாதிநாயகவஞ்சினேமபயநின்னபயம். (உ

வித்துமாயினையங்குரம்விடுத்தவெஞ்சினையின்
கொத்துமாயினையவ்வழியுயிர்க்குலமனைத்திற்
கொத்துநின்றனையாதலினுனக்கிதுபரமா
லத்தனேயிறப்பஞ்சினேமபயநின்னபயம். (உ

இரந்திரந்துநின்றிவைபகர்ந்தேத்தலுமெமையாள்
கரந்தைவார்சடையெம்பிரான்கருத்துணரான்போ
லரந்தையென்கொலென்றருளினுனங்கவர்தொழுது
பரந்தபாற்கடல்கடைந்துளடரிசெலாம்பகர்ந்தார். (உ

கடவுளர்க்கெலாமுதன்மைநீயாதலிற்கடைந்த
தடநெடுங்கடன்முந்துறத்தந்ததுன்றனக்கால்
விடமடக்குதிவிண்ணவவென்றனும்விமலன்
புடைமடக்கொடிநோக்கினன்முகிணகைபுரிந்தான். (உ

மாடுநோக்கினன்சுந்தரவருதியென்றருளி
நீடுவெவ்விடங்கொணர்கெனநிகழ்த்தினனிமலன்
பாடகன்றெழுவிடங்கொடுநாயகன்பணிக்கை
யூடமைத்தனனிருந்ததத்திருக்கரத்தொடுங்கி. (உ

விரிந்ததாமரைச்சுரும்பெனவிளங்கியவிடத்தை
வரிந்தவார்சடையெம்பிரான்றிருவுளமகிழ்ந்து
பரிந்துநோக்கினனுகர்ந்தனன்களத்திடைப்படுத்தான்
றெரிந்தவானவரதிசயங்கொண்டனர்திகைத்தார். (உ

அற்றைநாண்முதற்காளகண்டபெயரமைந்தான்
மற்றைநாரணன்முதலியோரக்கின்னருள்வழங்கித்
தெற்றுவெண்டிரைகடைந்துறப்பணித்தனன்செம்பொற்
பொற்றைவில்லினோன்விடைதரத்தொழுதனர்போனார். (உ

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

சங்குசக்கரங்கைதாங்குந்தாமரைத்தடங்கட்புத்தேள்
வெங்கண்வாளசுரரோடும்விண்ணவர்குழுவினோடும்
பொங்குபேருவகையோடும்பாற்கடன்மருங்குடுக்கா
ணங்கணுற்றடைந்தவாறேயக்கடல்கடைவதானான். (உ

அண்டமொன்றெடுத்துக்கொண்டுகவிழ்த்தியதனையதாக
வொண்டிறற்கமடமாகிக்கிடந்தனனுலகமுண்டோன்
றெண்டிரைப்பரவைநாப்பண்மந்தரந்திருப்பாநின்று
றொண்டருங்கடவுளோருமடுதிறலசுரர்யாரும். (உ

உகடிமைமறுகியேங்கியுளைப்புறவொலிநீர்வேலே
யகடுறக்கலக்காநின்றவேலேயினதன்பானின்று
முகடிவந்துதிப்பநோக்கிமயங்கினர்புலவர்முன்னீர்த்
தகைபெறுவருணற்கீந்தாருதித்தெழுந்தவ்வை தன்னை. (௩0)

தீயவட்பின்னாத்தன்வந்தரியெனுமருத்துநூலோன்
றூயகைக்கரகத்தோடுந்தண்டொடுந்தோன்றிவந்தான்
பாய்திரையுலகமெல்லாம்வாகடப்பனுவனூலா
ஞேயறுத்தொழிப்பவிட்டார்விண்ணவரவனைநோக்கி. (௩க)

ஆடரித்தடங்கணல்லாரரம்பையரறுபத்தாறு
கோடியர்சிலதிமார்களளவறக்கொண்டுபோந்து
பாடகல்பரவைதோன்றமகபதிபரிவினேக்கி
நீடுவானுலகமெய்தப்போதிரென்றுரைத்துநீத்தான். (௩உ)

வெண்ணிறச்சுவைவந்தெய்தநீந்ததாலசுரவெள்ளம்
பண்ணவரொடுத்துக்கொண்டாராதலாற்பரவுவானோர்
விண்ணுமண்ணுலகமெல்லாஞ்சுரரெனவிளங்காநின்று
ரண்ணல்வேணிருதர்நீத்தாராதலாலசுரரானார். (௩௩)

கச்சவப்புறங்காலூன்றிக்கனவரைமுகடுதாவி
யுச்சயிச்சிரவமென்னுமோங்குளைப்புரவிதோன்ற
பச்சிமத்தடங்குவெய்யோன்பரியினுமுரியதாக
வச்சிரத்தாற்கென்றீந்தான்மதுத்துழாயலங்கன்மாயோன். (௩௪)

அதிர்கடல்பிறந்தவெய்யோனன்றளவின்றுகான்ற
கதிர்திரண்டெழுந்தவென்னக்கவுத்துவமுதிப்பநோக்கி
மதுமழைதுளிக்குங்குல்லேமாலேசேர்மருமநாப்பண்
பிதிரொளிபரப்பவைத்தான்பாற்கடல்கிடந்தபெம்மான். (௩௫)

தருதருவைந்துங்காமதேனுவுந்தயங்குவெய்யோன்
வருகதிர்மழுக்குசிந்தாமணியும்வந்தெழுந்தநோக்கிப்
பொருதிறற்குலிசக்கோமாற்கிவையெனப்புலவர்யாருங்
கருமழைவண்ணத்தோனுமளித்தனர்கருணைகூர்ந்தார். (௩௬)

ஈங்கிவைபிறந்தபின்னரொழுதிரைப்பரவைநாப்பண்
டேங்கமழலங்கற்குல்லேத்திருநெடுமாயன்காணப்
பாங்கெதிருதித்துவிண்ணோர்யாவரும்பரவவெள்ளைப்
பூங்கலேவிரித்துத்திங்கட்கடவுள்விண்ணெழுந்துபோனன். (௩௭)

ஒள்ளொளிப்பசும்பொனீன்றவொளிதனதுருவமாகப்
பிள்ளைமென்குதலேச்செவ்வாய்கோவையிற்பிறழ்ந்துகாட்டத்

தெள்ளரிசிதறிநீண்டசேணெடுந்தடங்கணோடி
வள்ளைவார்குழையூடாடிநெடுங்குமிழ்மறுகிவீழ. (௩அ)

வால்வளைத்தளிர்க்கைநான்கினொருகரம்வனசமேந்த
நூலிடைமறுக்கங்கண்டும்வெம்முலைநுடங்காநிற்பக்
கோல்வளையுருவக்காந்திபரத்தலிற்கொழித்துவீங்கும்
பாலிரும்பரவைபொன்னீராமெனும்பசுமைகாட்ட. (௩௯)

வாரிருளோதிதாங்குமணிமுடிவயங்கவெண்மைப்
பூரணமதியினள்ளியெடுத்தவைபுனைந்தபோலு
மீரவெண்ணிலவுகாலுமுத்தணியிமையாநிற்ப
வேரியங்கமலமேந்தப்பிறந்தனள்விமலையன்றே. (௪0)

நோக்கினன்கரியமேனிவானவனொடியிற்றன்பா
லாக்கினனவளைவேலையமுதெழக்கடைந்துபெற்ற
பாக்கியமிதுவென்றெண்ணிமகிழ்ந்தனன்பதுமக்கண்ணன்
மேக்குயருவகையோடுந்தொழுதனர்விண்ணுளோர்கள். (௪௧)

இவையெலாம்பிறந்தபின்னர்விண்ணவரிழைத்தநன்மைக்
குவையெலாந்திரண்டுதீம்பாற்கடல்வழிக்கொண்டதேபோ
லவையெலாம்புகழ்ந்துபோற்றமாயவனயர்வுதீரச்
சுவையெலாமளிக்குந்தெய்வவமுதமுந்தோன்றிற்றன்றே. (௪உ)

ஆரமுதெழுந்தபின்னரமரருமசுரர்யாரும்
பேரமருடற்றிநின்றோமக்கெமக்கென்னும்பேற்றாற்
போரடுகளத்துட்பட்டார்வானவரநேகர்பொங்கி
வேரறமுடிந்துபடடுமடிந்ததுநிருதவெள்ளம். (௪௩)

கரையழிகுருதியாறுகடன்மடுத்தெடுப்பத்தம்மில்
வரையறுதிமிலத்திண்போர்விளைத்தனாமறலநோக்கி
விரைகமழலங்கன்மாயோன்வெண்ணிறப்பரவைததீம்பா
லிரைகடலமுதகும்பமிடைபுகுந்தெடுத்துக்கொண்டான். (௪௪)

அமரருமசுரர்யாருமடுபறந்தலையிற்புக்குச்
சமரொடுத்துடற்றாநின்றதன்மையைநொக்கியாவி
கமரிடைக்கவிழ்ப்பதாறுனொன்பதுங்கருதியுள்ளங்
குமைவுறமருட்டுமாறோர்மோகினிவடிவங்கொண்டான். (௪௫)

கருநிறக்கமஞ்சூன்மேகவண்ணமக்கனகக்காந்தி
பொருவுறப்பழையமேனிப்புயனிறமொருங்குமீப்போய்
மருமலரளகமாகத்தழைந்ததோவனைபூங்கற்றைச்
சுருளிருளளகமின்னதென்றதுசொல்லற்பாற்றோ. (௪௬)

வானிளம்பிறையைப்பற்றித்திருக்கறவடித்துநீவிக்
கூனுதலாக்கிக்காமகாண்டமோரிரண்டுங்கொண்டு
நீனிறப்புருவமாக்கியமைத்தவோநிகழ்த்தினம்மா
மேனிலைப்புருவநெற்றிக்குவமையார்விரிக்கற்பாலார். (சஎ)

ஆருயிர்க்கொள்ளையெல்லாம்வானவரளிப்பமார்தும்
வார்குழைவள்ளைவாட்டிமடித்துவைத்தனவேயேனும்
பேரொளிப்பசும்பொனூலையழகுதன்பெருமையெல்லாங்
காரிகைக்கெழுதிச்சாற்றுஞ்சாதனங்கடுப்பதம்மா. (சஅ)

கயல்பொருதறவுநீண்டுகடைசிவந்துலகோர்க்காரு
மயல்புரிந்திருபாற்றுள்ளிமதர்மதர்த்தரிகடோய்ந்து
பெயர்தொறும்வெளியவாகிப்பிறழுந்திடுகருங்கணென்னே
யுயிர்செகுத்துண்ணுமீற்றிற்கூற்றமோவுரைக்கினம்மா. (சகூ)

அமிழ்துயிர்த்தொழுங்கினீடுபேரழகமையவாய்ந்து
குமிழ்பொருதெள்ளிதென்பூத்தொழத்தகுங்குணத்தவாகி
யுமிழ்திரையுலகமென்பூநறைமுறையுயிர்க்குமூக்கிற்
கிமிழ்திரைப்பரவைஞாலத்துவமையாரிசைக்கற்பாலார். (ருO)

மருப்பயின்றெழுகிநீண்டவாரிணரோதிமாத
ருருக்கிளர்கபோலமெல்லாமாடியொப்புரைப்பர்மேலோர்
கருக்கிளர்மாயருபத்தொளிபிறழ்கபோலந்தானே
தருப்பணத்துவமையென்பதல்லதுசாற்றற்பாற்றே. (ருக)

விளரியுமதுரத்தேனுமென்குயிற்குரலுஞ்செவ்வாய்
வளைமுகக்குதலைக்கிள்ளைமழலையுமயங்கத்தோய்ந்த
கிளவியுமமிழ்துமுத்தக்கிளைபடுநிரையுமெல்லா
மளவுசெவ்வாம்பலுண்டேலதரவாய்நிகர்க்குமன்றே. (ருஉ)

கடைந்தெழுமமிழ்தின்றுள்ளிபற்பலவொழுங்குகாட்டி
யடைந்தவோகாமவித்தினங்குரநிரைந்தவாறே
மிடைந்திடையோரைக்காட்டிமுளையெனவிளங்குமூரற்
கிடைந்துகொலருப்புமுல்லையலர்படவிழிந்தவாறே. (ருங)

குவளையுங்குமிழுநீலக்கொடிகளுங்குவளைபூப்பத்
துவடருவள்ளைத்தண்டுமுல்லைவெண்டொகையுஞ்செய்ய
பவளமுமளவித்தோன்றும்பானிலவுளதேலம்பொ
னிவளொளிவதனமொப்பதலதெனிலுவமையென்னும். (ருச)

மங்கலக்களத்திறெப்புமேலவர்வகுப்பரொன்றே
சங்கமும்வெளிறிப்போனதுவமிக்குந்தகைமைசான்ற

பொங்குபூகமுமோநீண்டுகோட்டினபுலமையோர்மற்
றெங்குளவெடுத்துக்காட்டியிசைப்பதற்கேதுவம்மா. (௫௫)

தண்படுதுணைத்தோண்மேன்மைதளதளப்பெதிர்ந்தவேயுங்
கண்படக்கவினுங்காமகாண்டநாணிறப்பக்காட்டும்
பண்படுகுதலைச்செவ்வாய்ப்பனிமொழிப்பரவையல்குற்
பெண்கொடிபசுந்தோட்கென்னையுவமிக்கும்பெற்றிமற்றே. (௫௬)

அரிமயிர்முன்கையாவியாருழைக்கவருமென்னத்
தெரிகிலமகரயாழின்றிறமெலாமொருங்குசார்ந்த
விரிமலர்க்காந்தளேயோவிரைநறுங்கமலமேயோ
வெரிநிறத்தளிரோவங்கையாதெனத்தெரிக்கிலேமால். (௫௭)

வள்ளவாய்க்கமலத்துள்வாய்ச்சிற்றிதழ்வகுப்போபிள்ளைக்
கிள்ளைமூக்கொருங்கேவந்துகிளைத்தனமுளைத்தவாறே
வெள்ளொளிவயிரக்காந்தியுருப்படவிரிந்தவேயோ
வொள்ளுகிர்க்குவமையென்னென்றுரைக்குதும்புலமையோரே. (௫௮)

ஓதுங்குதோற்றுசிந்துசாயுநுசுப்பினுக்குளந்தராது
ததும்பிமுத்திவர்ந்தபொன்னம்பட்டிகையகவைதெள்ளிப்
பிதுங்கிமீப்பொடித்ததேமலமுகொடும்பெருத்துச்சந்தச்
சொதும்பணிமுலைகளேய்ந்தவிருமையுஞ்சிறந்தவன்றே. (௫௯)

உந்தியஞ்சுழிக்குணின்றுகருநிறத்தொழுகுநாகஞ்
சிந்துரப்பவளச்செவ்வாய்த்திங்களைத்திங்களென்ன
வந்துபார்த்தன்மையுண்மைமயக்குறநிற்றன்மானும்
செந்தளிருதரம்பற்றியொழுங்குறுஞ்சிற்றுரோமம். (௬0)

குதலைவாய்க்கரும்பின்மற்றைக்கோழிலைக்கொழுந்தாலன்ன
வுதரமீக்கிடந்தமூன்றுமடிப்பினுக்குவமைபேசின்
முதனிலைமூவருள்ளமுகிண்முலைப்பொருப்பினேறப்
புதியபேரழகுமெல்லென்படியெனக்கிடந்தபோலும். (௬௧)

குலவரையெடுத்தமெல்லென்கொம்பரோகுரும்பைதாங்கி
யலமருங்கொடியோமற்றையருக்கொலோவறிதறேற்றார்
நிலவணிமகுடவேணிநிமலனைமுதலோர்மற்றைப்
புலமையோர்தெரிப்பதெங்கேநுசுப்பெனப்புகலுமொன்றை. (௬௨)

கொய்தழைக்கருப்புவில்லோனருச்சனைகோட்டிமென்பூப்
பெய்யுமாலடியின்றெய்வப்பீடமொத்தமுதளாவி
யையநுண்ணுசுப்பைக்கவ்விக்கோடகன்றெழுந்தவல்குன்
மொய்திரைப்பரவையேய்ப்பதன்றெனிலுவமைமுற்றா. (௬௩)

வளரொளிப்பசும்பொற்றூணநிகரெனவகுப்பின்மேன்மை
யிளகியமிருதுவாயாதாதலாலிழிவுதோன்றுஞ்
சுளகெழுசெவியவேழப்பூட்கையுஞ்சுரித்துக்காட்டும்
புளகெழுகுறங்கையீனுக்கதலியோபோல்வதன்றே. (௬௪)

ஒழுங்குபெற்றுரோமங்கான்றுசேயொளியுமிழ்ந்தியாருந்
தொழுந்தகைக்கணைக்காலொக்குமுவமையோர்சிறிதுதோன்றக்
கொழுங்குலமலரிட்டேத்தியருச்சனைகொடுத்தெஞ்ஞான்று
மெழுந்திறலனங்கனுவமிடைவிடான்சுமப்பானின்னும். (௬௫)

ஒத்தொளிபரப்பியம்பொற்சிலம்பினையொருங்குதாங்கிப்
புத்தகநிகர்ப்பதென்னிற்போதுமோபுலமைத்தன்றே
சித்திரப்புறந்தாளென்னும்பெயரொடுசிறந்துநின்ற
வித்துணைவெள்கியாமைபயப்படக்கிடந்ததென்றால். (௬௬)

எறித்தெழுவயிரப்பாளமிடைப்புறத்தீர்ந்துபாங்கி
னறுக்கியம்பவளஞ்சோத்திவைத்தனநகத்தபொற்றாண்
முறித்தளிர்க்கிளக்கமீந்துமுளரியினழகுவாய்ந்து
செறித்தபஞ்சினுக்குஞ்சேப்புக்கொடுத்தறச்சிவந்தவன்றே. (௬௭)

கவிழ்ந்துவீழருவிக்குன்றங்கான்றிடக்கமழ்பூந்தோட்டந்
தவழ்ந்திழைந்தொழுகுதென்றறளர்நடைகருவமைசாற்றி
னிவந்தெழுநிலவுத்தூவியன்னமோநிகர்க்கலாகா
துவண்டசைந்தியங்குங்கன்னிசரூற்பிடியுவமையாமே. (௬௮)

உயிர்ப்பொறையாக்கைமுற்றுமுடனுறைந்துணரொணாது
மயக்கியமாயன்றானேமயிலினமருளுஞ்சாயற்
புயற்குழலுருவவாட்கட்பூமகளுருவம்போற்றின்
வியப்புறுரெவரோயாரோமருண்டிடைவீழ்ந்துறுதார். (௬௯)

கலிவிருத்தம்.

இனையவுருபமெடுத்தருண்மாயவ
னனையபாற்கடலாரமுதங்கொடு
புனைகலாமயில்போனடந்தானரோ
சினவுதானவர்வானவர்பின்செல. (௭0)

கண்டுமாயன்முகிணைகைகாட்டினன்
மண்டுபோரின்மலைந்தசுராசுரர்
கொண்டவேட்கையுளங்குழைந்தாரரோ
தண்டுழாயவனின்னணஞ்சாற்றுவான். (௭௧)

நீவிரின்னமுதத்தினெடுங்களத்
தாவிபோக்குதிரன்னதொழிதிரோற்

றேவுதெண்டகம்றெள்ளமுதும்முழை
யீவதுண்டிங்கிருத்திரென்றேயினுன். (எ௨)

கேட்பவின்றசுராசுரர்கேழ்கிளர்
கோட்படுந்தமதுள்ளங்குழைந்தனர்
ஞாட்பொழிந்துநவேயுகின்றுாமயல்
வேட்கைதானவர்மிக்கயாந்தாரரோ. (எ௩)

வெள்ளவேலையமுதவிருட்பினும்
வள்ளைவாகுழைவாண்முகப்பெண்ணமு
துள்ளமைத்துமயங்கினரோரிரு
கள்ளவாணெடுங்கட்கடைபாயவே. (எ௪)

காமனம்புகழிந்துருவிச்செல
வேமனம்புண்படவெதுப்புற்றனர்
வாமமேகலைமாயமயக்கிஞற்
ருமம்வெந்தழலிட்டனதன்மையாா. (எ௫)

அயிற்கொடுங்கணடர்த்தலுமாங்கவ
ருயிர்க்குணர்ச்சிபெருர்மயக்குறறனர்
குயிற்கொழுங்குதலைக்குரல்கேட்டொறு
மயிர்ப்புறந்தொறும்வாாந்தனகாமமே. (எ௬)

ஈரமூரலினின்னுயிர்டோக்கிஞ
ாாரவெம்முலையாலறிவற்றனா
வாாகுழைக்குமனநிலைதோற்றனா
வேரிவாாகுழற்கங்கம்வெதும்பிஞா. (எள)

தனித்தசிந்தையினெண்ணித்தனித்தனிக்
கனிக்கரும்பினுருவெளிகாண்டொறுங்
குனித்தவாாசிலைக்காமன்கொழுவுநாண்
டொனிப்புவார்செவிபாயத்துளங்கிஞர். (எ௮)

வேர்த்தரும்பியவெண்பிறைநெற்றியுங்
கார்த்தடங்கட்கடையெழிகாந்தியும்
வார்த்ததும்புவனமுலைவெற்டையும்
பார்த்திருந்துபதைத்தனர்தானவர். (எ௯)

அன்னகாலையமராியாவரு
மன்னியாங்குவகையினிருந்துழி
யென்னையாளுமிறையவனன்மொழி
பன்னியாரமுதம்பகிர்ந்தானரோ. (அ0)

வாரிநுங்கியிருந்துழிவார்கதிர்ச்
சூரியற்குநிறைகதிர்ச்சோமற்கு
மீரிவர்க்கிடைராகுவிருத்தலு
மோரியற்கையன்மாயனுணர்ந்தனன். (அக)

கையெடுத்ததிரவியிற்கந்தரம்
வெய்தெறிந்துவிழுதலும்பாற்கடற்
றெய்வவாரமுதுள்ளுறச்சேறலாற்
கொய்ததுண்டமிரண்டுருக்கொண்டவே. (அஉ)

ஆயகாலையருக்கனைத்திங்களை
மாயனேக்கிவலிநதுளைப்பானிவ
ணேயகேதுவிராகுமற்றுங்களைப்
பாயசீவிர்பரிவுழப்பீரென்றான். (அங)

உம்பரின்னமிழ்துண்டுயிரோம்பினர்
வெம்புதானவவெந்திறல்வீரரைச்
செம்புனற்படவாவிசெகுத்தனர்
பைம்பொனாடுபுகுந்தனர்பண்டுபோல். (அச)

ஈங்குநின்றுநிகழ்ந்தனவிப்பரி
சாங்கவ்வார்கடலாமையருந்திரை
யோங்குமேழ்கடலொன்றுபட்டோதநீர்
வீங்குமாநிலமீசசெலநின்றதால். (அரு)

இலக்கயோசனைமேன்முதுகீங்கிதன்
மலர்க்கரங்காலளவைவகுப்பரோ
சிலைத்தவார்கடலேழையுஞ்சேறெழக்
கலக்கிநிற்பதுகட்புலங்காறவே. (அசு)

தேங்குவேலைத்திமிங்கிலமேமுத
லோங்குமீனமனைத்தையுமுண்பது
வீங்குவெம்பசிவீந்திலதாதலாற்
றூங்குசேறுந்தரையறநக்குமால். (அஎ)

ஒழுகிருங்கடலேழுமுடைத்தநீர்
முழுதுமொன்றுபட்டோங்கியுமூங்குசே
றழுதியங்குவதன்றியுலாய்மிதந்
தெழுதரப்புனலில்லையவ்வெல்லைநீர். (அஅ)

மண்டுவெண்டிரைவார்கடலேழுமப்
பண்டைவெள்ளப்பரப்பைபரீகர்த்தலு

முண்டரும்புனல்பெய்யுலைமூடியுட்
கொண்டவண்டகிகர்த்ததக்கூர்மமே. (அகூ)

விண்கலக்கமொழிதரவேலையுட்
கண்கரப்பவுறங்குங்கமடமோர்
வெண்கலக்கலத்துள்ளூறவேறுமோ
ருண்கலங்கவிழ்த்தன்னதையொக்குமால். (கூ0)

வாய்ந்தவார்கடலேழையும்வவ்விமே
னீந்துதோறுங்கிழிபடுநேமிநீர்
சாய்ந்துநேமிப்பொருப்புநதையும்போய்ப்
பாய்ந்திரைந்துதவழ்ந்துபரக்குமால். (கூக)

இதுவுணர்ந்தவெரிகதிர்வானவன்
புதுநிலாப்பொழிதிங்களம்புங்கவ
னதிர்கடற்பிறந்தேகுதலஞ்சினர்
பொதியிருட்பிழம்பணடம்பொதிந்ததே. (கூஉ)

கவர்நெடுஞ்சினைக்கற்பகநாடரும்
துவர்முகக்கமலாலயத்தோன்றலு
மிவையுணர்ந்துகயிலையடுக்கெய்தினர்
சிவனைநூபுரச்சேவடிபோற்றினர். (கூ௩)

இடுக்கணென்பதெமையடைந்தாலது
தடுக்கநின்னலதியாவர்தருக்குளார்
கடுக்கையஞ்சடைக்கண்ணுதலேநினக்
கடுத்தநாங்களடைக்கலமையனே. (கூச)

மாயனுமைவடிவுகொண்டானவ
னுயவேலையகடுகிடந்தனன்
றீயசெய்வனசெப்பவற்றோவினி
நீயவன்செயனீத்துறவேண்டுமால். (கூரு)

காக்குநாரணன்காத்துழிக்காத்தவை
போக்கவீதுபுரிகுவனீயது
நீக்கநின்றவனீணிலப்பல்லுயி
ராக்கியோய்நின்னடைக்கலமையனே. (கூசா)

ஈதெடுத்திரந்தேத்தினர்வானவர்
மாதடுத்தமருங்குடைவானவன்
போதடுத்தபுகர்முகப்பிள்ளையை
நீதடுத்திகொலென்றுநிகழ்த்தினன். (கூஎ)

எந்தைநின்னருளீதெனில்யானுடை
யைந்துகைக்குமதாற்றுமதோவென
மைந்தனுக்கருள்வாணகைநல்கினன்
றந்திமாமுகப்பிள்ளையுஞ்சாற்றுமால். (௯௯)

ஊறுகேணிநீருள்ளகழ்ந்தேயிது
காறுநின்றகமடத்துருவினைக்
கீறிநின்னுழைக்ிட்டுவன்யானென
வேறுயர்த்தவற்கைதொழுதேகினன். (௯௯)

சென்றுநோககித்திரைபொருவேலைநீ
ரொன்றுபூட்கைநெடுங்கரத்துட்புக
நின்றுரிஞ்சவந்நீரொடுமோமைவெங்
குன்றுமந்தக்கொடுங்கரம்புக்கதால். (௧௦௦)

இருந்துமாநிலத்தாதினினீர்ம்புனல்
சரிந்துமீண்டுகடல்புகத்தாரணி
விரிந்தகூர்மங்கிடந்ததுவிண்ணவர்
புரிந்ததுன்பமுதலறப்போக்கினர். (௧௦௧)

கோடுகுத்திக்கமடங்குடைந்தத
னோடுதந்தைக்கடியுறையுய்த்தனன்
மாடுநின்றமலரயனேமுத
னீடுதேவர்தொழுதனர்நித்தனை. (௧௦௨)

தண்டுணர்த்தடந்தாமரைநாயக
னண்டர்நாதனடிதொழுதையநீ
முண்டமாலையினுமைமுதுகினைக்
கொண்டணிந்தருளென்றிடைகூறினன். (௧௦௩)

ஈசனுங்கதெடுத்தணிந்தான்விரி
வாசநான்மலரோனெடும்வானவர்
தூசுவீசித்தொடர்ந்துபுகுந்தனர்
வீசுதண்பணைக்கற்பகவீடரோ. (௧௦௪)

அச்சுதப்பெயரண்ணலருந்தவங்
கச்சிபுக்கிருந்தாற்றிநங்கண்ணுத
லர்ச்சனைக்குரித்தாகியகந்தையோய்ப்
பச்சைமேனிபவித்திரமெய்தினன். (௧௦௫)

கூர்மாவதாரச்சருக்க முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௧௫ - க்குத் திருவிருத்தம் ௨௭௪௧.

# ௧௬ - வது. வராகாவதாரச்சருக்கம்.

பின்னோர்காலம்பெருமுடிப்பொற்கிரி
தன்னையொத்ததமனியக்கண்ணனோர்
மின்னெயிற்றுநிசாசரன்வெந்தொழிற்
புன்னிலைக்குப்பொதுமையனாயினான். (௧)

முள்ளரைக்கமலாலயமூர்த்தியை
யுள்ளிருத்தியருந்தவமுன்னினான்
கொள்ளைநல்வரம்யாவையுங்கொண்டனன்
வெள்ளவூழிப்பரவைமிடுக்கினான். (௨)

பரக்கும்வையமியாவையும்பாயலிற்
றிரைத்திடுக்கிப்பெருங்கடற்சென்றன
னிரைத்துவானவர்யாவருமெய்தினார்
விரைப்பசுந்துழாய்விண்ணவற்போற்றினார். (௩)

இரணியாக்கனெனுமொருதானவன்
றரணிபாயிற்சுருட்டித்தடங்கடன்
முரணிழைத்துப்புகுந்தனன்மொய்ம்பினோ
யரணிலேமிறப்பஞ்சியடைந்தனம். (௪)

என்பயாவுமெடுத்தெடுத்தோதினா
ரன்பினன்னவர்க்காரருணல்கினான்
பொன்பிறழ்ந்தபுனையுடற்புங்கவன்
வன்சிறைப்புள்ளூகைத்துடன்வந்தனன். (௫)

ஆனகாலையயன்முதற்றேவரும்
கானநாண்மலர்ச்சேவடிகைதொழ
மானிலந்தரவேண்டியம்மாயவ
னேனமாயவுருவொன்றெடுத்தனன். (௬)

நீலவெற்பினிரட்டிநிமிர்ந்தது
காலிடைக்கிடையாயிரங்காவதம்
வாலசைத்துமின்மாதிரந்தைவருங்
கோலமூசிற்குலுங்குவதண்டமே. (௭)

அண்டப்பித்திகைதேய்ப்பினதிர்ப்புறுந்
திண்டிறற்புறக்கற்றைச்செறிமயிர்
வண்டிலொற்றையந்தேர்ப்பரிவார்வயின்
கொண்டுதத்தங்குடர்கிழித்தோடுவ. (௮)

நோக்கினாழிவடவையினோக்குறு
மூக்ககழ்ந்துறிற்பாதலமுற்றுமால்
வாக்கினாலுனாத்தென்னைதன்வாய்விடில்
கோக்குமண்டங்குலைந்துநடுங்குமே. (௯)

ஆழியேழுமளறுபடுத்திரும்
பூழியாக்கிப்புவிகொடுபோயவப்
பாழிநீள்புயிப்பாதகற்பற்றியே
கேழ்கிளர்ந்தமருப்பிற்கிழித்ததால். (௧0)

வளைமருப்பொடுவாளெயிற்றானைவெங்
கிளைதடம்புயங்கீறிக்கிளைத்தருந்
தொளைபடுந்தனிமூக்கிற்றுவைத்ததால்
விளைகடுஞ்சினவெந்திறலேனமே. (௧௧)

செய்யதாமரைநான்முகன்செய்தருள்
வையம்யாவுமருப்பின்றுகளென
வெய்துகொண்டுவிரிக்குமொராயிரம்
பையராமுடியுச்சிபதித்ததால். (௧௨)

தெறுசினக்கடுஞ்சீற்றந்தலைக்கொள
வெறுழின்மாதிரவெற்படுத்தெற்றியே
முறிபடத்தொளைமூக்கொடுதாக்கியே
மறுகுபல்லுயிர்வாய்ப்பெய்ததுக்குமால். (௧௩)

சத்தமேகமதிரத்தடம்பொருப்
பொத்துநின்றுதன்னுள்வாய்க்கொளுந்தொறும்
பைத்தநாகர்பதிகளும்பாதல
மத்தமாகரியெட்டுமயங்குவ. (௧௪)

முரணெடுத்தமுகரைமுகந்துமு
தரவவேலையகனிலம்போழ்தொறும்
பரவையெண்டிசைதாங்கும்பணாடவி
யுரகர்வெண்பொறியுசிவிளக்குமால். (௧௫)

விலகிநின்றுவடவைவிழிப்பபோற்
சுலவுவெம்பொறிகட்கடைதூக்குற
நிலவுவெண்ணுரைபாற்படநீண்டவா
யலகடிப்புறினண்டமுடைக்குமால். (௧௬)

கண்டுதேவர்கலங்கினர்கண்பொறார்
திண்டிறற்புரந்தீத்தருள்செல்வனைக்

கொண்டவுச்சிக்கயிலைக்குழீஇனார்
முண்டகப்பதம்போற்றிமொழிகுவார். (௧௭)

பரந்தபாற்கடற்பாப்பணைப்பள்ளியான்
முரண்டருந்திறற்பன்றியின்மூதுருக்
கரந்துவையகம்யாவுங்கலக்கலா
லரந்தைபெற்றுவெருக்கொண்டதாருயிர். (௧௮)

இன்னுமாத்திரைதாழ்த்துறினெம்முடைப்
பொன்னினாடும்புகுந்துகலக்குமா
னின்னையன்றிநெடுந்துயரொய்தினா
லின்னறீர்த்தெமைக்காப்பவர்யாவரோ. (௧௯)

ஆடகக்கணரக்கனையஞ்சியேயங்
கேடுதீர்த்தியெனப்புகல்கேண்மையாற்
கோடுவெண்கதிர்க்கூன்பிறைக்கண்ணியோய்
பாடெமக்குப்பலித்ததெம்பாவமே. (௨0)

என்னப்பன்முறைசொற்றிரந்தேத்தினார்
வன்னிச்செங்கைமழுப்படைவானவ
னன்னர்க்காரருணோக்கியளித்தனன்
பின்னர்ச்சண்முகப்பிள்ளையைநோக்கினான். (௨௧)

தந்தைநோக்குறச்சண்முகச்சேவக
னெந்தையிப்பணியென்னுழையாக்கெனப்
பைந்தொடிக்கரங்கூப்பிப்பணிந்தன
னந்திசெய்தியென்றானருளாழியான். (௨௨)

தேவர்யாவருங்கைதொழத்திண்டிறற்
பாவுதோகையுகைத்துப்படரொளி
மேவுவேற்படைகைக்கொடுமேயினான்
றூவருந்திறற்சணமுகப்பிள்ளையே. (௨௩)

ஊர்திரைக்கடலேழுமுழக்கியே
பேர்திரைத்தண்பெரும்புறப்பள்ளவாய்
நீருழக்கிநிமிர்ந்தெழுமேல்வையிக்
கார்மயிற்பரிச்சேவகன்கண்டனன். (௨௪)

கண்டசேவகற்கண்டதுகாய்சினங்
கொண்டுவெண்பலலகடிக்கொண்டதாற்
றிண்டிறற்பிடர்க்கூந்தல்சிலிர்த்தழன்
மண்டுமாமுகங்கீழ்ப்படவந்ததால். (௨௫)

வந்தமெய்விசைக்காற்றெழவாரிசூழ்
தந்தநேமிச்சயிலமுருண்டதாற்
செந்தனிக்கதிர்நெஞ்சந்திடுக்குறப்
பிந்தினனிருள்போர்த்தபெருநிலம். (உசு)

வெற்றிவேற்படைவிண்ணவனீங்கிவை
முற்றுநோக்கிமுகிணகைபூத்தனன்
கொற்றவேற்படைகொண்டதன்மிண்டிற
னெற்றிகுத்தினிலத்தொடமுக்கினன். (உஎ)

ஆடல்வேல்கொண்டமுக்கலுஞ்சோரிநீர்
பாடகன்றதுபாதலஞ்சென்றதா
லூடுபுக்கிழிந்தன்னதனெண்பிறைக்
கோடுபற்றிப்பிடுங்கினன்கோதிலான். (உஅ)

வெய்துபோந்தனன்வெண்பிறைக்கோடுகொண்
டெய்தியீசனிணையடிவைத்தனன்
றையல்பாகனுஞ்சண்முகப்பிள்ளையை
மொய்கொளுச்சியைமோந்துதழீஇனன். (உகூ)

காரியன்றகளத்திறைவானவன்
வாரியன்பின்மடியிலிருத்தியப்
பாரியோடுமினிதுபகர்ந்தனன்
சூரிவேற்கைமுருகனியற்கையே. (௩0)

கற்றைவார்சடைக்கண்ணுதலோனருள்
கொற்றவேற்கைக்குமரனைக்காண்டொறுந்
தெற்றுவெண்டிைத்தெள்ளமுதம்பெறப்
பெற்றதன்மைபிறந்தனர்வானவர். (௩க)

இந்திராதிபரீரிதழ்த்தாமரை
யந்தணாளனரனையடிதொழா
வெந்தைநீயிகலேனமருப்பினைக்
கொந்தளச்சடைக்கோடியென்றேத்தினர். (௩உ)

அரனணிந்தனனப்பிறைவாளெயி
றுரவுதேவருவகைகொண்டாடினர்
பரவுசேவடிபன்முறைவாழ்த்தியப்
புரமெரித்தவற்போற்றினர்போயினர். (௩௩)

மாயமாயவராகவுருக்கழிந்
தாயமாயனரனையருச்சியாத்

தீயவாணவச்செய்கைச்செருக்கறப்
போயொழிந்துதனதுழைப்போயினான். (௩௪)

வராகாவதாரச்சருக்க முற்றிற்று.

---

ஆகச்சருக்கம் ௧௬ - க்குத் திருவிருத்தம் - ௨௭௫.

---

## ௧௭ - வது. நரசிங்காவதாரச் சருக்கம்.

எழுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

ஈதலாதுசென் றிறநதமுற்காலத் திருந்திறலெறும்வலித் திர டோட், காதுவெஞ்சின முறுக்கெயிற்றசுரரிற் றோன்றினன்கனக னென் றொருவன, ருதுலாந்தடந்தாமரை நான்மறைக் கிழவனைத் தன தகத் திருத்தித், தீதின்மாதவம் புரிந்தனனத்தவத் தொழுகியநாட் சிலசென்றான். (௧)

அனையமாதவ மாற்றியசெயறகருந் தன்மையையகத்தடைத் தவ னாய், நனைகொடாமரை நான்முகததந்நண ணுங்கவறகெதிருறநடப் பப், புனைபொலன் கழ லிரணிய னவனிரு முளரியம்பூங்கழல் போற் றி, நினையுநெஞ்சொடு மென்புறக்குழைந்தன னதுவறிந்திரங்கின னிம லன். (௨)

விருப்பினோங்கிய தென்னெனப் பழமறை வேதியன்வினவலும் வெய்யோ, னெருப்பினீரினி னிலத்தினில் வளியினி னெடுவெளிப்பரப் பினினின்ற, விருப்பினுயுநக் கருவியினகததினிற புறத்தினிலிமையவர் மக்கள், வெருக்கொளஞ்சிறைப் பறவையின் விலங்கினி னிறப் புறுவ ரம்பெற வேண்டும். (௩)

மடுத்தகங்குலிற் பகலினினிறப்புறு மாதவம்பெறினு மென் னாக் கை, விடுத்தசோரியோர் துளிபுறத்துறினு மத் துளிவெகுளென்னுரு வெடுத்துக், கடுத்தவெம்பகை முதலறப்போக்குவான் பெருவரங்கருதி னேனைய, கொடுத்தியா மெனிறபெறுகுவனலவெனி லென்னுயிருன் னுழைக் கொடுப்பேன். (௪)

வயிர்த்தசிந்தையி னினையனவாளெயிற் றசுரர்கோனியம்பலுமல ரோ, னயிர்த்தசிந்தையி னடைத்தனனுங்கவன் கேட்டனயாவையு மளித்தா, னுயிர்த்ததெய்வவான் படைக்கலமுதவின னவன்புரியிடுக்க ணென் றுணரான், பெயர்த்துநான்முகன் றன்னுழைப்படர்ந்தனன் மீண்டனன் பெருந்திறலசுரன். (௫)

அளப்பருந்திற ஞூல்வகைச்சேனையி னடைந்தன னளவொழி யண்டத், துளப்படப்படு மனைவருந் தன்னடிக் கீழ்விழப் பணித்தன னுரவோன், வளப்பெருந்திற லிந்திரன்முதலியோ ரேயினகேட்டுற வகுத்தான், கிளர்த்தநின்றபே ருலகெலாந்தனதுவெண் கவிகையின் கீழ்ப்பட நிறுத்தான். (சு)

மாகநாட்டுளவரம்பையரியக்கர்நாட்டரிவையர்மழலையங்கிளிபோ
லுகநாட்டுளகன்னியர்சித்தர்நாட்டெழுதருநவ்வியங்கண்ணார்
கோகுலக்கொழுங்குதலையர்யாதுநாட்டுளமலர்க்கோதையரெவரும்
பாகடும்பனிமொழியினர்சாமரைமுதலினவேந்துறப்பணித்தான். (எ)

இந்திரப்பெரும் பெயரினோன்முதலிய வெண்டிசைக்காவலர் யாரும், வந்திரந்தவன் பணிப்பனவரன்முறை கேட்பராலிவ்வரப் பெருக்கந், தந்தநான்முக னிவன்பெயர் கேட்டொறுந் துணுக்குறுஞ்சமயநின் றளிக்கும், முந்தைவாழ்வுடைத் தேவருமவன்புகு நெறியலைத் திருப்பரான் முகங்கள். (அ)

கருடர்வானவர் சித்தாவித்தியாதரர் கின்னரரியக்கர்கந் திருவிம், புருடரின்னவர் யாவருமசுரரிற் புண்படுதழும்பின ரல்லா, லுருவமுன்னையொத் துள்ளவரில்லர்தாழ்ந் துயாந்தனரசுரரும் முறையிற், பொருதடந்திரைப பிரளயமொத்தனர் படுகரொத்திழிந்தனர் புலவர்.

மேருமால்வரைமுதலியநெடுசிலவெற்பினமுதலியவுருட்டும்
பாருமண்டமுந்திகிரிமால்வரைமுதல்யாவையுமங்கையிற்படுக்கு
மோர்வரும்பிறபதவியினின்றுளவிண்ணவர்மணிமுடியுரிஞ்சி
வார்பொலன்கழல்பரிதியொத்திமைப்புறவாளரித்தவிசுவீற்றிருக்கும்.

அடுக்கிநிற்பன வண்டமுமுலகமு மவற்றுளயாவரு மந்நா, ளெடுத்துரைப்பன விரணியனேநம வென்பர்மற்றியாவையு மியம்பார், மடுத்தபேரறந் துறந்தனன்பாதகப் பேரர சளித்தனன் மருண்டான், விடுத்த நான்மறை யுருவுகொண்டவற்கொரு மதலையிற்ருேன்றுற வியந்தான். (கக)

அனையபாலகற் காணடொரைந்தாயின வுணர்ந்தனன்வாளெயிற் றசுர, னினைசுதன்றரு பாலகரிருவர்பா லிருங்கலைநிகழ்த்துற விடுத்தா, னினையமைந்தனுக் காதியினுணர்த்தின ரிரணியனேநம வென்ன, வினையொருங்கறப் பிறந்துளபாலக னருமறையாதியை விரித்தான்.()

ஆகெடுத்தனையெனவெரீஇயந்தணரிருகரத்திருசெவியடைத்தார்
நீகெடற்கரும்பெயரினையோதிலைநினக்கிஃதுணர்த்தினர்யாரே
பாகமுற்றிருந்தணைத்தணைத்தன்னதுபகரினும்பகர்ந்திலன்சிறுவன்
வேகவெஞ்சினத்தசுரனிற்புகுந்தனரந்தணரவனிலைவிரித்தார். (கஙு)

என்னுரைத்தன னென்றனனிரணிய னன்னவனிசைத்தன வெ ழூதா, துன்னியோரினும் படுகுழியிரையம்வந் துறுமதியாமிசைக்கல மென், றின்னலந்தண ரிரணியனேநம வெனச்செவிபுதைத்தன ரிருந் தார், மன்னுமைந்தனைக் கொணர்கெனச்சென்றனர் கொணர்ந்தனர் வாளெயிற் றசுரர். (௧௪)

கதுமெனப்புகு மதலையைநோக்கின னேதுறுமாதியைக் கருதா, வெதுவுரைத்தனை மைந்தநீயென்னலு மியானுமற்றென்னையின் றருளி, னுதவுநீயுமின் றுய்குவானுரைத்தன னுனக்குமற்றொருவர்க்கு மெட் டா, வதுபழம்பொருளோ நமோநாரா யணவெனு முழுமறைக்காதி.

கருகுசிந்தைய னுங்கதுகேட்டலுங் கனலெழக் காசசிய சலாகை, யிருசெவித்தொளை நுழைந்தெனச்சுருக்கொளக் கறித்தனனெயிறு தீப் பிறக்க, வெருவியண்டமு முலகமுங்குலுங்கின விண்ணவர்திசை திசை மறைந்தார், திருகுசீற்றமிக் கிருவிழிவடவைகான் றெழுந்தது செழும்புகைப் படலை. (௧௫)

சீறுசீற்றமிக் கிருந்தவாவொருதனிச சிறுவனென்றுணர்ந்திலன் றீயோன், கோறிரவாளெறிந் தெனறனனங்கிலே செயிரத்தனர்கொ லைத்தொழிற் குரியோ, ரீறினுந்தக மெடுத்தெடுத் தெறிந்தன ரன்ன வையிற்றன நெல்வாற், கீறுகீற்றள வாயினுமற்றில மதலைபாற்கிளைத் துணைப் புயத்தின். (௧௭)

விடங்கொடுத்துயிர் செகுத்துறப்பணித்தனன் கொடுத்தனரவ் விடமவற்குத், தடந்திரைக்கட லாரமுதாயது நோக்கலுந்தழல் விழிச் சுடிகைப், படங்கொளெண்வகை நாகமுங்கடித்துறப் பணித்தனனும் கவைபகுவா, யிடங்கொளக் கடித்திறுக்கலு நெறுக்கெனத் தெறித் தன வளைந்தவாளெயிறு. (௧௮)

பகுத்தகூாமருப் போரிரண்டிரட்டியப் படுமதப்பனைக்கைமால் யானை, செகுத்தவெஞ்சினத் தெட்டையுங்கொணர்கிரொன் றிசைத் தலுங் கொணர்ந்தனர் தீயோர், வகுத்தவான்மருப் பூன்றுறப்பாய் தரப் பணித்தன னடுதொழின் மறவோன், றொகுத்தவாழையந் தண் டென முறிந்ததக் களிறறுடைத துணைப்பணை மருப்பு. (௧௯)

உயிரிறக்கல னென்றினுமென்பன வுணர்ந்தனனுருத்துருத் தெ ழுந்தான், குயினிவந்தெழு நெடுவரையுசசியிற் கொண்டுசென்றுறுப் பிறவீக்கிச், செயிருறத்தனித் தள்ளுமினென்றலுந் தள்ளினரிறந்தி லன் சிறுவன், வெயிலுமிழ்ந்தெறி கனகழலசுரர்கோன் செய்வதொ ன்றுணர்ந்திலன் வெகுண்டான். (௨௦)

மருங்குவெம்பொறைக் குன்றமிட்டசைத்தற வீக்கினர்வளைமுகங் தெறியு, மிருந்திரைக்கட லிட்டனரச்சிலை யாங்கவற்கேந்திய புணையாப், பொருந்தடந்திரைக் கரைகொடுசேர்த்தது மெழுந்தன னருமறைப்புதல்வன், றிருந்துநாயக னடியவர்க்கடியரை யென்செயுங்கொடுந்திறற் றீமை. (௨௧)

எவைதெறுங் கொலென் றியறறனுமாருயி ரிறந்திலனிவனென வெண்ணுக், கவையவாளெயிற் றடுதிறலசுரர்கோ னுருமெனக்கனன் றனன் கனலா, வவையிறேருர்தனிப் புதல்வனைவரவெதி ரழைத்தனனுங்கவ னடைந்தா, னிவாகொடுஞ்சிகை வடவையுங்குளிர்ப்புற விடையரு தெரியெழ விழித்தான். (௨௨)

எவ்வியன்றிமற் றுலகளித் தமைப்பதற்குளதென விசைத்தவக் கடவு, டன்னையென்னெதி காட்டுதியாங்கவன் யாவனென்றறிகுவன் றனியோய், பின்னையுன்னிலை யுரைகுவன் காட்டலை யாமெனினீது பேரியாக்கை, தின்னவென்னின னென்றனனசுராகோ னுணாத்துவானருமறைச் செல்வன். (௨௩)

கலிநிலைத்துறை.

நீயுநின்னுழைத்தோன்றியசெருக்குநிறபயந்த
தாயுமற்றுளதந்தையுந்தனிபடிதம்பாவு
மாயவஞ்சமுஞானமும்வரம்பறுவானு
மோயவில்காலமுமவனலதன்றிமற்றுளதோ. (௨௪)

ஓதியோதிநின்றுணர்தொறுமுணர்சசிதந்துதவு
மாதியாவதுஞ்சராசரமனைத்துமாயடங்கும்
பேதபேதமும்பிருதிவிமுதற்பெரும்பூதச
சோதியானதுமவனலதில்லைகாண்டொகுப்பின். (௨௫)

நினைக்குநெஞ்சமுநினைத்துறப்படுவனயாவு
மனைத்தெனப்படுஞ்சராசரபேதமுமவனே
யுனைக்கொடின்னவைபுரிகுவதுனதுயிரிறப்ப
வினைக்கொடுந்திறல்விளைப்பதூஉமாங்கவன்விளம்பின். (௨௬)

தேவர்நாயகன்றிருமகணுயகன்சிறந்த
பூவினுபகற்றந்தருணுயகன்பொறைதீர்
பாவகாரியருளம்புகானடியருட்பரிக்குங்
காவணுயகன்றன்னிலையிந்நிலைகாண்டி. (௨௭)

என்றுரைத்தசொற்கேட்டலும்பிறைமுறுக்கெயிறு
தின்றுதின்றுநின்றேவனிசசிறுதனிமதலை

நின்றுகாண்டுறக்காட்டுதியலையெனினின்னைக்
கொன்றுதின்பனென்றுறப்பினனழலெழக்கொதித்தான். (உஅ)

உருத்தகாலையிற்குமுறியதறியகத்துலவாச்
செருக்குவெஞ்சினத்தெழுந்ததுமாணிடச்சீய
மருக்கமண்டலத்தணவியதணிமுடிச்சிகரந்
திருத்தடம்புயஞ்செலச்செலக்கிழிந்தனதிகந்தம். (உகூ)

கண்ணளப்பரிதாகியதிருவுருக்கரந்து
விண்ணடக்கியதடுசினவடவைமீக்கொளலால்
வெண்ணிறக்கொழுங்கொடிப்புகைவிரவியவிழித்தீத்
திண்ணெடுந்திரைக்கடலறப்பருகினசிதறி. (௩0)

கிளைத்தவாளெயிற்றிடைக்கிடைகாவதங்கிடந்த
வளைத்தவாளெயிற்றளவையாரளப்பவர்மன்னோ
துளக்கிமேருவையுருவுறப்பொதுத்தறத்தொளைத்துப்
பிளக்கும்வள்ளுகிர்த்திருக்கரம்பிறந்தனவநந்தம். (௩க)

*அதிரின்மண்முதலண்டகோளகையுநின்றதிர்ந்து
பிதிருமாதிரஞ்செவிடுபட்டெழுதிரைப்பெருநீர்
பொதியுமாநிலவடிம்புசூழ்பூட்கைமால்யானை
குதிமதம்புலர்ந்தலறுவகொடுங்கைமேனீட்டி. (௩உ)

சேந்தெழுங்கதிர்ப்பரிதிபோய்க்குடகடற்சிலம்பு
போந்திறங்குறுபுன்குறுமாலையம்பொழுதிற்
காந்துவெஞ்சினத்தடுகொலையவுணனைக்கனலாப்
பாய்ந்துவாயிலினிருந்தவன்றனைமடிப்படுத்தி. (௩௩)

படுத்திமாமடிக்கிடத்தியப்பதகனைவகிர்ந்து
குடர்ப்பிடுங்கிமேனிவந்தகையாயிரங்கோடி
விடுத்தசெந்துளிக்குருதிகீழ்விழுந்தொறுமொருங்கே
மடுத்துநீட்டியதிருக்கரத்தளவையார்வகுப்பார். (௩௪)

உருத்தெழப்படுங்குருதிநீருற்றறக்குடித்துச்
செருக்கெழுந்ததுமருண்டதுபெருநிலத்திகந்தங்
கருத்தினன்னதுதன்னிலைமறந்ததுகாணாப்
பெருத்தமாநிலத்துயிர்த்தொகைவெருவரல்பிறந்த. (௩ரு)

எறுழ்வலிப்புயத்திரணியனுரத்தெழுமிரத்த
வெறிமயக்கினாலாணவச்செருக்கொடுவெகுண்டு

* "அதிரினண்டமு மண்டகோளகையும்" எனவும்பாடம்.

பொறிவரிப்பணங்கிடந்தபேருலகுதான்புரக்குஞ்
செறியுயிர்த்தொகைவாரிவாய்ப்பெய்ததச்சீயம். (௩௬)

உலகுமண்டமுங்கரந்துறைந்தொளிப்பனகாணூ
தலமரச்சுழன்மானிடமடங்கலையஞ்சிப்
புலவர்யாவருநான்முகப்புனிதனும்புகுந்தா
நிலவுவேணிபொற்கயிலையினெடுநிலைவாயில். (௩௭)

வாயில்காப்பவர்தடுத்தனாநந்தியவ்வாயின்
மேயினுறொவவொன்றலுங்கணுதிடாவிளம்பப்
பாயொலித்திரைப்பகீரதிவேணியெம்பரனை
சேயசேவடிதொழச்சொலிவிடுத்தனன்சென்றார். (௩௮)

சென்றெதிர்ந்தனரிறைஞ்சினரயன்முதற்றேவர்
நின்றுமெய்ப்புளகெழுந்தனாதொழுதனாநின்றார்
குன்றவில்லியங்கொடிச்சிடைவானவனயனுக்
கன்றிரங்கினன்பொதுவறக்கருணைநோக்களிததான். (௩௯)

ஐயனேயெமக்கரிதுறுமருமறைக்கெட்டா
மெய்யனேதனிவிமலனேமழுப்படைபொறுக்குங்
கையனேமணிகண்டனேகருதுருவெவாக்கும்
பொய்யனேநினையடைந்தனம்புகல்பிறிதில்லை. (௪0)

கங்கையாயடுசிலைமதற்பொடித்தகண்ணுதலோய்
மங்கைபாகனேமுனிவரர்விடுத்துறும்வடவைச்
செங்கையாய்திரிதிரிபுரந்தீயெழச்சிரித்த
புங்கவாநினையடைந்தனம்புகல்பிறிதில்லை. (௪௧)

பொன்னிறத்தவாளசுரனையாருயிரபோக்கப்
பின்னுவெண்டிரைப்பாற்கடறறுயின்றருள்பெருமான்
மன்னுவெஞ்சினமானிடமடங்கலாய்த்தோன்றி
யன்னவற்செகுத்தடங்கலன்சீற்றமிக்கயர்ந்தான். (௪௨)

நினைத்துநீயுளவாக்கியநெடுநிலத்தாக்கை
யனைத்தும்வாயிலிட்டதுக்குவதாணவத்தவலங்
தனைப்பெருக்கிநின்றெம்மனோரொக்குறச்சலிக்கும்
வினைக்கொடுந்தொழிலொழித்தெமர்வெருவரலொழியாய். ()

எனவிரத்தலுமெம்பிரான்றிருவருளிரங்கி
வினையடுந்திறல்வீரபத்திரப்பெரும்பெயரோன்
றனையழைத்தெரிதழல்விழிமானிடமடங்கற்
சினவுவெஞ்செருவொழித்தியென்றிசைத்தலுஞ்செல்வன். (௪௪)

சரபப்பேருருவெடுத்தனனளவொழிதடக்கை
விரவித்திண்சிறைவெள்ளிடைபுதைத்துறமீப்பாய்ந்
துரவுத்திண்பதமெட்டினுங்கிளைத்தவெள்ளுகிராற்
கிரணப்பொற்கிரியெடுப்பினுங்கிழங்கெனக்கிழியும். (௪௫)

வளைத்தவாயலகடிப்புறின்மாதிரங்குலுங்குங்
கிளைத்தவெஞ்சிறையடிக்கொளினுலகுசூழ்கிடந்த
வுளைத்தடந்திரைசுவற்றியண்டங்களங்குரித்து
மூளைத்தவாம்பியிற்சிதைக்குமசசெயலையார்மொழிவார். (௪௬)

போர்த்தவெஞ்சிறைக்கலுழனப்பொறிப்பெடையளகின்
பாரப்பெடுத்தெனப்பாய்ந்ததுபடுபிடரமுக்கிக்
கூர்த்தவள்ளுகிர்கொப்புறப்புதைத்ததுகுருதி
யீர்த்தெடுத்ததுபெருந்திரையிருங்கடன்மடுப்ப. (௪௭)

கறித்துமிழ்ந்ததுகரங்களைக்கதிர்முடிச்சிரததைக்
கொறித்துமிழ்ந்ததுகுருதிகொப்புளித்ததுடஃறேண்
முறித்தமுக்கியதிடிக்குரலெழுப்பியமுழக்கிற்
செறித்தபுன்செருக்கிழந்துயிரிழந்தநச்சீயம். (௪௮)

விரித்தவாயலகொடுக்குறக்கடித்ததன்மெய்த்தோ
லுரித்துவாங்கியச்சரபமென்றுருத்தவோருருவம்
பிரித்துமீண்டனன்வீரபத்திரனெனும்பெயரோன்
சிரித்துமுப்புரமெரித்தவன்றன்னுழைச்சென்றான். (௪௯)

உரிந்தபோரதளுவட்டெழுந்தீயொடுமொருபாற்
சரிந்தவேணியோன்முன்னரினமைத்தடிதாழாப்
புரிந்தமானமுறறிருகரந்தொழுதயல்போனான்
பரிந்தநான்முகத்தவனுடுமிமையவர்டணிந்தார். (௫௦)

பங்கயாசனத்தயன்முதற்றேவர்நம்பரனைப்
பொங்குபேருவகைப்படப்பணிந்தனர்புரக்கு
மெங்கணுயகவீதுடையாக்கொளென்றிசைத்தா
ரங்கணுயகனன்னதுபுரிதுமென்றசைத்தான். (௫௧)

அரந்தைநீத்தனமெனத்தொழுதாங்கவரகன்றார்
பரந்தபாற்கடற்பள்ளியோனப்பவந்தொலைப்பான்
கரந்தைசூடிதாளருச்சனைபுரிந்தவைகழியப்
புரந்தபூமகணுயகன்றன்னுழைப்புகுந்தான். (௫௨)

நரசிங்காவதாரச்சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௧௭-இற் திருவிருத்தம். ௨௮௨௭.

## கஎ-வது. வாமனாவதாரச் சருக்கம்.



பொன்னிநன்னதிவளந்தருவளவயற்புனனாட்
டன்னமேயதண்டுறைக்கடன்மருங்குதெற்கடுப்ப
மின்னுவார்சடையவனுறைவேதவாரணிய
மென்னுமோர்சிவசினகரமாங்கவணிருக்கும். (க)

ஒழுக்குவார்சடையெம்பிரானேர்மருங்கிருக்கு
முழுத்தவாண்மதிமுகத்தினடிருப்பெயர்ஞானம்
பழுத்தநாயகியத்தலம்பழமறையனைத்துந்
தொழத்தகுந்தினமரிமுதற்றேவருந்தொழுவார். (உ)

ஆயவேதவாரணியமுற்றருந்தவர்யாருந்
தூயமாதவம்புரிகுவராலயஞ்சூழ்வார்
பாயவெள்விடையவனடியவரகப்பதுமக்
கோயிலொத்ததம்மறைவனத்தணிமதிட்கோயில். (ந.)

அத்தலத்தினேர்கங்குலினரனெடுமழலைத்
தத்தையன்னஞானம்பழுத்தவணறுமலர்ப்பூ
மொய்த்தபள்ளியினிருத்தலுமுன்னரிற்றீப
நெய்த்தலைச்சுடர்மழுங்குறவெம்பிரானிகழ்த்தும். (ச)

உவந்தவன்பொடுமித்திரிதூண்டுவாருளரோ
னிவந்தமூவுலகரசளிக்குதுமெனநிமல
னிவர்ந்தபூங்குழலிக்கபாடந்திறந்தெய்தித்
துவண்டவார்திரிதூண்டுவதியாரெனச்சொன்னாள். (ரு)

காலமீதிலத்தொடர்வழியிறங்கியோர்கருப்பை
கோலமென்சுடர்த்தட்டினெய்குடித்தலுமதன்பா
லாலுமென்றிரியசைந்துநீண்டதுவதுகாணாப்
பாலலோசனனகைத்தனனம்பிகைபகர்வாள். (சு)

இனிக்கொடுத்திர்மூவுலகமுமீங்கிதற்கென்னாத்
தனித்தகண்ணுதலளித்தனமெனுமொழிசாற்றக்
கனித்தநெய்குடித்தத்திரிதூண்டலுங்கடைபோய்ப்
புனைத்தவார்கழலவுணனுயரசரிற்பொலிந்தான். (எ)

எடுத்தமூவுலகத்தினுக்கோரிறையாகி
விடுத்தவெண்குடைநிழற்றினன்விண்ணவர்பெருமான
கடுத்தசிந்தையிற்றனைத்தொழப்பணித்தனன்கடும்போ
ரொடுக்கியாண்டனன்மாவலியெனும்பெயருவந்தான். (அ)

பொதுக்கடிந்தனனொருதனிக்கோன்முறைபுரந்தான்
மதுத்தடஞ்சினைக்கற்பகவளமெலாநுகர்ந்தா
னெதுக்குபாதலத்துட்படுவளந்தனியுவந்தான்
விதுக்கொழுஞ்சடைப்பரமனையாவரேவியவார். (௯)

இந்திரப்பெருங்கடவுளைமுதலினோர்யாரும்
வந்திரந்துதங்குறைசொலவழங்குவதானா
னந்தரத்தவரலமருநெஞ்சினராகிச்
சந்திதோறுமற்றவன்கொலுக்காத்தனர்சரிப்பார். (௧0)

பரிப்பெருங்கடல்பணைமருப்பொருதனிப்பணைக்கைக்
கரிப்பெருங்கடலடுபுலித்திரளெனக்கரந்து
விரித்தவெஞ்செருச்சேனைமிக்குயர்ந்தனர்விண்ணோர்
புரித்தவேவலிறுங்கவன்பணித்தனபுரிவார். (௧௧)

கண்டுநோக்கியுட்கவன்றனன்காசிடனென்போன்
மண்டுவெஞ்செருக்குலிசிதன்மகனுடைமறுக்கந்
திண்டிறற்படையைந்துடைநாரணன்றிருத்தாள்
கொண்டுசிந்தையினமைத்தனனருந்தவங்குறித்தான். (௧௨)

வருத்துமாதவமையிரண்டாயிரம்வருடந்
திருத்திநோற்றனனங்கிலைதிருமகள்கொழுநன்
மருத்தபைந்துழாய்மார்பினன்வள்சிறையுவணத்
தெருத்தமீப்பொலிந்தாங்கவற்கெதிருறவெதிர்ந்தான். (௧௩)

முண்டகநூதிருநாயகனெதிர்ந்துறமுனிவன்
கண்டுபோற்றினன்கட்பனிதூங்குறக்கனிந்தா
னண்டநாயகவிலிதெழுந்தருளமற்றளியேன்
கொண்டமாதவமெதுகொலென்றென்புறக்குழைந்தான். (௧௪)

உருகுசிந்தையினுவந்துறுமுனிவனைநோக்கி
யரிதுமாதவமிழைத்தனையாந்தரலெதுவோ
புரிதியென்றனனிந்திரன்பொன்னினுடனைத்துந்
தருவுமாவலிபறித்தனனவைதரத்தருமால். (௧௫)

பிறங்குவச்சிரத்தவற்குநீபின்னெனப்பிறந்து
மறங்கொண்மாவலியடுதிறன்மடிந்திறமடித்துக்
கறங்குவார்செவிவெண்ணிறக்கடும்பகட்டொருத்தற்
சிறந்தபேரரசளித்தியென்றருந்தவன்செப்ப. (௧௬)

ஆதுசெய்துமென்றருளினனுயிரமிதழ்பங்கு
மாதுமார்பினன்போயினன்வரமுனியவற்குக்

காதன்மைந்தனிற்றேன்றினனுள்சிலகழிந்த
நீதிஞன்மறையளந்தனன்வளர்ந்தனன்சிறுவன். (௧௭)

வரமுனிக்குலத்துயர்ந்தருண்மாதவன்புனைய
விரதநூல்புனைந்தருமறைச்சடங்கொடுமேவிப்
பரவுமாதவர்யாவருமுவந்துறப்பயின்றுன்
மூரணுடைத்தனதுளக்குறிப்பொருவற்குமொழியான். (௧௮)

உணர்த்தவேண்டுவதியாவையுமுணர்த்துரு துணர்ந்தான்
றணப்பருந்துறையாகமத்தடங்கடல்கடந்தான்
புணர்த்ததாமரைநான்முகற்குணர்த்துவபொலிந்தான்
மணத்தபச்சொளித்தருப்பையால்வயங்கியகரத்தான். (௧௯)

அனையகாலேயின்வானவர்யாவருமடைந்து
நினையுநெஞ்சொடும்வணங்கினரேத்தினர்நின்று ,,
ரினைபொலன்கழன்மாவலிவேள்வியொன்றியற்றி
வனைபொலன்கலன்முதலியயாவையும்வழங்கும். (௨௦)

எனவுரைத்தனராவானவரதுவுணாந்திரங்கி
நினையுநெஞ்சொடுமுவந்தனன்மறைக்குலதிமல
னனையாபோதிரொன்றருளினனற்றமுற்றறிந்தான்
வனைபொலன்கழன்மாவலிக்கருகுறவருவான். (௨௧)

இத்திறத்தினன்மாவலியெனும்பெயர்த்திறலோன்
மெய்த்தநான்மறைவேள்வியின்றிறனுறவிளைத்து
மொய்த்தமாமணிக்கதிரொளிமுறைமுறைபரப்பு
மத்தனித்திருமண்டபக்கொலுவுணர்ந்தடைந்தான். (௨௨)

உதயமால்வரைநெடுமுகட்டுச்சிநின்றுதிக்குங்
கதிர்செய்மாமுடியிளவெயிலெறிப்பவக்கதிர்மேற்
பதநிவந்துதெள்ளமுதெனப்பனிக்கதிர்விரிக்கும்
புதுநிலாவெனவெண்குடைவிளங்கிமீப்பொலிய. (௨௩)

பொன்னிலங்கியகதிர்மணிப்புனைகழலடிக்கீ
ழுன்னரும்பசும்பொற்றிறைக்குப்பையிறேங்கிப்
பின்னல்வெண்டிரைநெடுநிலப்பெருங்குடைத்தனிக்கோன்
மன்னர்பொன்முடிதேய்த்துகுதாதிடைவயங்க. (௨௪)

வேரிநாண்மலர்க்கற்பகநறுந்துளிவிடுக்குந்
தாரொரடுங்குழைந்தொருபுடைவெரிநுறச்சரிந்த
கார்கொழுந்துறுங்குழலியரொடுத்திடுகவரி
வார்கொழுந்தகன்மார்பினுந்தோளினும்வருட. (௨௫)

எம்மைநோக்குமென்றெடுத்தகைம்முகிழ்ம்விட்டிறக்கார்
கொம்மைவெம்முலைமகளிரும்விண்ணவர்குழாமு
மம்மவீங்கிவனுளக்கருத்தென்கொலென்றயிர்த்துத்
தம்மிலஞ்சிநெஞ்சலமரப்புடைபுடைதழுவ. (உ௬)

ஓவருந்திறறபேரொழிலுருவமுறறடங்கப்
பூவைவாய்ச்சியர்கருநெடுங்கண்ணிழல்புதைப்பத்
தேவராயாவருமசுரர்மற்றியாவருந்திகைத்து
வாவுதிண்பரியிந்திரனிவனெனமதிப்ப. (உ௭)

திருந்துகுங்குமச்சேதகத்திருநெடுமருமத்
திருந்தபன்மணிக்கலனுமிழ்ந்தெறிகதிர்க்கற்றை
யொருங்குணர்ந்தவர்க்குளப்படுமந்திரத்துளராய்
மருங்குநிறபவாகட்புலத்தவிரொளிமறைப்ப (உ௮)

வானரம்பையாமாநிலமடந்தையர்வரம்பி
லேனைநாகர்தமிருக்கையரினமயிலனையார்
கானநாடகநாட்டியக்கருவியொத்திசைப்ப
மேனிவந்தெழுசதிமுறைமென்மெலமிதிப்ப. (உ௯)

பள்ளத்தெண்டிரைப்பரவைநீரநெடுநிலப்பரப்பி
னுள்ளப்பட்டெழுவறியவர்மறையவருவப்பக்
கள்ளொத்தீரிதழவிழ்ந்தசெங்கமலமொத்தொருகை
வள்ளற்றன்மையினள்ளியபெருநிதிவழங்க. (௩0)

பூவுநீருமிட்டிருநிலமெமக்கெனப்புரந்தா
னுவுமாநிதிக்குட்டை யுமெங்கரத்தளித்தான்
பாவைகன்னிகையளித்தனனெமக்கெனப்பகராத்
தேவநான்மறையந்தணாபுறம்புகசசெல்ல. (௩௧)

கயற்கருங்கடலுலகுளோரேற்றவைகருதிப்
புயற்பொழிந்தெனப்பொழிந்திலமென்பதுபுலந்து
வியப்பெழுந்தனதுளத்தொடும்வேதவேதியராய்
நயப்பினேற்பவர்வருநெறிகட்புலநடப்ப. (௩௨)

பாந்தளாயிரம்பஃறலைப்பரபடிறப்பரந்து
காந்துபன்மணியிளவெயிலெறிப்பவெங்கனலிற்
சேந்தகட்டுணைவாளரிவெரிநுறசசெறிப்ப
வேந்துபொற்றகட்டாசனத்தினிதுவீற்றிருந்தான். (௩௩)

கொள்வயாவையுங்கொடுத்தனின்குறைநிரப்பினனா
யுள்குசிந்தையினுவகைநின்றிரைத்தெழுமுவப்பிற்

கள்விடுந்தொடைமோலியானிருத்தலுங்கருதாத்
தெள்வரும்பழநான்மறைவாமனன்செல்வான். (௩௪)

பஞ்சனுலங்கியபதத்தனனபனமுறைபதுபயா
னெஞ்சினுல்குறுநெடுநிலநெருட்பெனமதிப்பான்
முஞ்சியன்பசுந்தருப்பையன்மன்பதைமுகத்தி
ஞெஞ்சுநோக்கினன்விசித்திடுங்கோவணத்துடையான் (௩௫)

நூலொடும்படச்சாத்துமான்றேலினுவலிற்
பாலெனத்தெளிமுறுவலன்பவித்திரவிரல
னுலுமாமறையோருருவெடுத்ததேயனையான்
காலமோர்ந்தறியாகமப்பெருங்கலைக்கடலான். (௩௬)

வரவுநோக்கினனடுதிறன்மாவலிவரக்கண
டிரவுசிந்தைநெக்குருகினனெதிரொழுந்துற்ருன்
பரவியாங்கவற்கியைவனயாவையும்பயின்ருன்
விரவுமாமணியாசனத்திருத்தினன்விருப்பான். (௩௭)

கொள்ளைமாதவமியாவையுமொருவழிக்கொண்ட
பிள்ளைநீயிவணெய்தயான்பெற்றபேறெளிதோ
வுள்ளம்வேண்டுவயாகொலென்றடிக்கடிபுவந்தான்
வெள்ளவார்கடற்றுயிலொழிந்தெய்தியோன்விளம்பும். (௩௮)

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்

மறைமுகமொழிந்தவேள்வியாவையுமரபின்முற்றுந்
துறைமுகநடந்தசிந்தைத்தூயைநீநின்னில்யாரே
நிறைகுணத்துயர்ந்தோர்க்கீந்துமேம்படுநிலையினின்ற
ரறைகழலரசகேளாவதிசயமடைந்ததெம்பால். (௩௯)

கோட்படுகுலிசதன்பாற்குறுகலமுலகமீன்ற
தாட்படுகமலத்தோனிற்சாரகலந்தகைசால்வேள்வி
நாட்படநடத்திமுறைறுநின்னுழைநணுகினேமோர்
வேட்கையினஃதுநம்பாற்றந்துறவேண்டுமென்ருன். (௪0)

எத்தவம்புரிந்தேனையவஃதுநீயியைந்துகேட்ப
மத்தமால்யானைவேகவயப்பரிகொடிஞ்சிமான்றோ
மொய்த்தமாநிதியக்குப்பைகலன்பலமுதலயாவுஞ்
சித்தமோர்ந்தருளினின்னேவழங்குவன்செல்வவென்ருன். (௪௧)

நெடுமுடிக்கொடிஞ்சிமான்றேர்நீணிதிநிறைத்தகுப்பை
படுமணிக்கலன்களும்பொற்பசுந்துகிற்ருனைதானை

விடுபரிமுதலயாவும்வேண்டலம்வேண்டினேமெம்
மடிதொடுமளவைமூன்றுநின்னிலத்தளித்தியென்றான். (௪௨)

மூவடிமண்ணினையசெய்வதென்மொழிதியென்னத்
தேவுயர்தவத்துச்சிந்தைசெய்தவணிருந்துசெய்வே
மாவதுபுரிதியென்றுவறைந்தனனமலனன்றே
னீவதுமுயன்றான்வெள்ளியருகுநினறினையசொல்வான். (௪௩)

பிள்ளையென்றிவனையோர்தலேழமைபெருந்தோட்டுந்தி
வள்ளவாய்க்கமலத்தோற்குமளவொழிவரம்பினின்றான்
பள்ளநீர்வேலைஞாலமுழுவதும்பயந்துடல்வே
றெள்ளுமெண்ணெயுமொத்தெல்லாவுயிர்தொறுமியைந்துநின்றான். ()

பாயிரமுகத்துநூற்கும்பழமறைப்பொருட்குமெட்டாச்
சேயவன்செய்வசெய்வோன்செயப்படுங்கருவியாகி
மேயினானுலகமெல்லாமுண்டவன்விளங்காமாயந்
தாயவன்றன்மைநின்னாலளட்டரிதையவென்றான். (௪௫)

கொடுப்பனமுறையினோர்நுகொடுத்தநீகொடுப்பதோர்பா
லடுத்துநின்றொழிட்பதாகாநின்கருத்தளந்துகோடி
விடுத்தயனொழிந்நேனென்றான்வெள்ளியும்விரைத்துழாயோன்
மடுத்தெறிசிறைக்கானல்குங்கலுழனைமனத்தினோர்ந்தான். (௪௬)

கஞ்சமொத்தலர்ந்தமேகவண்ணனாற்கருதப்பட்ட
வெஞ்சிறைக்கலுழன்றாழாவெள்ளியையள்ளிக்கொண்டான்
மஞ்சிவாந்தியங்காநின்றவாளிவர்ந்தெழுந்தானேக்கி
யஞ்சினனலங்கற்றிண்டோள்வாளெயிற்றசுரர்கோமான். (௪௭)

உந்தியம்பொருட்டினண்டமெவற்றையுமுவப்பினீன்ற
பைந்துழாயலங்கன்மாயோனெம்முழைப்பரிவினெய்தி
முந்திநின்றெனதுமண்மேன்மூவடியிரப்பவெம்மோர்
தந்தமாதவங்கொலின்னேயளிப்பதுதருமமென்ன. (௪௮)

முருகவிழ்மலரோடள்ளிமுக்கைநீர்முகந்துவிட்டா
னருண்முறையங்கையேந்திநிலத்திடைக்கவிழ்த்தானையன்
திருகுவாளெயிற்றுவேந்தனுதவியதிவலைத்தெண்ணீர்
தருநிழலவற்குமுன்னையமிழ்தினுந்தக்கதன்றே. (௪௯)

சேண்படநிவந்ததெந்தைதிருமுடிச்சிகரந்தீண்டி
மாண்படுதிசைகளெல்லாமறைத்தனபுயங்கண்மண்மேற்
கோண்படுதிகந்தமுற்றுங்கரந்தன்வுருவங்கூர்ந்து
காண்பனவெல்லாந்தானேயென்பனகாட்டிநின்றான். (௫0)

ஏந்திருநிலத்தையோர்தாளடக்கியதெவையுந்தாங்கித்
தோய்ந்தெழுவடபான்மேருச்சுற்றுவிட்டெழுந்துமீப்போம்
பாந்தளினிவந்ததோர்தாளோர்பதத்தளவைகாணான்
சாய்ந்தனன்மகுடச்சென்னிமாவலிநகுவர்கோமான். (௫௧)

சங்குசக்கரங்கைதாங்குதாமரைத்தடங்கட்பச்சைக்
கொங்கலர்துளவோனீலப்பொருப்பெனநிவந்தகோல
மங்கண்மாஞாலத்துள்ளோரரசும்புறுடசும்பொனாட்டோர்
பொங்குபேரன்பினோடுங்கண்டுகண்புலப்படின்றார். (௫௨)

விண்முகடளந்துநின்றசேவடித்தலத்துவிண்ணோர்
தண்மலரிடையறாதுசொரிதலாற்றன்னைநீங்கா
மண்மகள்குளிர்ப்பநின்றமலரடிமறையப்போாத்துத்
திண்மருதிகந்தமெட்டுநாறினதெய்வத்தண்பூ. (௫௩)

தாமரைத்தவிசின்மேலோனிந்திரன்முதலோர்தந்த
தேமருதருவினோங்குந்திண்சினைமுகிழ்த்தமென்பூப்
பாமருநெடுநீராடையகனிலம்படரக்கலாவப்
பூமகளென்னுந்தன்மைகாட்டினள்புவனப்பூவை. (௫௪)

மீயுயர்விசும்புபூத்தமீனினமெல்லென்குல்லைப்
பாயொளிமருமந்தாழுமுந்நீனட்டகையாநிற்பச்
சேயொளிபரப்பிவையந்திருளறச்சிதைக்குந்தெய்வக்
காய்கதிர்க்கடவுண்மற்றோர்கவுத்துவநிகாப்பதம்மா. (௫௫)

மந்தரந்திரித்துமுன்னைப்பாற்கடலவயிறுநோவ
வெந்திரத்தியற்றாநின்றுகடைந்தநாளிமையோர்போற்று
மிந்திரனரசினோங்கவக்கடலிடத்துநின்றோ
சந்திரனெழுந்தவாபோறறணிக்குடைநிவந்ததன்றே. (௫௬)

கற்பகநாடுகாக்குமாயிரநதடங்கட்புத்தேண்
மற்பகத்திரண்டதிண்டோள்வானவரொவருமெய்தி
யற்பகற்றாரந்தவாபோலருந்துயர்கழியநின்றார்
முற்பகலெவர்க்குமெட்டாமுளரியம்பதத்துவீழ்ந்தார். (௫௭)

எந்தைநீயெம்மைநோக்கியெய்தியவிடுக்கண்டீாப்பான்
வந்தனையுனக்கென்றோர்ந்துசெய்தகைம்மாறுமுண்டே
தந்தையாய்த்தவமாயீன்றதாயுமாய்த்தருமமாயெஞ்
சிந்தனைகரந்துநின்றாய்தேவனேபோற்றிபோற்றி. (௫௮)

என்றடியிறைஞ்சிவாழ்த்துமிந்திரன்முதலோர்க்கின்னே
தன்றணிக்கருணைகூர்ந்தான்றருநிழலரசுதந்தா

னின்றவோரடியுநேராமாவலிநெடும்பொற்சென்னிக்
கன்றளித்தமைத்தானல்லன்சீறினனமலநாதன். (௫௯)

ஃறெயிற்றசுரர்கோமான்மாவலியென்போன்றன்னைக்
காரகப்படுத்திமற்றைக்கடிகமழலங்கற்குல்லைத்
தாரகப்படுத்தமாயோன்றன்னிகரின்மைநோக்கிப்
பேரகலண்டமெல்லாம்பிளப்பதற்குருந்துநின்றான். (௬0)

வெருவினரிமையோரின்றேனுங்கதுவிளைட்டநோக்கி
யொருவழிக்குழுமித்தெய்வக்கயிலையஞ்சாரலுற்றார்
செருகியகுடிலவேணியெம்பிரான்றிருமுற்சென்றார்
டரிபுரமிழற்றும்பாதபங்கயம்பணிவதானார். (௬௧)

வெள்ளைவாரணனுமற்றைவிண்ணவரெவரும்வெள்ளைப்
பிள்ளைநாண்மதியஞ்சூடுமெந்தையெம்பெருமாற்போற்றி
வள்ளவாய்க்கமலைகேள்வன்மாவலிபொருட்டாலெம்மோர்க்
குள்ளநெக்குருகியாக்குமளப்பருவுருவங்கொண்டான். (௬௨)

கொண்டபேருருவந்தன்னாறோமுறையெனக்குத்தந்தான்
திண்டிறலசுரனைப்பற்றியரும்பெருஞ்சிறையிலிட்டா
னண்டமுமண்டந்தாங்குமேருவுமதனைச்சூழுந்
தண்டலில்புவனமெல்லாந்தட்டுவிட்டுருவிநின்றான். (௬௩)

அன்னதுநடுந்தியாயினமரருமுனிவர்யாரு
நின்னடித்தொண்டுநீங்காநெறிநிற்குநிலையினிற்பா
ரென்னலுமிமயவெற்பீன்றளித்திடவுலகமீன்ற
கன்னியோடாகனைவயிரவக்கடவுள்சென்றான். (௬௪)

சென்றனனெதிராநின்றோராணவச்செருக்கினிற்கு
மன்றலந்துளவினாற்குமாயைக்கொழியநேரா
வின்றியல்பிறவுஞ்சொன்னானவன்சிறிதுமெண்ணான்
கன்றியவெகுளிமிக்கான்வைரவக்கடவுட்செல்வன். (௬௫)

பற்றினன்வயிரத்தண்டம்பகிரண்டமதிரவோச்சிச்
சுற்றினனுருமுக்காலத்தெழுந்தனன்றுளவமாயி
னெற்றினனெற்றலோடுமெறிபடுசண்டவாயு
முற்றுறவிற்றுவீழுமூரிவெங்கிரியிற்சாய்ந்தான். (௬௬)

கருநிறக்கமஞ்சூன்மேகக்காரதனுரித்துவாங்கித்
திருநிறத்தமையக்காளகஞ்சுகமென்னச்சேர்த்தி
வெரிநுறப்பிடுங்குமென்புதண்டெனவிடுத்துக்கொண்டான்
மருமலர்த்துளவமாயோனாணவமயக்கந்தீர்ந்தான். (௬௭)

வரன்முறையுணர்ந்தமாயோனுணவமயக்கால்வந்த
புனைதவப்படவளவேணிப்புண்ணியப்பொருப்பையோரா
வினைநறுமலரிட்டேத்தியருச்சனைவிழையாநின்றான்
களையழிசெருக்குநீத்தான்பெற்றனன்கடவுட்டன்மை. (௬௮)

வாமனுவதாரச்சருக்க முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௧௮-க்குத் திருவிருத்தம்-௨௮௬௫.

## ௧௯-வது. பாசுராமாவதாரச் சருக்கம்.

பிருகுமாமுனிவன்றென்றாளருளியபிறழாச்சாப
முருவநின்றின்னசெய்துமொழிந்திலதொலிநீர்வேணி
திருவருளின்மையன்றோற்கண்டைந்தனதெரிந்துசொற்றேம்
பொருதிறற்றிகிரிமாயற்கருளியபுகல்வாமின்னும். (௧)

ஒருங்கியமனத்தியோகமுற்றுணர்ந்தொருவாநின்றே
னருந்தவமுருவுவேணடியருந்தவஞ்செய்ததன்னோன்
கருங்கடனிலத்துக்காமமுதலியகடந்தோன்றெய்வப்
பெருங்குணச்சமதக்கினியென்றொருபேரினின்றோன். (௨)

ஆங்கவற்குயிரோயன்னாளருந்தவசிறப்பினின்றாள்
வாங்கருங்கற்பின்றெய்வப்பத்தினிமடவாண்மெல்லென்
றேங்கியநுசுப்பினெல்குமிரேணுகையென்டாடன்பாற்
றேங்கமழ்துளவத்தோளான்றிருவவதாரஞ்செய்தான். (௩)

மெய்த்தவச்செல்வனேக்கிவேட்கைமிக்கெழுந்தான்போந்து
நெய்த்தலைக்குழவியின்பாநுகர்ந்தனனெகிழ்ந்தசிந்தைத்
தத்தரிச்சிலம்பினார்க்குந்தளர்நடைதழுவநின்றான்
வித்தகற்குதவவேண்டுங்கலையெலாம்விளங்கச்செய்தான். (௪)

பருவமோராறுசெல்லத்தலைப்படும்பருவந்தன்னிற்
றிருமகள்கொழுநற்கன்னானுமுறைச்சடங்குசெய்தான்
கருணையோருருவுகொண்டாலன்னவன்கடனீராடைப்
பெருநிலம்பரவநின்றான்பெருந்தவததலைவன்செல்வன். (௫)

எழுதியோர்ந்துணரவொண்ணுவிருக்கெனுங்கடலுமிந்தச்
செழுமறைக்கடலினேங்குமாகமத்திரையுநீந்தி
முழுதுணர்வரம்பினின்றானஃதன்றிமுன்னரீன்ற
தொழுதகைத்தந்தைநோக்கிச்சொற்றனதுறந்துநில்லான். (௬)

கார்த்தவீரியன்றாம்வெற்றியடுதிறற்பரசுராமன்
போர்த்தனவிருபொற்கன்புகனிந்தனனாகிச்சென்றான்
பார்த்தனர்முனிவானத்தருசசனைதிருத்திச்செய்து
வேர்த்தெழுமெய்சன்றுநடந்தனசிறிதுகாலம். (௨௪)

இழைத்தமாதவமுள்ளகனைகழற்கவிகைவேந்தன்
யழைத்திலளந்தான்வையம்பரிக்குநாட்பாந்தளேந்து
டழைப்படுஞ்சிங்காண்பானெழுந்தனனிமிர்ந்தசேனை
முழைப்படுகுந்தானீரொண்டிசைகுலாய்ப்போதலோடும். (௨௫)

நெடுக்குமிவடிம்புபோர்த்தநிலமெலாந்துருவிச்செல்வான்
மடுத்துறச்சமதக்கினிதன்னிருக்கையைக்கிடைப்பச்சென்றான்
விடுத்திழிட்குடஞ்சாய்ந்துவணங்கினன்வேந்தன்வேரிக்
கொடுத்த மோலியன்றேற்காசிகள்பலவுங்கூறி. (௨௬)

எறிந்தெழுபரிதிக்காந்தியெரிபடவெரிக்குங்கானம்
வெறித்திவணடைந்ததென்னேவோத்தனைமேனியெல்லா
நறிக்கிழங்கடகுவேண்டிநயந்தனைபோதியெனரு
னெறிப்படுந்தனிக்கோல்வேந்தனினையனசிகழ்ந்தலுற்றான். (௨௭)

வெள்ளமோரளவையின்றியெழுந்தனவிரிவெஞ்சேனை
கொள்ளைமாதவத்தோய்நின்னாலாற்றுதல்குணிக்கலாமோ
நள்ளிடைகடப்பின்மூதூர்நண்ணுகுதுகம்படவென்று
னுள்ளநெக்குருகாநின்றமாதவனுரைப்பதானான். (௨௮)

எப்பெருஞ்சேனையேனுமிச்சணத்திருத்தையொன்றிற்
றுப்புடைவளத்தினோடமுதெனத்துய்ப்பாயப்பே
னொப்பருந்தனிக்கோல்வேந்தேயிருத்தியென்றுறுத்திச்சொன்னான்
கப்புடைமருப்புக்காமதேநுவைக்கருத்தினோர்ந்தான். (௨௯)

வந்ததக்கணத்தினந்தத்தெய்வமாச்சுரபிநோக்கிச்
சிந்தைநெக்குருகிமேனிநீண்டினன்றீண்டலோடு
மெந்தைநீயழைத்ததென்னென்றிசைத்தலுமிமையோரேத்து
முந்தைமாதவத்தோன்றெய்வப்பசுவொடுமொழிவதானான். (௩௦)

வெள்ளைவெண்குடையோன்கார்த்தவீரியனென்னும்வேந்த
னொள்ளெரிவனத்துச்சேனையொருங்குகொண்டெம்மையுற்றான்
றள்ளருமுதரவெந்தீசசொலித்தறத்தளராநின்றான்
றெள்ளமுதவற்குமன்னோன்சேனைக்குமளித்தியென்றான். (௩௧)

ஆவதுபுரிதுமென்னாவருகுநின்றரசற்கன்னோன்
மேவருஞ்சேனைக்குள்ளம்விரும்பினவெறுக்கவீந்து

போவதுபுரியாமுன்னம்புரவலன்றவத்துமிக்கோன
சேவடிபரவியேத்தியினையனசெப்பலுற்ருன்.

காயெரிகதுவுங்கானக்காயிலேகிழங்கேயன்றி
நீயிதுவிரும்பற்பாலேயல்லேயிச்சுரபிநின்பான்
மேயினதுணர்ந்தால்யாரும்விரும்பினர்கவர்ந்துகெ
ரேயவிச்சுரபிபோமுன்னெமக்கெனவளித்தியென்ருன

வேந்தனீதுரைத்தலோடும்விரதமாதவத்தின்மிக்கோன்
சேந்தனனிருகணுக்கிச்சிரித்தனன்சிறியோர்க்கென்ன
வேய்ந்தநன்கிழைப்பத்தீமையெய்துதறிண்ணமென்னு
வோய்ந்தனனுள்ளமீதற்கியைந்திலனுருத்துநின்ருன்.

ஊற்றமிக்கெழுந்தசீற்றமுணர்ந்தனனொருகோல்வேந்தன்
மாற்றருஞ்சேனையோடுஞ்சுரபியை வளைத்துநின்ருன்
கூற்றெனவளைந்தசேனைநோக்குமசசுரபிகோலக்
கீற்றுமென்சடையோயென்னைக்கொடுத்திகோலென்றுகேடப. (௩(

கொடுத்திலன்யாறுவேந்தன்கொல்பெருஞ்சேனையோடுந்
தடுத்தனனரசரோடுமெதிர்ந்திடுந்தருக்குமுண்டே
யெடுத்தவெஞ்சேனையோடுமாறுகொண்டிகறியாயி
னடேீ தனபுரிதியென்ருன்சுரபிமற்றதனைக்கேளா. (௩௪

வல்லைநின்றுருததுச்சீறிச்சிலிர்த்திடுமயிர்க்கால்தோறு
மொல்லைவந்தெழுந்தசேனைக்கிலக்கமாருரைக்கற்பாலா
கல்லெரிபிறந்தகண்ணகதிரமழுட்படையகால
வில்லினாரந்தகத்தவெற்பினந்தாங்குகைய. (௩௫

அளவொழிகணங்களின்னேபிறந்தனவனந்தவெள்ளங்
கிளைடுமரசன்சேனையாவையுநெருக்கிக்கிட்டி
யளைபுனற்குரிதிப்போராறலேட்புறமலேட்டவன்றே
னுளைவயப்புரவிவெள்ளங்குருதியாறெழிகிற்றன்றே. (௩௬

கழிந்தவெஞ்சினத்திறேடுங்கார்த்தவீரியனென்போனு
மொழிந்ததெம்படையென்றேடித்தன்னகர்க்கோயிலுற்று
விழிந்தனபரிதிமேல்பாலிருண்டதுதிகந்தமெட்டும்
பொழிந்திடுசினமீக்கொள்ளப்புகுந்தனர்புதல்வர்நால்வர். (௩௭

கனைகழற்றுதைமுன்போய்க்கைதொழுதருகினின்று
ரினையநீயையவிந்தவிருடியால்விளைந்ததீதாற்
புனையிருட்போதியாம்போயாங்கவன்புலவுச்சென்னி
நினையுமுன்கொணர்ந்துமென்றுரவனதற்கியைந்துநின்ருன். (௪௦

கார்த்தவீரியன்றன்பாலர்நால்வருங்காளகூடம்
போர்த்தனவிருளிற்போகியவ்வனம்புகுந்தாரற்றம்
பார்த்தனர்முனிவன்சென்னிபற்றறவெறிந்தார்தூக்கி
வேர்த்தெழுமெய்யராகிமீண்டனர்வினைவதோரார். (௪௧)

இழைத்தமாதவத்தோன்சென்னியாங்கவீரநோக்கி
யழைத்திலளாற்றகில்லாளருங்குலக்கறபினின்று
டழைப்படுஞ்சினையச்சாந்தத்தடுக்கியசமிதையோடு
முழைப்படக்கிடந்தாளன்றனுடனிறந்தொழிவனென்று. (௪௨)

அடுக்குமிந்தனத்தினேறியருந்தவத்தலைவனங்கை
மடுத்துறத்தழுவிக்கொண்டாள்வளர்ந்தெழுகனலிமாள
விடுத்திழிமழையாலங்கம்வெந்திலள்மெல்லென்கூறை
தொடுத்திழிசாம்பரானதந்நிலைநுணுக்கங்கொண்டாள். (௪௩)

வீவதுகாலமாயின்மெய்த்தவக்கொழுந்திறேடுங்
போவதுகற்பிறேங்கும்பொலங்குழைமகளிரக்கல்லா
லாவதுபுரிந்தோமேனுமாகுமேவரியவென்று
மேவுமிந்தனத்தைநீத்துவெள்ளிடைக்குதித்துப்போனாள். (௪௪)

கொடுநுனையிலையவேம்பின்குழைதுழைமருங்குபோர்த்து
நெடுநெறிகடந்தாளாருநீணகர்ப்புகுந்துநீலப்
படிநிறத்தணங்கையொத்துவதிந்தனள்கழிந்தபன்று
ாடுதிறற்பரசுராமனருந்தவத்ததிகனானன். (௪௫)

கல்லெனக்கலிக்குஞ்சேனைக்கார்த்தவீரியன்றன்பால
சொல்லைடுக்குரியதாதைதலைதுமித்தெடுத்தவாறு
மொல்லையீன்றெடுத்தாளாருரணங்கெனவுறைந்தவாறும்
வல்லையொற்றுணர்ந்தான்சீற்றமனங்கிடந்துடற்றநின்றான். (௪௬)

வெள்விடையவனைநோக்கிமெய்த்தவம்விதியினாற்றி
புள்விடாநெறியினின்றுனென்னையாளுடையவீரன்
கள்விடாநெகிழுங்கொன்றைவேணியோன்கருணைகூர்ந்தான்
புள்விடாவலங்கற்றேளாற்கெதிர்ந்தருள்புரிந்துநின்றான். (௪௭)

கண்டனனுருவநோக்கிக்கண்கணீர்கலுழாநின்றான்
கொண்டனனுவகைவெள்ளக்குறைகடற்குளிப்பதானு
னெண்டொடிபாகநோக்கியென்புறவுருகும்விம்மும்
பண்டாறுதலைநோக்கிப்பூத்தனன்புளகசசில்லி. (௪௮)

சங்கிவன்றன்னைநோக்கியெம்பிரானிரக்கமெய்தி
யீங்கருந்தவத்தினின்றாய்வேண்டுவநிகழ்த்தியென்னத்

தாங்கியசெழுநீர்வேணித்தலைவனைத்தனதுள்ளாக்கிப்
பூங்கழற்ருெழுதுவாழ்த்தியினையனபுகல்வதானுன். (௪௯)

பன்னருந்தவத்தினின்றன்சேவடிப்பதுமம்போற்று
மென்னுடைத்தாதைதவைகுமிருக்கையினிரவுபாராச்
சென்னிவீழ்த்தெடுத்துச்சென்ருர்கார்த்தவீரியன்றன்செல்வ
ரன்னவர்தாதையாவிவாங்குதற்காசைபூண்டேன். (௫0)

எந்தையேயருளவேண்டுமென்னலுமிமையாமுக்கட்
சந்திரமவுலியண்ணலஃதொன்ருே தருதுமென்னுச்
சிந்தைநீநினைந்தயாவுஞ்செய்தனசிறக்கற்பாலை
தந்தனங்கோடியென்னுத்திருக்கரமழுவுந்தந்தான். (௫௧)

பெற்றனன்றவத்துமேலோர்பெறற்கரும்பேறியாவுங்
கற்றைவார்சடையோற்போற்றிக்கார்த்தவீரியனைநோக்கி
யுற்றனன்செற்றந்தீர்வானுருத்தனனுருத்தலோடு
மிற்றுவீழ்ந்திறப்பதோரானுங்கவனெதிரந்துசென்ருன். (௫உ)

சென்றவன்சேனையாவுந்துணித்தனன்செருவினேர்ந்து
நின்றவன்றன்னைப்பற்றிநிலவுவாண்மழுவொன்றேந்தி
வென்றடுதிரடோளஞ்ஞூறறிரட்டியும்விழுதினவீழ
வன்றிறலொடுங்கவோச்சித்தறித்தனன்வரத்தின்மிக்கான். (௫௩)

அன்னவன்மரபிருேங்குமடுதிறற்புலியேறென்ன
மன்னரையொருங்குபற்றிவளாகுருக்கேத்திரத்தின்
றன்னிலைகொணடுசென்ருன்குட்டமோரைந்துதாழ்தது
நெய்ந்நிலைகுருதிவேலோாசெம்புனனிரப்பினுறல். (௫௪)

அக்குளக்குருதிநீரினருள்சுரந்தையற்கென்ரு
முக்கைநீரிறைத்துக்கொண்டகடும்பழிமுனிவுதீர்ந்தான்
செக்கர்வான்கிழிந்துவெவ்வேறிழிதனசெந்நீர்நீங்கிப்
புக்கனன்புவனமெல்லாங்காசிபர்க்குதவிப்போந்தான். (௫௫)

தென்றிசையடையவெய்திமகேந்திரப்பொருப்புச்சேர்ந்து
கொன்றையஞ்சடிலத்தெந்தைகுரைகழன்மறவானுகி
யின்றளவிறவானன்பினருச்சனையியற்றிநின்ருன்
பொன்றிணிசடையீசன்றன்மையார்புகலற்பாலார். (௫௬

பர்சுராமாவதாரச்சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௧௬ - இ திருவிருத்தம்-உ௬௫௧.

## ௨0 - வது. இராமாவதாரச்சருக்கம்.



இத்திறநிகழ்ந்தபின்னர்மனுகுலத்தெய்திவையதிற்
றத்துவெண்டிரைநீர்வேலியுலகுயிர்தழைட்பவோங்கி
முத்தவெண்கவிகைவேந்தன்றயரதனென்பான்மூரி
மத்தமால்யானைவேந்தர்வணங்குறுமன்னாமன்னன். (௧)

கலிநிலைத்துறை.

அறுபத்தாயிரவருடமளித்தானவனன்றோ
சிறுவற்புல்லுஞ்செல்வமிழந்தான்றெருமந்தான்
மறுவைக்குங்கண்டத்தரனிருதாள்வழிபட்டா
னுறுநட்புற்றானன்புடனங்கீமுருகுற்றான். (௨)

ஆசறுவேள்வியனைத்துஞ்செய்தானதனாலோர்
மாசறுமைந்தர்ப்பெற்றினிதெய்தும்வழிகாணான்
பூசலனங்கற்செற்றபிரானைபபுனைவேணி
யீசனையன்பிறைகைதொழுதுற்றனிடரற்றான். (௩)

முளரிக்காரொக்கின்றவிராமன்முதலோரை
யுளரிக்கும்பேராசையுவப்பினொடும்பெற்றான்
றளரித்துன்பசசாகரவெள்ளக்கரைகண்டான்
வளரிக்காடற்சாபனையொப்பார்வளாமைந்தா. (௪)

கற்பனயாவுங்கற்றுமுடித்தார்கலையெல்லாஞ்
சொற்படவோதா துண்மைதெளிந்தாரதொடுநூலி
னிற்பனகன்மத்தெல்லைகடந்தாாநிலமெல்லா
மற்பினுவக்குந்தன்மையடைந்தாரருண்மைந்தா. (௫)

செல்வரின்முன்னோன்கோசிகனோடுந்தென்பாலுற்
றல்லல்விளைக்குந்தாடகையைச்செற்றவனோடும்
வில்லொடுமற்றைத்தம்பியொடுங்கோமிதிலைப்போ
யொல்லையெடுக்குஞ்செஞ்சிலைவெற்பொன்றொடிதந்தான். (௬)

வாரிணரோதிச்சீதைமணந்தான்வருமெல்லைக்
கூர்மழுவங்கையிராமனளிக்குங்குனிசாபம்
போரடவென்றுகரங்கொண்டந்தண்புயலிற்றந்
தார்திரைவேலித்தன்னகருற்றனடல்பெற்றான். (௭)

செங்கோலுய்க்கும்பொன்முடிதப்பிச்சிறுதாயால்
வெங்கோல்வில்லுந்தம்பியுமேமெய்த்துணையாகக்

கொங்கார்கோதைபின்செலவெங்கான்குறுகுற்றான்
பொங்காரஞ்சூழ்தண்டகமெய்திப்பொலிவுற்றான். (அ)

அந்தவனத்திற்செந்தமிழ்வெற்போனடிபேணிச்
சிந்தைதெளிக்குஞ்சின்மயமெல்லாந்தெளிவுற்றான்
பைந்தொடிபாகன்பங்கயபாதம்பரவுற்றா
னுந்துசினைப்பஞ்சப்பழுவக்கானுடனுற்றான். (௯)

பொன்னிறமானின்பின்னவனேகப்புயலூரு
மின்னிடைமானைவெங்கணரக்கன்வெருவச்செய்
தந்நிலைகொண்டான்வெஞ்சிறைவைத்தானதனாலே
தன்னுயிரோகப்பேதுறுமெய்யிற்றளர்வுற்றான். (௧0)

தம்பியொடுஞ்சென்றவ்வனமெங்குந்தடவுந்தான்
வெம்பிவெதும்பிக்கண்டுயில்கொள்ளான்மெலிகாலத்
திம்பரடைந்தான்மாருதிகட்பாலெழுவானத்
தும்பரினன்சேய்தன்னொடுநட்பானுறவுற்றான். (௧௧)

மாமரமேழுந்திண்சரமொன்றான்மடிவித்தான்
வேமெரியன்னோன்வாலியையம்பால்விளிதந்தான்
காமர்கடும்போரொழுபதுவெள்ளக்கவியோடும்
பாமருதென்பால்வேலையடைந்தேபடருற்றான். (௧௨)

தெண்டிரைவேலைத்திண்கரைகோலிச்செலவுற்று
மண்டமரிட்டுச்செஞ்சிலையொன்றால்வயமேவிக்
கொண்டவரக்கன்புன்றலைபத்துங்குலையோடே
துண்டமுறுத்தித்தன்படரெல்லாந்தொலைவுற்றான். (௧௩)

முற்றுமரக்கன்றம்பிதனக்கம்முடிசூட்டிப்
பொற்றொடியோடுந்தம்பியொடுந்திண்போராடல்
பெற்றகவிக்கோமாருதியோடும்பெருவெம்போர்
மற்றையரோடும்புட்பகமேறுவரலுற்றான். (௧௪)

வந்திழிவுற்றுச்சேதுவினோரான்மயில்பாகத்
தெந்தைபிரானுக்கற்சனைசெய்தானிகலாடித்
தந்தபெரும்பாவந்தொலைவுற்றான்றனிவெள்ளேற்
றந்தணனுக்கங்காலயமுற்றுமமைவித்தான். (௧௫)

செய்வனயாவுஞ்செய்துமுடித்தான்சிவலிங்கங்
கைதொழுதந்தப்புட்பகமேறிக்கடிதிற்போய்
வையமளிக்கும்பொன்முடிபெற்றான்மகிழ்பெற்றான்
சைவமணக்கசிந்தைதிருத்தித்தனிநின்றான். (௧௬)

ஐம்பதிரட்டிக்கும்பரியாகமருளிற்செய்
தும்பர்வணங்குந்தற்பரனைத்தன்னுளம்வைத்துக்
கம்பலைமுந்நீர்வையமளித்துக்கடைசெல்லாச்
செம்பதுமத்தாடன்னுடுமுன்னைத்திதிபெற்றான். (கள)

இராமாவதாரச்சருக்க முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௨௦-இு திருவிருத்தம். ௨௬௬அ.

## ௨௧-வது. பலபத்திரராமாவதாரச்சருக்கம்.

பின்னருமன்னன்வசுதேவற்குப்பெரிதந்நா
ளுன்னுதவத்தினுரோகணிதன்பாலுதயஞ்செய
தின்னருளோடும்பலபத்திரனென்றிடுபேரா
றன்னிலமுற்றும்மன்பின்வழுத்துந்தலைநின்றான். (க)

எந்தைபிரானைச்சேவடிபூசித்திகலேறாய்
வந்திடுபோராலசுரரையெல்லாமடிவித்தா
னுய்ந்திடலெண்ணித்தன்னிலையோகத்துடனின்றான்
சிந்தனைமுற்றித்தன்னுறுகதியிற்சென்றுற்றான். (௨)

பலபத்திரராமாவதாரச்சருக்க முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௨௧-க்கு திருவிருந்தம்-௨௬எ௦.

## ௨௨-வது. கிருஷ்ணவதாரச் சருக்கம்.

வாசநறுந்தார்மாலைத்துளவோன்வசுதேவற்
கேசில்குணத்தாடேவகிதன்பாலெதிருநறுப்
பேசுலகுக்கோர்கண்ணனெனும்பேர்பெறநின்றான்
பூசலொழித்துத்தன்கடன்ஞாலம்புரவுற்றான். (௩)

பன்னுதவத்தோனுபமன்னியனைப்பணிவுற்றுப்
பொன்னவிர்வேணிக்கன்புபுரிந்தப்புயல்வண்ண
னன்னிலைநின்றானர்ச்சனைசெய்தானவையற்றான்
சென்னிலைபற்றிசெய்வனயாவுஞ்செயமுற்றான். (௪)

பஞ்சவரோவத்தா துநடந்தப்பகையோனை
யெஞ்சமுடிக்குந்தன்மையினின்முனிவியாருந்
துஞ்சினபின்னர்த்தன்பதமுற்முன்றுரிசற்முன்
செஞ்சடையோனைத்தாளிணையின்னுந்தெரிசிப்பான். (௫)

கிருஷ்ணவதாரச்சருக்க முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௨௨-று திருவிருத்தம் - ௨௬௭௫.

## ௨௩ - வது. மாயன்வரம்பெறு சருக்கம்.

கலிவிருத்தம்.

பைந்துழாயவன்பத்தவதாரத்தி
னைந்தருட்பெற்றதின்மையறிகுவான்
சிந்துரத்தவுரிவிழிதிண்மருப்
புந்தெதலும்போடணிந்தனனுத்தமன். (௬)

சக்கரங்கரந்தாங்கியநாயக
னுக்கிறந்தனனாயினுமுள்ளருட்
புக்கசத்தியழிகலன்பொங்கொலி
மைக்கடற்புவிகைதொழவைகுவான். (௭)

செய்யநாண்மலர்த்தாமரைச்செங்கணன்
வையமேழ்தொழவாமனனாகியே
யுய்திறந்தந்துபேந்திரனென்றபோ
பொய்யில்கேள்வியினேடும்பொருந்தினன். (௮)

ஆயகாலையிற்குல்லையலங்கலோன்
மேயவைகுண்டநாட்டகமேயினன்
காய்கதிர்சசெங்கவுத்துவனைத்தொழப்
போயிருந்தனனங்கதுபோழ்திடை. (௯)

கண்ணுவப்பெயர்மாமுனிகார்மழை
வண்ணனைக்கண்டுவாழ்த்திடவேண்டுவா
னெண்ணியெய்தினனீங்கிவர்நோக்கினு
ருண்ணெகிழ்ந்தவர்க்கொன்றும்விளம்பலர். (௧௦)

ஈதுநோக்கியெரிந்தெழுசிந்தையான்
காதுசிந்தையக்கண்ணுவன்கண்ணுதன்
மாதுபாகன்வழித்தொண்டனென்றனைத்
தீதுசெய்திகழ்ந்தினைச்செப்பினன். (௧௧)

மாயநீயுமறிதிரைமாநிலத்
தாயசென்மமளவறவெய்தியே
யேயவூமரிஞதியென்றேயினுன்
சேயபங்கயச்செல்வியைக்கண்ணுரு. (௧௨)

என்னைநீயுமவமதித்தாயினி
மின்னிலங்கொளிமாண்டுறவெஞ்சுரக்
கன்னிமானெனப்போதியென்ருன்கணத்
தின்னதன்மையராயினரீங்கிவா. (௧௩)

உருத்துநோக்கியுபேந்திரன்றன்னையும்
விருத்தவேடுவஞதியவவெவ்வனத்
திருத்தியென்றனன்றன்னுழையேகிஞன்
மருத்துழாயினன்றன்மைவூழங்குவாம். (௧௪)

அத்தனைக்கமலாலயத்தெய்தியே
சித்தமொப்பவருச்சனைசெய்தனன்
மத்தமாகரிப்போர்வையன்வந்துற
நத்தணிந்தகைநாதன்வணங்கிஞன். (௧௫)

உள்ளநெக்குவிட்டென்புமுருகிஞன்
வெள்ளவாரிவிழிவழிசிந்திஞன்
பிள்ளைநாண்மதிவேணிப்பிரானவற்
கெள்ளிலாவமினிதளித்தானரோ. (௧௬)

என்னைவேண்டியெமையருச்சித்தனை
நின்னகத்துளவேட்கைநிகழ்த்தெனப்
பொன்னலங்குபுனையுடைப்புங்கவன்
கன்னிபாகறகினையகமுறுவான். (௧௭)

கண்ணுவப்பெயரோனெனைக்காய்சினத்
தெண்ணஞுதசெனமெடுத்துநீ
மண்ணகத்திழியூமரின்வைகென
வுண்ணெகிழ்ந்திரங்காதிவையோதிஞன். (௧௮)

யானுடைப்பெருந்தேவியையின்னிள
மானினத்தொடுபோகவழங்கிஞன்
ருனநீங்கியுபேந்திரன்றன்னையு
மீனவேடுவஞதியென்றேயிஞன். (௧௯)

ஓதுசாபமொழிந்திடவேண்டுவே
னீதளித்தியென்ருனியன்மாதவ

னாதிநாதனவையுணர்ந்தானரோ
தீதில்சிந்தைநெகிழ்ந்தருள்செய்குவான். (௨௰)

கண்ணருந்தவக்கண்ணுவற்கூயிவற்
கெண்ணரும்பிறப்பாகவென்றேயது
நண்ணரும்பிறப்பொன்றெனநல்கெனத்
தெண்ணிலாவணிவேணியன்செப்பினான். (௨௧)

சிந்தையொத்தவனங்ஙனஞ்செப்பலு
நந்துமேயநளினகரத்தினான்
மைந்தனிற்சிவமாமுனிப்பேரொடும்
வெந்தழற்சுரத்தூமரின்மேயினான். (௨௨)

அவ்வனத்திலுபேந்திரனாமவன்
வெவ்விராதகுலத்தொடுமேயினான்
நவ்வியொத்ததண்டார்மனைநங்கையுஞ்
செவ்வியிற்றமசிந்தைதெருண்டிரால். (௨௩)

காலமிங்ஙனமெண்ணில்கடந்தன
சீலமோர்ந்தசிவமுனிதன்னெதிர்
கோலமான்பிணைசென்றுகுறுகலா
லாலுமாதவனங்கெதிர்நோக்கினான். (௨௪)

நோக்கநோக்கிலம்மாப்பிணைநோக்கினா
லாக்குதன்னுட்கருப்பமுண்டாயதாற்
றுக்குவேடர்கிழங்ககழ்தாழ்குழிப்
போக்கிலந்தபபுனப்பிணையீன்றதால். (௨௫)

ஈன்றுவீழ்ந்ததைநோக்கியதெம்மினம்
போன்றதன்றெனப்போயதப்பொற்பிணை
தோன்றுபேந்திரவேடன்றொடுத்தெடுத்
தான்றசாரற்குடிலகத்தண்மினான். (௨௬)

கானவேலிக்கவலையகழ்ந்தெடுத்
தானபள்ளங்கிடந்ததிவ்வாரணங்
கேணவானவர்மங்கையரீன்றதோ
தேனருமலர்ச்செல்விகொலோவெனா. (௨௭)

அயிர்த்தசிந்தையனங்கவனாசையான்
மயிற்குலங்களெனவளர்த்தானிளங்
குயிற்கொழுங்குதலைக்கொருகோலமா
னுயிர்த்தவள்ளியென்றோர்பெயரீந்தனன். (௨௮)

இன்னதன்மயவேலப்புரிகுழ
லன்னமென்னடையாளையலங்கலை
மின்னிருங்கதிர்வேலவற்கீதலாற்
சொன்னசாபந்துடைத்தனாமூவரும். (௨௯)

ஈதொர்காலமிதுகழிவுற்றபின்
மாதொர்பாகனைமாயன்மனக்கொளா
வோதுநல்வரமோரிரண்டெய்துறத்
தீதில்சிந்தையினெண்ணஞ்சிறந்தனன். (௩0)

அந்தநல்வரமெண்ணினனம்பியே
கந்தமாதனத்தெய்தியகணணுதல்
செந்தனித்துணைத்தாண்மலாசிந்தியாக்
கொந்தலர்க்கொண்டருச்சனைகோட்டினன். (௩௧)

ஈறில்காலமிருந்தருச்சித்தபி
னேறுகைத்தருளெந்தைபிரானவற்
கூறுமன்பினெழுந்தெதிருற்றனன்
மாறிலன்பொடுமாயன்வணங்கினன். (௩௨)

எய்தியெந்தையெனக்கெதிருற்றுறச
செய்தமாதவமேதுகொறெண்ணிலாப்
பெய்தமென்பிறைப்பிள்ளையணிந்தரு
ளையனேயென்றடிக்கடிபோற்றினன். (௩௩)

நீலகண்டனிலாவணிவேணியோன்
மாலைநோக்கிமகிழ்சிறந்தானெமை
யாலுநாண்மலராலருச்சித்தனை
சாலவேண்டுங்கருத்தெதுசாற்றென்று. (௩௪)

அங்கைவார்சிலைக்கம்பெனலாகவுஞ்
செங்கணேறெனச்சேவடிதாங்கவும்
பொங்குவேட்கைபொருந்தினின்றேனென
வெங்கணுதனவற்கியைந்தீந்தனன். (௩௫)
30

மாயன் வரம்பெறுசருக்க முற்றிற்று.

---

ஆகச்சருக்கம் ௨௩-இற் திருவிருத்தம் ௩0௧0.

---

## உசு-வது. நரகாசுரன்வதைச்சருக்கம்

இன்னுமோர்கதையுண்டதிசைக்குது
மன்னுநான்மறைமாதவத்தந்தணீர்
சொன்னவாறுதொடர்ப்பொடுகேட்குதி
ரென்னவார்சடைச்சூதனியம்புவான். (க)

நானிலந்திருநங்கைபயப்படவுன்
டானவோரநரகாசுரனென்பவன்
கானநாண்மலர்ச்செல்வனைக்கைதொழா
வேனைநாளுமருந்தவமேற்றினன். (உ)

யாவராலுமியற்றருமாதவம்
பாவகத்தொடுநின்றுபயிற்றலாற்
பூவினன்முகப்புங்கவனெய்தினன்
றேவதேவனென்றேத்தினன்றீமையோன். (ங)

நாளநாண்மலர்த்தாமரைநாயகன்
வாளெயிற்றுநிருதனைவம்மென
மூளுமாதவமுற்றுமினைழத்தனை
நீளநின்றநினைவுநிகழத்தென. (ச)

வையம்யாவுமெனக்கெனவானவா
செய்யுமேவலெனக்கெனச்சீறியோர்
மொய்யமர்க்களம்பின்னிடமுன்னினே
னையனேயிவையன்றியுமுண்டெனு. (ரு)

என்னைவெல்வதெறிமழுவானவன்
பன்னுநான்மறைப்பாற்கடற்பள்ளியோ
னின்னரோருருவெய்திமற்றல்லவா
துன்னமர்க்களந்தோற்றிடவேண்டினேன். (சு)

என்றெடுத்துநிருதனியம்பலு
மன்றலங்கமலாலயவானவ
னன்றுனக்கிதளித்தனநாமென
வன்றளித்திகலன்னமுகைத்தனன். (எ)

பெறலருந்திருப்பேற்றுடன்மீண்டன
னறனழித்துள்ளருளுந்துறந்தனன்
மறலியஞ்சிமனந்துணுக்குற்றுறக்
குறைவிறீமைக்கொடிதிழைத்தானரோ. (அ)

வையம்யாவும்வயப்புலிவாய்ப்படப்
பெய்தவாவிற்பெரிதுழந்துற்றவாற்
கையறுந்துயரக்கடலாழ்ந்தன
வெய்யவற்கும்வெருக்கொளவெம்புவான். (௯)

கவைநெடுஞ்சினைக்கற்பகநாடரு
மிவையுணர்ந்துயிர்ப்பின்றியிருந்தன
ருவரியாடையுலகருளெண்மருந்
துவருநாவினர்நெஞ்சத்துணுக்கினர். (௧0)

கள்ளுயிர்த்தலர்கற்பகநாயக
னுள்ளுயிர்ப்பினொடுக்குமிடுக்கினன்
வள்ளெயிற்றுநிருதன்வழங்குறக்
கொள்ளுமேவறன்கோமுடிக்கொள்வனால். (௧௧)

இப்பெருந்தவமீந்தருளந்தணன்
வெப்பெழுந்துவெருவுமனத்தனு
மெப்பெருந்துயரொம்முறைச்செய்வனென்
றப்பரந்தலையெணணியடங்கினன். (௧௨)

ஈங்கிவன்செயலிப்பரிசாகவு
மோங்குவெண்குடையாலுலகோம்புவான்
றேங்குபேரொழித்தேவகிபாலக
னுங்குணர்ந்தவன்பாலமர்க்கண்மினன். (௧௩)

சென்றெழுந்தமர்சேனைத்திரளெலா
மன்றுபஞ்சினெரியெனலாக்கினு
னின்றுடற்றுநெடுமழைவண்ணனு
மொன்றுமாவதன்றாலெனவோடினன். (௧௪)

ஈண்டுசேனையளவறவீட்டியே
மீண்டுமன்னவன்பாற்படமேயினு
னீண்டகோலநெடுமழைவண்ணனு
மூண்டவெஞ்சமாமுற்றியுடற்றினன். (௧௫)

கூற்றமன்னகொடுஞ்சினத்தானவ
னேற்றெழுந்தமராடலியற்றினு
னாற்றருந்திறற்சேனையடங்கலுங்
காற்றெழுஞ்சுழல்பூளையிற்காட்டினன். (௧௬)

முற்றியிப்படிமூவெழுகாலமர்
பற்றியிற்றனன்பாப்பணைப்பள்ளியா

னெற்றுகாலன்றிசையளவோடினு
னிற்றதண்டமெனநகைத்தானரோ. (௧௭)

காலமாமுகில்வண்ணனைக்கண்ணனை
நீலமேனிநிருதனெடுங்கடன்
ஞாலமெங்குந்தடவிநடந்தன
னுலகாலமெனவெகுண்டானரோ. (௧௮)

அன்னவன்றனக்கஞ்சியசைந்தெழும்
பின்னல்வெண்டிரைவெள்ளப்பெருங்கடற்
றுன்னருங்கட்டுவாரகையென்றொரு
மன்னுமாநகர்வைகிமறைந்தனன் (௧௯)

ஆயமாநகர்வைகலரிதெனப்
போயிருந்துமைநாகப்பொருப்பிடைப்
பாய்விடைத்தனிப்பண்ணவற்பூசியாச்
சேயகாலமொழித்தனன்செங்கண்மால். (௨0)

மங்கைபாகன்மழைமுகில்வண்ணன்பாற்
செங்கணேறுகைத்தாங்கெதிர்சென்றன
னங்கரம்புடைத்தானெழுந்தாடினன்
பொங்குபேருவகைக்கடல்பூத்தனன். (௨௧)

தேவர்சிந்தனைமுற்றினதிண்புவி
மேவுபல்லுயிர்வாழ்ந்தனவேயெனப்
பாவைபங்கன்படர்சடைநாயகன்
சேவடித்தலஞ்சென்னிவைத்தானரோ. (௨௨)

மாற்றரும்புரம்வாணகைத்தீயினு
னீற்றுநம்பனிலாப்புனைவேணியோற்
போற்றிநின்றவற்கண்டெமைபூசனை
யாற்றிநின்றனையென்கொலறைகென. (௨௩)

நன்னுதல்புடையோய்நரகாசுர
னென்னுமோரசுரற்கிறையிந்நிலத்
தின்னல்செய்தொழிந்தானலனீர்ந்தருப்
பொன்னகர்க்குமிடுக்கண்புரிந்தனன். (௨௪)

அவனைவெல்வதரியொடுவெள்விடைச்
சிவனுமோருருக்கொண்டெனச்செப்பினு
னிவருமோதிமமேறியுகைத்தரு
ளுவர்முகக்கமலாலயத்தொல்லையோன். (௨௫)

என்றுகூறியின்றென்னெடுமெம்பிரா
னென்றிமேவினுவினைமுடிக்குவ
மன்றலந்துளவோனடிவாழ்த்தினான்.     (௨௬)

கேட்டபோழ்திற்கருணைகிளைத்தெழ
வாட்டடங்கண்மருங்குடைவானவன்
றோட்டலங்கற்றுழாயவற்கீந்தனன்
மீட்டுமீட்டுந்தொழுதுளம்விம்மினான்.     (௨௭)

அற்றைநாளினலங்கற்றுழாயினன்
முற்றுவெஞ்சினத்தாரமாமுன்னினான்
றெற்றெயிற்றுநிருதனைத்தேடினான்
பெற்றகாலைவிளைந்ததுபேரமர்.     (௨௮)

**கலிநிலைத்துறை.**

தண்டுசுற்றினாநடஞ்சிலைகுனித்தனாசரங்
கொண்டுருத்தனாநெழித்தனாகுதித்தனாகுலாய்
மண்டமாககளமடுத்தனரடுத்தனாவயத்
திண்டிறறபடைவிதிர்த்தனர்செருத்தலைவரே.     (௨௯)

காலிழந்தனாகரங்கடுணிபட்டனர்கடா
வேலொடுங்குருதிசிந்தினர்விளிந்துவிழுவார்
சூலொடுந்தொடாரக்காபடைசென்னிதுணியப்
பாலெழுங்குருதியத்தலைவர்கண்டுபடாவார்.     (௩௦)

சேனைபட்டனசினக்கதமதச்சிறுகண்மால்
யானைபட்டனவெழுந்துகளடற்புரவியந்
தானைபட்டனதராதலமதிக்கவருதேர்
மோனைபட்டறமுடிந்தனபொடிந்ததுலகம்.     (௩௧)

பாரதிர்ந்தனபருப்பதமதிர்ந்தனபணிக்
காரதிர்ந்தனகருங்கடலதிர்ந்தனகதிர்த்
தேரதிர்ந்தனதிகந்தமுமதிர்ந்தனதிறற்
போரதிர்ந்தெழவதிர்ந்ததுபசும்பொனுலகம்.     (௩௨)

**சக்கரத்தொடுதெறித்தனதடங்கவிகையற்**
**றுக்கிழிந்தனகொடித்திரளுலப்பினெடுவேல்**
**புக்கிறந்தனர்பறந்தலைபுனற்குருதியாற்**
**செக்கரிற்றிடைவிழுந்தனகிடந்தசிவனும்.**     (௩௩)

கண்டெறித்தனர்கருந்தலைதெறித்தனர்தசைப்
புண்டெறித்தனர்பசுங்குருதிபொங்கிமிர்வார்
மண்டைவிட்டிடவழிந்தொழுகிமூளைசிதறத்
துண்டமிட்டனரொருத்தரையொருத்தர்தொடர்வார். (௩௪)

உருவியோடுகணையாயிரவருடுருவுறத்
துருவியோடுவனபல்படைதுணிந்துசிதறிப்
பொருவுடுக்குலமெனப்புடைதெறிப்பபுடைபோய்ச்
செருமுகத்தலைவர்சென்னிசிதறச்சினவுமால். (௩௫)

ஈறுபட்டனநிசாசரனெடுத்தவநிகங்
கூறுபட்டனகொழுங்குடர்கிழிந்ததுயிர்போய்
வேறுபட்டனபெருங்குருதிவெள்ளமலைபொங்
காறுபட்டதுநடந்ததுதிகந்தமளவும். (௩௬)

பொறிவரிப்பணநிழற்படுபுயங்கவணையா
னெறுழ்வலிப்புயவரக்கனையெதிர்ந்துமறல
மிறிதழற்சுலவுசக்கரவயப்படையிறை
றெறுசினத்தவன்முடிததலைதெறித்ததுலகின். (௩௭)

வானமங்கையருமங்கலகளந்தடவினு
ரேனைவானவர்மலர்ப்புயலிறைத்தனர்களான்
மாநிலத்தறம்வளர்ந்ததுமகத்தலைவனுக்
கானவெண்குடைநிவந்ததுவியந்தவனி. (௩௮)

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

காளங்கறுத்தமணிகண்டக்கடவுளொருபாற்பகுந்திருப்ப
மூளுஞ்சமரினெதிருடற்றின்முடியாதனவுமுடியாவோ
வேளும்புரமுமடலைபடவிழித்துநகைத்தவெள்விடையோன்
முளங்கமலமரிபரவவருளிப்புகுந்தான்றடங்கயிலை. (௩௯)

வரிவண்டிரங்கித்துதைந்தாடுமடற்பூந்துளவமழைவண்ணன்
புரியும்புரிசைத்துவாரகையம்புரத்துபுகுந்தான்புரந்தரற்குப்
பரியும்பரிவுதலைநிமிரத்தனிக்கோல்வாழப்படரொழிந்து
விரிவெண்கவிகைமேனிழற்றவரியாசனத்துவீற்றிருந்தான். (௪0)

நரகாசுரன்வதைச்சருக்க முற்றிற்று.

---

ஆகச்சருக்கம் ௨௪-இ திருவிருத்தம் ௩௦௫௦.

---

## உரு-வது. திருமால் சிவார்ச்சனைச்சருக்கம்.

முன்னர்க்கழிந்தநெடுங்காலத்தொருநாண்முனிவன்றுருவாசன்
பின்னற்சடிலிகேதாரத்தெந்தைபெருமான்றிருக்கோயி
றன்னிற்புகுந்தப்பெருமானைச்சரணம்போற்றித்தனித்தொருபாற்
கன்னிக்கொருபாகற்குரியபூசையியற்றிக்கண்முகிழ்த்தான். (௧)

அதுகாலத்தினிருந்துளவத்தலங்கற்பெருமானலங்குநிலா
விதுவார்சடையோற்றொழவேண்டிவெங்காலெழுப்புமிருஞ்சிறைய
கதிர்வாளுகிர்க்காற்பெருங்கலுழக்கடவுளுகைத்துக்கதுமெனவங்
கெதிராவிழிந்துசினகரம்புக்கெம்மான்றிருத்தாண்முறைவணங்கி. (௨)

விரித்தமறைநூல்விதித்தபடிவழுவான்றிருத்தாள்வீழ்ந்திறைஞ்சிப்
புரித்தசடையோன்விடைவேண்டிப்போதுங்காலையாருமருங்கு
தரித்ததுருவாசனைநோக்கிவணக்கம்புரியான்றணந்தனனாற்
கரித்தமனனுமிருவிழியுஞ்சுழன்றுன்முனிவன்கடுஞ்சினத்தால். (௩)

அரனைவணங்குமருச்சனைமுற்றடைந்தகாலையருந்தவத்தோன்
விரவுசினமீக்கொளவெழுந்துவிரித்தபணவாயிரப்பாயற்
பரனையடைந்தானெம்மையவமதித்தாயினியுன்படர்சிறைய
வுரவுக்கலுழன்வீரபத்ரனவனாலிறப்பதுளதென்றான். (௪)

கற்றைச்சடிலக்குறுங்குஞ்சிவடுகக்கடவுணெடுஞ்சூல
நெற்றிதொளைப்பநிணச்சோரியொழுகநீயுநிலையழிவாய்
தெற்றுத்தாளவன்முலையதிருவுந்திருப்பாற்கடற்செல்வாள்
முற்றுமிவைகண்டருந்துயரமுழப்பாய்நீயுமெனமொழிந்தான். (௫)

மொழிந்துதிரிந்தான்றுருவாசன்முளரிபூத்தமுகில்வண்ண
னுழந்துதுயரினலமந்தானொழிப்பதெதுவென்றுளநினைந்தான்
பொழிந்தகருணைத்திருப்பவளப்பொருப்பைப்போற்றப்போமெனவுற்
றெழுந்துநடந்தான்றொழற்குரியதிருக்காளத்தியெனுமெல்லை. (௬)

சென்றுபவளக்கொடிவேணித்திருக்காளத்திச்சிவபெருமான்
மன்றன்முளரிப்பரிபுரப்பொற்றிருத்தாடொழுதுவலம்வந்தா
னன்றுதொடுத்தெம்பெருமானையவனதுவப்பினருச்சித்தான்
வென்றுபுரஞ்செற்றவன்சிலநாள்கழிந்தபின்னர்வெளிப்பட்டான். (௭)

ஒருவற்கியலாதியற்றியெம்பாலுறுபேரன்பின்வழிபட்டாய்
திருமித்தனநீயென்கொலெனநிமலனிகழத்தநெடியோனுந்
திருகச்சினத்தாற்றுருவாசனுரைத்தசாபத்திறனுரைத்தான்
கருணைக்கடலைத்திருநடத்தாற்சிவந்ததிருத்தாள்கைதொழுதான். (௮)

திருவுந்திருப்பாற்கடல்கடையப்பிறந்துநின்பாற்சேர்கவென
மருவுங்கலுழன்காசிபர்க்குமதலையாகிவடசயிலம்
பொருவுந்திறத்தானினக்குமுன்னேயூர்தியாகப்போர்வடுகன்
றருவெஞ்சினத்தான்மயங்குமயக்கொழியத்தகுவையெனச்சாற்றி. (௯)

சேவேறுயர்த்தபெருமானுமெழுந்துபுகுந்தான்றிருக்கயிலை
கோவேறடர்த்தபெருமானுந்துயரமொழிந்தான்கொழுங்குதலைப்
பூவேறளகமடந்தையொருபுடைவைத்தோனைப்பூசைபுரிந்
தேவேறியவிற்புயலனையான்பெறும்பேறின்னுமியம்புவாம். (௪0)

படர்பூஞ்சினையகற்பகத்தின்பசும்பொனுலகத்திமையவர்க்கு
மிடர்கீண்டிழைக்குந்தானவர்க்குமிகலுண்டாகவிமையோர்கண்
மடல்பூந்தாதுகொழித்திறைக்குந்துளவமோலிமாயவன்பாற்
றொடராநடந்தாமக்கெனவாமிடுக்கணனைத்துஞ்சொல்லலுற்றார். (௪௧)

வளைவாளெயிற்றுக்கொடுநிருதர்மறலமறலமலைந்திற்றே
முளைநாண்மதியமிலைந்தவனுன்முளரியவனுல்வரம்பெற்று
ரிளையாவருந்தியிவர்க்கிடைநின்றிடைந்தேமினிநீயெமதுவினைத்
தளையாரறுத்துவருந்தலிறொன்றருளவேண்டுமெனத்தாழ்ந்தார். (௪௨)

பாந்தளேந்தும்பொறிப்பாயற்பள்ளிப்பெருமாளிவர்பரவச்
சேந்தமுளரித்திருநயனக்கருணைபெருகிச்சென்றநாள்
வாய்ந்தபெருமாதவத்தலைவன்றதீசியொடும்போர்மலைந்தான்று
தேய்ந்துதிகிரிமுனைமடிந்தசெயலோர்ந்தவர்க்குச்செப்புதலும். (௪௩)

பங்கேருகத்துப்பழமறையோன்பசும்பொனாட்டுப்புத்தேளிா
செங்கேழ்முளரித்திருமடந்தைக்கிறைவாவதற்கோசெயலுண்டாற்
கொங்கேரிதழிமவுலிசலந்தரனைசசெகுத்தகொடுந்திகிரி
யங்கேயவன்பாலுளததனையெமக்காயிரப்பினருள்செய்வான். (௪௪)

ஆதுகொடுநீயசுராகுலமனைத்துமுடிவானமருடற்றித்
தீதுதீர்த்தியெனவிரந்துசெழுஞ்சேவடியின்முடிதாழ்ப்ப
மாதுமருமத்தவனுடனங்கெழுந்துகாஞ்சிமாநகரம்
போதல்புரிந்தானந்நகரத்திருந்தானரனைப்பூசித்து. (௪௫)

பூவாயிரந்தோட்டிருங்கமலப்போதாயிரத்தால்வழிபட்டா
னுவேறுயர்த்தோனிவனிலைமையறிவானொக்கியக்கமலத்
தோவாவொருபூக்கிடையாதுவருந்தப்புரிந்தானொருநாளிற்
றேவாதிபன்றாட்கொருநயனமலரிற்சாத்திக்குறைதீர்ந்தான். (௪௬)

துளிக்குமதுப்பூந்தாதிதழித்தொடையன்முடியோன்றொல்லையுமி
ளிக்கும்பெருமானிவன்றேடற்கரியானிவற்கன்றுரியோனுய்க்

களிக்குமழுவேறுகைத்தருளிக்காண்டற்கெளிதாய்ப்புலப்பட்டான்
வெளிக்குவெளியாய்நிரந்தரமாய்நின்றான்றன்மைவிளம்பவற்றோ. ()

எந்தாய்போற்றியெமைப்புரக்குமிறைவாபோற்றியெவ்வுலகுந்
தந்தாய்போற்றியென்பசைக்குந்தாராய்போற்றிதமியனெதிர்
வந்தாய்போற்றியுயிர்க்குயிராய்வருவாய்போற்றிதொண்டருளச்
சிந்தாகுலந்தீர்த்தருள்புரியுஞ்சிவனேபோற்றிபோற்றியவே. (௧௮)

என்னப்போற்றிமுடிபடிதொட்டிழுகபபணிந்தானெழுநோக்கி
மின்னுசசடையோன்றிருவருள்கூர்ந்துருகாநின்றான்விழுக்கமலக்
கன்னிக்கிறைவன்கருததுணர்ந்துகதிராயிரம்போன்றொளிபரப்பும்
பொன்னந்திகிரிபுரிந்துபின்னுமெறுவேணடியதுபுகலென்றான். (௧௯)

நின்பாலுருகினெடிக்கீழ்நெடுங்கண்சாந்துநிலையுலக
மின்பாலறிவாமெனக்கிருகணம்போருந்தினருள்கென்றான்
மின்பாலுகந்தோனஃதருளிவேண்டவேண்டும்வரங்கொடுத்தான்
பொன்பான்மருமத்திகிரியினுனடைந்தானமரர்புடைபோற்ற. (௨0)

அன்றுமுதலாக்கமலாக்கனெனும்பேரடைந்தானுடசமாக
குன்றமனையபுள்ளூகைத்துவிண்ணுட்டமராகுறைமுடிப்பான்
கன்றுசினததினசுராகிளைமுடியமுடித்தான்கடிகமழு
மன்றறறுளவோனஃதொன்றேவிண்ணுமவன்சீரவழுங்குவாம். (௨௧)

கலிநிலைத்துறை.

வளைமுழக்குறுவான்சிலைமழுவிடைப்பரனைக்
கிளைபடட்டரன்புளங்கிளைத்தனனுகி
யுளைதிரைப்புனற்பொன்னிநாட்டகவையினுற்றுன்
றளைமலாக்கரந்தொடுத்தெடுத்தவனடிதாழ்ந்தான். (௨௨)

வள்ளைவாகுழைமடவரலொழித்தனன்வழாது
கள்ளவிழ்ந்தலாபஙகயக்கழலிணைகருதித்
தெள்ளுதேமலரருச்சனைவரன்முறைதிளையா
வுள்ளமெக்குடைந்தேத்திநின்றுருகினனெடுநாள். (௨௩)

திருவினாயகனவ்வழியருச்சனைதிருத்தக்
கருமணிக்களத்தெம்பிரான்கருணைமீக்கூர்ந்து
பொருவிடைப்புறத்தினிதெழுந்தருளினன்புகுந்தான்
குருதிவெண்ணிணத்திகிரியானிருகரங்குவித்தான். (௨௪)

நெகிழ்த்தசிந்தையனனந்தநீர்பொழிகண்ணன்
முகிழ்த்தகையினன்குழறியநாவினன்முழுக்கத்

தொகுத்தவன்பினனிற்றலுநோக்கினன்றூயோன்
பகுத்தசிந்தனையெதுகொன்மற்றுரையெனப்பணித்தான். (௨௫)

ஈசனம்முறையருடலுமீர்ந்துழாயலங்கல்
வாசமார்பினனடிக்கடிதொழுதனன்வகுப்பான்
கூசுமென்குதலைத்தனிக்குழவிமோந்தெடுக்கு
மாசையுண்டஃதருளுதியெனக்கெனவறைந்தான். (௨௬)

நன்றுசொற்றனைநல்குதும்யாமெனவருளி
மன்றல்வார்தொடைவானவரியாரினும்வயங்கா
நின்றபேரெழிலெவரினுநின்மகறகுவமை
யின்றெனப்புரிந்தளித்தனமேகுதியென்றான். (௨௭)

அறிந்தசிந்தனையலமரவெகுண்டனளசலந்
செறிந்தமென்கொடிசிவனிவற்கருளியசெல்வன்
பிறந்தஞான்றிறந்தொழிந்துறவிசைத்தனள்பெருந்தார்
நறுந்துழாயவன்றன்னுளந்திகைத்தனனெடுங்கி. (௨௮)

தேங்குகங்கையந்திருமுடிச்செல்வனைச்சிறைவண்
டேங்குபூங்குழற்கௌரியையிகலறமுருக்கி
யோங்குசூர்தடிந்தெழுந்தருள்பிள்ளையையொருங்கே
யாங்குநின்றடிபணிந்தனனருச்சனையயர்ந்தான். (௨௯)

பேதையங்ஙனந்திருவருட்பிறந்தனளாகிச
சீதரற்குவந்தெதிரெழுந்தருளினள்சென்றாண்
மாதியாமனைவரவெதிர்கண்டனன்மகிழ்ந்தா
னேதுதீதொழிந்தருந்தவத்துறுபயனடைந்தான். (௩௦)

இனியுனக்கெனவொருதனிக்குமரனையீந்தேங்
குனிசிலைக்கரும்பைங்கணைநறுமலர்கொடுத்தேம்
புனிதவானவர்யாரினும்பேரெழில்புரிந்தே
முனிவினின்றிடுசாபமற்றவன்றனைமுடிக்கும். (௩௧)

கற்றைவார்சடையெம்பிரான்கதுவியசினத்தா
னெற்றியந்தழனின்மகன்றனதுடனீறறப்
பெற்றிறக்குமற்றங்கவன்றேவியாற்பின்னர்
மற்றரூபியாயாங்கவட்குரூபியாய்வழங்கும். (௩௨)

என்றிமாசலைவரனுவந்தளித்தனளிதுபெற்
றன்றுபோயினனிருஞ்சிறைப்புட்கொடியமலன்
சென்றுவேனிலாற்பயந்தனள்மைந்தனிற்சிறந்தான்
குன்றவில்லிதாளருச்சனைப்பெருமையார்குணிப்பார். (௩௩)

இறந்துநாள்பலகழிந்தனவீங்கிதற்பின்ன
ரறந்தருங்கமலாலயத்தரிபுகுந்தடைந்து
மறந்தருங்கொலைமழுப்படைவானவற்குறித்துச்
சிறந்தசிந்தையினருச்சனைபுரிந்தனன்சிலநாள். (௩௪)

இலங்கிழைக்கொருமருங்களித்திருந்தருளெம்மா
னலங்கலந்துழாய்மாயவற்கவணெதிரடைந்தா
னலங்கொள்சிந்தனையருச்சனையுவட்பினனயந்தேம்
பொலங்கொணேமியாய்வேண்டுவபுகலெனப்புகன்றான். (௩௫)

பொன்னிநாட்டகத்திந்திரன்முதலினோர்பொரும்போ
ரின்னலீட்டுவாளசுரராலிடைகுவதெண்ணி
யன்னவர்க்கெனநிருதரோடாரமராறறப்
பின்னிடப்பொருதலைத்தனைதீனைப்பெருவரத்தால். (௩௬)

உட்புலப்படாமாயையினடுசமருடற்றிக்
கட்புலப்படாதொறிடைகாண்பனவல்லால்
விட்புலம்புகுந்துழக்குவாவிண்ணவாவெருவ
வெட்குலக்குவையெண்ணினுமெண்ணருந்திறத்தார். (௩௭)

ஆயமாயையினுங்கவருடற்றுவதழிக்க
மாயையாவையுமென்னுழைவழங்குதிவழங்கிப்
போயவர்ச்செகுததிடுதியென்றெமக்கருள்புரிவா
யேயகாரணமீதெனச்சீதரனிசைத்தான். (௩௮)

சங்குதாங்கியோனுரைத்தனதிருச்செவிசாத்தி
யெங்கணுயகனுங்கவறகினிதுளமிரங்கிப்
பொங்குமாயைமற்றியாவையுமவற்கெனபபுரிந்தான்
செங்கண்மான்முகின்மாயனென்றொருபெயர்சிறந்தான். (௩௯)

காலநேமியேமுதலியவசுரரைக்கடிந்து
மூலமீறறமுருக்கினனொருதனிமுகுந்தன்
வாலிளம்பிறைக்கண்ணியோனருளியவரத்தா
லோலமிட்டுநின்றழைத்ததாலிமையவருலகம். (௪௦)

ஆலகண்டனையரீச்சுரத்தருச்சனையயர்ந்து
மூலநாயகன்றிருநடமுன்றிலின்முன்ன
ராலிருந்தொனிதருமுழவிரட்டுறவடைந்தா
னீலமேனியன்பெற்றனபெற்றதார்நிகழத்தின். (௪௧)

திருவெண்காட்டிடையருச்சனைபுரிந்தனன்றிருமால்
கருகுகண்டனைக்கட்புலத்தெதிருறக்காணு

வுருகுசிந்தையான்மண்ணுறப்பணிந்தனனுமையாண்
மருவுபாகனீவேண்டியதென்னெனவலித்தான். (௪௨)

முத்தொழிற்குநீமுதன்மையனாயினைமுடிக்கு
மத்தொழிற்குளோர்தொழிலெனக்காக்கினையைய
சித்தநீமுனிந்தழித்துறினுலகொடுஞ்சிதைவே
னைத்திறத்துநீயளித்திடப்பிறந்திறந்திளைத்தேன். (௪௩)

ஈண்டியாணினிப்பிறபபொடுமிறப்பிணையிகழ்வான்
வேண்டிநின்றனனின்பதத்தொடுங்குறவிழைந்தேன்
காண்டருந்திருக்கண்டகண்டவினைகாணா
மீண்டுமீண்டுபுக்கிறந்திடாதருடரவேண்டும். (௪௪)

என்னப்பன்னிநின்றிரந்தனனிருந்துழாய்முடியோன்
கன்னிக்கோபுரங்கொடுத்தவன்றிருவருள்காட்டி
யின்னற்சாகரத்திழிகலையினியெனவிரங்கிய
பொன்னற்கோசிகத்தவற்கெதிரிணையனடுகலும். (௪௫)

வளைத்தமாபெரும்பிரளயகாலத்துவயங்கி
முளைத்தநெற்றியந்தழற்கொடுகினதுடன்முருக்கி
விளைத்தவெண்பலியணிகுதும்விளங்குவெள்ளென்புந்
தளைத்தமாலையிற்புயத்தொடுஞ்சாத்துதும்பின்னா. (௪௬)

மருங்குவைகுசாருபமும்வழங்குதும்வழங்கி
யிருந்தகாலையில்யாமெனப்பெறுகுவையீற்றில்
வருந்தலென்றளித்தகன்றனன்மழவிடைப்பெருமான்
குருந்திருந்தவனருச்சனைவரன்முறைகொண்டான். (௪௭)

ஊழியிற்பலபோக்கினனருச்சனைக்குரிந்தாய்
வாழிநான்மலர்தொகுத்தனனெடுமழைவண்ணன்
சூழிமால்கரியுரிவையானசுரும்பெறிகூந்த
லேழைபாகனதிருப்பதத்தொடுங்கினனிப்பால். (௪௮)

திருமால் சிவார்ச்சனைச்சருக்க முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௨௫-க்கு திருவிருத்தம் ௩௦௯௮.

## ௨௬-வது. பிரமன் சிவார்ச்சனைச் சருக்கம்.

தயங்குவெண்பிறைக்கண்ணிபொற்றுண்மலர்பரவி
வயங்குநேமியோனடைந்தவாறுணாத்தனமலரோன்
முயங்குசிந்தையினன்பினுலருச்சனைமுயலாப்
புயங்கவேணியோனளித்திடப்பெற்றவாபுகல்வாம். (௧)

வடுகனோர்சிரங்கொய்தநாண்மம்மர்தீரத்தொழிவான்
கடுமிடற்றனைவணங்கியமமதையிற்கருங்கட்
கொடுநெடுங்குழைத்திலோத்தமைவகுத்தெழில்குறித்தா
னடுதடஞ்சிலையநங்கனாலெரிமெழுகானான். (௨)

காமமிக்கெழுந்தீன்றவளென்பதுங்கருதான்
வாமமேகலைகரந்தொடவரற்றினண்மாழ்கி
வேமனத்தொடும்வெருவினள்வெதும்பினள்வெள்கித்
தாமவார்குழல்சரிதரத்திருமுகஞ்சாய்த்தாள். (௩)

அக்கணத்தினப்பொழுதவைதிருவுளத்தடைத்து
முக்கணன்கணத்தலைவனைமுடுகுறமொழியக்
கைக்கடுஞ்சிலைவேடரிற்படாந்தனாகானாத்
திக்குநோக்கினனான்முகத்தயன்றனிச்சென்றான். (௪)

வெருவுஞ்சிந்தையனிருஞ்சிறைவெள்ளனமிழிந்து
பொருதடஞ்சிகைச்சுபாரிசமெனுங்கிரிபுக்கான்
றிருகுவெஞ்சினவேடனைநினைதொறுந்திகைப்பா
னொருவிநீங்கலனக்கிரிநாள்கழித்தொழிந்தான். (௫)

கண்ணுதற்றனிப்பரமனைக்கருத்துறவணங்கி
வண்ணநான்மலர்த்தொகுதியானருச்சனைவகுப்ப
வண்ணலோதிமத்தவற்கெனவாளுடையமல
னெண்ணருங்கணத்தலைவரோடாங்கவணெதிர்ந்தான். (௬)

எதிரநோக்கினனிருங்கமலாலயத்திறைவன்
முதிருமன்பினோடஞ்சலித்திறைஞ்சினன்முழங்கி
யதிதரும்புனல்வேணியோனாங்கவற்குறித்து
விதிநினைந்தனவிளம்புதியென்றலும்விரிஞ்சன். (௭)

புருவவார்சிலைத்திலோத்தமையெனுமவள்பொருட்டா
லுருகுசிந்தையனாகிமாலுழப்பதொன்றொழியே
னருகுசேறலுநின்னுடைக்கணத்தவரடைந்தார்
வெருவியோடியன்றிப்பொருப்படைந்தனன்வினையேன். (௮)

அக்கணத்தவரொனையடைந்துருத்துருதருளி
மைக்கருங்குழற்றிலோத்தமைவனமுலைமருவட்
டுக்கசிந்தையாலெய்தியபாதகம்போக
வொக்கநோக்கிநின்றெனக்களித்தருளெனவுரைத்தான். (௯)

கேட்டநல்வரம்யாவையுமளித்தனன்கிரியிற்
பூட்டிமுப்புரமெரித்தவன்கயிலைபோய்ப்புகுந்தான்

ரேட்டிருங்கமலாலயச்சதுமுகத்தொல்லோன்
மீட்டுவந்தனன்றன்னகரினிதுவீற்றிருந்தான். (௧0)

நாத்தனவ்வரமளித்தலுநாளநாட்கமலப்
போதன்முன்னையமூவரினன்னலம்பொருந்திச்
சீதவார்குழற்பிறரிடைசிந்தனைசெல்லா
னேதிலெம்பிரானருச்சனைமறந்திலனின்னும். (௧௧)

கலிவிருத்தம்.

பதுமபீடிகையிருந்தளித்தபண்ணவ
னதுபொழுதின்னுயிரனையவாணிபாற்
புதுநலநுகர்ந்தனன்புணர்ந்தகாலையிற்
கதுமெனப்பிறந்தனர்கணக்கின்மைந்தரே. (௧௨)

அளவறப்பிறந்தவரசுரராதலின்
விளைசினத்தவருயிர்செகுத்துவீழ்த்தின
னுளவிருப்புடனுவந்தளித்தமைந்தரைத்
திளைசினத்தொறுத்தலாலடைந்ததீமையே. (௧௩)

ஈன்றிடும்புதல்வரையாவியீரந்திடத்
தோன்றியபழங்கணுற்றுயரமெய்திறு
ஞன்றெழுபாதகத்தவலநீக்குவான்
மூன்றுகட்பரமனைப்பரசன்முன்னினன். (௧௪)

பரவுகாளத்தியுட்புகுந்துபண்டைநாட்
புரமெரித்தவனடித்தொண்டுபோற்றினன்
வரநதிநெடுமுடிச்சடிலவானவன்
விரைமலரவற்கெதிர்வெளிப்பட்டானரோ. (௧௫)

எம்மைநீவணங்கியதென்னினைந்தெனக்
கைம்மழுவானவன்கழறக்கேட்டபி
னம்மலர்க்கரங்குவித்திறைஞ்சியாரணச்
செம்மலர்ச்சதுமுகன்செப்புவானரோ. (௧௬)

பெற்றனன்புதல்வரைப்பெற்றபாலகர்
கொற்றவாளசுரர்தங்குலத்தராதலா
லிற்றுறமுடித்தனனவரையீங்கெனைப்
பற்றினதொலைவுறுப்பழியும்பாவமும். (௧௭)

ஆங்கவையொழிப்பதற்கையவேண்டினே
னீங்கெனக்கவையளித்திரங்கல்வேண்டுமென்

றேங்குபேரன்பினின்றிரப்பவோதிய
பாங்குறப்புரிந்தனன்விடையின்பாகனே. (௧௯)

என்னெனுமாணவமெழுந்துமீக்கொளப்
பொன்னவிர்பீடிகைக்கமலப்போதினான்
றன்னிலைகடந்தனனிருந்ததன்மையை
யுன்னருங்கணத்துவேள்முருகனோர்ந்தனன். (௧௧)

விளைக்கமலாலயத்திறையைமேயின
னுளைக்கரும்பிரணவத்துண்மையாதெனக்
குளைக்கழலறுமுகன்குறுகிக்கேட்டலு
நகைத்தலைக்குடுமியனுனென்றனரோ. (௨௦)

புடைத்தனனுச்சியிறபுழைவெங்காரகத்
தடைத்தனனிவனினுமகிலம்வல்லுயிர்
படைத்தனனநயனங்கழிந்தபற்பகல்
மடற்பொதிமலரினான்வருந்தன்மேயினன். (௨௧)

தொடுபடைமுததலைச்சூலியோர்ந்து
விடுதலைப்புரிந்தனன்விரிஞ்சனுமவன்
படுசிறைப்பாதகமொழியப்பண்டைநாட்
கடுமிடற்றவற்றொழக்கசசிமேயினன். (௨௨)

அத்தலமேயிருந்தரிதினுறறினன்
முத்தனதருச்சனைமுறையினீங்கலான்
றத்துவெள்விடையொடுஞ்சாரத்தோன்றிய
மத்தனல்வேண்டியவரம்பெற்றேகினன். (௨௩)

பின்னொருகாலத்துப்பதுமபீடிகை
யன்னமூர்நான்முகத்தமலனோர்ந்தனன்
பொன்னவிர்திகிரியானரனைப்பூசியாத்
துன்னருநடத்தியந்துவைக்கப்பெற்றதும். (௨௪)

ஆதரித்தருநடத்தருகுநின்றுதன்
காதலாற்றொழுதரன்கருணைபெற்றனன்
மாதொருபாகனைவழுத்தியாமுமோர்
பேதமினல்வரம்பெறுதல்வேண்டுமால். (௨௫)

என்பனதனதுளத்தெண்ணிவெண்ணிலாப்
பொன்புனைசடைமுடியரனைப்பூசியா
வன்புடன்பற்பகலருச்சித்தானயன்
முன்புரமெரித்தவன்முன்னினனரோ. (௨௬)

கனற்படுகண்ணினன்கமலநாயக
நினக்குவேண்டியவரநிகழத்துவாயென
புனற்படுநெடுஞ்சடைப்புனிதபோற்றியென்
றனத்தினனியனவறைதன்மேயினன். (உஎ)

என்னையாளுடையநீநடிக்குமெல்லையின்
மின்னெயிற்றருங்கணத்தலைவர்வெந்திற
லன்னவாகரப்பிரம்படியினாற்றலான்
பொன்னவிர்திகிரியான்றொழுதுபோற்றினன். (உஅ)

சேவடித்திருநடந்தெரியப்பெற்றன
னேவுநின்கருணையினியந்துவைக்கினன்
றவருஞ்சதிமுறைத்தாளமொத்துவேன்
பாவைபங்காவெனக்கதுபணித்தியால். (உகூ)

என்றனனிரந்திரந்திறைஞ்சியேத்தினு
னன்றவற்கவ்வரமளித்தவானவன்
றன்றிருங்கணத்தவர்சூழப்போயினன்
சென்றனன்கயிலையஞ்சிமையக்கோயில்வாய். (௩0)

முள்ளரைமுளரியங்கோயின்முன்னவ
னளளிடைப்பகனடந்தபின்னரின்
பிள்ளைவெண்பிறைமுடிப்பரனைப்பேதியா
துள்ளமைத்தருச்சனையுவந்துபோற்றினன். (௩க)

போற்றலும்பாய்விடைப்புனிதனங்கெதி
தோற்றினன்றேற்றலுந்தொழுதகையின
னீறறொளிமேனியாய்நிருத்தனேயெனக்
காற்றலவரத்தினென்றளித்தியாலென்றான். (௩௨)

யாதுனக்கியைந்ததொன்றியம்புவாயென
மாதொருபுடையினனருளமாமலர்ப்
போதினன்பன்முறைபுகழ்ந்துபோற்றினன்
மேதகுசிந்தையான்விளம்புவானரோ. (௩௩)

திரிபுரமெம்பிரான்றீக்குமந்தநாட்
பரிபுரச்சேவடிபணிந்துபாகனய்
விரிதடந்தேர்ப்புறத்திருத்தல்வேண்டினேன்
புரிதியென்றன்னதுபுரிந்துபோயினன். (௩௪)

பின்னருமாங்கவன்பேதைபாகனை
மின்னொளிவிரவுதென்கயிலைமேவியே

பொன்னடித்துணைமலர்க்கமலம்பூசியா
வுன்னரும்பற்பகனெடிதிறேம்பினுன். (௩௫)

வளையிரண்டேந்தியதளவமாயன்பால்
விளைசினங்கிடத்தலாலவனைமேவிய
களைகணைய்ப்புரந்தருளுலகுகைக்கவர்ந்
தளைபசித்தழலவித்தருந்தப்பெற்றனன். (௩௬)

அன்றுகொண்டரியினையவன்பதத்தொடு
மென்றுறவிழுங்கினுன்விண்ணுளோரொலாங்
கன்றியமனத்தராயயர்ந்துகைதொழ
வொன்றிருதப்பரிசுமிழ்ந்திட்டானரோ. (௩௭)

சீகுலப்பருப்பதத்தரனைச்சேவடி
யோகையினருச்சனையுவந்துதுக்கனல்
யாகமுற்றழிந்தநாளிழந்தகானுடை
வாகனம்பீடிகைவழங்கப்பெற்றனன். (௩௮)

வேதவாரணியமவ்விரிஞ்சன்மேயரன்
பாததாமரைததுணைபரிந்துபூசியா
வோதுநான்மறையுணர்ந்துலகம்யாவையு
மாதிநூல்வரன்முறையளித்திட்டானரோ. (௩௯)

ஈதெலாநிகழ்ந்தபின்னேமகூடம்போய்ப்
போதினுன்முகத்தொருபுனிதன்பொன்னிறத்
தாதுலாமிதழியஞ்சடையினுன்றனைக்
காதலாலருச்சனைகருதிப்போற்றினுன். (௪0)

கழிந்தனபற்பலகாலஞ்சென்னியிற்
சுழிந்தெறிகங்கையானவற்குத்தோன்றினுன்
வழிந்தொழுகிருகணீரவாரக்கைதொழாப்
பொழிந்தபேரனபினுனினிதுபோற்றினுன். (௪௧)

அன்னமாயளவொழியண்டந்தேடினே
னென்னையாளுடையநீயெதிர்நதிலாயிவ
ணின்னிலைகாண்குறப்பெற்றநீர்மையான்
முன்னியபேறெலாமுற்றினேனென்றுன். (௪௨)

அதுவுளத்தடைத்தருளமலநாயகன்
விதிமுகநோக்கிநீவேண்டவேண்டிய
தெதுவதுபுரிகுதுமிசைத்திநீயென
மதுமலர்க்கோயிலான்வணங்கிச்சொல்லுவான். (௪௩)

எல்லையில்கருப்பமுற்றிழிந்துதோன்றிய
தொல்லையம்பிறவியுட்டுரிசுநீக்குமோர்
நல்வரமிருந்தவாநவையினுன்முகம்
புல்லியிவ்வுலகெலாம்புரக்கமேயினேன். (சச)

ஈண்டினிப்பிறவிபெற்றிழிந்துருவகை
வேண்டினேனுயிர்த்தொகைவிளித்துநிற்குநா
ளாண்டகையென்னைநின்னமுற்கணுலுயிர்
மாண்டிடமுடித்தருள்வழங்கவேண்டுமால். (சரு)

ஐயநீயானுடைக்கபாலமங்கமு
மெய்யுறத்தரித்தெனைவேறுருவகைச்
செய்யதாமரைப்பதத்தொடுங்கசசெம்மணிப்
பையராவேணியாய்பணித்தியாலென்றான். (சசு)

ஆங்கவற்கவ்வரமருளியாங்கவன்
பூங்கழறொழுதெழப்புராரிபோயினன்
றேங்கமழ்கற்பகச்செல்வன்றேமொழி
பாங்கனைப்பணிந்தவாபகர்செய்வாமரோ. (சஎ)

பிரமன்சிவார்ச்சனைச்சருக்க முற்றிற்று.

---

ஆகச்சருக்கம் உசு-இற் திருவிருத்தம். ௲கசஎ.

---

## உஎ-வது. இந்திரன் சிவார்ச்சனைச்சருக்கம்.

---

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முன்னைநாண்முளரிப்பீடத்தருந்தவத்தலைவன்முந்நீர்த்
தொன்னிலப்பரப்புமற்றைமன்பதைத்தொகுதியாவு
மின்னருளுவகைகாட்டியீன்றினிதிருந்தஞான்று
தன்னுளத்துணராநின்றானிங்கிதுசமைவதானன். (க)

ஆறொழிற்பிறந்தபெண்பாலியற்றினமநேகமின்னும்
பேரொழிலவர்க்குமேலோர்பெண்ணுருவகுத்துமென்னுக்
காரொழிற்கழகுகாட்டுங்கற்றைவாரளகவேற்கண்
வாரிளமுகிண்மென்கொங்கையகலிகைவகுத்தான்மன்னோ. (உ)

ஆங்கவளுருவக்காந்தியிளங்கதிரழகுமாந்தப்
பூங்குழற்கற்றைநோக்கிப்புயலினம்விளர்ப்பவேங்கி

வாங்குநுண்ணுசுப்புநோக்கிமின்னெளிமருண்டுமாழ்க
வீங்கிளமுலையாலோங்கும்விண்குடிவாங்கநின்றாள். (௩)

செந்துவர்ப்பவளவாயாற்கவிரிதழ்சிதைந்துகாட்டப்
பைந்தளிர்ப்பதத்தாறபூத்தபங்கயம்பயத்தானிற்ப
வந்தளிர்வளைக்கைநோக்கிக்காந்தணீத்தடவிசார
நந்தினங்களங்கண்டேங்கிவிளர்ப்புறுநலத்தினின்றாள். (௪)

அனையதோரழகின்மிக்காளகலிகையிருந்தகாலை
புனைமலர்த்தருவினீழற்பொன்னகர்புரக்கும்புத்தேள்
வனைகழற்கமலபீடத்தந்தணன்மருங்குசாரந்தான்
கனைவரிச்சுரும்பரோதிக்கனங்குழையவளைக்கண்டான். (௫)

கண்டகண்டிருப்பலாற்றான்கனங்குழையவளைநோக்கிக்
கொண்டகண்ணிரண்டும்போதாவென்பதுகுணியாநின்றான்
மண்டமரநங்கசாபங்குனிந்தது மலராப்பூவாளி
கிண்டுபுகிளையாநின்றூதியாவரோகிளத்தறபாலார (௬)

வெண்ணெயம்பொருப்புச்சீறிவெந்தழலுருத்தாலென்ன
வண்ணநெக்குருகிச்சோர்ந்தான்மம்மர்நோய்க்களவையற்றா
னுண்ணிறையுருவவாட்கட்புலோமசையுருவநோக்கி
யெண்ணுதோறிவளுக்கன்னாள்பகல்விளக்கென்னலானாள். (௭)

உருத்ததுகாமவெந்தீயுயிர்த்தொடுங்காநின்றான்
மருத்திளவாடையூர்ந்துவரவரமயக்கமுற்றான்
கருத்துவேறறிவுவேறாய்க்கையறுகவலைகூர்ந்தான்
பொருத்துவாரெவரொன்றெணணுவுளத்தொடும்புலம்புகொண்டான் ()

ஆயதுகாலைநோக்கியருமறைக்கிழவன்செய்ய
சேயசெங்கமலபாதஞ்சென்னிதாழத்திறைஞ்சிநின்று
பாயரித்தடங்கட்செவ்வாய்ப்பனிமொழிக்குவவுக்கொங்கை
யாயிழையிவள்யாரொன்னவினவினனமரர்கோமான். (௯)

பொன்னிறப்பொகுட்டுப்பீடத்திசைமுகக்கடவுட்புத்தே
ளென்னிடைப்பிறந்தசெல்வியீங்கிவளென்னலோடு
மின்னுயிர்த்தழல்வாய்கான்றுவிளங்கொளிபரப்பித்தெவ்வர்
செந்நிறக்குருதிமாந்துங்குலிசமற்றிதனைச்செப்பும். (௧௦)

ஆடகப்பசும்பொன்னாட்டினரசியலிருக்கைக்கேய்ந்த
பாடுறுபணையினேங்குந்தாருவும்பணிலவாழ்வுந்
தேடுறுஞ்சிறப்பின்மிக்கதேனுவுந்திணிதோணன்கு
கோடுறுந்தவளப்பூட்கைக்குன்றமுங்குணித்தயாவும். (௧௧)

வேண்டுறுசிறப்பினீண்டியாவையும்விருப்பினீந்தாய்
மாண்டுறுநெடுநாள்வைகுமாயுவும்வனபபுமீந்தா
யாண்டொருகுறையுமின்றியளித்தனையையநொய்திற்
காண்டகுகுறையொன்றுண்டாலன்னதுகழறக்கேட்டி. (கஉ)

கோமுடியரசனில்லாவையமுங்குலவண்டார்க்குந்
தாமரைமலராவோடைக்கேணியுந்தயங்காநின்ற
சோமனையில்லாமூடுகங்குலுந்துரிசுநீத்த
காமருமகளிரில்லாவில்லமுங்கவினுணடாமே. (கங)

என்னுடையரசிற்கேய்ந்தவிலங்கிழையலங்கலோதிக்
கன்னிகையளிப்பினனறேகற்பகவாழக்கைவாழ்க்கை
யின்னிவட்புரிந்திலாயேலெறிகதிரமணியொன்றில்லாப்
பன்னகமனையேனீதுபணியெனப்பணியாநின்றான். (கச)

இவனெடுத்துரைத்தமாற்றமிருசெவிப்புலத்துச்சாரத்
துவரிதழ்க்கமலக்கோயிற்றூயவனுரைப்பதானுன்
கவரொளிமணித்தோள்வேந்தேயீங்கிவட்கருதிநோக்கி
யவலமுற்றழியேலிப்போதன்றெனவகற்றினுனல். (கரு)

நான்முகத்தொருவன்சொற்றவாசகநவ்விச்செவவி
மூன்முகத்துருவவொள்வாளொத்துறமயக்கங்கொண்டான்
பான்மதிமுகத்தாண்மூறற்பவளவாய்நினையுந்தோறு
நான்முகப்பரவைகீழபோ

கற்பகநாடுபோதற்கெழுந்தனன்கருத்துப்பின்போய்
நிற்புழிமறுகுமீளுநெஞ்சொடுங்கவலுஞ்சோருங்
கொற்கொள்வேனெடுங்கட்டாரைகுழித்துறக்குழைந்தசிந்தை
யெற்கனலரக்கின்மாந்தியுருகினனிமையோர்வேந்தன். (கஎ)

வேரியங்கருப்புவீரவெஞ்சிலைகுழையவாங்கு
மாரனைங்கணையுமாரமார்பிறப்பிளந்துதள்ள
வோரடிமுன்னர்நீட்டினென்பதுபிறகுபோமால்
வாரிளமுலையினுடனுருவொளிவவ்விசென்றான். (கஅ)

தேமலர்த்தருவினீழன்மந்திரவிருக்கைசோந்தான்
பூமலரமளிச்சோராவிழுந்தனன்புதுப்பூங்கோதை
காமமிக்கெழுந்துமம்மர்க்கடலிடைக்கிடப்பதானுன்
வேமனத்தொடுங்காக்கோலமேனியும்வெதுப்புக்கொண்டான். (க௯)

தழைபடுசினையினுங்குங்கற்பகத்தண்ணறுத்தா
யிழைபடுபுதுப்பூந்தென்றலிழுகுறவெரியிற்காந்த

மெழுகெனவெதும்பாநிற்குமெல்லணைசொரியாநின்ற
செழுமலர்க்குப்பையன்றேனுயிர்ப்புறத்தீயிற்றீயும். (௨0)

கொழுநறைநரந்தங்கொட்டுங்குங்குமக்குவவுத்திண்டோண்
மெழுகுறவெதும்பிக்காந்திப்பொருக்கெழும்விரிபூந்தாமச்
செழுமலர்நெருப்பிட்டாற்போற்றீந்தனசிவந்தகண்கள்
பொழுதிடைநோக்கித்திண்டோள்புடைத்தனனனங்கப்புத்தேள். ()

ஆய்மயிலனையசாயலகலிகையாசைதீர்வான்
சேயிழையரம்பைமாரிற்றிலோத்தமைமுதலாயுள்ளோ
ரேயபேரழகைநோக்கியெண்ணுறும்பரவைநாவாய்ப்
பாய்மரப்பரவையொத்தானெருநிலைப்படாதசிந்தை. (௨௨)

மயிலியற்குதலைசெவ்வாய்ப்புலோமசைவளைப்பூங்காந்தள்
பயிலுறத்தடவாநின்றுளாங்கதுபகிரினம்மா
வயின்முகநெடுவேற்றுனையறுத்தழிபசும்புணூடு
மயர்வுறச்சலாகைகாசசிச்செலுத்துறன்மானுமன்றே. (௨௩)

அளிபடுபுதுப்பூங்கோதையகலிகையமுதளாவுங்
கிளிபடுகுதலைகேட்டவார்செவிகிளைகண்மற்றைக்
களிபடுசுரும்பரோதியணங்கனாகரும்புபூத்த
வெளிபடுமழலைகாகத்தொனியெனவெறுத்தவன்றே. (௨௪)

குனிபடுபுருவச்சாபத்தகலிகைவதனங்கோட்டிக்
கனிபடுமனத்தினேர்க்குமற்றையோர்கடவுட்டிங்கட்
டனிபடுவதனமெல்லாமுற்படுபருவந்தாங்கும்
பனிபடவெதும்பிச்சாம்பும்பங்கயநிகர்த்தமாதோ. (௨௫)

அன்னவளுருவநோக்கியருந்துயரளித்தநோக்க
மின்னலமின்றுகாறுமிவற்கினிதளித்தகோலப்
பொன்னொளிமருட்டுமேனிபுலோமசைபுணர்ந்ததெய்வ
மென்னலநோக்காதாசைமுதலறவெறுத்தவன்றே. (௨௬)

ஆரழகமையப்பூத்தவகலிகைதிதலைபூத்த
வேரிளமுகிண்மென்கொங்கையெண்ணுதோறெண்ணுதோறுந்
தாரொடுகுவவுத்திண்டோள்வீங்குறுந்தழுவக்கிட்டாள்
போரடுமெதனவாளிபடப்படப்பொருமறீரான். (௨௭)

அருந்துயரளித்தகாமவெதுப்பிறையாற்றுணுகித்
தருந்தருப்பொதும்பர்வீழத்தண்ணிழறமுவச்சார்ந்தான்
வருந்துணர்வீழ்த்தசெந்தேமதுத்துளிதெறிக்குந்தோறும்
பொருந்திறற்றடந்தோண்மேனிசுறுக்கொளப்பொறுக்கலாற்றான். ()

தழைபடுதருவினுேங்குந்தடஞ்சினையூழ்த்தமென்பூ
விழைபடுதடந்தோள்வெற்பினிடைதுதைந்திழியுந்தோறும்
குழைபடுமநங்கசாபங்கோத்தெறிகொடுங்கூர்வாளி
நுழைவனவென்னலாளுனவனிலைநுவலற்பாற்றே. (௨௯)

சாந்துறுபொதியமூதுந்தளர்நடைப்பசும்பூந்தென்றல்
காந்தெரிகுளிர்க்குங்காமக்கடுங்கனல்கொளுந்துமேனி
மோந்தயனடந்துசுற்றுமுற்றியமகளீரெல்லாம்
வேந்தழற்கிடந்தமென்பூந்தொடையெனவெதும்பிப்போமால். (௩௦)

தண்டுளித்திவலைதூங்குஞ்சந்திரகாந்தமேயந்த
மண்டபத்தரிகளேந்துமலரணையமளிசார்ந்தான்
கொண்டவக்காமத்தீயினத்துளிகொதிப்பதாளு
ணெண்டொடிதிறத்தினுள்ளநடக்கமாற்பிறிதொன்றேரான். (௩௧)

இரட்டுவெண்கவரிக்கற்றையின்னிளம்புதுப்பூந்தென்றன்
முரட்டடந்தோளுமார்புந்தைவரமுருகுநாறிப் ,
புரட்டிவண்டிமிருந்தண்டார்பொரிந்தனகரிந்தசாந்தந்
திரட்டுதெள்ளமுதுமற்றைவிடமெனத்திரிந்தசிந்தை. (௩௨)

முறுவலிற்றழகுசென்றமுகத்தினனகத்தினுேங்கு
மூறுதுயருழப்பதோராகிருததாவந்தொறுங்குசார்ந்தா
ரறுபதச்சுரும்பர்பாடித்துவைத்தெழுமஞ்சிலோதி
மறுவறுதிங்களன்னமுகத்தியர்மருங்குமொய்த்தார். (௩௩)

நயங்கெழுபாடறாங்கரப்பிசையமுதங்காலப்
பயன்படத்தெறிக்குமெல்லென்குறட்டிசைபையப்பைய
வியங்கொடுநடப்பநோக்கியிருந்தனனிவைகளெல்லா
முயங்குமச்செவிகடோறும்விடமெனவொழுகிமண்ட. (௩௪)

உருப்பசியமுதவாலவட்டமொன்றெடுத்துப்பையத்
திருப்பினள்காமவெந்தீத்திளைத்திடைகிளைப்பமாழகிக்
கருப்புரமளவுதண்ணங்கலவையபுங்கனலக்காந்தி
நெருப்பெழுகிளையுந்தோறுநெட்டுயிர்ட்பெறிந்துசோர்ந்தான். (௩௫)

உயிர்த்துயிர்த்தொடுங்கியாவியுணங்கியானெருப்பாடெய்தி
மயிர்ப்புறம்பொடிப்பவோங்கியெழுந்தனன்வணக்கம்போக்கிக்
குயிற்கொழுங்குதலைசெவ்வாய்க்கோமளக்கொழுந்தேயீங்கெ
னெயிற்புறமொருவிப்போந்ததெவ்வழித்துரைத்தியென்றான். (௩௬)

கலிவிருத்தம்.

என்னுவிறுமக்கெதிரெய்தியதும்
பின்னேவருமாறுபிடித்திலதோ ,

பொன்னேயதுபுக்கிலதாயினுமற்
றுன்னுறுமொராவியுயிர்த்தனனால். (௩௭)

புலராவிருளுற்றபுயற்குழலா
யலர்வாளியறுத்தழிபுண்ணினொடு
முலவாநெறிகண்டுமைவைத்தனனான்
மலரோனனிவைகலும்வாழியவே. (௩௮)

கண்ணுறுமலர்க்கணைகாதுபசும்
புண்ணுறுதழும்பொடுபோயினவாற்
கண்ணையமுதூறுகரும்புருவே
பெண்ணையுமதின்னருள்பெறறபினே. (௩௯)

நறவார்சுருளோதிநறுங்களபந்
துறவாதபடாமுலையிச்சுவைகொண்
டுறவாடுநுசுப்பினுடங்குயிர்கொண்
டிறவாமலிரங்குவதென்றுகொலோ. (௪0)

தகுசீறடிபொன்முடிதாழ்தொறுநீர்
தொகுமென்மொழியொன்றுதுறந்தருளீர்
மிகுகாமநெருப்புறவெள்ளைநிலா
வுகுமூரல்விளைப்பதுமுண்டுகொலோ. (௪௧)

மைநக்கமலர்க்குழல்வாணுதலாய்
பைதக்கவிதும்பப்படர்முலைநீ
பொய்தக்கநுசுப்பொடுபோதரவின்
றெய்தப்பெறுபேறெவரெய்தினரோ. (௪௨)

மின்னஞ்சுமருங்கெனவெவ்வினையே
னென்னெஞ்சறைபோயதெனக்கெனநீ
வன்னெஞ்சமிரங்கிவழங்குகிரோ
லின்னஞ்சிலவைகலிருக்குவனால். (௪௩)

தஞ்சம்பிறிதின்றியுமைச்சரணென்
றஞ்சுந்தமிகண்டருளீரலரோ
னஞ்சந்தருகட்கடைநல்கியரு
வஞ்சந்தருநெஞ்சம்வழங்கினனே. (௪௪)

மன்றற்சிறுதென்றல்வளைத்துயிரைத்
தின்றெய்த்துநடந்ததுதேமலரு
டொன்றிப்பனிவாடையுலாவருமு
னன்றிற்குரன்மிச்சிலருந்தியதே. (௪௫)

பயில்கற்பகமென்சினைபற்றியிளங்
குயில்கூடெனதாவிகுடித்தனவான்
மயில்போலொருசீவரவல்வினையே
னுயிர்போவதொழித்தனனென்னுதலே. (௪௬)

மூரிப்பணிவாணகைமூதறிவை
வாரிக்கொடுபோகவழங்கினனு
லீரத்தளிரங்கையெனின்றுயிரை
வேரிக்குழலோடும்விளித்தனவே. (௪௭)

மனவுத்துணைமாமுலைவவ்வுறுவான்
வினவிப்புடைசென்றனன்மெய்தடவா
நினைவற்றுயிர்சோாதரநின்றனனால் (௪௮)

பொய்போலுருவாயபொலன்கொடிதன்
பெய்வால்வளையங்கைபிடித்துறவக்
கைவால்வளைபற்றுதல்கண்டிலனான்
மெய்பாவிமயங்கிவெதுப்புறுமால். (௪௯)

இத்தன்மையினின்றிவனீடழியப்
பொய்ததன்மைமடக்கொடிபோகிலளாற்
சித்தந்திகைநந்துதியங்கினனான்
மத்தந்தருவெண்ணிறவாரணனே. (௫௦)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஈங்கிவனிப் பரிவினொடு மகலிகைபா லெடுத்தசிந்தை யிகவா து ற்றான், றேங்கமழு மலரயனு யுலகளிப்பா னுளத்தோர்ந்து செயற்கை முற்ற, வோங்கருமா தவத்தினெடு நாள்கழித்தான் கவுதமனென் றுணர்ந்தா னந்தண், பூங்கமலத் திருக்குமய னகலிகைகைக் கொண்டவ போயி னான்ல். (௫௧)

சென்றெதிர்ந்த மலரயனுக் கருந்தவத்தோ னெதிரொழுந்து செய் வசெய்து, நின்றெழுந்து மனத்திரைக்கு முவகையனு யளவளாய் நெடுநீர்வைய, மன்றளித்தா யின்றமுத வுயிரளிப்பாய் நின்பெருமை யளப்பதாரோ, யென்றெடுத்து முகமனுரைத் தெய்தியவா கேட்பமல ரிறைவன்சொல்லும். (௫௨)

நீயிழைக்கு மருந்தவத்திற் கியன்றசெய்வா ரிலரொன்ன நினைந்து நின்பா, லாயிழையீங் கிவளைநின்க் களித்துமெனக் கொணர்ந்தனன் மற் றையவெய்திற், காயெரிமுற் கைபிடித்துப் பன்னியெனக் கோடி

யென்முன் கமலப்புத்தே, யேவனுமாங்கவன்சொற் றுறந்திலனுற் சடிலமுடி துளக்கினுனல். (௫௩)

அன்னவனை யவற்களித்துத் தன்னுலகத் தோதிமத்தோ னடைந்தானந்நாட், பின்னவளுங் கவுதமற்குப் பன்னியெனச் சரித்துறவப் பெரும்பூந்தாருப், பொன்னகரத் திறையவற்குத் துணாத்தினராங் கதுவுணர்ந்து பொருமாநின்முன், பன்னுபழ மறைக்கிழவற் குறித்திழியப் பகர்வதெலாம் பகாந்தான்மன்னே. (௫௪)

கள்ளவா ணெடுந்தடங்க ணகலிகையைக் குறித்தெழுந்த காமவெந்தீ, யுள்ளவாய் நின்றழற்ற முன்னையினுங் கொடுந்துயர முழவாநின்முன், வள்ளைவார் குழைகளப வனமுலைவேட் டெழுந்தனனுய் வழிக்கொண்டேகிப், புள்ளரு மலர்ப்பொதும்ப ராச்சிரமத் தயற்கரந்து புகுந்து நின்முன். (௫௫)

தருணமழ கதிரொழுச்சி தருகடிகை சிலகிடப்பத் தணந்து சென்ற, பெருமுனிவ னிடைநோக்கி யவனுருக்கொண் டடைந்தவள்கைப் பிடிப்பவன்னு, ளுருகியுள நெகிழ்ந்தனளா யிந்திரனென் றுணர்ந்துநல னுகர்ந்தாளன்னேன், மருவருமென் சுருளோதி யிவர்தமக்கு வினைவதொன்று மதித்திலாரால். (௫௬)

முத்தவா ணகைக்கருங்க ணகலிகைவெம் முலைமுகத்து முயங்கிப்போது, மத்தலையி னருந்தவத்தோன் றருப்பையொடு சமிதைகரத் தடுக்கிப்போந்தா, னித்தலையி னிவரிருவ ரிழைத்தவெலாங் கருத்தினுணாந் தெணனுநின்முன், மத்தமதத் தவளநிற வாரணத்தோற் குறித்துமன மாறுகொண்டான். (௫௭)

பன்னுமறை யருந்தவத்தோற் குரியதொருபன்னியெனப் பாராய்காமத், தினனலுழந் தெமையிகழா யீதுபுரிந் தனையுனக்கு மினிமேலிந்தக், கன்னிகுறி விருப்புறலா லுடம்பனைத்து மக்குறியே காண்பதாகப், பின்னருன தாண்குறிபோ யலியாகிப் பெரும்பாவம் பிடித்தியென்முன். (௫௮)

ஈங்கெனது பன்னிவரம் பழிவரம்பாய் நிற்கவீ திழைத்தாய் மூநீர்த், தேங்குதிரை நெடுநிலத்து மன்பதைக்கு மவவரம்பு சிதைவதாக, வோங்குபெருஞ் செருமுகத்து நிருதர்காத் தகப்படுதி யொழியாப்பாவந், தாங்குதியென் றிவையனைத்து மெடுத்துரைத்தா னிருஞ்சினத்திற் றவத்தின்மிக்கோன். (௫௯)

ஈதொழிய வகலிகையை முகநோக்கி யெம்மையிகழ்ந் தீதுசெய்த, பேதைநீ நெடுநெறியிற் கருங்கல்லாய்க் கிடத்தியிந்தப் பிறழாச்

சாபந், தாதைமொழி தலைக்கொண்டு கானடைந்த தாசரதி கமலச் செய்ய, பாதமலர் கதுவுறலு மூன்னுருக்கொண் டெழுதியெனப் பணி த்தானன்றே. (சுo)

ஆழிமாநிலப்பரப்பினலங்குறுவெண்குடைநிழற்றியரசர்போற்றும்
பாழியோங்கிருஞ்சினையகற்பகநாட்டினும்புகுதப்பாரான்வெள்கி
வாழிநான்முகக்கடவுணிருமித்தமானதப்பூவாவியேகிச்
சூழுமீரிதழ்க்கமலத்துட்கரந்துநெடுங்காலந்தொலையாநின்றான். (சுக)

தாயிழந்தகுழவியாய்த்தருவிழந்ததொழுதியாய்ச்சபையினேறி
வாயிழந்தவழக்கினராய்மருவிழந்தமாலிகையாய்ப்பொதுளும்பச்சை
வேயிழந்தநெடுவரையாய்வில்லிழந்தபெருநாணுய்வெறித்துநின்றார்
போயிழந்தவலியினராய்ப்புலனழிந்துநிலைதிரிந்தார்புலவர்யாரும். ()

கேட்டனகேட் டனவழங்குந் திருவொன்றும் வழங்கிலவாய்க் கிள் ளையஞ்சொல், வாட்டடங்க ணரம்பையரும் வனப்பழிந்து வறுமைய ராய் மம்மர்கூர்ந்தார், வீட்டியவா ளெயிற்றரக்கர் மிக்கெழக்கண்ட வர்க்குடைந்தார் விண்ணோ ரம்பொ, ஞட்டாந்தை துடைத்தொ ழிப்பா ரில்லாராய் நெடுங்கால நடந்தவன்றே. (சுஙு)

சுரர்குருவி னடிதொழுது கற்பகநாட்டனைவோருஞ் சொல்லிச் சொல்லிப், பரசுதலு மாங்கவனு மகபதியெங் கெனவோர்ந்து பாரா நின்றான், விரைமுளரி யகத்தொடுங்கி மானதவா வியிலிருந்த மெய்ம் மைகண்டா, னரசிழந்து தனிவருந்து புலவரொடு மாங்கவனுற்றடைந் தானன்றே. (சுச)

எதிரொழுந்த சுரகுருவுக் கெதிரொழுந்தா னிந்திரனு மிமையோர் யாரு, மதிர்குரலிட் டழுதயர்ந்தா ராங்கவனை யந்தணன்கொண்ட கன்றுபோகி, மதிமவுலி யவற்றெழுவான் காசிகொணர்ந் திருந்தன னட் மகவான் பச்சைப், புதியமர கதக்கொடிகமோ ரிடங்கொடுத்தான் றனைப்பணிந்து பூசைசெய்தான். (சுரு)

எம்பிரானதுகருதி யெதிரொழுந்து திருவருள்கூர்ந் திரக்கஞ்செய் தான், வம்புலாங் கற்பகத்தார் மகபதிபெண் குறியொழிந்து வடிவ மெல்லா, மும்பரா குலமொழியக் கண்களா யிரம்படைத்தா னிவை யொன்றன்றே, யிம்பர்கேட்டனயாவு மினிதளித்தான் பழியொழிந்தா னிமையோர் வேந்தன். (சுசு)

கொற்றவார் குடைநிழற்றி யமருலக மினிதளிக்குங் குலிசவேந் தன், கற்றைவார் சடையானைக் காளத்திமுக்கணனைக் கருதிப்பூசித், தற்றைநா ளவனருள வலாசுரனை யுயிர்செகுத்தா னவுணியோடும்,

பெற்றவானவருலகுந் துயரொழித்தான் வலாரியெனும் பெயரும் பெற்ருன். (௬௭)

செருக்குலிசத் தவனொருத்தன் கறைக்களத்தெம் பெருமானைச் சிந்தித்தோர்நாள், விருத்தகிரி வழிபட்டான் றுருவாச னடுசினத்தான் விளம்பவாசத், தருப்பணிலஞ் சுரபிசிந்தா மணிமுதல மறிகடலிற் றழுவிச் சார்ந்த, திருப்பிவறி தொழிந்துபெரு வளநுகர்ந்து தனிச் செங்கோல் செலுத்தினனால். (௬௮)

மகபதியோர் மகவின்றி நெடுங்காலந் துயருழந்து மறுக்கங்கொண்டான், முகையவிழ்கற் பகநிழலி னினிதிருந்து முழுமுதலை முறையிற்பூசித், திகலொழிய வுலகளிக்குஞ் சயந்தனெனு மொருமகவை யினிதி னீன்ருன், புகலரிய வாரூரிற் பூசித்தா னினிதுகைக்கும் புயலும் பெற்ருன். (௬௯)

அருணகிரிப்பெம்மானை மலரடிபெற் றருச்சித்தா னரும்புபூத்த, பொருகளபவனசமுலைப் புலோமசையைப் பெறப்பெற்ருன் குலிசப்புத்தே, ளுருகியசிந் தையனுகி யெம்மானைப் பூசித்த துரைக்கற் பாற்ரே, பெருநதியின் றுவட்டெடுக்குஞ் சடையோனைப் பூசித்த பிறவுஞ் சொல்வாம். (௭௦)

துருவனெறிக் கதிர்க்கடவுள் பன்னிருவா மதிக்கடவுட் டொல்லை னெல்லை, வருமுடுக்கண் மூவொன்பா னீராறி ராசியெழுகாணமற்றை, யரிதிழைக்கும் விட்கம்பமுதலான யோகங்க ளன்றியம்பொற், பொருகழற்கா லமரருந் தவமுனிவர் கருடாகிம் புருடர் நாகர். (௭௧)

கந்திருவர் வித்தியா தாரியக்கர் கின்னரர்வெங் கடுங்கட்பேழ்வாய், வெந்தொழிற்ற னவர்நிருபர் மானிடர்மா முகிற்கணங்கள் வெற்பு வாரி, பைந்தருக்கள் பசுப்பறவை கங்கைமுதல் வரநதிகணமலரோன் பாரிற், றந்தசரா சரங்களர னருச்சனையாற் பெற்றதெம்மாற் சாற்றலாமே. (௭௨)

இந்திரன் சிவார்ச்சனைசசருக்க முற்றிற்று.

ஆகச்சருக்கம் உ௭-இி திருவிருத்தம் - ௯௨௪௭.

## உ௮-வது. திரிபுரவிசயச்சருக்கம்.

கலிநிலைத்துறை.

பரவசத்தராயீங்கிவர் தனித்தனிபயிலா
வரனடித்துணையருச்சனைபுரிந்தனவறைந்தேம்
விரதமாதவத்தவிர்காள்வேறுமுறுதிருந்து
வரனருச்சனைகுழுவொடும்பணிந்தனவலிப்பாம். (௧)

தாருகாசுரனெனுமொருதழற்கண்வாளசுரன்
போருவந்தெழுமைந்தரோர்மூவரைப்புரிந்தான்
பேருறைக்குதும்வித்துன்மாலிப்பெரும்பெயரோன்
காருளத்தினன்றருகாக்கன்கமலாக்கன். (௨)

என்னுமப்பெயரசுரரோர்மூவருமெழுந்து
மன்னுபொற்கமலாலயத்தவனடிவணங்கிப்
பன்னுமாதவம்வரன்முறைபயின்றனர்பன்னா
ளன்னவர்க்குமற்றுச்சிநெக்கருந்தழலெழுந்த. (௩)

எழுந்தமூலவாதாரநின்றெழுப்பியகொடுந்தீக்
கொழுந்துவையகமனைத்தையும்பொடித்ததுகுணியாத்
தொழுந்தகைத்திறத்திந்திரன்சுரரொடுங்குழுமி
யொழுங்குநான்மறைக்கிழவனையடைந்திவையுரைத்தான். (௪)

தயங்குவாளெயிற்றடுதிறற்றருகாசுரனுற
பயந்தமூவருநிற்குறித்தருந்தவம்பயில்வா
ருயங்குமன்னவருச்சிபோததருந்தழலுருத்துக்
கயங்கொள்வாரிதியுலகெலாமெரிபடக்கனன்றே. (௫)

ஆருயிர்த்தொகையாவையுமருந்துயருழந்த
மேருமால்வரைப்புறமெலாங்கொழும்புகைமேய்ந்த
வோரினன்னவர்க்கிரங்கிநீயுவந்திலையென்றுற்
றுருவும்பருமத்தழலழிப்பதுசரதம். (௬)

என்றிரந்தவனேத்தலுநான்முகத்திறைவ
னன்றெழுந்தனனிந்திரனொடுமவணடைந்தான்
சென்றுமாதவத்தரிதெலாநோக்கினன்றிகைத்தான்
மன்றலங்கமலாலயத்தவனுளமகிழ்ந்தான். (௭)

எதிரநின்றிடுநான்மறைக்கிழவனையெதிர்ந்து
முதிருமன்பொடுமாங்கவர்முறைமுறைபணிந்தார்
பொதிநறுங்கமலாலயந்துறந்தெமர்பொருட்டா
லதிருமார்கலிநெடுநிலத்தடைந்தனையைய. (௮)

சான்றெனப்படுஞ்சராசரமனைத்தையுந்தாயா
யீன்றுநின்றனையெங்களையன்றிமற்றன்றே
தோன்றியெம்முடைப்புன்செயல்குறித்தனைதொல்லோ
யேன்றெமக்குளகட்புலத்தெளிதெனநின்றாய். (௯)

வேதவேதியரியற்றுவநின்னுழைவிரும்பி
காதலித்துவுநின்னுழைப்பிறந்தனநம்ப

போதினுன்முகப்புராதனவாகமப்பொருளே
யாதிநாயகநின்னையாரளவையிட்டுரைப்பார். (௧0)

எனப்புகழ்ந்தெடுத்தேத்தினராங்கவரிரந்தா
ரனத்தினூர்தியான்றிருவுளநெகிழ்ந்தனனுகி
நினைத்தகாரியமேதுகொனிகழ்த்துதிரொன்றுன்
மனத்தினேர்ந்துரைபரிசெலாம்வரன்முறைவலிப்பார். (௧௧)

கறங்குவார்திரைநெடுநிலப்பரவையுட்கருப்புக்
கிறங்கியாருயிர்வீந்துறலெமக்கரிதைய
வறங்கொளுயகவிறப்புறுவகையெமக்கருளித்
திறங்கொள்யாவையுந்தருதியென்றிசைத்தனர்தீயோர். (௧௨)

அனையவாசகங்கேட்டலுமம்புயத்தவனும்
வினையமாதவமூவரைநோக்குபுவிரிப்பான்
கனைகருங்கடனெடுநிலங்காண்பனவெல்லா
நினையுமுன்னரினிறப்பனநிச்சயமஃதால். (௧௩)

யானுமிந்திரன்முதலினேர்யாவருமெனையீன்
றேனுமற்றுளபதவியினுறைந்துளோரெவரும்
வானும்வையமுமேருவுமற்றையவரையு
மேனையாவையுமிறப்பதுசரதமற்றில்லை. (௧௪)

காலமீறுபட்டிறப்பினுமபிறப்பினுங்கணக்கின்
மூலமாய்முதன்முத்தியாய்முத்தியின்வித்தாய்
ஞாலமேமுதலாகியபூதமாயநவைதீர்
கோலமீறிலாற்கல்லதுகூடுமோகுணிப்பின். (௧௫)

இறப்புறுவழியார்தரற்கியைகுவவொண்ணிற்
சிறக்கவேண்டுவயாவையுந்தருகுதுஞ்செம்பொற்
றுறக்கம்வேண்டினுமீகுதுஞ்சொல்லுதிரொன்றுன்
மறக்கண்வஞ்சகராங்கவணினையனவகுட்பார். (௧௬)

இரும்பினுலியைந்தெழுதருமிஞ்சியொன்றியாரும்
விரும்புவெள்ளியினெழுதருவேலியொன்றன்றி
யரும்பசும்பொனுலெழுதருமரணமொன்றவைக்குட்
டிருந்துசெல்வமாப்பெரும்பதியீங்கிவைசெப்பின். (௧௭)

மண்ணிற்றேய்வதுமுந்தியபுரிசைவானியங்கி
விண்ணிற்றேய்வதுவெள்ளியங்கொடிமதிற்றேக்க
நண்ணித்தோய்வதுபொன்னெயிலீங்கிவைநாடி
யெண்ணிச்சென்றுழியெம்மொடுமியங்குதல்வேண்டும். (௧௮)

நிதிப்பெருங்குவைவேண்டுதுநெடுமெதிளிஞ்சிப்
பதிக்கணல்வளப்பயன்படநினைந்தனம்பலரா
லெதிர்ப்பினன்னவரிறப்புறக்கருதினமெவையும்
விதித்தநாயகவேண்டியகுறைவறவிழைந்தேம். (௧௯)

வருடமாயிரங்கழிந்தபின்மணிமதிட்புரிசை
யொருவியோரிடத்திருப்பனமுகூர்த்தமொன்றுவந்தேஞ்
செருவினெங்களைச்செகுப்பதுமொருத்தனேரம்பாற்
றருவரங்களீதென்றடிமுடிதொடத்தாழ்ந்தார். (௨0)

கேட்டநல்வரம்யாவையுங்கிளைபடவழங்கி
யேட்டிருங்கமலாலயத்தெம்பிரானெழுந்து
சூட்டவோதிமமுகைத்தனன்றொல்லுலகடைந்தா
னேட்டுசிந்தையினருந்தவமொழித்தனருவர்கள். (௨௧)

இவரிழைத்தமாதவங்கொடுபெற்றனயாவுங்
கவர்படசசொலக்கேட்டனர்கற்பகநாட்டோ
ரிவர்கொடும்படைக்குடைந்துபாதலத்திழிந்திருக்கு
மவர்தடம்புயசிவந்தனர்முறுக்கெயிற்றசுரர். (௨௨)

கோடிவெள்ளமோராறுபதினுயிரங்குணிப்பி
னீடுசேனையொழுந்தனர்மிடைந்தறநெருங்கி
யாடும்வெண்டிரையகனிலப்பரவையினடைந்தார்
மாடுசென்றிவர்மூவரைத்தொழுதனர்மகிழ்ந்தார். (௨௩)

சேனைகாவலர்யாவருஞ்சென்றுறத்தழுவி
மோனைகொண்டெழுமுகமனின்றுரைத்தனர்முதியோ
ரேனையோர்க்கயலிருந்தனரிசைப்பனவிசைத்தார்
தானையீங்கிவைநுமக்குளவெறுழ்வலிததகைய. (௨௪)

என்றளவளாயிருந்தனர்நட்டனரிவர்கள்
மன்றலோதியர்மூவரைவழங்குறமணந்தா
ரன்றுவானவரமரொடுத்துடற்றுறச்சிதறிச்
சென்றவாறெலாம்படிப்படிவகுத்தனர்தொகுத்து. (௨௫)

இளத்தவாறெலாங்கேட்டனரவையுளங்கிடத்தி
வளர்த்தசிந்தையின்மயன்றனைக்கொணர்கெனவந்தான்
விளர்த்தநண்பொடுமாங்கவற்கினையனவிளம்பி
யுளத்துவப்பொடுமிருத்தியென்றுரைத்தலுமிருந்தான். (௨௬)

வரவிளித்தனிரொன்கொலென்றுரைத்தனன்மயனம்
முரணுடைத்தடம்புயத்தரின்முன்னவன்மொழிவான்

பரவையொத்தெழுதானையும்யாங்களும்பயில்வான்
விரவுமூவர்க்குமுப்புரமியற்றெனவிளம்பி. (உஎ)

ஆரிரும்பினுலகனிலப்புரிசையுமதன்மேன்
மூரிவானிடைவெள்ளியம்புரிசையுமுற்றிப்
பாரிசாதநாட்டம்பொனுலிஞ்சியும்படுத்திச்
சீரியற்றினின்றிவற்றுழைத்திருநகர்திருத்தி. (உஅ)

முற்றமுற்றியபின்னரின்வருகெனமொழிந்தா
னிற்றதோவெனமயனதற்கெழுந்தனனியைந்தான்
கற்றைவெண்டுளித்திரைபொருகருங்கடனிலத்தி
னுற்றவெள்ளிடைநோக்கினின்றுளத்துணர்ந்தனனால். (உகூ)

அகனிலப்பரப்பளந்தளத்தளவையிட்டனபோன்
றிகலியொன்றினென்றெழுந்துருதோர்நிலைத்தென்னப்
புகலுநாற்றிசைமறைத்தெனவிருப்பெழும்புரிசை
தகநினைத்தனனெழுந்ததுவானகந்தடவி. (௩0)

கொம்மையாயிரமாயிரங்காவதங்குணித்தான்
வெம்மைநாஞ்சிலிட்டிழைத்தனனெந்திரம்விதித்தான்
பொய்ம்மைகீழ்ப்படமேற்படுவாயிலும்புனைந்தான்
மைம்முகிற்படுகோபுரமிடையிடைவகுத்தான். (௩க)

இனையநோக்கியுண்மாநகர்வீதிகண்டெடுத்தா
னனையவீதியினவணவணமாளிகையமைத்தான்
புனைசெய்பொன்னினுமணியினுமல்லதுபுனையான்
வினையினுண்ணியயாவையுந்திருக்கறவிதித்தான்.. (௩உ)

வச்சிரக்கொழும்பலகையிட்டிழைத்தனவயங்கும்
பச்சொளிப்பெருமரகதந்தியற்றினபகலோ
னச்சுசெம்மணித்தூணகநிறுத்தினநயந்த
விச்சையாற்புனைமாடமெண்ணிலவெனவிதித்தான். (௩௩)

முத்தமேய்ந்தனமுழுநிலவெறித்தனவயிரப்
பத்திவேய்ந்தனபவளவிட்டத்தனபகையா
தத்தலங்கொளிதருவயிரேரியஞ்சார்ந்த
வொத்தெழுந்தசெய்குன்றமெண்ணிறந்தனவுவந்தான். (௩௪)

படிகமீர்ந்தெடுத்திடையிடைவேதிகைப்படுத்திக்
கொடுவடிம்பெலாந்தெளித்தகோமேதகங்குயிற்றிப்
பொடிவிளக்கினபுட்பராகக்குவைபொருத்தி
நெடியமாளிகைச்சாளரவாயிலுகிரைத்தான். (௩ரு)

வெள்ளிவெண்டகட்டொண்ணிறக்கருமணிவேய்ந்து
நள்ளலங்கொளிச்செம்மணிநாயகமிருத்தி
யுள்ளமைத்திடுமதலைமீப்பொலிந்தனவொருங்கே
யெள்ளிலாடரங்கமைத்தனனளவையெண்ணிறந்த. (௩௬)

நகரநள்ளிடைநாயகக்கோயிலொன்றெழுப்பிப்
புகலரும்பசும்பொன்னினுமணியினும்புனைந்தான்
பகலவன்கதிரிருள்படப்பசுங்கதிர்பரப்பி
யகனிலாமணிமுத்தமுமாங்கதினமைத்தான். (௩௭)

எழுதுசித்திரமுயிர்ப்பெழுந்தியங்குதல்போல
வொழுகுபேரொளிபதைப்புறச்சுவர்த்தலத்துவந்தான்
மெழுகுவெண்டுளிச்சந்திரகாந்தத்தின்மேய்ந்து
பழுதின்மந்திரவிருக்கையும்பசும்பொனாற்படுத்தான். (௩௮)

இலங்குமாமணியொன்பதிற்றிருந்திநின்றிமைப்பக்
குலங்கொள்பொற்றசும்பெடுத்தொருகோபுமுடிகவிழ்த்தி
வலங்கொள்கொய்யுளைவாளரியாசனம்படுத்தா
னலங்குபேரொளித்தனிக்கொலுமண்டபமமைத்தான். (௩௯)

நீலமாமணிக்கங்குலோநிறைதிரையுததிப்
பாலமுத்தவெண்ணிலாக்கொலோபருமணியிமைப்ப
மேலிவர்ந்தெழுவெயிற்கொலோமிக்கதென்றுரைப்பா
ருலிலைத்துயிலரிக்குமற்றயனுக்குமரிதால். (௪0)

எறித்தபேரொளிதிசைமுழுதெழுதலாலிரவி
வெறித்தசெங்கதிர்மழுக்கிநின்றிமைப்பதுவிண்ணோர்
மறித்துநோக்கினுங்கட்புலன்கதுவுறுமயனுங்
குறிப்பினன்னகர்நோக்கிநின்றதிசயங்கொண்டான். (௪௧)

பனித்தவார்புனற்படர்சடைப்பண்ணவற்கெனினுங்
கனிக்கரும்புயல்வண்ணனுக்காயினுங்கமலத்
தனிப்புராதனற்காயினுமோர்நகர்சமைப்பி
னினித்திருத்துவதன்னகர்நோக்கியென்றிசைத்தான். (௪௨)

சோலையாவையுங்கற்பகமந்நகர்தொகுத்த
சாலையாவையும்பசும்பொனச்சாலைதோறமைத்த
மாலையாவையுமணவணிமயனுளத்தமைத்த
வேலையாவையுமார்கொலோகடைப்படவிரிப்பார். (௪௩)

பொன்னகர்ப்படும்வளத்தொடும்பழகியபுலவோர்க்
கிந்நகர்ப்படுபு[illegible]ாமினிதெனலாகி

யன்னவர்க்கிவையரும்பொருளாகியவதனுற்
றென்னிலஞ்சிறப்பெய்திய தந்நகர்தோன்ற. (சச)

இந்திரப்பெரும்பெயரினேனளகையூரிறைவ
னந்நரத்தினின்றந்நகர்நோக்கினரயனேர்
சிந்தனைக்குமீதரிதெனவயர்ந்தனர்திகைத்தார்
வெந்தசிந்தையராயினர்மயனெடும்வெறுத்தார். (சரு)

சித்தர்கின்னரர்கருடர்கிம்புருடர்கந்தருவர்
வித்தியாதரர்நாகர்போகத்தவர்விருப்பான்
மொய்த்துநோக்கினர்கதிரொளிப்படலமூடியதான்
மெய்த்தவத்தவர்வேறுறக்காண்கிலர்வியந்தார். (சசு)

இனையமாபுரவிஞ்சியுற்றீங்கிவைக்கென்னப்
புனையவேண்டுவயாவையும்பொதுவறப்புனைந்தான்
வினையினுண்ணியகிடந்தனபுலப்படவிரித்தா
னினையநீத்தனன்மற்றையவியற்றவானிவர்ந்தான். (சஎ)

இதற்குமேலெனவெள்ளிவெண்டேக்கெயிலியற்றி
யதற்குளிந்நகாக்கிரட்டியவணிநகரமைததான்
முதற்செயந்நகர்தீப்படுமென்பதுமுடித்தான்
மிதக்குமப்பெரும்புரிசையினளவையார்விரிப்பார். (சஅ)

மேலிவர்ந்தெழுவெள்ளிவெண்புரிசைவிட்டெறித்துக்
காலும்வெள்ளொளிவானகமுழுவதுங்கலந்த
வாலுமானினம்வலையினுமுழையினுமமுதப்
பால்கவிழ்த்தெனமுழுமதிநிலவெனப்பாய்ந்த. (சகூ)

புரைதவப்புரிபுரிசையினிலங்கொளிபோந்து
பரவைமாநிலம்பரக்கலாற்பனிப்படர்நிகர்த்த
திரைபொரும்பெரும்புறக்கடன்முதலியதெண்ணீர்
நிரைநுரைப்பெருங்கடலெனக்கிடந்தவந்நிலவால். (ருo)

வாலொளிப்படுகொடிமதிட்படுவைவானண்டப்
பாலிவர்ந்தெழுபித்திகையளவையிற்பரந்த
தாலுமந்தரத்தியங்கியமுனிவராதற்கு
மேலிவர்ந்தெழலொழிந்திடவடைத்ததுவிண்ணம். (ருக)

இந்தமாநகரியைந்தெழுமிஞ்சிமற்றிதற்குச்
சிந்தைவேண்டுவயாவையுங்குறைவறத்திருத்தி
மூந்தைவானவரமருலகிரண்டெனமுயற்சி
தந்தசிந்தையிற்றமனியவிஞ்சியுஞ்சமைத்தான். (ருஉ)

இயங்குமப்புரத்திஞ்சியினிளவெயிலியங்கித்
தயங்குகீழ்ப்படுவெள்ளியம்புரிசைமேற்றவழ்ந்த
கயங்கடுத்துரித்துடுத்தவன்கயிலைகற்பகத்தின்
முயங்குதாதினங்கவிழந்ததுநிகாப்பனமொழியின். (ருங)

பருப்பதங்களுமாடகப்பொருப்பெனப்பட்ட
வுருக்குசெம்பொனுத்தலங்கினவுருடிைப்பரவை
திருக்குமொற்றையந்திகிரியோற்கெனவிருள்சீத்துப்
பெருக்குமிஞ்சியந்தமனியப்பேரொளிபிறந்து. (ருச)

உலகெலாம்பசும்பொன்னிறத்தும்பரைநிகர்த்த
மலர்தருந்தருகற்பகவனமெனவாய்ந்த
நிலவுவெண்கதிரிளங்கதிர்ப்பரிதியைநிகர்த்தா
னலகிலந்தரம்பசும்பொனுத்தலங்கியதன்றே. (ருரு)

முன்னமைத்திடுமாநகரதனினுமுயன்று
பின்னமைத்திடுநகரணிபெறப்டெரிதமைத்தா
னிந்நகர்க்கவையிரண்டுமொப்பெனவெடுத்திசைப்பின்
மின்னிளங்கதிர்ப்பரிதியைநிகர்க்கும்வெண்மதியே. (ருசு)

கலிவிருத்தம்.

இனையயாவுமெளிதினியற்றினு
னினையுநெஞ்சினெடிதுநெறிக்கொள்வான்
முனைமுகசசெருவெனறடுமூவர்பாற்
கனைகருங்கழறகம்மியவானவன். (ருஎ)

சென்றெதிர்ந்திடுகம்மியத்தேவனை
யொன்றுசிந்தையினேடுமுசாவினு
னன்றுசெயதனயாவுமறைந்தன
னன்றிதென்றுநயந்தனர்மூவரும். (ருஅ)

தெய்வக்கம்மியன்செய்ததிருநக
ரெய்திக்காண்பதற்கெண்ணியெதிர்ந்தனர்
வெய்திற்சென்றனர்மேதினிக்கார்மதி
ஞெய்திற்புக்கனர்மாநகர்நோக்கினுர். (ருகூ)

நோக்குமந்நகர்நோக்கிப்புடைபுடை
போக்குவீதிகண்டார்வம்பொருந்தினுர்
தேக்குபேருவகைப்பெருந்திண்கடன்
மீக்கொளத்திண்புயத்துணைவீங்கினுர். (சுo)

மயனைநோக்குவர்மாநகர்ப்பேரொளிப்
பயனைநோக்குவரொன்றும்பகர்கிலா
ரயனுமித்தொழிலாற்றலனுமென
வியனகர்த்திறமுட்கொடுவிம்மினர். (௬௧)

ஈதியற்கையிதுவெனவீங்கிதன்
மீதியற்றியவெள்ளிப்புரிசையுந்
தீதின்மாநகர்ச்செவ்வியுநோக்குவான்
போதுமென்றுமயனொடும்போயினர். (௬௨)

வெள்ளிவெண்புரிசைப்படர்வெள்ளொளி
யள்ளிவாரியிறைததற்கவிர்தரற்
றெள்ளுகட்புலஞ்சென்றிலசென்னெறி
யுள்ளமோரப்புகுந்தவணுற்றனர். (௬௩)

கண்டகண்கள்கவின்பெறப்பன்மணி
கொண்டமாநகர்நோக்கிக்குழைந்தனர்
மண்டலப்புரம்பின்னிடமாமயன்
றண்டருந்திறத்தாற்சமைத்தானரோ. (௬௪)

எனவுரைத்தனரொண்டிசைக்கோபுர
மனவிழைத்தநுணுக்கமனக்கொள
வினவிமாமயனைததழுவிக்கொளாப்
புனைமொழித்திறம்பற்பலபோக்கினர். (௬௫)

பார்த்தநன்னகாப்பல்வளம்பார்த்தடி
பேர்த்துவைக்கப்பெறுகிலர்பெய்வளைக்
கார்த்தடங்கட்புலோமசைகாந்தனுக்
கோர்த்தபொன்னகரிந்நகரொக்குமே. (௬௬)

எனவியந்தனரின்மொழிகூறினர்
மனனுவந்துமயனைக்கரந்தொடா
வனையமாநகர்நீத்தகன்றூரரோ
புனைசெய்பொன்மதிட்பொன்னகர்ப்போயினர். (௬௭)

சாரச்சென்றுதமனியப்பொன்மதின்
மேருப்போன்றதுகண்டுவியந்தனர்
பாரக்கோபுரமேற்பதம்பற்றினர்
வேரித்தாமரைவிண்ணகந்தொட்டவால். (௬௮)

புள்புக்காடியதாரினர்பொன்மதி
லுள்புக்கார்நகரோங்கொளிமேவலால்

வள்புக்காரொழில்வாளெயிற்றேருருக்
கள்புக்கார்தருநாட்டரிற்காட்டினர். (௬௯)

மணியிழைத்தமரகதமேய்ந்தன
திணிபசும்பொனிற்செய்தனசெஞ்சுடர்
பணிமணிக்குலங்கொண்டுபயின்றன
வணிகொண்மாடமனைத்தையுநோக்கினர். (௭0)

பொன்னிற்செய்தபுயலிடைப்போழ்ந்தெழ
மின்னிற்செய்தனவெண்டரளத்தொகை
தன்னிற்செய்தனதண்படிகத்தொடு
பன்னிச்செய்தனயாவையும்பார்த்தனர். (௭௧)

இந்துகாந்தமெடுத்தெடுத்தேற்றிய
பந்தியிற்படுபத்திநிவந்தமுஞ்
செந்தனிச்சுடர்ச்செம்மணித்தாளர
விந்தமாடமுங்கண்டுவியந்தனர். (௭௨)

வீதிநோக்கினர்மெய்த்திருமாநகர்ச்
சோதிநோக்கினர்பொன்னகர்த்தொன்னிலை
யாதிமாநகர்நோக்கியயர்த்தன
ரோதியாகொலிதற்கெனவெண்ணினர். (௭௩)

ஈதடங்குதற்கண்டமியற்றிய
வாதிநான்முகன்றன்மையறைதுமோ
பேதபேதம்பிறக்கமயன்புரி
தீதில்செய்கையைச்செப்புதுமோவென. (௭௪)

பரக்குமாநகர்பல்வளம்யாவையும்
முரட்டடம்புயமூவருநோக்கலும்
வரப்பெருந்தவமாமயனுங்கவர்
புரக்குமந்தப்புரங்கொடுபோயினன். (௭௫)

மும்மயத்தமுழுமணியிஞ்சியுங்
கொம்மைமுற்றமணியிற்குயிற்றின
வம்மணிப்பெருவாயிலகன்றுபோய்க்
கைம்மலர்க்கரந்தாங்கினன்காட்டினன். (௭௬)

கண்டகாட்சியிற்கண்களிகூர்ந்தனர்
கொண்டகாதல்குழீஇக்கொளப்பன்மணி
மண்டபத்திகல்வாளரியேந்திய
வெண்டருந்தவிசேறியிருந்தனர். (௭௭)

வாளெயிற்றுநிருதாமயன்றம
கேளெனத்தமகிட்டவிருத்திஞர்
மூளுமன்பினுவகைமொழிந்தனா
தோளிணைக்கிணையாத்துணைக்கொண்டனர். (எஅ)

இருகைமூம்மயவிஞசயினையாமுடைக
கருத்தினைப்பக்கவினளித்தீந்தனை
திருத்துசெல்வஞ்சிதைதந்தழியாவகை
சுருக்கில்கேள்வியோய்சொல்லுதியாலென்றா. (எகூ)

அன்னவாசகங்கேட்டனுமாங்கவர்க்
கின்னறீதின்மயஞென்றியம்புவான்
முன்னர்நீவிரியற்றுமுழுத்தவந
தொன்னிலத்தெவர்செய்துதொலேப்பரே. (அ0)

அத்தவத்தழியாவரம்பெற்றனி
லொத்திறத்துநுமக்கிகலில்லையாற்
சித்திரச்சிலேகொணடொருவன்றெற
வொத்ததோர்குறையுண்டுமக்கென்றனன். (அக)

ஆதொழித்துமதாருயிர்வாழ்வதற்
கோதவேண்டுவதுண்டதுணர்த்துகேன்
மாதோர்பாகன்மலரடிசென்னியெப
போதுமேந்தியோர்போதுபுரிதிரால். (அஉ)

என்றுரைத்தனகேட்டினிதாடகக
குன்றவில்லியருச்சனைகோட்டுறு
நன்றிமுற்றுநவிற்றுதியென்றனர்
மன்றலந்தார்மயனுரைப்பானரோ. (அங)

ஆதியாயவுருத்திரவக்கமும்
பூதியும்பொறுத்தாரணம்போற்றிய
தீதிலாகமமுற்றுந்தெளிந்துளத்
தோதுமஞ்செழுத்துச்சரித்தோதுவீர். (அச)

விரித்தசைவபுராணம்விளங்குறத்
தரித்தசிந்தையராகித்தயங்கொளிப
புரித்தவார்சடைப்புங்கவற்போற்றிநீர்
சரித்தல்வேண்டுநுமக்கிவைதக்கவால். (அரு)

மூக்கணுஅடிப்பூசைமுயன்றுசெய்
தொக்கநோக்குமுனிவரரோதிமத்

திக்குநோக்குமுகத்தினன்செங்கண்மான்
மிக்கபெற்றனர்யாவர்விளம்புவார். (அ௬)

இந்திராதியரெண்டிசைக்காவலர்
சந்திரசூரியர்தாரணிமானிடர்
தந்திரத்தொழிற்கின்னரர்தானவர்
வெந்தழற்கணிராக்கதர்விஞ்சையர். (அ௭)

ஏனையோருமிலங்கிழைபாகனைத்
தேனவாமலர்ச்சேவடிபூசியா
ஞானரூபத்தராய்நெடுநாள்கழித்
தானமற்றபதவிபெற்றுய்ந்தனர். (அ௮)

இன்னமன்னவரப்பதத்தெய்தினு
ரன்னமென்னடைபாகனருச்சனை
மன்னுநூலின்வரன்முறைபோற்றினு
ரின்னலற்றினிதூழியிருப்பரால். (அ௯)

மாணிதிக்குவைமாண்புடைமாதரார்
காணருந்திறற்காதலர்கற்பகச
சேணிவர்ந்தெழுதேவரும்வேண்டுறப்
பேணுசெல்வபெருக்கும்பெறுவரால். (௯0)

ஆதலானுமையாங்கவன்பூசனை
பாதுகாப்பதுபற்றுவிடாதிது
போதினன்னவன்சேவடிபோற்றுமென்
றோதினனைவையுட்கொளன்மேயினூர். (௯௧)

மைதருங்களத்தோனைமனக்கொடு
செய்தவர்க்கன்றருச்சனைத்தேவனுய்
வெய்தளித்தனன்வேதமரபினுற்
பொய்யில்கேள்வியர்பெற்றனர்போற்றினூர். (௯௨)

ஏறுயர்த்தவனுயலிங்கத்தின்
பேறுமற்றையர்யாவரும்பெற்றன
ரூறுமஞ்செழுத்துச்சரித்தெந்தைவெண்
ணீறுபோற்றிவணங்கினர்நித்தலும். (௯௩)

காலமூன்றுமருச்சனைகைவிடார்
பாலொளித்திருநீறுபடாதிரா
ராவுருத்திரவக்கமணிந்தனர்
நீலகண்டனையன்றிநினைந்துறுர். (௯௪)

அண்டர்நாயகற்காட்படுமத்திருத்
தொண்டுபொடித்தொழுதுயர்கையினர்
தண்டமிழ்ச்சிவகாதைச்சரிதையுட்
கொண்டுநாத்தடுமாறிக்குழறுவார். (௯௫)

என்பெருக்கணியெந்தைபிரானிடத்
தன்பினேடுமழுதிழிகண்ணினர்
முன்குலத்தொழின்முற்றுமயர்ந்தனர்
நன்குலச்சிவதன்மநடத்துவார். (௯௬)

போதுபோக்குவதெந்தைபிரான்புகழ்க்
காதைகேட்டுங்கடிகமழ்நாண்மலர்க்
கோதைசுற்றியுந்தொண்டர்குழாத்தொடு
மாதியஞ்செழுத்தோதியதிந்துமே. (௯௭)

அணிவதென்றுமுருத்திரவக்கமே
பணிவதீசன்கமலபதங்களே
தணிவதன்றேன்றருமப்பொருளினே
துணிவதெந்தைபிரான்றிருத்தொண்டினே. (௯௮)

திருந்திநோற்பசிவவிரதங்களே
பொருந்தச்சொல்வதபுண்ணியனுமமே
யருந்துகின்றதத்தொண்டரோடாடியே
வருந்திச்செய்வதவ்வானவன்பூசையே. (௯௯)

வேறு.

அம்மாநகரொழுமாமரமைந்தாருவையொத்த
செம்மாமணிப்பால்யாவையுஞ்சிந்தாமணிநிகர்த்த
மொய்ம்மாணகர்ச்சுரபித்திரண்முதுதேனுவைப்போல்வ
தெம்மானிணையடிப்பூசனையெளிதோவரிதம்மா. (௧00)

செந்தாமரைமுழுதுந்தருசெந்தாமரையொத்த
நந்தானவைமுழுதுந்தருநந்தானதையொத்த
கந்தார்கருங்குழலாரருந்ததியொத்தனர்கற்பின்
கொந்தார்சடையவன்பூசனையெளிதன்றதுகுணிப்பின். (௧0௧)

வேண்டப்படுவளமென்பனவினிவேண்டுவவிலவாற்
காண்டற்கருநலத்தாற்சிவகதியொப்பதந்நகர
மீண்டப்படுசிவகாதையினெழுபேரொலியெங்கு
நீண்டப்பணிசடையானருணிலைமைக்களவின்றே. (௧0௨)

தேவத்துருவாமங்கையர்தேவேந்திரன்முதலோ
ரேவற்பணிதலைக்கொண்டனரிடைவிட்டிலரிவரைப்
பாவப்புலன்முதலாயினபகைவென்றனர்பகரின்
மூவர்க்குமிவர்க்கொத்தமுதன்மைத்திறனிலவால். (௧0௩)

இத்தன்மையரொனினுங்குலமுதற்றென்மையையிகழார்
நத்தம்புனைகரத்தோனகர்முதலாயினநகரம்
பொத்துந்திரிபுரத்தோடனெழுகின்றனர்போவா
ரத்தொன்னகர்முழுதுங்கெடவழிபட்டபின்னெழுவார். (௧0௪)

இவரிப்புரமுடனெங்கணுமெழுகின்றனரொறிநீ
ருவரிப்புவியழிபட்டனவிண்ணுடுமுலைந்த
கவர்கற்பகமகவானொடுகெடவுட்டொரகைமுற்று
மவலப்படுமிடரானொடுவடவெற்பையடைந்தார். (௧0௫)

சங்காழிதரித்தோனடிதணிநெஞ்சொடுபணியா
வெங்கேயெமபுகலென்றனரினியென்றதுவெண்ணுக்
கொங்காடுசுரும்பாடியகுல்லைத்தொடைமருமன்
பங்கேருகமடமாதுயிர்க்கொழுநன்சிலபகரும். (௧0௬)

வாசத்தொடையிதழிச்சடைமழுவேறுடையோனைப்
பூசித்தனரவர்மங்கையர்பொலிகற்பினுயர்ந்தார்
நீசத்தொழில்சிலவிட்டனர்நிருதத்தொழினினையா
ராசைப்படுசிவபூசையயர்த்தாகளுமன்றே. (௧0௭)

வல்லொத்தெழுமுலையைப்புடைவைத்தோனவனுலும்
வெல்லப்படுதிறத்தாரலரினியெங்ஙனம்வெல்வோம்
புல்லிட்டருச்சனையாவர்புரிந்தாலுமன்னவர்பால்
வில்லச்சடைமுடியாங்கவனருளோடும்வியப்பான். (௧0௮)

ஆனுத்திரிபுரத்தோர்திறனழியுந்திறனன்றே
மேனுட்டவகிலைகண்டிலிரெனமாயன்விளம்பக்
கானுட்பனிமுகைமாலிகைக்கண்ணுயிரப்பெருமான்
றானுச்சிலவுணர்ந்தானதுதகுமாறெதிர்புகல்வான். (௧0௯)

செயலொத்தெழுமயனிற்பெறுசிவலிங்கமடைந்தா
ரியலொத்தெழுசிவதேசிகரொவரீந்தனரிவர்பான்
மயலுற்றிடுமனத்தாரிவர்வழிபட்டிலரென்றும்
புயலுற்றெழுமின்னெத்தனவிவர்புன்றலைநிலையே. (௧௧0)

ஓமத்தழலவியிட்டதிலுயர்பூதகணத்தால்
யாமப்புரம்வெல்லத்தகுமெனவெண்ணியிசைத்தான்

ருமத்துளவணியுங்கரசங்காழிவரித்தோ
னேமக்கிரிமிசையன்னதுசெய்வானுமிசைந்தான். (௧௧௧)

விண்ணுடருங்கமலாசனமேலோதிமத்தவனும்
கண்ணுயிரத்தவனும்பெருந்திசைக்காவலர்யாரு
மெண்ணுமுழுமறைநான்கொடுமிருந்தாரவைபுரிந்தா
ரண்ணூர்புரமவியக்கனலவிநல்கினரன்றே. (௧௧௨)

வேதத்தொனிமுழுமந்திரவிதியானவிநல்கக்
காதுற்றகணப்பூதர்கணக்கில்லரொழுந்தார்
கேதப்படுபுரமூவெயில்கனலக்கனல்கின்று
ரோதப்படுசிவபூசையினுரிமைத்திறனுணரார். (௧௧௩)

வைவாளெயிற்றனசெங்கைமழுக்கொண்டனவொளிருங்
கைவாளினநெடுந்தண்டினகனற்கண்ணினகளபங்
கொய்வாளரிவதனத்தனபுலிவெங்கொடுமுகத்த
மைவான்மழைமுகிலொத்தனமலையேந்தியகரத்த. (௧௧௪)

கடலொத்தனசிலவூழியிற்கனலொத்தனசிலமா
மிடலொத்தனசிலதென்புலவெங்காலனையொத்த
படலப்படுமுகிலொத்தலறுருமொத்தனபழியா
வடலொத்தகணப்பூதமளப்பற்றவநீகம். (௧௧௫)

எதிருற்றகணப்பூதரையிவரோயினபுரமூன்
றதிரப்பொருதசுரக்குலமறமுட்டுதிரொனன
முதிரப்படுசினவெம்மையமும்மைப்புரமுற்றுர்
சதிரப்படுமெயில்கண்டுதடுத்தாடுமடுத்தார். (௧௧௬)

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

நோக்குநோக்குசிருதரெலாநுணங்குதவளத்திருநீறு
மாக்கியணிந்தவுருத்திரமாமணியுமன்றிப்பிறகாணூர்
தேக்குவிருப்பினெடுமுறைப்பசிவநாமங்களலகேளார்
மூக்கினுயிர்ப்பினுயிர்ப்பதனுற்சிவனேயன்றிப்பிறமோவார். (௧௧௭)

எழுந்துநடந்தகணப்பூதர்க்கெதிர்ந்தவெகுளிக்கொடுவடவை
பொழிந்தகருணைச்சிவநேசப்புனலாலவியப்பொதுநின்றுர்
வழிந்துமிகுந்தபேரன்பினரனைமுறையேவழிபட்டார்
கொழுந்துநிவந்தசினத்திவனைக்கோறற்கெளிதோகுணித்தென்னு. ()

சென்றுபுரத்தினயல்கிடந்தசெழுங்காவனத்துச்செறிந்தீண்டி
மன்றற்கொழுந்தீங்கனிபறித்துமாந்தியழித்தவழிநோக்கா

வன்றுகாவினிடைகாப்போர்புரம்போந்தவர்க்குமறிவித்தார்
க்ன்றுசினத்தினுடனெழுந்துநடந்ததசுரர்கடற்றுனே. (௧௧௯)

எண்ணற்கரியபெருஞ்சேனையெதிரநோக்கியெறும்வலித்தோ
ளண்ணற்கணத்தோர்தருப்பிடுங்கியலைப்பவிருபாலமருடன்ற [க்
விண்ணங்குலுங்க விருநிலத்தோர்வெருக்கொண்டொளிப்பமேருவரை
கண்ணின்றிழிந்தவரிமுதலோர்துணுககமெய்திக்காந்தனரால். (௧௨0)

புரத்தினிருதர்தனிக்கயிலைப்பெருமான்றிருத்தாள்பூசித்த
வரத்தினுமைத்தழலெழுந்தபூதரனைத்துமடிந்தற்று
ருரத்தினவரினொருவரொனுமொழிந்தாரல்லருடன்பட்டார்
முரட்டுநெடுந்தோளசுரவெள்ளந்திரும்பிநடந்தமுப்புரத்தும். (௧௨௧)

ஈதுவிளைத்ததெவரொன்னுமவரொருங்கேயிருந்தோர்ந்து
தாதுமுகிழ்த்தகற்பகப்பூந்தருநாட்டவரொன்றுணர்ந்தபின்னர்ப்
போதல்புரிந்துபொன்னுடுபுகுந்துமறறைப்புலவோர்க்குச்
சாதல்புரிந்தார்பொன்னுலகந்தகரத்தகர்ந்தார்சூலங்கொண்டார். ()

ஒழிந்தபுலவர்வடசைலத்தோடியோடிநாக்குழறி
மொழிந்தமொழியாரரிமுதலோர்த்தொழுதாரீதுமொழிகின்றார்
பொழிந்தவடவைவிழியினவாய்நிருதவெள்ளம்புடைபரந்து
கழிந்தசினத்தினமருலகுமுடியமுடித்துக்கனன்றகன்றார். (௧௨௩)

என்னுமளவிலரிபிரமரமரர்யாருமேக்குற்றுக்
கன்னல்வில்லியுடலெரித்தகண்ணேற்கன்றிக்கடவாதாற்
பின்னன்மவுலியருகடைந்துபுரத்தோரிழைக்கும்பிழையுளைப்பே
மன்னதுணர்ந்தன்னவனபணித்தபணியினிற்பேமெனவடைந்தார். ()

வளருமதியமுழுத்தநிலாக்குழீஇக்கொண்டன்னமணிக்கயிலைக்
கிளைகொண்மணிவாயிலின்மருங்குசென்றார்நின்றார்கிளிமழலைப்
புளகமுலைக்கோரிடங்கொடுத்தபுனிதற்போற்றப்பொழுதின்றி
யளவியளக்குங்கருத்தினராயிருந்தாரயர்ந்தார்நெடுங்காலம். (௧௨௫)

இருந்துநெடுநாள்கழிந்தபின்னரிமையாமுக்கட்பெருமானைப்
பொருந்திமொழிந்தாரலர்கணத்தோரதனுற்புலவோரனைவோரும்
வருந்திவருந்தியரகரவென்றெடுத்துவிளித்தார்வடசைலப்
பெருந்திண்கிரியும்பொதிரெறிந்ததகிர்ந்ததண்டப்பெருங்கூடம். ()

முகுந்தன்முதலோரரகரவென்றெடுத்தகுரலின்முறையீடு
திகந்தமளவுஞ்சென்றளப்பக்கயிலைக்கணத்தோர்சினந்திருகிப்
புகுந்துதடங்கைப்பிரம்பெடுத்துப்புடைப்பமகுடப்புனைமணிவிட்
டுகுந்துதெறிப்பவாற்றலராய்நெடுஞ்சேணகற்றியோட்டெடுத்தார். ()

சென்றசென்றதிசைதோறுஞ்சிதறிச்சிதறித்தனிப்பட்டார்
மன்றன்மலரோனிருமித்தமலர்ப்பூந்தடத்தின்மருங்கடைய
வொன்றியூமியனைவரும்வந்தொருங்குபுகுந்தாருடனிருந்தார்
நின்றுமலரோனுலகளந்தநெடுமாற்கிமையோர்நிகழ்த்துவார். (கஉஅ)

புரத்தினிருதாடுதொழிலாற்பொன்னாடடைதலெமக்கரிது
சிரத்துநிலவுமுடித்தபிரான்கயிலைத்திருவாயிலிற்சென்று
வுரப்புகணத்தர்பிரம்படிபட்டுலைநதேமினியொன்றுவதில்லே
முரட்டுமுரனைச்செகுத்தடாத்தமுதல்வாமொழிதிபுகலென்றார். ()

தறுகட்பகுவாய்த்தாருகன்றானளித்தட்தல்வர்தவமிழைத்துப்
பெறுமப்பேற்றினுமையிடத்தெம்பெருமானிருதாளருச்சித்து
மறுவற்றடைந்தார்பெருவானும்வலியுந்திறனுமதும" ட்டா
திறுதற்கியைந்தபுன்றொழிலாலெடுத்தனமக்கிங்கென்னுமே. (கூ0)

ஓராயிரந்தோட்டிதழவிழ்த்தபொன்னங்கமலமுயிர்த்தவிந்தப்
பேராவியினோர்மருங்கிருந்தெம்பெருமானிருதாள்பூசித்தால்
வாராவெதிர்ந்துதிருவருளும்வழங்கிநினைந்தவாறெல்லாஞ்
சோராதருளுமெனமொழிக்கொண்டவன்பூசனைக்குத்தொடங்கினார்.

எழுதாமறையன்றெடுத்திசைத்தவரம்பினெம்மானிருசரணந்
தொழுதாரன்பினருச்சித்தார்கழித்தாநெடுநாட்டொல்லூழி
முழுநான்மறைக்குமிருவருக்குமெட்டாமுதலோன்முன்னின்று
னழுதாரயர்ந்தார்புளகுற்றுரவலக்கடனீத்தயர்வுயிர்த்தார். (கூஉ)

கொலைவாளெயிற்றுப்புரநிருதரிழைத்தகொடுமைக்காற்றலமா
யுலையாமேருவடபொருப்பினொழித்தெம்பொன்னாட்டவரொய்தி
மலையாவிண்ணோருயிர்செகுத்தார்வானநாடும்பொடிபடுத்தார்
கலைவாணிலவுச்சடைமுடியோய்காத்தியெனசசேவடிவீழ்ந்தார். ()

வீழ்ந்துவணங்குமரிமுதலோர்க்குறித்துவிடையேறுயர்த்தபிரா
ளூழ்ந்தகருத்தினுவகையனடியார்க்கிரங்கியினியருள்வான்
றூழ்ந்தவணக்கமுருத்திரமாமணிவெண்ணீறுதரித்தெம்பால்
வாழ்ந்தகருத்தாஞ்செழுத்துமறவாரெம்மையருச்சித்தார். (கூச)

பூசைத்திறத்துச்சிறிதெனினுஞ்சிதையாரெம்பாற்புராணமுறை
யாசைப்பாட்டின்வழிப்பட்டாரறத்தினொழுகிநெறினின்றார்
பாசத்தினைநீத்தொழிந்தனரேலவர்க்கீறிழைத்தல்பழியன்று
னேசத்தவர்பாளெகிழ்ந்தசிந்தையுடையேம்யாமேயெனநிகழ்த்தி. ()

ஈரக்கடுக்கைச்சடைமவுலியெந்தைபெருமானெழுந்தருளி
வேரித்தருநாட்டிமையவருமற்றையோரும்வெருவந்தார்

வாரிச்சுடிகைப்பாப்பணையோனவர்க்குவருந்தாவழிகாட்டி
மூரிக்கமலத்தயனொடும்வேறிருந்துபொருந்துமொழிக்கொண்டான். ()

மாளாவசுரர்சிவபூசைமயங்கமயக்குமாறெண்ணி
மூளாச்சமணமுனியாகியதற்குவேண்டுமொழிமுற்றித்
தாளார்கமலத்தவற்குவமைசான்றதவத்துநாரதனைக்
கோளார்சீடனெனவருத்திக்கொண்டான்கருடக்கொடியோனே. ()

ஆயகாலமுப்புரத்தையடைந்தாரிவரையசுரரெல்லாந்
தூயரல்லீரொனவிகழவவர்தங்கருத்துத்தோய்ந்தழிவான்
பாயிரத்தபனுவன்முறைபயின்றுபடிப்பான்பவுத்தன்மறு
மாயமயக்குவிஞ்சையெல்லாமெடுத்துவிரிக்கும்வழிக்கொண்டான். ()

பீலிதுடைத்துவழிநடந்துகொல்லாவிரதம்பிடித்தறியீர்
பால்வெண்ணீறுசுடுமவற்றுட்பட்டகிருமிக்களவின்றே
யாலும்புனலைமஞ்சனமென்றெடுப்பீரதனுட்புலானாற்றஞ்
சாலவுணரீர்நும்பூசைதருமாறுளவேற்சாற்றுதிரால். (கங்க)

முத்தியேதுமுத்திபுகுமுறைப்பாடேதுமுறைப்பாட்டின்
பத்தியேதுபத்திதரும்பயனேதுரைக்கப்படுவீரோ
வத்தனொருவனுளனென்பீரவனுமனைவாழ்க்கையின்மயங்கும்
பித்தன்மனைவிமக்களிடைபிரியானவனாற்பெறுவீரோ. (கச0)

சத்தபரிசரூபரசகந்தமென்பீரவைதழுவி
யொத்துநடப்பானொருவனவனிவனென்றுணரப்பெறுவீரோ
பித்துமறவானுமக்கவனையிவனென்றுணர்த்திப்பெறல்காட்ட
வைத்தநிதிபோலவைகாணவல்லீராகிற்சொல்லீரே. (கசக)

என்றுமறுட்டிப்பலவாற்றானெடுத்துக்காட்டியவருளத்தி
னொன்றியுணர்ந்துமுணராமையடைந்துமொருபானிலையிலராய்
நின்றுமயங்குநிலையுணர்ந்தான்மாயப்பவுத்தனெடுநகரக்
கன்றுசினவாளெயிற்றசுரர்முழுதுமயங்கும்வழிகாட்டும். (கசஉ)

மனவுகுயிற்றியொழுங்கிழைத்தபசும்பொற்றகடுமருங்கெடுத்த
புனைசெய்படிகச்சுவரழுத்தியதன்மேற்குயின்றபொற்சிகரஞ்
சினவுகதிரினொளியிருளவிளங்காநிற்குந்திருக்கோயி
லினைவினெழுப்பியதனகத்துளிருந்தான்பவுத்தநெடுமாயன். (கசங)

ஆடைமுதலாக்கலனீறுயமுதமுதலாஞ்சுவையனைத்துந்
தேடும்பொருளினுரியவெலாநினைப்பினிழைத்துச்சிலர்க்களித்தா
னூடுதவிசினிருந்தலத்துற்றுநோக்கிற்காண்பரிதாய்
மாடுபுனையாடரங்கெழுப்பியதுபுக்கிருந்துமயக்கிட்டான். (கசச)

சருகுநுகர்ந்துபருப்பதத்தினருமாதவத்தின்றலைநின்றோ
ரருகுபுகுந்துதனைவணங்கியகலக்காட்டியறிவழித்தான்
றருவினுயர்ந்தகற்பகப்பூந்தாமம்வருத்தித்தனிச்சாத்தி
மருவுநிருதர்கரங்கொடுத்துமயங்காவுளமுமயக்குவனால். (கசரு)

ஆறுசமயத்தவருமுவந்தருகுசார்ந்துபெறற்கரிய
பேறுவிரும்பித்தனைத்தொழுவானெவருங்காணப்பெரிதிழைத்தா
னேறுபருதிதன்னிலைவிட்டிழியக்காட்டுமெரிபகலி
னூறுமமுதகதிரிழைக்குமூறுபேரிருளைப்பகலாக்கும். (கசசு)

புலரிக்காலத்தந்தரத்துப்புலவரொவருங்கற்பகப்பூ
மலரிட்டேத்திக்ககனநிரைத்தெழுதல்காட்டிமதிமயக்கு
முலகத்திரைத்துப்பிரளயம்வந்தெழுதல்காட்டியுடனமைக்கு
நிலவுக்கவிகையொருமூன்றுநிழற்றுங்கடவுணிலைகாட்டும். (கசஎ)

இனையமாயம்பலவியற்றியவனைமயக்கியவணிருபப
வினையினிலைமையுணரராய்நிருதர்மயங்கிவேறுற்று
ரனையபொழுதினாதனையவணந்தொருபாலருகிருத்தி
நினையுநிலைமையுளராகியவன்பாலினையநிகழ்த்துவார். (கசஅ)

கலிவிருத்தம்.

என்னையிவர்காரணமிருக்குநிலையெங்கே
மன்னியபுரத்திவர்வரப்பெறுவதெங்கே
பன்னியவருப்பொடுபெருத்தருடியென்றார்
நன்னிலையவர்க்குணரநாரதனிசைப்பான். (கசகூ)

வையகமனைத்தையும்வகுத்தவனுமேனாள்
வெய்துயிரனைத்தையும்விதித்தவனும்வேறு
வையரிவரன்றியவையாவரறியாதார்
பொய்யில்புலமைத்தலைமைபெற்றனர்பொலிந்தார். (கரு0)

மேருவரையுச்சியின்விருப்புடனிருப்பார்
வாரிதிவளைந்தபெருமால்வரையின்வைகி
யாரருள்புரிந்தடியவர்க்கினிதளிப்பார்
சோர்வறுதவப்பெருமைசொல்லலெளிதன்றே (கருக)

எண்ணியகருத்துணருமெய்ப்பொருளுமின்னே
புண்ணியரளிப்பரிதுபொய்ம்மைநிலையன்றே
யண்ணலடியேற்குமிவையாவுமெளிதாமா
னண்ணியதுநீர்புரியுநற்றவமுயற்சி. (கருஉ)

சீடரிலநேகருளர்சித்தரினுயர்ந்தார்
நாடொலையநிற்குநெறிநன்குறவுணர்ந்தேன்
றுடொழுதிவர்க்கடிமைசாருநெறிநின்றேன்
றேடருமுயற்சிசிலநொய்தினருள்செய்தார். (௧௮௩)

நீவிரதுகாணுநிலையிங்ஙனநிகழ்த்தி
னுவதுநமக்கறிவுறற்கெளிதமைப்பேம்
பாவகநினைந்ததுபகர்ந்தருளுமென்றான்
றேவரெதிரப்படுவசெய்தருளுமென்றார். (௧௮௪)

திண்டிறலெயிற்றசுரர்செட்டவொருசெங்கைக்
குண்டிகையிருந்தபுனலங்கையிறைகொண்டான்
விண்டலமெறிந்துகண்விழித்திலன்முகிழ்த்தா
னண்டவெளியெங்கணுமடைந்தனரடைந்தார். (௧௮௫)

தேமருதுழாய்மவுலியோன்முதலதேவர்
தாமரையினன்முனிவரெழுவரொடுதங்கோர்
காமுறுவிருப்பினொடுகைதொழுதுநின்றார்
யாம்வரநினைந்தபரிசென்கொலருளென்றார். (௧௮௬)

காண்வருவிருப்பொடுசுருந்துறமதிந்தேஞ்
சேண்வருநகர்க்கினிதுசென்றிடுதிரென்றான்
மாண்வருவிருப்பொடுநிசாசரரமதித்தா
ருண்வருமருந்தினிதழைத்திடவுரைத்தார். (௧௮௭)

புன்னிலையமாயவழிபுத்தமிழநினைடபோ
லந்நிலையவர்க்குநுகராரமுதழைந்தார்
மெய்ந்நிலைமைகண்டனர்வியந்தலர்டணிந்தார்
நின்னிகர்சகத்திலையெனத்தொழுதுநின்றார். (௧௮௮)

மற்றையரியாவருமதித்தனவழுங்கட்
பெற்றனர்மயங்கினர்பெறற்கரியவென்று
ரிற்றிதுகிடக்கவினியெங்களையுமின்னோர்
பொற்பதம்வணங்குதல்புரிந்திடுதிரென்றார். (௧௮௯)

நன்றுரைசெய்தீருமதுளப்படுநயப்புச்
சென்றுரைசெயத்திருவுளச்செயலுணர்ந்து
பின்றையினிதும்முழைவரப்பெறுதுமென்று
னன்றவரெழுந்துதொழுதன்னபுரிகென்றார். (௧௯0)

நாரதமுனித்தலைவனுயகனையண்மிப்
போரவுணர்சொற்றனபுகன்றிடலுமன்னோ

ராரறிவனைத்துமொருமாயையினகற்றிச்
சோர்வறவவர்க்கொடுதொழப்புரிதியென்றான். (கசுக)

என்னுமளவிற்கடிதெழுந்துடனடந்தான்
மின்னயிலெயிற்றவர்வணங்கவையின்மேவி
மன்னியதவத்துருவமாதவனிருந்தா
னன்னவர்தமக்கிவையெடுத்தறைவதானான். (கசுஉ)

நீவிர்புகலப்படுவயாவுநினைவோடு
மோவில்கருணைப்படவுரைத்தனனுரைப்ப
மாவிரதிகாள்புலவர்வானவர்வணங்குந்
தேவனருளப்படுவசெப்புவனகேண்மின். (கசுங)

புண்டரநுதற்றவளநீறுபுனைகின்றார்
கண்டிகைபுனைந்தனர்கருத்தவலமுற்றார்
மண்டுநரகம்புகுதுமாமரபினின்றார்
பண்டைமறையென்றுசிலடன்னியழிகின்றார். (கசுச)

முக்குடைநிழற்றிசைமுகக்கடவுளுக்கே
நெக்குருகுசிந்தையொடுநின்றிதபுவிழ்க்குஞ்
செக்கமலமென்னமலர்ச்சேவடிதொழாதே
புக்கவர்தமக்கருள்புரிந்திடுதனன்றே. (கசுரு)

தேமலர்சினைப்பொதுளசோகுடைநிழற்கீழ்
மாமைதருமுக்குடையொருத்தனைவணங்கின்
யாமவனெனப்புரிவதுண்டெனவுரைத்தான்
றேமகலவுங்கணிலைசொற்றிடுதிரென்றான். (கசுசு)

எம்முடையமுற்றவமிருந்தபரிசன்றே
மும்மையமணிப்புரிசைமுப்புரமடைந்தீ
ரிம்மைமறுமைக்குமினிதெய்தி நிலைபெற்றேம்
பொய்ம்மைநிலையற்றனமெனச்சிலர்புகன்றார். (கசுஎ)

பூசனைதுறந்தனர்கணீறுபுனைகில்லா
ரீசனைமறந்தனரொடுத்தநிலைவிட்டார்
மாசொழியுமந்திரமனைத்தையு மறந்தார்
நீசனொனுமுற்குணநிலைத்தனரிழிந்தார். (கசுஅ)

வேதமுறைகெட்டனர்புராணமுறைமேவுங்
காதனெறிவிட்டனர்கருத்தவலமுற்று
ரோதருமுருத்திரமணித்தொடையொழித்தார்
தீதருகுடிபுக்கினர்மயக்கமுறுதீயோர். (கசுகூ)

எழுந்தனர்நடந்தனர்பவுத்தனிருதாண்மேல்
விழுந்தனரிரந்தனர்வியப்புறுமனத்தார்
தொழுந்தகையினின்றனரவர்க்கருள்சுரந்தா
னழுங்குமறுமாயையினொர்மந்திரமளித்தான். (௧௭௦)

அத்தகையமந்த்ரவிதிகொண்டதிசயித்தார்
சித்தநிலைகின்றனசிறப்பினொடுபெற்றார்
மத்தமருளோடறமயங்கினர்முயங்கிப்
புத்தசமயத்தொடுபொருத்தினர்கருத்தை. (௧௭௧)

மூன்றெனவயங்கியமணிப்புரிசைமூதூ
ரோன்றவரியாவருமுணர்ந்தனரொழுந்தார்
தோன்றினர்வணங்கினர்துதித்தனர்மதித்தார்
வான்றுணையெனக்கருதிமந்த்ரவருள்பெற்றார். (௧௭௨)

மூதுணருநாரதமுனித்தலைவனன்றோர்
மாதர்நிலைபெற்றுவளர்கற்பழியும்வண்ணங்
காதொடுநடந்திகல்கருங்கண்மயில்போல்வார்
போதமழியத்தனிபுகுந்திவைபுரிந்தான். (௧௭௩)

கற்புநிலையென்பதெதுகாமனிகலம்பான்
மற்புயமெலிந்துநலம்வவ்வினர்தமக்கே
யிற்படவருத்தியருளின்னலமளித்த
லற்படுகுழற்றெரிவையாக்கழகதாமால். (௧௭௪)

தன்னுயிரெனற்குரியகேள்வர்தழுவுந்தோ
றின்னலமளிப்பதுமனக்கினியதொன்னி
யன்னதுதொழத்தகையகற்பினிலையல்லாற்
கன்னியாதமக்கொருகவின்பெறுவதெங்கே. (௧௭௫)

ஆரொழிலநங்கனைநிகர்ப்பவனையண்மி
வாரிளமுலைச்சுவடுமாபுறவழுத்திச்
சேர்பவர்வயங்கழகுசெல்வநிறைவாணாள்
பேரொழின்மகப்பெறுதல்பெற்றினிதுவாழ்வார். (௧௭௬)

செந்துவரிதழ்ப்பருகுதெள்ளமுதம்வவ்விச்
சிந்தனைமருண்டவர்தெருட்சிமனனெண்ணி
யந்துளிர்வளைக்கையினணைந்துமருவாரோற்
றந்தமுயிர்தம்முடல்வெறுப்பதிடைதாழார். (௧௭௭)

செக்கரொழுவெண்பிறைசெழுந்தழல்விரிப்பப்
புக்கிளையவாடையுயிர்தேடியிடைபோத

செக்குருகுநெஞ்சொடுவருந்துநெறிதேரா
மைக்குழலவர்க்குநிலையக்குழிவழாதால். (களஅ)

பற்றியவிருப்பொடுபசித்தவரிருப்ப
மற்றவர் தமக்கனம்வழங்குநரையொப்ப
முற்றுதுயரக்கடலின்மூழ்குநரையன்றி
நற்றுணைவனொன்றருள் வழங்குவதுநன்றே. (களகூ)

என்றினையபன்னினனருந்தவனிருந்தான்
மன்றன்மலரோதியர்மனக்கவலுழந்தார்
நின்றமுனியைத்தொழுதுநீயிவணெமக்கோர்
நன்றுதிசயப்பொருணடத்தியருளென்றார். (கஅ0)

வானுலகரம்பையரியாரும்வருமாறோர்
மேனிலையுணர்ந்தனனடைந்தனாவிருப்பி
னானவனைநீவிரெவனென்னவவர்யாக்குங்
கானிலவுகாமமருள்கற்பினர்களென்றார். (கஅக)

ஈதுளமதித்தனரிலங்கிழையாயாரும்
பேதுறுமனத்தர்படுகற்பொடுபிழைத்தா
மாதரவர்பற்பலரிடத்துமனம்வைத்தா
போதநிலயர்க்கினியடற்பலபுரிந்தான். (கஅஉ)

வாயின்மறுகெயதுவர்மனகினியர்வந்தாற்
பாயலினழைத்திருடணைப்புயமழுந்த
வாய்வயினமலாக்கைகொடிறுக்குவராதுக்கிச்
சேயிதழகொடுப்பர்புதுமைக்கலவிசெய்வார். (கஅங)

பறபலரிடத்தலதுசிந்தனைபரப்பா
கற்பினெறியென்பதுகழிந்தனரொழிந்தா
ரொற்பமுகிாக்குழியராகியெழிலெய்தும்
வற்பொருதனந்தெரியவீதிமறுகுற்றார். (கஅச)

குங்குமமெழுக்கெறிதருங்குவவுக்கொங்கை
தங்கியறுசுப்பொசிதரும்படியொதுங்கிக்
கொங்கலர்மலாசசிகழிமைந்தர்குவவுத்தோட்
செங்கயலெறிந்துயிர்செகுத்துநகைசெய்வார். (கஅரு)

மற்படுபுயத்தறுகண்வாளசுரரீதே
கற்பெனமதித்தனராருங்கலவிதன்னு
லற்புதமடைந்தனர்மயங்கினராயர்ந்தார்
மூற்கலவியித்துணைகொடாதெனமுனிந்தார். (கஅசு)

## வேறு.

இப்பரிசியற்றினனியைந்தநாரதன்
செப்பிளமுலையவர்கற்பிற்றீர்ந்தனர்
மைப்புயலனையவன்மருங்குசார்ந்தன
னெப்புறவொருவழியிருந்தசாவினன். (௧அஎ)

போரடுவாளெயிற்றசுரர்பூசனை
வேரறமுடிந்ததோவனையமெல்லிய
லாரொழில்கற்புநீத்தகன்றுளார்கொலோ
சோர்வறவுரைத்தியென்றருகன்சொல்லினன். (௧அஅ)

நீறழித்தொழிந்தனர்நிருத்தனின்னரு
ளூறுமஞ்சக்கரத்துண்மைசோர்ந்தனர்
மாறெடுமுருத்திரமணியுநீத்தன
ராறணிந்தவனருச்சனையுமற்றனர். (௧அக)

இற்படும்வாழ்க்கையர்யாருந்தம்முடைக்
கற்பறநீத்தனர்கலவிப்பூசலின்
முற்படுசிந்தையராகிமுன்னினர்
பற்பலர்க்களித்தனரதரபானமே. (௧௯0)

விரதமாதவந்தருவிரத்தன்மற்றொரு
பரமயோகன்குணபரனென்றினனவ
ருரவுமாயையினமதுள்புக்காரல
ரானடித்தாமரையயர்த்திலார்களே. (௧௯௧)

ஆங்கவாதன்மையையளப்பிற்கொன்றையந்
தேங்கமழ்சென்னியோற்குவமைசெப்பலாம்
பூங்கழலருச்சனைப்போதுபோக்குவார
நீங்கிலர்சைவநூனெறியினின்றனர். (௧௯௨)

ஒருபுரத்தொருவராயுறைவராங்கவர்
குருமொழித்ததீசியோகும்பயோனியோ
வருளுபமன்னியத்தறவனேவவர்த்
தெருமருசிந்தையேந்தெரிகிலேமென்றான். (௧௯௩)

அனையதுகேட்டலுமமலநாயகன்
றனதடிச்சீடனாத்தருகவென்றன
னெனையருமடைந்தனரிவரைநோக்கினன்
கனைகழற்றிகிரியோன்கழறன்மேயினன். (௧௯௪)

புன்குலச்சமயமேபொருந்துமூவர்த
முன்புறப்போகலீர்முகமுநோக்கலீர்
வன்புலத்தவரொடுமாறுகொள்கலீர்
தென்புலத்தவரவனொன்றுசெப்பினான். (௧௯௫)

தன்னிலைசிறுவுறநினைந்துதன்னுடைப்
புன்னிலைமாயையினொருவன்போந்துற
முன்னினானங்கவன்முகுந்தப்புத்தனா
யன்னவனுருவுகொண்டமைதன்மேயினான். (௧௯௬)

ஆங்கவனவ்வுழையிருப்பவாடரித்
தேங்கமழ்துளவினான்சேறன்மேயினான்
வீங்குநீர்த்திரைபொருதலைக்கும்வேணியோற்
றாங்கிருங்கயிலையஞ்சாரன்மேயினான். (௧௯௭)

நோக்கியவிருவருங்கயிலைநோக்குறீ
வாக்கியவிழிமறைந்தலம்வந்தாரவ
னாக்கியகருத்தராயொருங்குசிந்தையைத்
தாக்கிநின்றளந்தனாரினையசொல்லினா. (௧௯௮)

சுழிகொணீர்வேணியைத்தொழுதபூசனைக்
கழிவுசெய்தியற்றினேமாதலானம
விழிதெரியாவழிமேவினேமெனத்
தொழுதுயாகையினார்தவத்திற்றாங்கினார். (௧௯௯)

ஊழிபல்கழிந்தனாதவத்தினோங்கினா
ராழிநஞ்சணிமிடற்றவனையாச்சியாப்
பாழியேறுயர்த்தருள்பரமனீங்கிவர்
சூழ்வனதிருவுளத்தடைத்துத்தோன்றினான். (௨௦௦)

பரித்துறுசிந்தையிற்பரிவினானெமை
யருச்சனையாற்றினோர்க்கழிவுசெய்துளந்
திரித்தனிராதலிற்றெரிந்திலீர்விழி
யுரித்தெனாமக்கவையுதவினேமென. (௨௦௧)

மானதவாவியின்மருங்குவானவ
ரானவர்யாவருமடைந்துளாரவண்
டேனமர்துளவினோய்சேறிசென்றபி
னேனையபுரந்தெறற்கியற்றுவீரென. (௨௦௨)

திருவருள்புரிந்தருட்கயிலைசென்றனன்
மருவருந்துளவினோன்மானதப்பெரும்

பொருபுனற்றிருக்கரையருகுபோயினன்
றருகிழற்கடவுளர்தொழுதுசார்ந்தனர். (உ0௩)

அனையவர்தம்மொடுமவணிருந்துழி
முனிவருமமரருமுகுந்தற்போற்றிநீ
புனைபுரமடைந்தவண்புரிந்தவாறெலா
நினைவொடுமொழிதியென்றிரந்துநின்றனர். (உ0௪)

முப்புரமடைந்ததுமுயன்றமாயையா
லப்புரமழிந்ததுமனைத்துநாரதன்
செப்புரவளத்தினுற்செப்பினனுளத்
துப்புரவுடைந்தனரமரர்தொல்லையோர். (உ0௫)

இலங்கெயிற்றசுரருக்கிலிங்கமீந்துள
வலங்கெழுதோளினன்மயனுமற்றையோர்
குலந்தழைதரத்தருகுருவுமாங்குளர்
பொலங்கெழுகிரியாய்புரிந்ததெவ்வணம். (உ0௬)

என்னலுமுயிர்புரந்தளிக்குமெம்பிரா
னன்னவர்க்கியம்புவானவர்க்குத்தம்மிலோர்
பின்னமுண்டாதலிற்பிறந்தசாபத்தாற்
பொன்னிமயாசலத்தலததிற்போயினா. (உ0௭)

அன்னதோவென்றனர்பிரமனாதிய
ரின்னல்கொண்டித்துணையெடுத்தகாரிய
முன்னினோமாங்கதுமுடித்துமென்றுளி
பொன்னவிர்சடையினேற்போற்றன்மேயினர். (உ0௮)

ஆழ்புனன்மானதவாவியாழ்ந்தற
மூழ்கினன்கிடந்தனனினைத்தன்முற்றுவான்
சூழ்சடையவன்றிருப்பூசைசாற்ந்தன
னாழ்பலகழித்தனனுவணவூாதியே. (உ0௯)

தாளுடைத்தாமரைச்சதுமுகத்தனோ
டாளுடையிந்திரனமரர்யாவரு
மூளிருந்தவம்புரிமுனிவரோனையோர்
கோளறுபுனறவங்குறித்துநின்றனர். (உக0)

தீம்புனல்புறவடிதோய்கலார்தெளி
வாம்புனனின்றனரரனையேத்தினர்
வாம்பரிமழவிடைவரதன்சேயொடுந்
தேம்புரிகுழலொடுமெதிரிற்சென்றனன். (உகக)

சென்றதிர்மழவிடைச்செல்வற்போற்றினூர்
நின்றவானவர்நிலைநெடிதுநோக்கிநீர்
நன்றிழைத்திரதுநயந்துளோமினி
யொன்றுளதுரைத்துமென்றுரைத்தன்மேயினூன். (உகஉ)

பரகதிநெறிதருபசுபதிப்பெரு
விரதநீரிழைத்திடவேண்டும்வேண்டினூற்
புரையறவுணர்ந்தனபெறுதிர்போமென
வரனவர்க்கெடுத்துரைத்தருளுமெல்லையில். (உகஙு)

பன்னிருதடம்புயக்குழவிப்பண்ணவ
னன்னயக்குழவிநாடகநடித்தன
னென்னையாளுடையவனிவனைநோக்கலுங்
கன்னிகையன்னதுகடைக்கண்சாத்தினூள். (உகச)

அறனெலாமொருவழிபுரக்குமம்புயத்
துறுமலாத்தாமரைவெரிநுற்றேசினூள்
சிறுவனிச்சிறுநட்நோக்கல்செய்திலாய்
கறைமிடற்றேயெனக்கனன்றுசீறினூள். (உகரு)

முறுவலார்முகத்தினன்முருகப்பிள்ளையை
யுறுபெருங்கருணையினுவந்துநோக்கினு
னறுமலர்த்தளிரடிகுழையநாட்டியஞ்
சிறுதினங்காட்டெனச்செங்கையொத்தினூன். (உகசு)

பேரொழிற்குமரவேளடிக்கும்பெற்றியா
ஞரநான்மலரவன்முதலநானிலத்
தாருயிரனைத்துநின்றுடிப்பாடினூ
வேரசைந்திடச்சினையசையுமெய்ம்மைபோல். (உகள)

சேந்தனைமுருகனைக்குகனைச்சேயினை
மோந்தெடுத்தணைத்தனருச்சிமோந்தனர்
காந்தையுந்தலைவனும்புதல்வற்கைவிடார்
போந்தனர்கணத்தொடுங்கயிலைபுக்கனர் (உகஅ)

ஆயதோரளவையினிவர்கள்யாவருங்
காய்சினவிடையினுனெதிர்ந்துங்கட்கனற்
றீயரைமுடித்திலஞ்செய்வதேதெனு
மேயினர்பசுபதிவிரதமாதவம். (உகக)

விரதமங்கதுபுரிந்தியற்றும்வேலையில்
வாரதிச்சடைமுடிமழுவலாணுணர்ந்

துரவுறுந்தவப்பயனுணர்ந்தநந்திபா
லிரைதருங்கருணையாணியம்பினனரோ. (உஉ0)

அரிமுதற்றேன்றியவமரர்யாவருந்
திரிபுரத்தவர்களாற்றீமையெய்தின
ருரிமையினெமையிரந்துவந்துபோற்றினர்
பரிவுழந்தின்னமும்பரசன்மேயினர். (உஉக)

ஈதிழைத்தாங்கவரியற்றுமெல்லையிற்
போதிநீதிரிபுரம்பொடித்துமாய்ப்பதற்
கேதமில்விரதமேமுதலபாவையுந்
தீதறவியற்றுவான்செப்பிவாவென்றான். (உஉஉ)

வேத்திரக்கரத்தினன்றவளவெண்பொடி
பூத்தொளிர்மேனியன்பூதர்சூழ்வர
நேத்திரமூன்றுடைநிமலன்சேவடி
காத்தருணந்தியங்கடவுடோன்றினன் (உஉங)

நந்திவந்திறுத்தலுநளினநான்முக
னந்தரத்தவரரிமுதலயாவருஞ்
சிந்தையுற்றுயிர்த்தனர்திருக்கைமானுடை
யெந்தைபோற்றிருவருளுளதென்றெண்ணினர். (உஉச)

எண்ணுறுமளவையினந்தியெம்பிரா
னண்ணினனெதிருறநயந்துபோற்றினர்
கண்ணுதல்வானவற்காணுமன்பினர்
புண்ணியற்கிவைவனயாவும்போற்றினர். (உஉரு)

என்னையாளுடையவனந்தியெம்பிரான்
றன்னைநாரணனெடுந்தழுவிச்சார்ந்தனர்
மின்னெளியலங்குநூன்மார்பவெய்திவண்
முன்னிவந்தடைந்தவாமொழிகுவாயென்றார். (உஉசா)

அக்கணத்தவனொடுநந்தியாவெயில்
புக்கமுப்புரத்தொடும்பொருதப்போதுவான்
றொக்கதேர்முதலியதொகுத்தியற்றுவான்
முக்கணனுமக்கெதிர்மொழிந்துவாவென்றான். (உஉஎ)

அதுவுணர்ந்தும்முழையடைந்துளேனெனக்
கதுமெனவீங்கிவைகடிதிற்செய்திரொன்
றிதுவுரைத்தகன்றனனந்தியீங்கிவர்
புதிதிழைத்தனவெலாம்புகல்செய்வாமரோ. (உஉஅ)

## கலிநிலைத்துறை.

மந்தரத்தொடுகேசரிநெடுவரைவாங்கித்
தந்துதிண்டிறலச்செனப்படுத்தினர்தழைக்குஞ்
செந்தனிக்கதிரினைத்தைவெண்டிங்களைத்திருத்தி
யுந்துபேரொழிலாழிகொண்டவைக்கடையுறுத்தி. (௨௨௯)

ஏழிரட்டியென்றுரைத்திடுமிருநிலப்பரப்பைச்
சூழ்தரபபடுநிலங்களீரேழெனதொகுத்தார்
பாழிவாளரிப்பிடரிடுமாசனப்பரப்பை
யாழியொத்தலர்தட்டினோதட்டகத்தமைத்தார். (௨௩௦)

கலைகளாகமவேள்விகள்கார்முதற்பருவ
நிலைகள்கோடியோரேழெனுமந்திரநியமந்
தொலைவிலோரைகடிங்களுற்றயுபடுதொன்றுட்
குலவிருத்தையோகங்கண்மற்றுள்ளனகுணித்து. (௨௩௧)

கடைப்படச்செலுத்தரப்பினைமுதலியகருதிப்
புடைப்படுத்தவணவணெலாந்திருத்தினாபொருத்தி
யுடைத்தெழுங்கடத்தோங்கெழில்யானையோரொட்டு
மிடைப்படச்சுமந்தேந்துவபோலமைத்திட்டார். (௨௩௨)

திகந்தமுற்றியபுயங்கமோரெட்டுமத்திகந்தம்
பகுந்துதாஙகியகுலவரையெட்டுமேற்பரிதி
புகுந்திறங்கியநெடுவரையிரண்டுமேறபொருந்தத்
தகுந்தனித்தனிமதலையினமைத்தனர்தரத்தால். (௨௩௩)

வருணமைந்தெனப்படுவனயாவையும்வருத்தி
யுருள்பெருந்திரையேழையும்வருத்தினரொருங்கே
யருகமைத்திடுகன்னசாலைகளதற்கருகே
மருவுகன்னகூடங்களொத்திருப்பனவகுத்து. (௨௩௪)

இடைபடும்படாம்வெண்மையினியற்றினரிவைக்கீழ்
மிடைபடுத்துவகருநிறபபண்பொடுவேய்ந்து
புடைபடுத்துவசேயொளிப்படம்பொதிந்திட்டா
ரடைபசும்படாம்வெளியமைத்தவணவணமைத்தார். (௨௩௫)

குங்குமத்தனபடாம்படக்கோடிதோறமைத்தார்
தங்குகீழ்த்திரைபெரும்புறக்கடலெனச்சமைத்தார்
பொங்குபேரொளியைந்தொடுங்கொடிஞ்சியும்புனைந்தா
ரங்குநின்றிடைதூக்குவயாவையுமசைத்தார். (௨௩௬)

மன்னுயிர்த்தொகையுரைவக்கும்வானவரொவர்க்கும்
பின்னலந்துழாய்மருமற்கும்பீடிகைப்பொகுட்டு
மன்னுநான்முகக்கிழவற்குமேலதாய்மறைந்தோன்
றன்னையொத்துயர்ந்தொளிர்மணிததனித்தசும்பமைத்தார். ()

எழுதருமறையனைத்தையும்பரியெனவியற்றி
வழுவறக்குறைநிரப்பினரரிமுதல்வானோ
ரொழுகுமாயிரங்கொடுமுடிவடவரையோங்க
றழுவுசெங்கையிற்பிணுகமொத்தமைத்தனர்நந்தார. (உநஅ)

பொறிப்பணுடைவிவாசுகிநாணெனப்பொருத்தி
வெறிப்பசுந்துழாயலங்கலோன்கணையென வியப்பக்
குறித்தவெந்நுதிபாவகற்பொருந்தினாகுதைவாய்ச்
செறித்ததூவலேவாயுவிற்செறித்தனர்திருத்தி. (உநகூ)

முன்னைமாதவக்கடைப்பிடியிருந்தவர்முளரி
யன்னவூர்தியும்வலவனுத்தமர்ந்தனனமையாத்
தொன்னலந்தருகுடிலைமந்திகையெனத்தொகுத்தார்
பின்னர்வானவர்சேனையொத்தெழுந்தனர்பிரியார். (உசo)

மாதிரப்பெருங்கடவுளரொண்மருமறலி
காதுசேனையின்றலைவரிற்பொலிந்தனாகனகச்
சோதிமேருவினுச்சியந்தொன்னகர்ப்பிரம
ஞதிநாரணனரனைவாழ்த்தெடுத்தனரடைய. (உசக)

அருந்தவத்தரோரொழுவருமாசிசொற்றெடுப்பப்
பொருந்துவிஞ்சையர்கின்னரர்பூகதாப்பொருவத்
திருந்துமெல்லிசைத்தும்புருநாரதாசிவன்பா
லிருந்தசிந்தையரருகுநின்றின்னிசைதூக்க. (உசஉ)

ஈங்குவேண்டுவயாவையுங்குறைவறவியறறித்
தாங்குசக்கரதடக்கையான்றழல்விழிப்பெருமா
னோங்குவெள்ளியம்பொருப்புறநடந்தனனெலிநீர்
தேங்குசென்னியன்சினகரக்கடைத்தலைசென்றான். (உசந)

நந்திபாலவனியன்றனயாவையுநவின்றான்
சிந்தைகூர்தரவாங்கவனுணர்ந்தனன்சென்றா
னெந்தைசேவடியிறைஞ்சினனிருந்துணாலங்கற்
பைந்துழாயினோனடைந்தனனென்பதுபகர்ந்தான். (உசச)

ஒருமருங்குன்றமரகதப்பசுங்கொடியோடுஞ்
செருவுவந்தெழுவேட்கையிற்சினவிடையுகைத்து

வருவதோர்ந்தனன்றெழுதனன்மழைமுகில்வண்ணன்
கருணைமிக்கெழுந்தளித்தனனோக்கினன்களித்தான். (உசரு)

அடைந்தவானவரினிதெழுந்தருள்வதுநோக்கி
மிடைந்துவீழ்ந்தனர்பாடினராடினர்வியந்தார
தடங்கொடிஞ்சியந்தேரினைநோக்கினனறையற்
கிடங்கொடுத்தருளெம்பிரானினிதுகொண்டியைந்தான். (உசசு)

மூரிவெள்ளிமிலேறுவிட்டிழிந்தனன்முதல்வன்
மேருமால்வரையொருதனிவில்லொடுமேவித்
தேரினோர்தனியெடுத்துறமிதித்தலுந்தெறித்துப்
பாருமச்சுமற்றிழிந்ததுதோத்தடம்பரப்பு. (உசஎ)

மடுத்தெடுத்தனன்வெள்விடையுருக்கொடுமாய
னெடுத்தவம்பரம்பொறுக்கலானிமுதெனாளைநாசி
விடுத்தெழுந்தனகுருதிநீர்விழித்துணைபிதுங்கிப்
படுத்தவாய்வழிப்புமிழ்ந்தனன்குருதிநீரப்பரவை. (உசஅ)

வெருவியேங்கினாவிண்ணவர்வெள்விடையாய
கருவிமாமழைவண்ணனும்பொறுக்கலன்கவன்று
ணிருதுணைப்பதமடக்கினன்கவிழ்ந்தனனிவற்றாற்
பொருதிறற்கொடுவில்லியைநோக்கினாபுகல்வார். (உசகூ)

எந்தையேயுனக்கடையமற்றெவவுயிர்க்கொருவைக்குந்
தந்தையேயுனக்கடையமெந்தலைவர்க்குமுதலா
மூந்தையேயுனக்கபயமென்றிரந்தனாமொழிந்தா
ரிந்துசேகரன்மாயவற்குறித்தனனிரங்கி. (உரு0)

முக்கணெம்பிரானிரங்கலுமுளரிபூத்தெழுந்த
மைக்கரும்புயல்வண்ணனுக்கெறும்வலிவாய்ப்ப
வொக்கநின்றதுதெய்வவான்றேர்மலருவந்த
திக்குமாமுகன்றன்னொடுந்திகைத்தனர்தேவர். (உருக)

மடந்தைபாகனுமாமழைவண்ணனைநோக்கி
யடைந்தபேருவகைப்பெருங்கடலினுகித்
தொடர்ந்தசிந்தையின்வேண்டுவசொல்லுதியென்றான்
படர்ந்தவார்சடைப்பண்ணவற்கின்னணம்பகரும். (உருஉ)

சத்தியோர்புடையிருக்கவும்யானுமோர்சத்தி
யொத்திடப்புரிந்தருளினையாதுபோலுடையாய்
வித்தகத்தனியேறுனையாயினும்வினையே
னத்தனித்திறலேறெனத்தாங்குதற்கருள்வாய். (உருங)

என்பதாயவ்தளித்தனைனனைமெயஞ்ஞானறு
மென்பதத்துணைமறப்புருதருடரவேண்டு
மின்படுந்திறல்வேணியோயென்றலும்விமலன்
றன்பெருந்திருக்கருணையாலவற்கவைதந்தான். (௨௫௪)

ஓட்டுதேரெனத்திசைமுகன்றன்னொடுமுனைப்பக்
கோட்டுநான்மறைப்பரியுகைத்தியக்கினன்கொடிஞ்சி
நீட்டுதேர்நிலைதிரிந்திலமத்திகைநீட்டிப்
போட்டனன்குலமலரயன்புரவியம்புறத்து. (௨௫௫)

வேதவாம்பரிதங்களினாவனவெருவிக்
காதியோககலுந்திகிரிநின்றசைந்திலகாணு
வோதுசிந்தையின்யாவருமுணர்ந்தனர்வதனப்
போதகத்தினான்செயலெனயர்வரும்புலந்தார். (௨௫௬)

குருத்திளம்பிறைக்கண்ணியோன்றன்மகற்குறித்துக்
கருத்தினோர்ந்துளயாவையுங்கொடுத்தனன்கமழ்பூந்
தருத்தலத்தினோரயனொடுமருச்சனைதந்தார்
மருத்துழாயினோனவ்வணந்தொழுதுளமகிழ்ந்தான். (௨௫௭)

மூதறிந்துணர்கயமுகன்மூடிகத்தெழுந்தான்
சூதமாமுதறடிந்தவன்றோகையினிவர்ந்தான்
சீதரன்பெருங்கலுழனிற்சிறந்தனன்சிறைப்பா
லோதிமத்தினோனோதிமமுகைத்தனனொருபால். (௨௫௮)

புரந்தராதியரென்மரும்புடைபடுங்கரடக்
கரந்தருங்களிறாதியவாகனங்கடவ
வரந்தருந்தவரெழுவருமாசிவாழ்த்தெடுப்ப
விரங்குமின்னிசைதும்புருநாரதரிசைப்ப. (௨௫௯)

விஞ்சைநாட்டவர்மாகதரெனவெதிர்வியப்பக்
கஞ்சயோனியைமுதலினோர்கைதொழத்தகையோ
னஞ்சயின்றவன்றிருமுனநடந்தருணந்தி
யெஞ்சலில்லதோர்வேத்திரத்திருக்கரமெடுப்ப. (௨௬0)

தேவதுந்துமிமுழக்குறச்சில்லரிப்படுதத
பாவுகட்படுசல்லிகையோங்குறப்படர்வான்
மேவுதுள்ளொலிமுரட்டொடுவெம்முழவதிர
வோவில்பேரியமாதிரம்பிளப்பநின்றொலிப்ப. (௨௬௧)

வளைக்குழாத்தொடுவலம்புரிவலம்படமுழங்கத்
தொளைக்குலம்படுகருவியெண்டிசையொடுந்தொடர

முளைத்தவெண்பிறைவெள்ளெயிற்றிருங்கணமொய்ப்ப
விளைத்தவெஞ்சினக்கடவுளர்தானைசூழ்மிடைய. (உசுஉ)

உருண்டவாழியினதிர்குரற்பிரளயமுடைத்துப்
புரண்டகாலையின்மலையினமும்மடிபொலிய
வரண்டரும்புரமோரிடத்தமர்ந்தனவந்நாண்
முரண்டருந்திருத்தேர்நடந்தெதிர்ந்ததுமுன்னி. (உசுஙு)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மாயன்மாயையினிருங்கடற்படிந்தெழாவாளெயிற்றசுரர்க்கன்
றேயகண்களுநதிண்டிறற்புயங்களுமிடந்துடித்தனவன்னோர்
சேயிழைக்குலமங்கையர்மங்கலங்கழன்றனசிறைக்காக
மூய்கொடுஞ்சிறைபிணங்கிவீழ்ந்தெழுவனமுன்றிலங்கணமெல்லாம்.

என்னையாளுடைநாயகன்பூசையாலெழுந்தகற்பகமெல்லாம்
பின்னரொங்ஙனம்போயினகண்டிலர்பேரிருட்கனவெல்லாந்
துன்னலம்பெறககாண்பனவன்றிநன்னலத்தொடர்காணாராற்
பொன்னலங்கொளிமாளிகையிருளொடும்பொடிந்தனடகற்காலை. ()

மணிமதிட்புரத்தவரிவைநோக்கினாவருந்தினரதுகாலை
யணிமணிக்களத்தனையிரந்தேததினரரிமுதலிமையோர்க
டிணிதடஞ்சிலைகுழைதரவளைத்துநீசெலுத்துதியம்பென்றுப்
பணியவாசுகிகுதைமடுத்தேற்றினன்பணிமதிச்சடையோனே. (உசுசு)

இடத்திருக்கரமேருமால்வரைச்சிலையேந்தியூன்றியதன்றேன்
மடற்சரோருகவலம்படுமலர்க்கரம்வாளிசுற்றியதாங்கண்
புடைத்தவெம்முலையிமாசலைதிருமுகநோக்கினன்புன்மூரற்
படுத்துநோக்கினனெழுந்ததுபுரமெனுமூன்றினும்படலைத்தீ. (உசுஎ)

அருப்பவெண்ணிறத்துய்யிடைட்பெருங்கனலடுத்தெனவணிமூர
லுருத்தவெந்தழறகொழுந்துறவெண்ணிறத்தடலையினெழுந்தற்ற
திருத்துமாணிதிச்செல்வராயிரப்பவாக்களித்துருத்தீயோர்தம்
பெருத்தசெல்வநீத்தொழிந்தெனமடிந்தவப்பெருநகர்ப்புரமூன்றும். ()

ஆனமாயையினகப்படாதரனடியருச்சனைக்குறியோரா
மோனமாதவராகியமூவருமுரிதிரைப்புனற்பூத்த
தேனவாமலர்த்தாமரையொத்ததம்மனையொடுஞ்சிறப்புற்றார்
பானலங்கருங்கண்ணியோரிடத்தனையடைந்தனர்பணிந்துற்றார். ()

மெய்பொடித்தனர்கண்கணீர்ததும்பினர்விம்மினர்வியப்புற்றார்
செய்யதாமரைச்சேவடியுளம்படச்சிந்தைசெய்தனர்நின்று

னையனுங்கவர்க்குறித்துநீர்வேண்டுவயாவெனவருள்செய்தான்
பொய்யில்கேள்வியோர்நந்தியோடிருங்கடைகாப்பதுபுரிகென்றார். ()

வாலொளிப்படுகயிலையங்கிரிதருசினகரமணிவாய்ந்த
வாலயக்கடைகாப்பதியாவர்க்குமளித்திலமாறுலு
நூலியற்கையினுங்களைமகிழ்ந்தனமாதலினுமக்கந்தக்
கோலவாயில்காப்பளித்தனமென்றனன்குளிர்சடைப்பெருமானே. ()

பங்கயாசனத்தவனையேமுதலினோர்யாவர்க்கும்பணிவெற்பின்
மங்கைபாகன்வேண்டினவரமியாவையும்வரன்முறைபணித்தீந்தான்
பொங்குமுப்புரத்தலைவரம்மூவரைக்கணத்தொடும்புகவிட்டா
னெங்கணுயகன்கணங்களோடணிமணிக்கயிலையினினிதுற்றான். ()

பதுமபீடிகைத்திருமகட்கிறைவனைமுதலினோர்பணிப்பிள்ளைப்
புதுநிலாவணிவேணியோன்றன்செய்னினைந்தனர்புதுக்கொண்டா
ரொதுகொடுந்துயரடைந்தனநமக்கதுதுடைப்பதற்கிடைநின்றான்
முதிருமாதவத்தருமகப்பெற்றவர்காப்பதுமுனிவாரோ. (உஎங)

வெள்ளைவெண்பொடியிகந்தவருருத்திரமாமணிவெறுப்புற்றார்
தெள்ளுமாமறையஞ்செழுத்தோதுறார்சிவனருச்சனைசெய்யார்
பள்ளவார்கடனெடுநிலத்தருந்தவம்பற்பலபுரிந்தாலுங்
கள்ளவாழ்க்கையராங்கவர்கருத்திறைநினைப்பதுங்கடனன்றே. (உஎச)

எனமொழிக்கொடுமானதவாவியினெந்தையெம்பெருமானு
மனனுவப்புறவருச்சனைவகுத்தனர்பற்பலமகிழ்பெற்றார்
தனதெனும்பதத்தடைந்தனர்மன்னரிற்றமைசெவித்தனிப்பூட்கைக்
கனைகுரற்களிறுரித்தவன்றன்மையாங்கழறுதற்கரிதன்றே. (உஎரு)

திரிபுரத்தவரொருங்கிருந்தருசசனைசெய்திகழ்ந்ததனாலே
யரிதெனுந்திருப்பெற்றிழந்தனாகண்முற்புரியருச்சனைப்பேற்றா
லுரியநன்கணத்தலைவராய்ப்பொலிந்தனருமையிடத்தவற்போற்றித்
தெரிதரப்புரிபூசையாலிமையவர்திரிபுரந்தெறப்பெற்றார். (உஎசு)

பெறலரும்பதமிழந்தவானவர்சிவனருச்சனைபெறப்பெற்றாங்
குறுபெரும்பதம்புகுந்தனரரியொடுநான்முகத்துயர்புத்தே
ணறுமலர்ப்பழுதகற்றியபூசையாற்றம்பதநணுகுற்றா
ரறலுவட்டெறிசடையினேன்பூசனையரிதெமக்கெளிதன்றே. (உஎஎ)

ஆருயிர்ப்பொறையெடுத்துமாநிலத்துறினுகொலப்பட்டனபட்டும்
வார்புனற்சடைப்புனிதனுக்கருச்சனைவரன்முறைதரவேண்டு
மோரினப்பெரும்பூசனைக்கருமமேமுதலினவொருங்கியு
மாரதற்குளபெருமைபெற்றிசைப்பவரெம்மனோர்க்கெளிதன்றே. ()

மணிதராயினும்வாளெயிற்றசுரரேயாயினுநெடுவானிற்
புனிதராயினும்விஞ்சையராயினுமியக்கராயினும்போற்றற்
இனியமாதவராயினுநாகர்கந்தருவராயினுமெம்மான்
பனிமலர்ப்பதத்தருச்சனைக்குரியனைப்பரசுறக்கடவாரே. (உஎகூ)

திரிபுரவிசயச்சருக்க முற்றிற்று

ஆகச்சருக்கம் உ அ-இ) தருவிருத்தம். ௩சகூரு

## உகூ-வது அந்தகாசுரன் வதைச்சருக்கம்.

கலிநிலைத்துறை.

மின்னெத்தொளிர்வாளெயிறந்தகவெய்யதீயோன்
பொன்னெந்ததொளிர்வார்சடைப்புங்கவன்பூசைபோற்றி
வன்னத்துளவோன்முதற்றேன்றியவானுளோருக்
கின்னறபுரிந்தானதுகூதனியம்பலுற்றேன். (க)

பெயராவலியந்தகனென்றெருபேரினின்றான்
புயலேறுநிகாத்ததிசாசரன்பொங்குசேனை
யயல்சூழ்தரவந்தகற்கந்தகனையதேவை
மயர்வற்றதிறத்தொடும்பூசைவகுத்துநின்றான். (உ)

அரியேமுதலாகியதேவரினுவிநீங்கிப்
பிரியாவரனும்பிறழாவலிப்பேறுமுற்றான்
விரிதாருவின்கீழலின்வெண்குடைமீவிளங்கப்
புரியாசனத்துற்றவன்றன்னடிபோற்றநின்றான். (௩)

பைந்தாதளைகுல்லையந்தாமனைப்பண்டுபூத்த
வந்தாமரையோனையுமேவலினுடல்கொண்டான்
சந்தாடுபுயத்தினவுறறனென்றந்தபோரிற
பிந்தாதவரில்லையமாக்களம்பெறறுளோரின். (ச)

எய்தார்விடரொய்தினராற்றலமென்னநின்றா
மைதாழுமனத்தலையஞ்சினர்வானுளோர்கள்
பைதாழ்ந்டித்தபிரானெடும்பைதலுற்றார்
வைதாழெயிற்றந்தகன்றன்னைமருங்குசார்ந்தார்.

நின்னன்றியெம்மைப்புரந்தாள்டவர்யாவர்நின்னு
லின்னுந்துயரொய்தினமென்பதுருமையெம்பாற்
பன்னும்பணியைத்தலைக்கொள்ளுதும்பாதுகாப்பாய்
மின்னுந்தனிக்கூரிலைவிட்டுவிளங்கும்வேலோய் (ரு)

என்றுனிமையோரொடுசக்கரமேந்துகையான்
குன்றுயதடம்புயநோக்கினன்கூற்றமன்னுன்
பொன்றுழ்மணிமோலிதுளக்கினன்போற்றிமுன்னர்
நின்றுன்முகநோக்கினனமூரணிகழ்த்தினுனல். (எ)

அடுபோர்வலித்திண்டிறல்வாளரியேறியானே
கெடுநாளுடைநீவிரொல்லோர்களுங்கெண்டையங்கட்
படுவால்வளைச்செந்துவர்ச்சேயிதழ்ப்பாவைமாரொத்
திடுவீரெனச்சொற்றனன்பின்னுமிசைப்பதானுன். (அ)

செந்தாமரைக்கட்கடையஞ்சனந்தீட்டியம்பொற்
பைந்தானையுமன்னவர்க்கொத்தபரிந்திறுக்கி
யந்தார்க்கிளியென்னமிழற்றியரிக்குலஞ்சூழ்
கொந்தார்குழலென்னநும்பங்கியுங்கோத்தமைத்து. (கூ)

பூணப்படுபொற்பணியப்பணிபூண்பதன்றிக்
காணப்பெறினும்முயிரன்றுகழிப்பதுண்டாம்
சேணப்பதமேகுதிரொன்றனனன்னதேவர்
நாணப்படுவாரலராவிநயந்துசென்றுர். (க௦)

வெய்யோனிவைசெப்பலுமாலயன்விண்ணுளோர்கள்
பொய்யாயநுசப்பிளையாநலம்போற்றிநின்றா
மையாயமனத்தினனந்தகவாளரக்கன்
செய்யாதனயாவையும்பின்னருஞ்செய்தடர்த்தான். (கக)

குயில்போன்மொழிக்கொம்பரன்னுகுணங்கொண்டுமன்னே
ரயில்வாளெயிற்றந்தகன்செய்வனவாற்றலாராய்ப்
பயினீண்முடிமந்தாரஞ்சென்றனர்பண்டையோர்மூன்
றெயினீறநகைத்தவற்போற்றியிரந்துநின்றா. (கஉ)

அங்கோல்வளைபங்கனருசசனைக்கன்பினோராய்ச்
செங்கோகனகத்திருக்கண்ணினன்றேவர்யாருந்
தங்கோல்வளைக்கைகொடருச்சனைதந்துநின்றா
வெங்கோலவிடைக்கொடியோனருண்மிக்கெழுந்தான். (கங)

வள்ளேறியமுத்தலைச்சூற்படைமங்கைபாகன்
வெள்ளேறுகைத்தெய்தலும்வேதபுராதனற்கும்
புள்ளேறுகைத்தோற்கும்விணணேயபுத்தேளிருக்கு
முள்ளேறியினைத்தெழுந்தார்வமுவட்டெழுந்த. (கச)

கொலைவாளெயிற்றந்தகவாசுரன்கூற்றமன்னு
னிலையாவிடர்செய்தனனுற்றலமாகிநின்றேம்

கலைவாண் மதிவாண் முகப்பெண்மைகரந் துகின்று
முலையாவெமக்கின்னலிழைப்பதொழிந்திலானல். (கரு)

அதுகாத்தெமதாருயிர்க்கன்பினிரங்கியைய
புதுவாழ்க்கையளித்தவனேச்சியபுண்டரீம்பின்
முதுகாற்றுதியன்னதுசெயயமுயன்றிலாயே
லெதுநாட்களையேறுதுமென்றெடுத்தேத்தினரால். (கசு)

புரமூன்றுதழற்படவாணகைபூத்துநின்ற
சிரமேந்துகரத்தினனுங்கதுசிந்தைசெயயா
வரனேங்கிமவானருண்மாமடமங்கையேவற்
கரவால்வளையாரொடுநீவிர்கரந்திரென்றான். (கஎ)

உமையாளுயிர்ப்பாங்கியாபாங்கினுவந்துநிற்பி
னுமையாங்கவனின்னலிழைத்திடநோக்கினனே
லிமையாமுனமன்னவன்போர்வலியென்பதொன்றை
யமையாதுமக்கந்நிலையஞ்சலளித்துமென்றான். (கஅ)

இருளுங்கறைக்கண்டனவாக்கெனவன்றிரங்கி
யருளும்படிநின்றனனுங்கதரக்கரேரா
மருளுந்தனிசெஞ்சொடுவெஞ்சினமாறுகொண்டா
னுருளும்புரிவார்சடையோன்றிறத்துன்மையோர்வான். (கக)

வெள்ளப்படைகொண்டொருமந்தரவெற்பினெய்தி
வள்ளைக்குழைமங்கையொன்னவளைந்து நின்ற
பள்ளத்திருப்பாற்கடலோன்முதற்பண்ணவர்க்கன்
றுள்ளப்பயமெய்துறவெம்மையுடற்றிநின்றான். (உ0)

அனனனமராடலுக்கஞ்சியன்றேரகன்று
பொன்றாகயிலைத்திருவாயிலபுகுந்துநின்றா
பன்னகமணிந்துணைநூபுரப்பங்கயத்தோன்
முன்னுவடுகக்கடவுட்கவன்மொய்ம்புரைத்து. (உக)

சென்றுற்றவனுவிசெகுததிடுமாறுசெப்பக்
குன்றேத்தபுயக்கடவுட்குவெங்கோபமுற்றி
யன்றற்றெறுவாளெயிற்றந்தகனுவியுண்பா
னென்றேத்தெரிகட்கணத்தோரொடுமெய்தினனல். (உஉ)

கண்டானதுதிண்டிறலந்தகன்காலனேப்பான்
கொண்டான்வடவைக்குநிகாத்தெரிகோபவெந்தீ
மண்டாவமர்தம்மின்மலைந்தனர்வாளரக்கர்
திண்டாடினரஞ்சினரந்தரத்தேவர்யாரும். (உ௩)

முறிபட்டனவாளெயிற்றந்தகன்மொய்த்தசேனை
தறிபட்டது தண்டொடுசக்கரம்பிண்டிபாலம்
பொறிபட்டதுமண்படுதூளிபொதிந்தவானம்
பறிபட்டனசெங்கதிரோனுடைப்பச்சைவாமா. (௨௪)

துள்ளுந்திரையோடுபரந்ததுசோரிவாரி
கொள்ளுந்திறனின்றிநெடுங்கடல்கோத்தலைப்பக்
கள்ளுண்புலையாக்கையராவிகழிந்துபட்டா
ருள்ளுஞ்சினவந்தகனெஞ்சமுருத்தழன்றான். (௨ரு)

வடுகக்கடவுட்பெருந்தேவனும்வாளெயிற்றுக்
கடுவொத்தெழுமந்தகனோடுகனன்றுநின்றா
னடுவுற்றனன்வெள்ளிகைதந்தருணன்மருந்து
கொடுபெற்றனராவியிறந்தவக்கொண்டலொப்பார். (௨சு)

அக்கண்மயமில்லவராவியடைந்தவாறுந்
திக்கண்ணிநெடுஞ்செருவன்னவர்செய்தவாறு
முக்கண்ணனுணர்ந்தனன்வெள்ளியைமுன்னரள்ளி
விக்கின்றிலனெய்தினெடுத்துவிழுங்கினானால். (௨எ)

மல்லாடுதடம்படுதிண்புயமாகணத்தோர்
கொல்லாவசுரப்பெருந்தானைகுறைத்தறுத்தார்
செல்லாவடுகத்தனிநாதனுந்திண்டிறறபோர்
வல்லானுமெதிர்த்தனரூழிமலைந்துநின்றார். (௨அ)

ஞாலப்படுமன்னுயிரியாவுநடுங்கவூழிக்
காலக்கடலென்னவருந்தறுகட்கடுந்தீ
யாலத்திருளேறெனுமந்தகன்றன்னைமின்னுஞ்
சூலததொடுகுத்தியெடுத்தனன்றொல்லையோனே. (௨௯)

பத்தாயிரகோடியெனும்பருவங்கடக்க
முத்தாரையயிற்படைகொண்டனன்மொய்த்தசோரி
நெய்த்தாரையுணங்கியொழுக்குறநின்றநீதி
பொய்த்தானையுணக்கினன்வெந்திறற்பூதநாதன். (௩0)

முதலிக்கணைநெற்றிவிழிக்கனன்மூட்டிவென்ற
குதலைக்கொடிபங்கனிடத்தெதிர்கொண்டுசென்றான்
விதலைப்படுவெந்திறலந்தகவெய்யனைக்கார்க்
கதலிக்கொடியாமெனமுன்னரிற்காட்டினானால். (௩க)

கைகாலிடைதூங்குறவீங்குகடற்கடுங்கார்
மைகான்மணிகண்டனையர்தகன்வாய்வழுத்த

நெய்காளொடுமுச்சிகைச்சூற்படைநீக்கிநோக்கி
யுய்காரணம்வேண்டுவயாகொலுரைத்தியென்றான். (௩௨)

மாதுக்கொருபங்கனையங்ஙன்வணங்கியைய
பூதர்க்கொருநாயகனுகுதல்போற்றிநின்றே
னீதக்கதெனப்பணியென்றுநிகழ்த்தினனப்
போதத்தலையன்னவற்காதுபுரிந்தளித்தான். (௩௩)

வேறு.

பிரசுரன்றனையுதரம்வைத்தருளியபெம்மா
னுரவுமன்னவன்செருக்கொழிந்ததுகருத்துணர்ந்தான்
மரபினீட்டியவருடமையாயிரத்திரட்டி
விரவிநீங்கியபின்னரின்வெள்ளிடைவிடுத்தான். (௩௪)

முக்கணாயகன்றிருவுதரத்தொடுமுயங்கிச்
சுக்கிலத்தொடுந்தோய்தலாற்சுக்கிரனெனும்பேர்
தக்குநின்றனன்பாரக்கவன்றயங்குநாட்கிரகம்
புக்கபேரொளிமூங்குறவிளங்கொளிபொலிந்தான். (௩௫)

ஆடராப்புனைவேணியோற்கருச்சனையயர்ந்து
பாடகன்றுதன்னிலைபுகுந்தடைந்தனன்பன்னு
ளோடரித்தடங்கண்ணியருருவுகொண்டடைந்த
தோடநீத்தனா[illegible]வருந்தம்பதந்தொக்கார். (௩௬)

அந்தகாசூரன்வதைச்சருக்க முற்றிற்று.

ஆகச்சருக்கம் - உகூ திருவிருத்தம் - ௩௫௩௨.

## ௩௦ - வது. பண்டாசுரன்வதைச்சருக்கம்.

இனிப்புகன்றனயாவையுமொழியமற்றின்னும்
பனிக்கொடுஞ்சடைப்பண்ணவன்பூசனைபயின்று
தனிப்பெரும்பதம்பெற்றனவுரைக்குதுந்தவத்தீர்
கனித்தசிந்தையிற்கேட்கெனப்பின்னருங்கழறும். (௧)

ககனமுற்றனவிளநிலாவெறித்திடுங்கயிலைச்
சிகரநீத்தெழுமகேச்சுரனுமையொடுஞ்செல்லா
நகைமுகிழ்த்தலரிருஞ்சினைநறுந்தழைப்பொதும்ப
ரகவைநோக்குவான்கணத்தொடுமினிதெழுந்தருள. (௨)

கனைகுரற்சுரும்பினத்தொடுந்துதைந்தெழுகற்றை
வனைமலர்க்குழலம்பிகைமலர்க்கரந்தாங்கப்
புனைபுனற்சடையெம்பிரான்பொன்னடிசாத்த
வனையசோலைமற்றியாவையும்பவித்திரமடைந்த. (௩)

குழைத்தமென்சினைக்கொம்பர்சூழ்பொதும்பர்காப்புடையோ
ருழைத்திருக்கரத்தெந்தையையுமையொடும்வணங்கித்
தழைத்தமல்லிகைப்பூங்கொடிதவழ்ந்தலருயிர்க்கு
மிழைத்தமென்கனிப்படப்பைமுற்றெங்கணுமெய்தி. (௪)

திருக்கணோக்கினனெந்தைதன்னிடம்படுதேவி
யருட்கணோக்கினளாதலாலாங்கவையனைத்து
மருக்கசிற்பனயாவையுமருத்தனவினிமேற்
குருக்கவேண்டுவயாவையுங்குருத்தெழுந்தனவால். (௫)

கனியசிற்பனகனிந்தனமுகையம்பொதும்பர்
பனிநறுந்தளிரீன்றனபூத்தனபசும்பொற்
புனிதமென்கனிதூக்கினபொலம்பணைச்சினைக்க
ணனிநறுங்கனிகாலநீத்தளிததனநடுவண். (௬)

சந்தவார்பொழிற்றடம்பணைத்தழைமுகத்தீன்ற
பைந்தளிர்ப்புறத்திழிந்தனகிடந்தனபசுந்தா
துந்தரும்பசும்பொற்றகட்டொருங்குறக்கவிழத்த
சிந்துரத்துகளாமெனச்சினைதொறுஞ்சிறந்த (௭)

அள்ளியபபுறசிழற்றியவாரிருட்பிழம்பை
வெள்ளவேணியினிடைப்படுவெணணிலாக்குழவிப்
பிள்ளைவாணிலாக்கவர்ந்ததப்பெருநிலாப்பரப்பை
வள்ளனெற்றியங்கட்கடைநுகர்வதோர்மருங்கு. (௮)

குழைப்பசும்பொனினவமணிகுயிற்றியகொம்ப
ரிழைத்தபேரொளிகலத்தலாலிராப்பகலென்ன
விழைத்தசிந்தையிற்பகுத்துணர்ந்தறிவரிதென்றூற்
றழைத்தபூம்பொழிற்கேதுமற்றறிவரோதக்கோர். (௯)

வெள்ளிவெண்டிரைநுரைதிரைத்திரங்குபால்வேலை
நள்ளுமந்தரந்திரித்தமுதெடுக்குநாளலங்கற்
றெள்ளுதேத்துழாயவனுருத்தெறிந்தபேரமுதப்
புள்ளியொத்தெனமலர்ந்தனகருஞ்சினைப்புன்னை. (௧0)

ஈரநாண்மலரொருசினையீர்ங்கனியொருபாற்
பூரியேந்தியதொருசினைபொலங்கலனொருபா

லாரமேந்தியதொருசினையிரப்பவர்க்களிப்பான்
சாருமன்பினர்போன்றனதெய்வமாத்தருக்கள். (கக)

பலங்கள்யாவையும்பொதிந்தனபாசடைபரப்பிப்
புலங்களெய்துறுதிருஞ்சினைநெருங்கிமீப்போகிக்
குலங்கொண்மாநிதிபொதுக்கிநல்குரவினர்க்குதவா
வலங்குசெல்வரைநிகர்த்தனமாம்பொழிலடவி. (கஉ)

ஊடொதுங்கினர்க்கின்னிழலினிதெனவுதவித்
தோடவிழ்ந்தபூங்கரங்களுக்கணித்தெனத்துணர்த்துப்
பாடிரந்தனர்கொண்மெனப்பொன்பரப்பினர்போற்
கோடரந்தொறுமலர்ந்தனபொன்னிறக்கொன்றை. (கங)

மறிக்கொழுங்கதிர்முழுநிலாவாலிளங்குழவி
யெறிந்தவார்சடையெம்பிராற்கினிதெனலாக
வெறிததசெங்கதிர்ச்சிறுவர்ங்கதீகொடுவெதும்பிக்
குறித்துநோக்குறுந்தன்மையொத்தலர்ந்தனகோங்கம். (கச)

கார்த்திகேயனக்கடற்படுமாமுதறடிய
மீத்ததும்புசெங்குருதியின்மிதந்திளமென்கால்
சாய்த்திறுந்தொறுமசைந்தகன்றடம்பணைகுழைந்து
பூத்தபாசடைக்கிடையிடைபிண்டிபூத்தலர்ந்த. (கரு)

ஓரந்தாங்கியவேர்முதற்றடம்பணையுமிழந்த
வாரந்தாங்கியசினைதொறுங்குடக்கனிவழங்கி
யீரந்தாங்கியகருணையினிருங்கிளைபொறுக்கும்
பாரந்தாங்குறுமொருவனைப்பொருவினபனசம். (கசு)

ஒருங்குவார்கலைமதிபிதிர்த்துருட்டியவனைய
வரும்புமுல்லைமீபடந்தரினிடைமிடைந்தலர்ந்த
பிரிந்துசேயொளியுடுக்குலம்பிறழந்தகனெடுவான்
றிரிந்துதுணடமிட்டகனிலங்கிடப்பனசிவணும். (கஎ)

மழப்பசும்பிறைநெற்றியோர்மரகதக்கொம்டர்
மிழற்றுவாய்மலர்க்குவமையொத்திலமெனவெள்கி
யுழக்குதன்பொடுங்கண்டகமூடறுத்திடமென்
பழத்தொடுந்தலைகவிழந்ததுமாதுளம்படப்பை. (கஅ)

இனையகாவகத்துழைதொறுமுழைதொறுமியங்கிப்
புனைகருங்குழலுமையொடுநோக்கினன்புகலு
மனையபூம்பொழிலகவையுட்பளிங்கரிந்துடுத்த
வனைமலர்க்குழாம்பொதுளியதடத்தயல்வந்தான். (கக்ஷ)

ததும்புதண்புனற்பொய்கையந்தடங்கரைப்புகலு
மொதுங்குமோதிமமுதலியமிழற்றுதலுவரி
பதுங்குநஞ்சணிமிடற்றினன்பதங்களிப்பார்மேல்
வெதும்பிசிற்பனகண்டெடுத்தரற்றுதன்மேவும். (உ0)

கயங்கொடாமரைகண்கரங்கழற்றுணைகாட்ட
வயங்குபாசடைதிருவுருக்காட்டவெள்வளையுந்
தயங்குநேமியும்பொறுத்தனன்சீதரன்சடிலப்
புயங்கனைத்தொழப்புகுந்ததுபோலுமப்பொய்கை. (உக)

புண்டரீகமீப்பொலிந்தவெண்டாமரைப்பூவை
யெண்டரத்தருகலனொடுமினிதுபெற்றெய்தி
யண்டர்நாயகற்றொழத்தகுவேட்கையனாகிப்
பண்டைநான்முகன்புகுந்ததுபோலுமப்படுகர். (உஉ)

அரம்பைதன்மருங்கணைத்ரவங்கமுற்றலர்ந்து
நிரந்தகண்மலர்துளிதரத்தருப்புடைநிற்பக்
கரந்தைவார்சடையவற்றொழுங்காதன்மிக்கெழுந்து
புரந்தரன்புகுந்தனனெனப்போன்றதப்பொருநீர். (உங)

மரைகிளைத்தலர்பாசடைவாயுவையொடுக்கி
விரைசெய்மாமுகைக்கரங்குவித்தரும்புனன்மிதந்து
பிரசமென்குழனினதுடற்பேரொளிபெறுவான்
பரசிமாதவமுஞற்றுதல்போன்றதுபாராய். (உச)

விரித்ததாமரையொன்றினுக்கணித்தெனமீப்போய்ப்
புரித்தமெல்லிதழ்முற்றமுறையவிழ்த்தபூங்கமலம்
விரைத்தமென்குழல்வீங்கிளமுகிண்முலையொருநீ
கரத்தினேந்தியதாமரைநிகர்ப்பதுகாணாய். (உரு)

வாக்கினாலிளங்குயிலின்மருட்டியமயிலே
தேக்குநீரகத்தரும்பியமுளரிதேங்குவளை
தாக்குவார்கணையென்றெமைச்சார்ந்தனவெள்கி
நோக்கிலேமெனக்கரப்பனபோன்றனநோக்காய் (உசு)

அளிக்குலந்துவைத்திடச்சரிகருங்குழலணங்கே
குளிர்த்தமென்சடைநிலாப்படவொருங்கலர்குமுதந்
தளிப்புனற்பதுமங்கணின்றளிரடிக்குடைந்து
களிப்பிழந்திடச்சிரிப்பனபோன்றனகாணாய். (உஎ)

குவளையேந்தியுமனநடைகாட்டியுங்குமுதத்
தவளமுத்தினையுணர்த்தியுஞ்சங்குகைப்பொறுத்து

மிவரொளிக்குணப்பாசடைபொருந்தியுமிலங்கு
பவளவாயுனைப்போன்றதிம்மலர்த்தடம்பாராய். (௨௯)

பொருதுவார்குழைநடந்தகட்புனமயிலனையா
யுருகுசேவலினுதறுபூந்தாதயிர்த்துகுத்து
மருவனப்பெடைதிருகியசினத்தொடுமெறுகிக்
கருகுசிந்தையினூடலிற்றூங்குதல்காணாய். (௨௯)

அம்புளோதிமம்புதவினஞ்சிரலேகாரண்டம்
பம்புபுன்சிறைக்குரண்டமற்றுளபலமிழற்ற
லிம்பர்மாதவச்சிறுரிருக்கிசைப்பனவிசைக்குங்
கம்பலைக்குழாமொத்தனகேட்டிகார்மயிலே. (௩௦)

கலிவிருத்தம்.

எனவிவையெடுத்தெடுத்திறைவிக்கோதினன்
பனிமலாபொதுளுமப்படுகர்ப்பாங்கரி
னனிகெழுபழுமரத்தருகுநண்ணினன்
புனிதனப்பனிவரைப்பூவைதன்னொடும். (௩௧)

ஆங்கதன்முதற்பளிங்கரிந்துடுத்தய
லோங்கியவடிவெலாம்பசும்பொனூட்டிமீத்
தேங்கொளிமனவணிதிருத்திவாளரி
தாங்கியவாசனத்தருகுசார்ந்தனன். (௩௨)

கண்ணுதற்பரமனுங்கமலவாண்முக
வொண்ணுதற்கௌரியுமுடனிருந்துழீஇ
வண்ணவால்வளைகிளைமலர்க்கைமால்வரைப்
பெண்ணமுதினையனபேசன்மேயினுள். (௩௩)

விண்டொடநிவந்துமேல்விரிந்ததொன்மரங்
கண்டதிலிதற்குநேர்கண்டிலேமெனா
வண்டர்நாயகனிடத்தணங்கைநோக்கிமற்
றெண்டொடிகேட்டியென்றுரைப்பதாயினன். (௩௪)

நாளநாண்மலரயனிறக்குநாளையின்
மூளிரும்பிரளயமுற்றுமற்றைநா
ணீளிருந்தடஞ்சினைநிறுத்தியிம்மரங்
கோளொடுமடங்குறாறுயருங்கோளது. (௩௫)

தார்புனைதுளவினன்றனதுகண்முகிழ்த்
தோரிலையகவையினுறக்கங்கொள்வன

லாருயிர்த்தொகைமுழுதளிக்கவேண்டிநின்
றேர்முதற்சத்தியாயெம்மைவேண்டுமால். (௩௭)

ஈதிதனிலைமையென்றருளியின்னுரை
மாதுடனளவளாயமகிழுமெல்வையிற்
காதுடனிகலிடுங்கடைக்கணம்பிகை
யோதிமமதுபிடித்துதவுகென்றனள். (௩௭)

அன்னதுகாவலர்க்கருளவாங்கவர்
பொன்னிறத்தாமரைப்பொகுட்டுமேயதோ
ரின்னிளமடப்பெடையனத்தொடின்னுரை
பன்னியகிளியையும்பரிவிற்பற்றினர். (௩௮)

பற்றியவோதிமம்பசலைப்பூங்கிளி
கற்றைவார்சடையினன்றிருமுற்காட்டலும்
பெறறெழுமுவகையிற்பொரிதுநோக்குரு
மற்றவையொடுஞ்சிலவகுப்பதாயினன். (௩௯)

வைகலுமெவ்வுழைவைகுவீரெனச்
செய்யவாய்ப்பசுங்கிளிசிவனைபபோற்று
மையற்முற்புரிதவத்தின்மாட்சியா
லையநின்காவகத்தடைந்துளேனென. (௪0)

பானிறத்தோதிமம்பணிந்துபன்னவ
மேனிலைத்தாருவினடைந்துமேயினேன்
கானிகந்தொன்டிசைக்கடவுண்மாநதி
யானறியாதனவில்லையெந்தையே. (௪௧)

வடவரைப்புடைபடுவையம்யாவையுந்
தடவரவென்னுழைத்தவத்திறேன்மையா
லடல்கெழுமமுப்படையமலநின னுடை
மடலவிழ்தாமரைவாவிமேவினேன். (௪௨)

வாவியிற்பொன்னிறவனசமேந்திட
மேவிவீற்றிருந்தனனினதுவேணியிற்
றேவியந்திருநதிசிறப்புச்செய்யுமிப்
பூவிரிமலர்த்தடம்பொருந்திப்போகலேன். (௪௩)

என்றிளமடவனமியம்பக்கேட்டலுங்
கொன்றையஞ்சடையினன்முறுவல்கோட்டின
னன்றிளவனப்பெடைவிடைகொண்டாருயிர்ப்
பொன்றழைசிறைக்கிளியோடும்போயதால். (௪௪)

கங்கைபேருரைத்தலுங்கனிந்தமோலிற்
பொங்கியவுவகையிற்பொருமினுனெனப்
பங்குடைமடமயில்பரிவுகூர்ந்தனள்
செங்கயற்றுணைதுளிசிதறச்சீறினாள். (சரு)

போயினடிருமனம்பொறாமைமீக்கொள
மாயிருங்கவலையின்மறுக்கமெய்துறூப்
பாய்விடைப்படர்சடைப்பரமனெற்குறித்
தேய்வனசெய்திலனெனவெதும்பினாள். (சசு)

முன்னர்நாளிமவரைமுடுகித்தற்குறித்
துன்னரும்பெருந்தவமுஞற்றுமெல்லையி
னென்னுடைத்தனிமையோர்ந்திகலுமாரனைத்
தன்னொருநுதற்கணாற்சாம்பராக்கினான். (சஎ)

அதுபொறுத்தாற்றினேனுவிமேவியே
மதுமலரோதிமமருவுகங்கையாள்
புதுமொழிவழங்குறமுறுவல்பூத்தன
னெதுபொறுத்தாற்றுகேனெளியளாயினேன். (சஅ)

ஆயினுமென்னிலையறியுமாறொரு
தீயனவியறறுகேனென்றுசீறியக்
காய்சினவநங்கனநடலைகண்ணுறு
வேயதோருருவக்தெழுதியென்றனள். (சகூ)

அடலையினின்றுபண்டாசுரப்பெயா
மிடல்கெழுநிருதரில்வெய்யன்றோன்றினான்
படரொழிபருவமோர்பத்துக்கோடிநின்
றிடரொழிபூசனையியற்றினானரோ. (ருo)

இப்பரிசெம்பிராற்கியற்றியெய்துறு
மப்பொழுதியோகத்தினடைத்தகண்ணனைத்
தப்பறவருந்தவஞ்சாரவைகினான்
முப்புரமெரித்தவனிரங்கிமுன்னினான். (ருக)

அருந்தவத்தருசசனையரிதினாற்றினை
திருந்துளத்துணர்ந்தவைசெப்புகென்றலு
மிருந்திறத்தேவர்மற்றியாருமென்னுழைப்
பொருந்திறம்படைகளொன்றுளைத்துப்போற்றினான். (ருஉ)

ஆங்கவராக்கைபுக்கடைந்துதம்முடற்
றூங்கியசுக்கிலசுரோணிதங்களை

வாங்கிமாந்துதலெனக்கருளிமற்புயந்
தாங்கியவெருழ்வலிதருதியென்றனன். (ருஙு)

என்னையாளுடையவனிரங்கியீந்தனன்
பொன்னவிர்நெடுமுடிக்கயிலைபோயினு
னன்னவனவரவராக்கைபுக்கிருந்
துன்னருஞ்சுரோணிதமுறுஞ்சிமாந்தினான். (ருச)

சுக்கிலசுரோணிதத்தொடக்கமற்றபின்
முக்கணன்முதலினோர்செயற்கைமுறறுறத்
தக்கிலரிதுசெயத்தக்கதாரென
வொக்கநோக்கினரதுவுணரப்பெற்றிலார். (ருரு)

முழுமுதன்மகேச்சுரக்கடவுண்மூர்த்தியை
யெழுதருமுவகையினிரங்கிப்பூசியா
வழுவறுமுழுமணிக்கயிலைமாமருங்
கொழுகினரிரந்திரந்துரைப்பதாயினர். (ருசு)

வெஞ்செயலிழந்தனம்விளர்க்குமெய்யினேந்
தஞ்சமொன்றிலமிதுவுணரத்தக்கிலே
நஞ்சணிகறைமிடற்றுநிநாயக
வுஞ்சுறுநெறியளித்துதவுவாயென்றார். (ருஎ)

அனையவரிரந்திரந்தறைந்தவாசகம்
புனைகுழைத்திருச்செவியகத்துப்போதலு
நனைமலரிதழியந்தொடையனாயகன்
வினையினோர்ந்தினையனவிளம்புவானரோ. (ருஅ)

அருந்திறலடுசினப்பண்டவாசுரப்
பொருந்திறலசுரனுமுதரம்புக்கவ
ணிருந்தனன்சுக்கிலசுரோணிதங்களே
விருந்தெனப்பருகுவான்வெள்ளிடைப்படான். (ருகூ)

மன்னுயிர்ப்பொறைதொறும்வகையின்வைகுவா
னின்னிலையுயிர்க்கெலாமிடுக்கணீந்தனன்
றன்னிலைசசத்தியாற்பிறந்துதோன்றலா
லன்னசத்தியைநுகர்ந்தழிப்பதாயினன். (சுO)

இன்றியாமியற்றுதற்கியைந்துநீவிரும்
பொன்றுதற்கியைந்துநினிஃதுபோக்கலா
மன்றெனிலித்துயர்மாற்றியாற்றலீ
ரென்றனனவர்க்கெலாமுதன்மையெய்தினான் (சுக)

துன்னுவிகொடேகுமொருத்தனைநீ
யின்னுனிவனென்னவியம்புதியால். (அச)

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

சேயொளிப்பருதிக்காந்திமழுக்கியசெம்பொன்மோலிப்
பாயொளிமரகதத்திண்பருப்பதங்கவிழ்த்தியாங்கு
மீயுயர்ந்தெழுந்தமேனிவிரிநறுங்கமலம்பூத்த
சாய்திரைப்பரவையேய்ப்பதன்றெனத்தகுவதன்றே. (அரு)

விண்டொடநிவந்ததிண்டோள்வெற்பொடுந்துவண்டுலாவுங்
குண்டலவதனமிந்தக்குளிர்மதிநிகர்ப்பதாமே
பண்டருபவளமுத்தம்பங்கயஞ்சிலையிரண்டு
முண்டெனிற்சிறிதுபோலுமன்றெனிலுவமிப்பாமே. (அசு)

மழலையங்குதலைச்செவ்வாயமங்கையர்கொங்கையானை
யுழுதுழுதகன்றமாபிறகுவமையொன்றுளதுகாணே
னெழுதரும்பரிதிவாங்கிசசாணைவாய்திருத்தியோந்தா
லொழுகுசாந்தணிந்தமாரபையொக்குமேலொக்குமன்றே. (அஎ)

குழைபொருதடங்கணல்லார்குங்குமமெழுதிவிட்ட
வெழுவுறழ்குவவுத்திண்டொட்குவமிக்குமியல்புகாணேன்
முழவுகொல்லுலங்களேகொன்மொய்வரைக்குலங்கொலன்றேன்
மழைதவழ்நீலரத்னவரைகொலோவறிதறேற்றேம். (அஅ)

தாடொடுந்தடக்கைமற்றையழிமதத்தறுகண்யானை
நீடுறுதடக்கைமானுமன்றெனினெடுவானும்பாத்
தோடுறுதருவினேனுங்குந்தொடுசினைநிகர்ப்பதன்றே
லாடலந்தடக்கைதன்னையின்னதென்றறைதற்பாற்றே. (அகூ)

கொய்யுளைப்புரவியொற்றையாழியங்கொடிஞ்சித்திண்டேர்
வெய்யவற்கொணாந்துகாநதியனைத்தையும்விளையவாரிச்
செய்தெனத்திகழுமம்பொற்பீதகச்செழும்பொன்னுடை
*நொய்தெனப்படுத்துவிக்குநுசுப்பினுக்குவமையுண்டே. (கூ0)

குருதியினரத்தமூட்டிப்பஞ்சொடுங்குழைத்துமாட்டித்
தருவனவென்னச்சேந்ததாமரைச்சரணமீங்கென்
னிருகருங்கண்ணினுள்ளேயிருந்தனவின்னுநீங்கா
பொருவயக்களிறுபோல்வார்தம்மொடும்போயசிந்தை. (கூக)

ஆங்கவளினையகூறயாவனென்றறிதறேற்ற
டேங்கமழ்பவளச்செவ்வாய்ச்சித்திரரேகையென்பாள்
வாங்குநீருலகங்காக்குமன்னவர்ப்படத்திற்றீட்டி
யீங்குனக்களிப்பனோக்கியினையனையுரைத்தியென்றாள். (கூஉ)

* ,,ஓய்யெனப்'' என்று பாடம்.

எனனலுமுவகைமீக்கொண்டெழுதுதிதோழியென்றுப்
பொன்னடிவணக்கம்போக்கிப்போக்கினளவளும்போனுள்
பன்னெடுந்துகிலினீலக்காளிமம்பசையிற்றேய்த்தாள்
பின்னதற்கியைவகூட்டித்தூரிகைபிழம்புதோய்த்தாள். (கூங)

வீழ்திரைப்பரவைவைப்பின்வேந்தரிற்கவிகைச்செங்கோ
லாழியந்தடந்தோள்வேந்தரவையவமனத்துட்கொண்டா
ளூழ்முறைமரபிறதீட்டிநோக்கினளுயிரையன்னுள்
வாழியநலனுண்டேருங்குமரனைமதித்துக்கொணடாள். (கூச)

எழுதுறுபடத்திற்றீட்டுமரசரிலிவனேயாவி
யொழுகுவால்வளையையுண்டானென்பதென்னுளமேகூறுங்
கழைகுனித்துலகமுற்றுங்கடந்தவன்குமரன்போலு
மூழைமதக்களிற்றையன்னுனருத்தனென்மன்னாகோமான். (கூரு)

என்பனபலவுமெண்ணியெழுதியீட்டங்கொடேகி
மின்புரைநுசுப்பினுள்பாற்காட்டினள்விரைமென்கோதை
யன்பொடும்படத்துவாரகனுலுறப்பரப்பானின்று
டன்புனைநலனுண்டேருங்குமரனைத்தனித்துக்கண்டாள். (கூசு)

பூத்தனள்புளகமேனிபொங்கினள்குவவுக்கொங்கை
நீத்தொழிவளைகளெல்லாநெரிந்தனசரிந்தகூந்த
லேத்தினளிருகைகூப்பியிரந்தனளினியென்னுவி
காத்தனையாவியேகாதொழியெனக்கலுழாநின்றுள். (கூஎ)

அனையவடன்னைநோக்கிச்சித்திரரேகையன்று
யினையனீயிவனையானேதருகுவனென்னத்தேறறிப்
புனைகழற்குமாற்கொண்டுபோதுறுவினையந்தோவா
ணினைதொறுநெஞ்சுவெவவேருயினணிரைமென்கோதை. (கூஅ)

மந்திரமாயங்கூாந்துதுவாரகைமருங்குசார்ந்தாள்
சுந்தரத்தடக்கைவீரனமளியிற்றுயிலக்கண்டா
டந்திரத்தமளியோடுந்தாங்கினடணந்துபோந்தா
ளெந்திரப்பாவைபோலத்துயின்றனனிறைவாகோமான். (கூகூ)

தாங்கியவமளியோடுஞ்சோணிதபுரத்துசசார்ந்தா
ளோங்கெயிலகன்றுகோயில்புகுந்தனளொலிமென்கோதை
பூங்குழலவட்குமுன்னரமைத்தனள்புலம்புதீர்ந்தாள்
வீங்கிளமுகிண்மென்கொஙகைதழீஇக்கொடுவெம்மைதீர்ந்தாள். ()

சித்திரரேகையென்னுந்தேமொழிக்குதலைச்செவ்வாய்த்
தத்தையங்கனையாடன்னைவளைக்கையாற்றழுவிக்கொண்டாண்

முத்தணிமுதலயாவும்புரந்தனன்முகின்மென்கொங்கை
யுய்த்தனையாவியென்னாநினைதொறுமுவகைபூத்தாள். (க௱க)

அசைகழலரசர்கோமானுருத்தனனசுரனீன்ற
வுசைபொடுமுகின்மென்கொங்கையின்னலமினிதினுண்டான்
குசைவிடுபுரவித்தானைக்கோமகன்றடந்தோள்வைகி
நசைதருகலவிப்பூசனாடொறும்விளைப்பதானாள். (க௱உ)

நடந்தனசிறிதுவைகனகைநிலாத்தரளச்செவ்வாய்
நுடங்கிடைகருப்பமாகிநுதல்பசப்பூரநின்றாள்
கடம்புரைகுவவுக்கொங்கையரும்புகண்கறுத்துமீப்போய்க்
கிடந்தனநரம்புடச்சென்றெழுந்தனகிளவிக்கிள்ளை. (க௱ங)

வள்ளெயிற்றசுரர்கோமான்கோயிலுள்வாயில்காப்போ
ருள்ளயிர்த்துணர்ந்தாரீதுமன்னவற்குரைதுமென்னாப்
பொள்ளெனப்புகுந்தாநின்றுகனைகழற்பொலந்தாள்போற்றி
யள்ளலங்களபத்தோளானருகுவாய்புதைத்துத்தாழ்ந்தார். (க௱ச)

ஆங்கவர்தாழநோக்கிக்குண்டலமருகுதாழ்ந்து
தூங்குறமகுடஞ்சாய்த்தான்சொற்றனசுறுக்கொண்டேற
வீங்கியவெகுளிவெந்தீமிக்கெழவெழுந்துபோனான்
றேங்கமழலங்கலோதியுசையுழைச்சென்றுசார்ந்தான். (க௱ரு)

தீதெறுசினத்தனாகிநிருதர்கோன்செல்வதோரா
சூதிழைத்தாடலுற்றாராங்கவர்தொடரநோக்கி
யேதிலனிவனைப்பற்றியெற்றுமினெறிமினென்றான்
கோதறுகுணத்தான்வீரத்தண்டொருதடக்கைகொண்டான். (க௱சு)

எறிந்தனரடுகோல்வாங்கியெய்தனரிவைகளெல்லாஞ்
சொறிந்தனவெனினுஞ்செய்யாவாங்கவன்சுழற்றுதண்டான்
முறிந்தனபிடருந்தாளுமுழவுதிரடோட்குன்றுஞ்
செறிந்தனகுருதிச்சேற்றிற்றண்டொடுந்தேயத்தேய்த்தான். (க௱எ)

வந்துவந்தெழுந்தசேனையாவையுமணைதுண்டடந்
தந்தனர்மூளைச்சேற்றிற்சுறுக்கினருறுக்குந்தோறுஞ்
சிந்தினர்சிதறிமீண்டார்செழுமணிவயிரத்தண்ட
மந்தகன்றனுக்குற்றேங்கச்சுற்றினனடல்வேற்காளை. (க௱அ)

புனைகழனிருதனந்தப்புரத்துளமகளிர்யாருங்
கனைகடலரவமென்னக்கரநெரித்தலறுநின்றார்
முனைகொள்வேனிருதர்வாழ்க்கைமுடிவுநாளிதுகொலென்ன
வனைகுரலரவமற்றைத்திகந்தமுற்றெழுந்தவன்றே. (க௱கூ)

வளைமுழைதிறந்துபோந்தவாளரிமடங்கலொப்பான்
றிளைபொருதடக்கைத்தண்டாலனைத்தனன்சேனையெல்லாங்
களையழித்தொழுகுசெங்நீர்கண்டனனவுணர்கோமா
னிளைமணித்தடக்கைமாட்டிப்பிடிப்பனென்றெதிரநேர்ந்தான். (கக0)

பற்றினன்றடக்கைத்தண்டம்பன்முறைகீழுமேலுஞ்
சுற்றினன்சுற்றலோடுமவுணனுந்துணுக்கங்கொண்டா
னிற்றவன்றன்னைப்பற்றலரிதெனவெண்ணிநின்றான்
பெற்றமேறுகைத்தோனுகபாசத்தாற்பிணித்துக்கொண்டான். (கசக)

கண்டனளுஷையென்றேதுங்கன்னிகைவெருவாநெஞ்சு
விண்டனளலமந்தேங்கிவெய்துயிர்ப்பெறிந்துமாழ்கி
மண்டலத்தரசர்கோமாற்கிதுகொலோவருமென்றெணணுத்
தண்டுணரொரியிட்டாங்குவெதும்பினடரிப்பதோராள். (ககஉ)

பொங்கொளிமோலிகாணேன்றிருமுகப்பொலிவுகாணேன்
மங்கலமடந்தைநீங்காவலையமுந்தோளுங்காணேன்
முங்கியதாளக்காந்திவெண்ணிலாமுறுவலகாணே
னெங்கொளித்தென்னைநீத்தாயெறழ்வலிந்தடக்கைவேநதே. (ககங)

தேன்பிறக்தொலிக்குமாலைத்திருநெடுந்தடந்தோட்செல்வ
மான்பிறந்தனையகண்ணார்முன்னர்நான்வருமாறுண்டே
யூன்பிறந்தெடுத்தவாக்கையுயிர்சுமந்தோய்கின்றே
னேன்பிறந்திருந்தேன்பாவியிறப்பதொன்றறிகிலேனே. (ககச)

தழன்மணிக்கடகத்திண்டோடாம்புகொண்டிறுக்கக்கண்டே
னிழன்மணிமகுடநீத்தநின்முடிவறுமைகண்டே
னழன்மணிமருமசெவ்வியெவவழித்தறியேனையா
பழவினையிருந்தவாபெணபாவியாறபடுவதீதோ. (ககரு)

எனவெடுத்தரற்றுகின்றாளீங்கிவளசுரன்கோயின்
முனைவழிகிகழந்தவெலலாநாரதமுனிவன்கேட்டா
னினைதருமுளத்தனுகித்துவாரகையெய்தச்சென்றான்
நனைமலர்த்துளவிறேற்குநடந்தனனிகழந்தவெல்லாம். (ககசு)

நாரதனுரைப்பக்கேட்டகண்ணனுநளினச்செங்கை
வாரகழற்குமாரற்றேடிமறுகியமறுக்கந்தீர்ந்தா
னோமருடற்றவேண்டுங்காலம்வந்தடுத்ததென்னுப்
போர்கெழுவயிரத்திணடோளடிக்கடிபுளகம்பூத்தான். (ககஎ)

எழுகநஞ்சேனையென்றுமணிமுரசியம்பச்சொற்று
னிழிமதக்களிற்றின்மேல்கொண்டணிமுரசறைவதானர்

சுழித்திரைப்பரவையார்த்தநுண்மணற்றொகைக்குமீப்பேரய்
கழிபெருங்கணக்கைகீத்தகடற்படையெழுந்ததன்றே. (கசஅ)

நெடுமுகிறடவிச்செல்லுமழிமதநெடுங்கல்யானை
படுகடலுருவுகொண்டாலெனப்பலபரந்துசெல்ல
விடுவயப்புரவியக்கீர்த்திரையெனவெகுண்டுபாயச்
சுடர்முடிப்புலவர்க்கேயுமளப்பருஞ்சேனைதொக்க. (கசக)

கொடிநெடுங்கொடிஞ்சித்திண்டேர்நெடுநிலங்குழியச்செல்ல
விடுகுரலதிர்ச்சியெட்டுத்திக்கையும்விழுங்கிக்கொண்ட
தொடுகடலுவரியெல்லாத்திடர்படத்துளிபோர்த்த
படுமணிப்படம்பொறுமையனந்தனும்புதைப்பதானன். (கஉ0)

தொன்னிலைப்பரவையேழுமொருவழித்தொடர்ந்தவாபோல்
வன்னகப்புலவுப்பேழ்வாய்வாளரிமடங்கலொப்பார்
பன்னெடுஞ்சேனைத்தானைகாவலர்பரந்துமொய்த்தார்
பொன்னெடுஞ்சிகரத்திண்டோடினவுறப்பொருமாகின்றார். (கஉக)

வனைதுகிற்கதலிமீப்போய்வன்சிறைப்பறவைமானப்
புனைமணிக்கவிகையெல்லாம்வெண்சிறையனமேபோல
வினைமணிக்கவரியீட்டம்வெண்டலைப்புணரியேய்ப்பக்
கனைகடற்றனைமற்றோர்கருங்கடனிகர்த்தமாதோ. (கஉஉ)

பொலங்கழலரவமற்றைப்புரவியின்சிரிப்புவீரத்
துலங்கெழுவயிரத்தோளாருரப்பொலிகீழல்சீறி
நிலம்பகக்குமுறிப்பாயுநீனிறக்கொடுங்கையானைக்
குலங்கொடுபிளிறுமோதையொருவழிக்குழீஇயதன்றே. (கஉங)

கரும்பனைத்தடக்கைகால்வாய்க்களிற்றிழிமதத்தினாலும்
பொருந்திரையுகண்டவாபோற்புரவிவாய்விலாழியானு
மருந்திறல்வயவாதிண்டோடசாந்தழிந்திழிதலாலும்
வருந்தியபுவனப்பேதைமுழுதுகுறவழுக்குவாரால். (கஉச)

முற்படகடந்ததானைச்செதும்பிகல்முனைவரோறிப்
பிற்படகடந்ததிண்டோராழியிற்பெருந்துளாகி
யெற்படுமிரவியோட்டுமெழுபசும்புரவிபோர்த்து
நிற்பனநிகந்தமெல்லாம்பொதிந்தனநிமிர்ந்ததுளி. (கஉரு)

பரந்தெழுபூழ்தியுள்ளம்படுத்தெடுத்தளவிட்டாலுஞ்
சுரந்தெழுபனியின்றுளைத்துளியொருதொகையிட்டாலு
நிரந்தெழும்பரவைத்தானைநிலைதெரிந்தளவைகூறிப்
புரிந்தவருளரோல்வையத்தவர்களேபுலமைமிக்கோர். (கஉசு)

படுகுரலெழுந்துவீங்கும்பல்லியவிடிப்பிறேங்கி
விடுசுடர்வயிரவொள்வாண்மின்னெளிமருட்டிக்காட்டிக்
கொடிவிடுதுவசநீழற்காரொளியடையக்கொற்ற
வெடுகைகரொழியத்தானைமழைப்புயனிமிர்ந்ததன்றே. (கஉஎ)

எழுபுயலெழுந்துவிம்மியினத்தொடுமிடித்துப்பொங்கிப்
பொழிபடுபுனலுமேழுபரவையும்புரண்டுபோகி
முழுதொருவழிக்கொண்டாற்போனடந்தனமூரித்தானை
யிழிதகவுடையவாணன்சோணிதத்திறுத்த[illegible]ன்றே. (கஉஅ)

ஐந்துடனாறுகோடிகிவந்தெழுமக்குரோணி
பைந்துகிற்கதலித்தானைபடுகொடியிஞ்சிசூழ
வெந்தழற்றறுகட்பேழ்வாய்வெள்ளெயிற்றசுரனேர்ந்தா
னெந்தையெம்பெருமான்முன்னரருளியவெல்லையொல்லை. (கஉகூ)

படுகடற்பரவைத்தானையாங்கவன்பரித்தகாட்டை
யடுதிறத்திரியல்போக்கிவெள்ளிடையடையசெய்தக்
கொடுகிலவெயிற்றுவெங்கணசுராகோன்கொதித்துப்பொங்கி
விடுபரிவெள்ளத்தானைவம்மெனவிளிப்பதானான். (கங0)

என்னிடைப்பிறந்தவைஞ்ஞூற்றிரட்டியினிவர்ந்ததோட்குப்
பின்னிடுதுளவமாயோன்பேடியிற்றணந்துபோனான்
புன்னுனையுகிர்த்தாட்பூசைபுலியெனிற்புலியேறெப்பா
றொன்னெனட்டடுவொன்றுவெண்ணிலனிகற்குப்போந்தான். (கஙக)

வருகவென்றுரைத்தமாற்றத்தெழுந்தனவயவெஞ்சேனை
கருமுகிறகணத்தையொப்பாவடவையிற்கனலுங்கண்ணார்
திருகியசினத்தாவானந்தீண்டியசிகரத்தோளா
ருருமெனமுழக்கமிக்கார்மொய்த்தனரொருங்குசூழ்ந்தார். (கஙஉ)

கல்லெனக்கலிக்குஞ்சேனையளவையிற்கண்ணுருவா
லொல்லெனவொலிக்குமோதையும்பருந்துணுக்கங்கொண்டார்
வில்லினர்வயிரவாளர்தினவுறுவீரத்தோளார
பல்லியநீதுவைப்பப்போந்தார்படுகடல்பருகும்வாயார். (கஙங)

ஏந்துறுமுலகமீரேழொராகரத்தெடுத்துக்கொள்வார்
காந்துறுதெறுகட்டீயாற்கருங்கடல்சுவற்றுந்தீயோர
பாந்தளின்மகுடகோடிப்பருமணிபறிக்குங்கையார்
போந்தனர்கடலந்தானைப்பொருந்திறற்றலைவர்யாரும். (கஙச)

எண்ணருங்கணக்கினீத்தவெட்குவையெண்ணிட்டாலுங்
கண்ணுதற்கரியசேனைக்கருங்கடல்பார்த்ததம்மா

வண்ணவான்கொடிக்கோட்டிஞ்சிமணிநெடுவாயினீப்பார்
திண்ணெடுந்திரைகொண்டாடுங்கடன்மடைதிறந்தவாபோல். (கஙடு)

சில்லியங்கொடிஞ்சித்தேரோதிரைபொரும்புரவிக்காடோ
செல்லெனமுழங்கும்பூட்கைச்சிறுவிழிசிகரக்குன்றோ
மல்லலந்திரடோள்வீரவயவரோமிகுதியோாவான்
ரெல்லையம்புலவர்க்கேனுமரிதெவாதொகுக்கற்பாலார். (கஙசு)

வாளினர்சிகரியேந்துங்கரத்தினர்வயிரமேருத்
தோளினருவரியேழுஞ்சுற்றுறப்புறத்தாலெற்றுந்
தாளினர்மறலியேனுந்துணுக்குறும்வயிரத்தண்டார்
கோளிளம்பிறைபூத்தோங்குமழைமுகிற்குழுவையொப்பார். (கஙஎ)

அளவெழுவயவெஞ்சேனைமதிளகந்நளவைநீத்த
இளைடுவயிரத்தோளானுருமெனக்கிளத்துஞ்சொல்லான்
வளையெயிற்றசுராகோமான்வாளரிமட்டுங்கல்போல
விளைசினஞ்சுறுக்கொண்டேறவெள்ளிடையெழுந்துபோந்தான. ()

பீதகப்பசும்பட்டாடைமருங்கொடும்பிறழவீக்கி
மீதகக்கொய்யஞ்சாத்திக்கொடுக்கிருமருங்குவீழத்துத்
தீதகுவயிரவொள்வாள்கச்சொடுஞ்செறித்துவானத்
தாதவற்கிழிவுகாட்டுங்கனைகழலடியிற்சேர்த்தி. (கஙகூ)

மனவிழைத்தியற்றுவாகுவலையமும்வலயத்தோண்மேற்
றினவுதேய்த்திடுவேபோலக்கிம்புரிக்கடகஞ்சோத்தி
வனைமணித்தொகுதிசசன்னவீரமுமாறிசசாத்திப்
புனைமணித்தடந்தோணக்கிக்குண்டலம்புரளாநின்றான். (கசo)

இனமணித்தொகுதிக்காந்திவேறுவேறிமைத்துக்காட்ட
வனமணிமகுடஞ்சாத்திப்பட்டமுமருகுவீக்கிப்
புனைவிரற்சரடுகோதைவலமிடம்புதையப்போர்த்தான்
முனைமுகப்பகழியோயாத்தூணியுமுதுகுசோத்தான். (கசக)

தற்பொதிசேமத்தோரோராயிரந்தழுவச்சொற்றான்
விற்படைநூற்றுப்பத்தின்மேலெனவிளம்பிவிட்டான்
கொற்படைநெடுவேற்றேட்டிதோமரங்கொடுவாணேமி
பற்படையமைக்கவென்றான்றன்னுடைப்பரவைத்தேர்மேல். (கசஉ)

தன்னுடைக்கோயினீங்கிவாயிலிற்றழுவச்சார்ந்தா
னென்னையாளுடையகோமானிருந்துழியெதிரநின்றான்
பொன்னவிரலங்குவேணிப்புங்கவபோற்றியென்று
மின்னலதமர்க்குயானேயேகலனிமலவென்றான். (கசங)

பூங்குழலுமையைநீக்கிப்புகர்முகப்பிள்ளையோடும்
வாங்குவேற்குமரனோடுமன்னியகணத்தினோடும்
வீங்குநீரொலிக்கும்வேணிவிண்ணவர்பெருமவின்னே
யாங்கணுற்றடைதியென்றுவெழுந்தனனசுரனோடும். (கசச)

கொடிநகர்ப்புரிசைவாயிற்கோனகர்பிறகிட்டேகி
நெடுமுடிச்சிகரத்திண்டேரேறினனிமிர்ந்தசேனை
யடுகொடிச்சேமத்திண்டேராயிரமருங்குசூழ்ந்த
துடியிடத்தோளைநோக்கிச்சுறுக்கொளச்சினக்குஞ்சொல்லான். (கசரு)

வார்துயமலங்கங்கிமாதிரமதிரவீக்கும்
பேரியமதிரமற்றைத்திமிலையிற்பெயலேசிந்தந்
தூரியங்கறங்கப்பம்பைதுடியொடுமுழவமாரட்டக
க்காரிணரோதிமாதர்கவரிகாலசைப்பச்சென்றான். (கசசு)

சேயிதழ்க்கமலபீடத்தந்தணன்முதலதேவ
ராயிரநயனம்பூத்தவிந்திரனரம்பைநல்லார
மீயுயர்விசும்புமொய்த்தாரொதுகொலோவிளைவதென்று
நாயகந்துளவத்தாற்கேநல்வினைபயக்கவென்றார். (கசஎ)

எதிர்ந்தனவிருபாற்றானையெதிரொழுமமலைநாக்கி
யதிர்ந்தனதிசைகளெட்டுமெதிருநாளாழிகாலாற்
பிதிர்ந்தனவவனியண்டமபிளந்தனபிறங்குவைவாள்
ரொந்தனதிமிலந்திண்போர்விளைந்தனன்விளைவதோரான். (கசஅ)

எறிந்தனாகொடுங்கூர்வாளியெய்தனரிடையறாமற்
செறிந்தனாதிகிரியாழிசெலுத்தினர்சிகரத்திண்டோண்
முறிந்தனரெயிறுதீண்டிமுறுக்கினரசுரர்வாங்கிப்
பிறிந்திலவிருபாறறானைபரந்ததுகுருதிவெள்ளம். (கசகூ)

கலிநிலைத்துறை

சிகரமால்வரையெடுத்தனரெதெழுந்தகுரலா
ரகனிலம்படவிடுத்தனரரக்கரதனைத்
தகருமாறுபலதண்டமொடுதுண்டமிடலுங்
ககனநின்றமரர்கைத்தலம்விதிர்த்தனர்களால். (கரு௦)

நீறுசெய்தனரொடுத்தெறிநெடுஞ்சிகரியைக்
கூறுசெய்தனர்குறித்தனரரக்கர்கொடியோ
ரேறுமுத்தலையயிற்படையெடுத்தெறிதலும்
பாறிவிட்டதுதழாயவன்விடுத்தபடையே. (கருக)

கொக்கரித்தநிருதக்குலங்கைத்தருரலா
லக்கரிக்கடலடங்கியதறிந்ததுளவோன்
புக்கதேரொடுபுகுந்தனனதிர்ந்தகவனி
செக்கரொத்துலவுகுஞ்சியரொதிர்ந்துசெலலும். (கருஉ)

தாளிழந்தனர்தனித்தலையிழந்தனர்துணைத்
தோளிழந்தனர்நெடுஞ்சுடர்துறந்தனர்களான்
மூளைசிந்தினர்முடித்தலைநெரிந்தனர்பொருங்
கோளிழந்தனர்கொடிக்குடையிழந்தனர்களால். (கருங)

வெள்ளைவாளெயிறுவாளிபடவிண்ணமளவுந்
துள்ளியோடினர்தெறித்தனர்துணைக்கைமதமாக்
கொள்ளைவெம்பகழிதைத்துலவைகுத்தவிழுமாற்
கள்ளவிழ்ந்ததுளவோனெடியகைச்சிலையினே. (கருச).

மத்தமாகரிபிளந்தனவயப்பரவிய்
மொய்த்தகொய்யுளைநெடுங்களமுறிந்துவிழுவ
தத்துவெண்டிரைபுரண்டகுருதிச்சலதிவாய்ச்
சித்திரக்கொடிநுடங்குபலதேர்திரியுமால். (கருரு)

ஆழியற்றசிலதேர்செருகுமச்சுமுறியப்
பூழிபட்டசிலதேர்தரைபுரண்டசிலதே
ரூழிவெங்கடலெனததிரையுகண்டகுருதிப்
பாழியாறெநெடுங்கண்டுவரிபுக்கபலதேர். (கருசு)

கண்டெறித்தனர்மணித்தலைதெறித்தனர்கதிர்க்
குண்டலம்பலதெறித்தனர்குனித்தசிலையோ
டெண்டருங்கரமிழந்தனரிழந்தவுயிரைச்
சண்டனுண்டுவகைதந்துநடனம்புரிவனால். (கருஎ)

வாளியொன்றுசிலமாகளிறுதேர்புரவியைத்
தூளிகண்டுருவியெண்டிசைதொடர்ந்துசெலுமா
லாளிமொய்ம்பரையரக்கரையமுக்கியழல்வாய்க்
கூளிசெங்குருதியிற்குமிழிபொங்கவிழுமால். *(கருஅ)

அம்பொராயிரமரக்கரையறுக்குமழல்வா
யம்பொராயிரமதக்களிறறுக்குமெரிவா
யம்பொராயிரமடற்பரியறுக்குமகல்வா
யம்பொராயிரமறுப்பதிரதத்தினையரோ. (கருக)

தேரிழந்தனர்சினப்பரியிழந்தனர்சினக்
காரிழந்தனர்கதிர்ப்படையிழந்தனர்களாற்

முரிழந்தனர்தனிக்கழலிழந்தனர்வ
போரிழந்தனர்புகுந்திறலிழந்தநிருதர். (கசுo)

வண்டுழாயவன்விடுத்தசரமாரியதனைக்
கண்டுநெஞ்சிறைகலங்கிலனணிந்தகழலோன்
றுண்டவெண்பிறையெயிற்றழல்சுறுக்கொளநெரித்
துண்டவெஞ்சினமுருத்தெழவுருத்தனனரோ. (கசுக)

விடுகதேரொனவெகுண்டனன்வெகுண்டுவிடலுந்
தொடுபிணக்குவைநெரித்ததுதொடுத்ததிகிரி
யடுபடைத்தலைவராவியிழவாருமழிவார்
கொடுவினைத்தொகைவிளைட்டதுகுறிக்கவசமோ. (கசுஉ)

சேமமாயிரமெனப்புடைவளைந்துசெறிதோ
வாமமுற்றுறவளைந்தனன்வயப்படையொடுந்
தாமவார்சிலைகுனித்தொருதழற்கணிருதன்
வேமனத்தொடுமுருத்தெழமுழங்கிவெகுள்வான். (கசுங)

ஆயிரத்திநொருபாதியுமடுக்குசிலையா
ணுயிரத்திநொருபாதியினடற்பகழியா
ணுயிரததலையனந்தனிலனந்தலெழுவா
ணுயிரபெயரிணுனெதிரழன்றுபுகுவான். (கசுச)

தேரினின்றுதொடைகொட்டியுருமொத்தசெயலிற்
போருவந்தெதிர்முழங்கினனதிர்ந்தபுவனம்
வீரமங்கலைகறுத்தனள்வெறுத்தொருவினுள்
வார்தடம்புயமிடத்தொடுதுடித்தவலையம். (கசுரு)

வட்டவார்புயமுளிக்குருதிமாரிசிதறக்
கட்டுவெம்புரவிகுன்றியொருகண்கலுழமா
லெட்டிருஞ்சிறையகங்கமிவனேறி*ரதநீண்
மொட்டிருந்தயல்வெள்ளிடைமுழங்கியதுவால். (கசுசு)

ஆதுணர்ந்துவிளைபுன்னகையமைத்தபெருமான்
மாதுபங்கனையடைந்தனன்வணங்கிமொழிவான்
நீதுபுன்குறியெழுந்ததிகல்செய்வனினிமே
னீதடுத்தியெனநின்றனனழன்றநிருதன். (கசுஎ)

அந்திவெண்பிறையணிந்தருநடம்புரிபிரான்
றந்திமாமுகனைநீயிதுதடுத்தியெனலுஞ்

* 'வருதேர்'' எனவும்பாடம்.

சிந்துரத்தனிமுகக்கடவுள்சேறலுணராப்
பைந்துழாய்முடியவன்சிலபரிந்துபுரிவான். (கசூஅ)

ஏனலெட்பொரியொடப்பமிவையென்பவுணரா
மானதப்பெரியபூசனைவகுத்தவழிபா
டானவர்ச்சனையயர்ந்தனையர்ந்ததுணராப்
போனசிந்தனைதிரிந்துவிளையாடல்புரிவான். (கசூகூ)

அன்னபோரவனயர்ந்துவிளையாடிமறுகப்
பின்னலஞ்சடைமுடிப்பிறைமுடித்தபெருமான்
மின்னிலங்குசுடர்வேலிளையகாளையைவிரு
யென்னைநின்செயலெனக்குமரனீதுபுகல்வான். (கஎ௦)

சென்றெதிர்ந்தரிபெரும்படைசிதைந்துமடியக்
கொன்றுமீள்வதுகுறிக்கொளெனநின்றுதொழுதான்
மன்றல்வார்சடையினுளமகிழ்ந்தருளிரு
னன்றுநன்றெனமொழிந்தனனடந்தனனரோ. (கஎக)

தோகைமாமயிலுகைத்தெதிர்தொடர்ந்துபுகலு
மேகவண்ணனெதிர்கண்டுளநடுங்கிவெருவா
மோகமுற்றவணருச்சனைமுயன்றுபுரிய
வாகைவேன்முருகனன்னவையிரங்கிமதியா. (கஎஉ)

வெய்யவெஞ்செருவிளைப்பவனெனசசுலவினன்
செய்யபைந்துளவினோனஃதுணாந்துதெளியா
வையடோகுதியெனப்புகலவாறிருதடங்
கையினுஞ்வெருவுற்றவரினின்றுகழல்வான். (கஎங)

தும்பிமாமுகனும்வாகைபுனைந்தசுடாவேற்
றம்பியுஞ்சமர்மறுத்தனர்தழங்கணிறைவா
வெம்புவெஞ்சமர்விளைத்தியெனவெய்யசிருதன்
நம்பனைத்தொழுதுபற்பலநவிற்றினனரோ. (கஎச)

ஆதுணாந்துயிரளிததருளுமெந்தைபெருமான்
காதுவெஞ்சமர்விளைப்பதுகருத்தினுணராப்
பூதமைந்தும்வெருவப்படுகளம்புகுதலும்
மாதவன்சிறிதுணர்ந்தெதிர்வணங்கிமொழிவான். (கஎரு)

ஐயநீயுயிரனைத்தையுமளித்துதவினுய்
பொய்யில்கேள்வியரகத்தருள்புரிந்துபுகுவாய்
வெய்யுனன்னவையழித்தறவெகுண்டுமுனிவா
னெய்தியன்னதுதுடைப்பனினதின்னருளினல். (கஎசூ)

மாயனீயுனதுமாயையெனவந்தனனியான்
றாயநீயிறைபுலப்படுவதொல்லுலகில்யா
னுயவேள்வியிறைநீயளியன்வேள்வியலமே
பாயிரப்பனுவலுக்குமுதனின்றபரனே. (கஎஎ)

வேழவிற்படைகுனித்தவனைநெறறிவிழியாற்
பூழிபட்டெழவிழித்தனைபுரம்பொடியுமா
றாழிவெங்கனன்மடுத்துறநகைத்தனையுனக்
காழிவெம்படைநெடுஞ்சிலைதரிப்பதழகோ. (கஎஅ)

என்றடிக்கடிடணிந்திவையெடுத்துமொழியக்
கொன்றையஞ்சடிலியன்னதுகூறித்துநகைகூடா
மன்றலந்துளவினேய்வருதியென்னவரலு
மன்றவற்கினியமென்மொழியறைந்தருள்செய்வான். (கஎகூ)

செந்தழற்கணிருதன்செருவ்டக்குவையென
முந்தைநாணிருதனேடிதுமொழிந்தனமியா
மெந்தமாச்சனைதனக்குரியநின்றெழியாந்
தந்தபோாசரதமன்றிதுதனிந்துணாகுவாய். (கஅ0)

அஞ்சலஞ்சலினிவெங்களமடைந்தழிவுறு
மெஞ்செருட்டலவினைத்தியெனில்வேறுநினையே
னஞ்சமன்னவர்களிச்செருவடக்குதியென
வஞ்சிபாகனைமனக்கொடுவணங்குதுளவோன். (கஅக)

சிந்தைகொண்டருளருச்சனைதெரிந்துமுறையாற்
றந்துதந்துகரதாமரைகுவித்தனனரோ
வெந்தைகண்டுளமிரங்கினனிரங்குபுலவோர்
புந்திபேருவகைகொண்டரனைநின்றுபுகழ்வார். (கஅஉ)

வேறு.

கோதைபூட்டினன்குழைவழிநுழைந்துலாங்கருங்கட்
பேதைபாகனும்பினுகமொன்றெடுத்துநாண்டொடுத்தா
னேதருஞ்சிறுநாணொலிகேட்டலுமுலகுங்
கோதிலண்டமுந்திகந்தமுங்குலுங்கினவன்றே. (கஅங)

பிளந்ததெண்டிசைமேருவேமுதலியபிறங்க
லுளங்கலுற்றனவனந்தனுந்துணுக்கெடுத்தயர்ந்தான்
றளர்ந்தவானவர்முடிபொதிறொறிந்தனதருணக்
களங்கறுத்தவனடுசிலைப்பேரொலிகலந்து. (கஅச)

தனைத்தகுல்லையோன்றன்னுடைச்சார்ங்கமொன்றெடுத்து
வளைத்துநாணுதிமடுத்தனனுணொலிப்படுத்தான்

இளைத்தவண்டமுமெண்டிசைத்தலைவருங்கிளைத்துத்
தொளைத்தபூட்கையுந்துணுக்குறவெழுந்ததத்தொனியே. (கஅரு)

கரந்தைசூடியகண்ணுதற்றனிமுதற்பரமன்
சரந்தொடுத்தனனுங்கதுதடுப்பனென்றுணராப்
பரந்தபச்சிலைத்துளவினேனடுசரம்பரப்ப
நிரந்தவையமுமண்டமுஞ்சாமெனநிரந்த. (கஅசு)

இருவருந்தொடுத்தெய்தனவடுசரமிமையோர்
கருதிநோக்கலர்கண்புதைத்தலமராலுற்றார்
பொருதிரைக்கடற்பரவையுமற்றுளபொருப்பு
மிருநிலப்பெருந்திசைகளுஞ்சாமெனலாய. (கஅள)

தருமமேங்கினசராசரஞ்சலித்தனவிமையோர
கருதன்முற்றுறுவென்பதுகருதினர்கூறுதா
வெருவுபூதமுமயங்கினவேதநூற்றலைவ
ரிருவருஞ்செருவிளைத்தனவென்கொலென்றெண்ணி. (கஅஅ)

இன்னதன்மையினெடிதுநாட்பொருதனரிவர்கண
மின்னுவாளெயிற்றசுரர்கோன்செருக்கறவேண்டி
யென்னையாளுடைநாயகன்வாங்கினனெயிற்றுப்
பன்னகப்படைபாயலான்பறந்தலைநின்றான. (கஅகூ)

தெரித்தநான்மறையெவற்றிற்குஞ்செவ்விதழ்வீழ்த்து
விரித்ததாமரைமேலவன்முதலினோர்யாக்கும்
பிரித்துணர்ந்தான்பேரமர்துறந்தனன்முனிவீ
ரருச்சனைக்கெலாமின்னணமிரங்குறுமமலன். (ககூ0)

முக்கணெம்பிரானிகந்ததுமொய்கழலசுர
னைக்கநோக்கினனகைத்தனனுருமெனக்கொதித்தான்
றிக்கதிர்ந்துறநெடுநிலம்பிதிர்ந்திடச்செல்வா
னக்களத்துநின்றுயிரந்தோள்புடைத்தார்த்தான். (ககூக)

கோடுவாளெயிற்றடுசினவசுரர்கோன்குறுகி
யோடுநேமியந்தேரொடுமடுகளத்துற்றா
னீடுதெண்டிரைக்கருங்கடனிரையிதழ்க்கமலக்
காடுபூத்தனதிருவுருத்தெரிவுறக்கண்டான். (ககூஉ)

கண்டகாலையிலடுசினம்வடவையிற்கதுவத்
துண்டவாளெயிறதுக்கினன்றீப்பொறிதுள்ள
விண்டலத்துறுவிண்ணவர்வெருவராலுற்றா
ரண்டர்நாயகனிவன்செயனோக்கினனடுத்தான். (ககூங)

அடுத்ததோகத்தாயிரம்பெயருடையமல
னெடுத்தவில்லொடுநின்றமைநோக்கினனிசைப்பான்
கடுத்தவெஞ்செருப்பன்முறைதோற்றனைகழிந்தாய்
விடுத்ததுன்னையுன்றன்னிலைப்பழவினைவிதியே. (கசுச)

எனச்சினத்தவாளரக்கனின்றிசைத்தனனெம்மான்
முனைக்களத்தினின்றின்னணமொழிவதுமுறையோ
வினைப்பயன்றெரிக்துணாந்திலைவெய்யநின்சேனை
யனைத்துமிக்களத்தவிந்தனவறிந்திலைபோலும். (கசுரு)

என்றுமாயவனுரைத்தலுமெறுழ்வலிநிருதன்
கன்றிவாளெயிறாழிவெங்கனலுகக்கறித்தான்
வென்றிவெஞ்சிலையைந்துநூறெடுத்தனன்வெருணடான்
பொன்றயங்கொளிவடிம்புடைப்பலகணைபொழிந்தான். (கசுசு)

பொழிந்தபல்கணையனிகவெஞ்சேனையைப்புரட்டிக்
கழிந்துபோயினகுருதிபோய்க்கருங்கடன்மடுத்த
விழிந்தபுன்றொழிலீங்கிவனெய்தவெஞ்சரந்தா
வழிந்துசேனைபட்டிறப்பதுநோக்கினனையன். (கசுஎ)

கார்முகப்படைபொறுத்தனன்கடுஞ்சரந்தெரிந்தான்
போர்முகத்தெழுவாளெயிற்றசுரரிற்பொழிந்தா
னூர்முகப்பரியானையையுருட்டியதொருங்கே
நீர்முகத்தெழுமழையெனநிமிர்ந்தனநெடுங்கோல். (கசுஅ)

சேமத்தேரினையச்சிறச்சிதறினவந்தோ
காமசசாரதிபுன்றலையுருட்டினகடந்து
தூமத்தின்பொறியுமிழ்ந்தனசுடுசரமதனூற்
பாமத்தின்புவிபுதைத்தனகொழும்புகைப்படலை. (கசுகூ)

ஆனைபட்டனகடிர்திறலங்கதொழிலசுரத்
தானைபட்டனருரகதங்குரமறசசாய்ந்த
சேனைபட்டனநோக்கினன்வெந்திறற்றீயோன்
மோனைபீட்டெழுவெகுளிமீக்கொண்டெழுமுனிந்தான். (உ00)

கொடுமுகக்கணையாயிரத்திரட்டிமேற்கோத்தா
னடுசிலைத்தொழிலையனுமாங்கவையறுத்தான்
விடுகடுங்கணையாயிரந்துரந்தனன்விமலன்
சுடுசரந்தெரிந்தாங்கவையசுரனுந்துரந்தான். (உ0க)

எரிமுகப்படைதொழுதெடுத்தெய்தனனிருதன்
கரியகார்முகிலப்படையதுகொடுகாத்தான்

பரிதிமாப்படைதொடுத்தனன்பதகனப்படையைச்
சுருதிநாயகனப்படைதொடுத்தனன்றூரந்தான். (உ0உ)

வாயுவத்திரந்தொடுத்தனன்வாளெயிற்றசுரன்
மாயனுங்கதுவப்படைதொடுத்தனனறுத்தா
னேயவாருணத்திரந்தொடுத்தெய்தனனிருதன்
மாயனப்படைக்கப்படைதொடுத்தெதிர்மறுத்தான். (உ0௩)

மூத்தலைக்கழுதொடுத்தனன்முனிந்தவாளரக்க
னத்தனுங்கதற்கென்செய்துமென்றகமயிர்த்தான்
மத்தவாரணத்துரிவையாற்றெழுதுளமதித்தா
னெய்த்தலைப்படையர்நிலைதிரிந்ததுகெடுவான். (உ0ச)

ஆழிமாப்படைதொடுத்தனன்வாளெயிற்றசுரன்
கேழ்கிளர்ந்துவெம்புகையொடும்பொறித்துளிகிளைப்பப
போழ்விசும்பறுத்தெதிர்ந்ததுபுனிதத்தவனேச
சூழ்வலங்கொடுமீண்டதச்சுடுசினத்திகிரி. (உ0ரு)

காய்சினத்தராட்படைதொடுததிவன்றனைக்கட்டிப்
பூசநீர்ப்பனென்றெடுத்தனன்விடுத்தனன்புகலும்
பாய்சிறைக்கலுழாத்திரந்தொடுத்தனன்பரமன்
மூசுவெஞ்சினத்தெதிரொதிர்விழுங்கினமுனிந்து. (உ0சு)

ஒன்றுமாவதன்றெனச்சிலையெடுத்தழன்றுருத்தான்
குன்றுகைக்குடையாக்கொடுகோட்புரந்தளித்த
வென்றிமாயனுமாங்கவனெடுத்தவெஞ்சிலைக
ளென்றகுன்றமைஞ்ஞூற்றையுந்துண்டமிட்டிறுத்தான். (உ0எ)

பின்னுமைந்துநூறாயிரம்பெருஞ்சிலைபொறுத்தான்
பொன்னலங்கொளிவடிம்புடைநெடுங்கணைபொழிந்தா
னென்னையாளுடைநாயகனச்சிலையிறுத்தான்
வன்னெடும்புயத்தழுத்தினன்சிலசிலவாளி. (உ0அ)

ஆரமாபினூடழுத்தினன்சிலகணையழல்வாய்த்
தீரனெற்றியிறசெலுத்தினன்சிலகணைகுருதி
சோரநின்றனனயர்ந்தனன்றூங்கினனன்கமல
வார்கொழும்புயல்வண்ணனுமணிநகைபூத்தான். (உ0கூ)

இவனினிப்படுமென்பதென்றுணர்ந்தனனிடையே
யவனையீன்றிடுகோட்டவிநக்கினத்தடைந்தாள்
புவனிநாயகன்வெள்கினன்திருப்பினன்பொலந்தேர்
கவர்தடம்புயத்தசுரனுங்கடிநகரடைந்தான். (உக0)

கூவகம்பனுங்கொதித்தகும்பாண்டனுஞ்சேனை
காவல்பூண்டவரிருவரும்வடவையிற்கனன்று
ரோவரும்பலபத்திராமனோடுருத்தார்
வாவுதோமரமெடுத்தனன்மடுத்தனன்மறித்தான்.

அளப்பருந்திறற்சேனையுமிருவருமதிரக்
களத்தினேர்ந்தனர்பத்திராமனுங்கனன்று
ளப்படுஞ்சினந்தலைக்கொளச்சுழற்றினனுலக்கை
தளப்படப்படுத்தனைத்தனனிரைத்தத்தானை. (உகஉ)

சுற்றினன்பலசுழற்றினனுருமெனச்சுழற்றி
யெற்றினன்படைப்புடைத்தனனிகலெயிற்றசுர
னுற்றசேனையைத்தொன்னிலங்குழம்பெழத்துவைத்தா
னற்றதுண்டமுங்கண்டிலடைசைப்படுத்தனைத்தான். (உகங)

கரங்களீதிகல்வாளெயிற்றசுரர்தங்கழல்கள்
சிரங்களீதடுபரியிதுதேரிதுசிதைந்த
வுரங்களீதெனவறிவரிதன்னவனுலக்கை
பரங்கொண்மாநிலஞ்சேறெழப்பசைபடத்தேய்ப்ப. (உகச)

கண்டெறித்தனர்பணைப்புயமுறிந்தனர்கனகக்
குண்டலங்களுமகுடமுந்தகர்ந்தனர்கொடியோர்
மண்டைசிந்தினாதாளறப்படுகளமறிந்தா
ரண்டநாயகன்றேமாத்துலக்கையாலநேகர். (உகரு)

ஈதுகண்டனரடுபடைத்தலைவாமற்றிருவா
பூதரஞ்சுமந்தூழிவெங்கனலெனப்புகுந்தார்
காதுவெஞ்சினத்தெறிதலுந்தோமரங்கடாவிப்
பாதகத்தர்கைப்பருப்பதநெருப்பெழப்பகுத்தான். (உகசு)

மாறியோச்சினன்வயிரவாளுலக்கையான்மருமங்
கீறிவீழ்ந்தனனொருவன்மற்றொருவனைக்கிடைத்தா
னேறுவெஞ்சமரோற்றனனுங்கவனிவனு
மூறுசெம்புனற்சென்னியைத்துண்டமிட்டுடைத்தான். (உகஎ)

அன்னகாலையின்மீண்டனனயிலெயிற்றசுரன்
றன்னையீன்றவளமுதிடைவிலக்கவுந்தாழான்
மின்னுவாளெயிற்றடுபுலியேறெனவெகுண்டா
னென்னையாளுடைநாயகன்முறுவல்பூத்தெதிர்ந்தான். (உகஅ)

வளைத்தசேனைமற்றியாவையும்பிணப்படமடித்துத்
தொளைக்கையானையுந்துரகமுங்கீழ்ப்படத்தொலைத்துக்

இளைத்தவாளெயிற்றசுரர்கோன்றனிப்படக்கிடைத்துத்
தளைத்துழாயினன்விளைத்தனனடுபெருஞ்சமரம். (உககூ)

தேருந்தேருமாய்த்திரிந்தனதிரிந்தவெண்டிசையும்
பாருமண்டமுங்குலுங்கினபேரறம்பதைத்த
தாருவானகத்திமையவர்வெருவினர்சலித்தார்
போர்விளைத்தெதுவிளைப்பனொன்றஞ்சினர்போனார். (உஉ0)

இனையதன்மையரின்னணமுடற்றியவெல்லை
நனைநறுந்துழாய்நாயகனுங்கவனடத்துந்
துனைகடும்பரித்தேர்முகச்சாரதிசுடரும்
புனைமுடித்தலையுருட்டினனொருசரம்போக்கி. (உஉக)

மாண்டிறந்தனன்சாரதிவயப்பரிநெடுநாண
பூண்டகோலொடுஞ்சரிவரப்போக்கினன்புனிதன்
றூணடுதேரினையச்சிறச்சரங்கொடுதுணித்தா
னூண்டுவாளெயிற்றசுரனுமிருநிலத்தானான். (உஉஉ)

நாறுபூந்துழாய்த்தனிமுதனாயகனமர்க்கென்
றேறுதேரிழிந்திருநிலத்தாயினனவன்கைச்
சீறுதிண்சிலையனைத்தையுந்துணிபடச்சிதைத்தா
னீறிலாப்பெருந்தன்னுடைத்திகிரிகொண்டெதிர்ந்தான். (உஉங)

நீலவார்கடலுருவுகொண்டனையவனிரைத்தோ
ளாலமாமரந்தூக்கியவிழுதெனவரிந்தான்
பாலலோசனனோக்கினன்பசுந்துழாயவற்குச்
சாலுமன்பொடும்வெள்விடைக்காட்சிதந்தளித்தான். (உஉச)

அரிந்துபோக்கினவன்றியெம்மருச்சனையயர்ந்து
புரிந்தகைகளோர்நான்கையும்போக்கலையென்று
விரிந்தவார்சடையெம்பிரானருளினவேண்டிப்
பரிந்துபோற்றினனரிந்திலனுங்கவன்பணிப்பில். (உஉரு)

தூக்குகைகளோர்நான்கொடுமரனடிதொழுதான்
மேக்குயர்ந்தெழுகுருதியான்வெள்கினனின்றான்
றூக்குவெஞ்செருவேண்டியசெருக்கொடுதடக்கை
போக்கிநின்றனைபுயத்தினவொழிந்தனைபோலும். (உஉசு)

இனிச்செருக்கொழிந்திருத்திமற்றிருந்துழாயலங்கற்
கனிக்கொழும்புயல்வண்ணனோடுளவளாய்க்கலந்து
பனித்தவார்குழனின்மகளுசையினைப்பணைவிற்

என்றளித்திகலேறுடையெம்பிரான்கயிலைக்
குன்றமெய்தலுமெறுழ்வலியசுரர்தங்கோமான்
மன்றலோதியையவதுவைசெய்தவற்கெனவளித்தா
னன்றுவேண்டியயாவையுமன்னவற்கீந்தான். (௨௨௮)

வதுவைமுற்றியபின்னரின்வரிசசுரும்பரற்றும்
புதுநறுந்துழாய்க்கண்ணியோன்றுவாரகைபுகுந்தான்
விதுவலங்கலஞ்சடையினேனருச்சனைவிரும்பி
யெதுகுலத்தனிநாயகனரசுவீற்றிருந்தான். (௨௨௯)

சோணிதப்புரத்திருந்தனனசுரர்கோன்றென்னீர்
வேணியெம்பிரானருச்சனைவரன்முறைவிளைததான்
மாணிழைக்கொருபுறங்கொடுததருளியவரதற்
காணநோற்றலாலெம்பிரான்காட்சிதந்தளித்தான். (௨௩௦)

என்னைவேண்டினையென்றலுமசுராகோனெந்தாய்
நின்னடித்துணைபோற்றவுநிருத்தநாடகத்தின்
முன்னர்நின்றியான்குடமுழவிசைப்பவுமுயன்றே
னன்னதந்தெனக்கருளெனப்பின்னருமறைவான். (௨௩௧)

கருணைபெற்றுநின்கணத்துளேனுகவுங்கருத்திற்
பெருகுமன்பொடுநின்னடியருச்சனைபேணி
நருமதைப்பெருநதியிடைப்படுத்தியவிலிங்க
மிருநிலப்புறத்தென்பெயராக்கவுமியைந்தேன். (௨௩௨)

அந்தமாநதியிலிங்கமற்றருச்சனையயர்ந்தா
ரெந்தைநின்னடிபெறவருளீகுதியென்று
னந்தநல்வரம்யாவையுமளித்தனனமலன்
புந்திகூர்ந்தவன்றன்னெடுங்கயிலைபோய்ப்புகுந்தான். (௨௩௩)

வாணாசுரன்பூசனைச்சருக்கம் முற்றிற்று.

ஆகச் சருக்கம் ௩௩-இல் திருவிருத்தம் ௪௦௨௭.

## ௩௪-வது. மன்மதன் சிவார்ச்சனைச்சருக்கம்.

கலிவிருத்தம்.

மன்னுவார்சடைமாதவத்தந்தணீ
ரின்னுமோர்கதைகேட்டிரியம்புதும்
பொன்னலங்குபுரிசடைப்புங்கவன்
றன்னருச்சனைக்கின்னருடந்ததே. (௧)

பள்ளநீர்வயற்பப்பரதேயத்தி
னெள்ளரீர்ந்தபகவதியென்னுமூர்த்
தெள்ளுநான்மறைச்செல்வன்றபனனோர்
பிள்ளையன்னவன்பேருமசித்தனே. (உ)

தருமசீத்தனன்றன்குலவைதிகக்
கருமசீத்தனன்கண்ணுகர்வாழ்க்கையா
னுருவமங்கையர்க்காணிஞெருத்தனை
வெருவலன்றொடர்காமவிருப்பினான். (௩)

இழிகுலததவராயினுமின்னுரு
விழியினோக்குறின்வெம்முலைபுல்லுவான்
கழிபெருங்கருங்கங்குற்களவினு
லொழிவரும்பொருளீட்டியுதவுவான். (௪)

புன்றொழிற்குளனுகியபுன்மையா
னன்றிதீரநடக்குறுநாளையிற்
கன்றுகாரிருட்கங்குலிற்றுக்கிக
மென்றுரைத்திடுமானகரொய்தினன். (௫)

மண்டுகங்குன்மறைப்பரவைக்கரை
கண்டவன்சங்கரிசனன்றன்மனை
கொண்டநன்பொருள்வவ்வினன்கோடலுந்
தண்டருந்திறலோனைத்தழீஇக்கொண்டான். (௬)

விட்டிலன்னவனைக்குலவேதியன்
கட்டுகைக்கணெகிழ்ந்திலன்கண்ணுரு
வட்டவாண்முகநோக்கிமறைக்குலம்
பட்டநீயிப்பழிசெயவேண்டுமோ. (எ)

மரபினோங்கியவான்குலத்துற்றனை
யுரவுநீணிலத்தாரொழிலோங்கினை
கரவுசெய்யக்கடவதன்றேயெனாக்
குரவரிற்சிலபின்னருங்கூறுவான் (அ)

குலங்கெடுத்தனைகோத்திரசூத்திர
நலங்கெடுத்தனைநல்லொழுக்கெய்திய
புலங்கெடுத்தனைபுல்லொழுக்கெய்திய
துலங்கொடோளவுரைத்தியென்றோதினன். (௯)

அன்னவன்சொலக்கேட்டவசித்தனும்
பன்னுநான்மறைப்பண்டிதவென்னுடை

முன்னையூழின்முயற்சியின் மொய்குழற்
கன்னிமார் தங்கலவிவிரும்புவேன். (௧0)

அன்னமன்னவர்க்காட்பட்டழிகுல
மன்னசாதிவரம்பிகந்தேகினேன்
பின்னவர்க்கெனநல்கப்பெரும்பொருண்
முன்னியீங்கிதுசெய்யமுயன்றனன். (௧௧)

அந்தணாளனசித்தனுரைத்தசொற்
சிந்தைமேவுறக்கேட்டனன்றீமையோய்
நிந்தைநீத்துநெடுங்கதியெய்தினை
யுய்ந்துபோதியென்றோது தன்மேயினான். (௧௨)

கண்ணுதற்கடவுட்பெருமான்றனை
வண்ணநாண்மலரான்மலர்த்தாளிணை
யெண்ணியெண்ணியருச்சித்திரங்குதி
நண்ணியோர்ந்தவையாவையுநல்குமால். (௧௩)

பொருளுமேன்மையும்புல்லொழுக்கெய்துரு
வருளுமீயுமவனடித்தாமரை
மருள்செய்காமவெகுளிமயக்கமு
மொருவிநீங்குவையென்றெடுத்தோதினான். (௧௪)

தூய்மையென்பனசொற்றுணர்த்தந்தணன்
வாய்மைகேட்டுமணிநகைபூத்தனன்
றீமையேன்றனையென்சொலித்தேற்றினா
யாய்மயிற்குலத்தாரடிக்கன்பனே. (௧௫)

மானிளம்பெடைமங்கையர்க்காட்பட
லானதொண்டுளவேலருளையநீ
கானமாவினைக்கைநொடித்தாயயல்
போனநீரணைமீளப்புகாதென்றான். (௧௬)

நன்றுசொற்றனையாயினுநல்லுணர்
வொன்றுசொற்றுமசித்தியுணர்தியால்
மன்றலோதிமயிலனையார்முலைக்
குன்றிலிங்கமெனவுளங்கோடியால். (௧௭)

பூசப்பட்டனமுன்புறப்பூசிநல்
வாசநாண்மலரால்வழிபட்டபி
னேசில்பண்டைநைவேத்தியமீந்தரு
ளீசனேயென்றிளமுலையேத்தென்றான். (௧௮)

இனையதன்மையெடுத்துரைத்ததொழில்
வினவிலுனைவிடுத்தனன்வேதிய
னனையனேகியழிதொழிற்பார்ப்பினி
மனைபுகுந்தனன்காமமயக்கினால். (கக)

அரவவல்குலவளொடுமின்னலந்
தரவிரும்பினன்றம்மிற்பொருந்தினார்
மரயினீங்குமசித்தனுமங்கையு
மிரவினுண்மலர்ப்பாயலினெய்தினர். (உ0)

மங்கையன்னவளேந்திமதாத்தெழு
கொங்கைநோக்கினன்வேதியர்கோன்றனக்
கங்குணர்த்தியதுள்ளமடைத்தனன்
பொங்குநாண்மலர்ப்பூசனைபோற்றினான். (உக)

இசையவேண்டியவெள்ளிலையீர்க்ககன்
றசைதருந்தனதேவனுக்காக்கினான்
வசையிலாசையினால்வழிபட்டன
னசைவிருப்பினினையநவிற்றுவான். (உஉ)

தேவதேவதனேச்சுரதேவநீ
பாவைமார்பிற்டணைத்தெழுகொங்கையா
மேவருஞ்செயனல்கெனவேண்டிநின்
ருவகூறியவட்புணர்ந்தானரோ. (உங)

விடியநோக்கினன்வெள்ளிடைப்போயினான்
கொடிமருங்குனல்லார்துணைக்கொங்கையின்
கடிகொணுண்மலரர்ச்சனைகைவிடா
னெடிதுவைகலுமின்னணநீத்தனன். (உச)

ஈதுகாலத்திருஞ்சுரமெய்தினான்
காதுவெஞ்சினக்கைக்கதையாலவண்
போதுமாக்களுயிர்ப்பொறைபோக்குவான்
வாதைசெய்தவர்கைப்பொருள்வவ்வுவான். (உரு)

இன்னலீதிழைத்தெய்தியகாலையி
லன்னகானத்தெரியழலாங்கவன்
றன்னையாருயிருண்ணத்தழற்சுரஞ்
சென்னெறித்தலைத்தீமையொழிந்ததால். (உசு)

மாதர்கொங்கையனென்னும்வாதனைத்
தீதில்சிந்தையினலாருச்சித்கலா

லோதுபாவமொழிந்தனனேங்கிரும்
பாதகற்கும்பவித்திரமுற்றதால். (உஎ)

கந்தவார்குழலார்கதிர்க்கொங்கையி
னெந்தைதாளருச்சித்திரந்தேத்தலாற்
பைந்துழாய்முடிப்பாம்பணைப்பள்ளியான்
சிந்தைதந்துறச்சித்தசனாயினன். (உஅ)

வேறு.

நல்லெழிலுருவத்தானவையினேக்கத்தான்
மல்லெழுதடம்புயவனப்புவாய்ந்தனன்
றொல்லைவானமரருந்தொழுதன்மேயினு
னல்லொளிமரகதத்தலங்குமேனியான். (உகூ)

வரிபொறிப்பாம்பணைவரதனேவலி
னருச்சனைக்குறைமுடித்தாற்றவேண்டுவான்
விரித்தவெண்டிரைப்புனற்காசிமேயினன்
புரித்தவார்சடைமுடிப்புனிதறபோற்றுவான். (௩0)

அத்தலையருச்சனையயர்ந்ததேவற்குச்
சித்தசனெனத்திருநாமஞ்சேர்த்தினன்
மெய்த்திறத்தாலயம்விதியிற்கோட்டினன்
பத்தியினருச்சனைபயில்வதாயினன். (௩க)

இயற்றியவருச்சனைக்கிரங்கியெம்பிரான்
புயற்குழலவளொடும்விடையிறபோந்தனன்
மயக்கறசசித்தசன்மரபிறபோற்றினன்
வியப்பொடுங்கண்கணீகலுழவீழ்ந்தனன். (௩உ)

தென்றலந்தேரொடுகருப்புச்செஞ்சிலை
துன்றியபுகர்முகச்சுரும்புநாணொடு
மன்றனுண்மலாக்கணைவழங்கினன்கலை
குன்றுறுமுழுமதிக்குடையுமீந்தனன். (௩௩)

கிள்ளைவாம்புரவியும்பூவைக்கிள்ளையும்
வள்ளைவார்நெடுங்குழைமகளிாசசேனையுங்
கள்ளவிழ்கருங்குழலிரதியுங்கனி
நள்ளிருட்பகடுமேமுதலநல்கினன். (௩ச)

பெற்றனனிவையெலாம்பெற்றபோர்வலி
முற்றமூன்றுலகெலாங்கடந்துமுற்றினன்

மற்றுளதேவரும்வையமாக்களுங்
கொற்றவெண்முழுமதிக்குடைக்குளாக்கினன். (௩ரு)

விருப்பினலருச்சனைமரபின்வேண்டலா
னருட்பெறப்பெற்றபேறிவையென்றலணி
யிருட்கறைமிடற்றனையினிதினேத்தினோர்க்
கொருப்படும்பேறியாமுரைக்கற்பாலதோ. (௩சு)

பூங்கணையைந்தினற்புவனமூன்றினு
மோங்கிருந்தனதுகோலோச்சிவென்றன
னீங்கருஞ்சராசரமனைத்துநீணிலா
வாங்கரும்பெருங்குடைமதிக்குள்வைகுமால். (௩எ)

எள்ளருமதச்செருக்கிருந்தவாபிறைப்
பிள்ளைவேணியனையுமதிக்கப்பெற்றிலான்
கள்ளவிழகணையவன்கருததிற்சார்த்தினன்
பொள்ளெனத்தொடைபுடைத்தெழுந்துபொங்கினன். (௩அ)

என்னையாளுடையவனெனகொலீதென
வுன்னருந்திருவருளுருத்துநோக்கலும்
வெந்நெருப்பெழநுதல்விழித்ததாங்கவன்
றன்னுடற்பொடிபடசோம்பராயினன். (௩௯)

தேவருந்திகைத்தனர்திகந்தமெட்டுள
காவலர்திகைத்தனாகடவுட்சித்தசன்
வேவருந்தழற்புகைவிழிக்கொளுமையாற்
றுவருமுலகெலாந்தவழ்ந்துவீங்கிற்றே. (ச0)

ஓர்ந்தனளிரதிவெந்தொழிந்தசாம்பரிற்
சோர்ந்தனளரற்றினடுணுக்கமெய்தினு
ளீர்ஞ்சடைப்புனிதனையிரந்துபோற்றினள்
பேர்ந்திலளந்நிலையழுதுபேதுறு. (சக)

நின்றனளவணிலைநிமலனேக்குறுக்
கன்றியதிருவுளக்கறுப்புநீத்தன
னன்றவட்குருவமாயருவமற்றவர்க்
கென்றளித்தந்நிலையெழுப்பியீந்தனன். (சஉ)

தேவரிலொருவனென்றரனைச்சிந்தியாப்
டிவரங்கணைகளாற்பொருதுமாண்டனன்

யாவருமிங்ஙனமதிக்கிலந்தணீர்
மேவருந்தழற்படுநிரையம்வீழ்வரால். (௬௩)

மன்மதன் சிவார்ச்சனைச்சருக்கம் முற்றிற்று.

ஆகச் சருக்கம் ௩௪-இற் திருவிருத்தம் ௪௦௭௦.

## ௩௫-வது. கிருதுசிவார்ச்சனைச் சருக்கம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இந்தியங்கடந்து புலன்களோரைந்து மொருவழிநிறுத்தி மற்றெழுதா, முந்தைநான்மறைக்கு மரிமுதலெவர்க்கு மளப்பரு முழுமுதற் பொருளிற், சிந்தனைதிருத்து மருந்தவத்தலைவீ ரின்னுமோர் கதையதன்றிறத்துப், புந்திவைத்தொருங்கு கேட்கெனச்சூதன் புகன்றவர்க்காங்கது புகல்வான். (௧)

மணிகொழித்திரைக்கும் பெருநதியுடுத்த மாளவதேயமத் தேயத், தணிநெடும்புரிசை வயிணவமென்னு மணிகிளா பெருந்திருநகரிற், கணிதநான்மறையின் குலத்தவதரித்த கிருதுவென்றொருகடுங்கண்ணன், குணிப்படுகரத்தோனுயிர் செகுத்துண்ணுங் கொலைத்தொழி லடுதிறற் கொடியோன். (௨)

புண்ணியபாவ மென்பனவிரண்டும் பகுத்துணரறிவிலன் பொருகோட், டண்ணல்வெள்விடை யோனடியவ ரொழியா வரந்தைபெற்றலமரப்புடைக்குந், துன்னெனக் கழுதுஞ் சுழல்வருமிருளிற் பிறர்மனை தொறும்பொருள் கவரும், வண்ணவால் வளைக்கைப் பொது மகட்குதவி வளரிள வனமுலை முயங்கும். (௩)

ஊற்றவெடுத்துவெளிப்படநுகரும்பல்லுயிரீர்ந்தெடுத்துணனுங்
கானகஞ்சுழலுநெறிப்படுமாக்கட்புடைத்தவர்கைப்பொருள்கவரு [ட்
மேனையோனின்னபுல்லொழுக்கொழுகு மெல்வையினிளமுலைக்கருங்க
ணேகைப்புலைச்சிநலனுகர்ந்தவள்பாற்றுயருழன்றியங்குறுமந்நாள். (௪)

கருங்கடற்பரவை கிழித்தெழுமால காளகண்டத்திறைற்கென்னப், பொருந்தியபுலரி நறுமலர்தெரிந்து போதருமொருவனப் பொழுதி, லெரிந்தெழ வெகுளிமீக்கொளத் தொடராவோடின னம்மலர்க்குடம்பை, பரிந்திடைபறித்தா ளுங்கவனரற்றக் குணில்கொடு புடைத்தனன் பதகன். (௫)

தண்மலர்க் குடம்பை பறித்தலு மொழுகி வீழ்ந்ததோர் தனிமுகை.யதனை, மண்மலர்ந் ததுவீ தெமக்கலவரற்கீ தென்றுதன் மனத்தொடு மதித்தான், புண்மலர்ந் தடுவேற் கருநெடுந்தடங்கட் புலைச்சியுந்தானுமாய்ப் புனைந்தா, னுண்மருங் கொசிக்கு மிளமுலையவளைத் தழீஇக்கொடு நன்னல நுகர்ந்தான். (சு)

அழுதழு தரற்றி யாவெனக்கூவி மழவிடை யானடித்தொண்ட, னெழுதருகவிகை மன்னவற்குரைப்ப வாங்கவன் வெகுளிமிக் கெழுந்தான், பழுதிழைத்தகலு மன்னவற்கொணர்மி னென்றலு மிறவுபார்த்தனரப், பொழுதவற் கொணர்ந்தா ரருஞ்சிறைப்பிணித்துப் புகுத்தினர்காரகத் தகவை. (எ)

அருஞ்சிறைக்கிடந்து நாட்பலகழிய வாக்கைவிட் டாருயிர்துறந்தான், பொருஞ்சினத் தறுகட்டென்புலத்தூதர் புகுந்தனர் புயத்தொடுங் தாம்பு, வரிந்துகொண் டிறக்கிசசேறலுமதனை நோக்கினர்மழைவிடைப் பெருமான், பெருந்திருக்கயிலைக் கணத்தவர் படர்ந்தா ராங்கவர்ப் பிறபடப் புடைத்தார். (அ)

வாளொளியிமைக்குமானமீப்பொருத்திச்சென்றனர்மகரநீரளித்த
காளகண்டத்தன்முன்னரின்விடுப்பத்திருவருட்கருணைபெற்றுவந்தான்
மூளமரிழந்ததென்புலத்தூதர்மறலிபாலீங்கிதுமொழிந்து
தாளிணைதொழுதார்சித்திரகுத்தன்றன்னொடும்வினவலும்புகல்வான்.

மல்லனீர்ப்பழன மாளவதேய வயிணவத்தொன்னக ரதன்பாற், றொல்லைநான்மறையோர்குலத்தவ தரித்துத்தன்னிலைதுறந்தனனவனு, லெல்லைமாநிலத்தினிகழ்ந்த பாதகத்தையெம்மனோர் மொழியமுறறுறுமோ, குல்லைநீண்மோலி முதலினோரளப்பிற் கற்பமோர் கோடிபெறறுமால். (க0)

பூதிசாதனத்தனுருத்திரமணியனொருத்தனெம்புனிதனுக்கென்னச்
சீதநாண்மலர்கொண்டேகலுமவனைச் செயிரத்திடைபறித்தனன்பழிக்
போதினோரும்புநிலத்திடைவீழவீதாற்கென்றனன்போனு [கும்
னீதலாலிவனுற்செய்ததோர்தருமமுண்டுகொலென்றனனெனலும். ()

வயிரவாளெறிக்கு நெடுங்குழைமகரந் துயல்வரமணிமுடியசைத்தா, னயிலெயிற்றரவமிலைச்சியபெருமான் றிருவருளறிந்ததிசயித்தான், குயின்மொழிக்குதலை பங்கனுக்குரியோர் கொலைத்தொழில்புரிந்தனரொன்னு, மயர்வறத்தொழுதுநீங்குமினமர்காளென்றனன்பின்னரும்வலிப்பான். (கஉ)

வருகுதிர் நீவிர் மழவிடைப் பெருமான்மலரடி யருச்சனைபுரிவா, ரருகுசென்றவர்க் கொன்றியற்றின கொடுப்போ ராங்கவர் பணி

விடைக் குரியோர், கருதுமிம்மூவர்க் காணுறினமர்காள் கையெடுத்தடிக்கடி தொழுமி, னுருகிநீத்தகன்மினன்றெனினமதுகோமுறை யழிவு பெற் றிடுமால். (கரு)

விரிதிரைபுரளு நெடுங்கடல் வரைப்பின் வெண்மருப் பொருகை மால்யானை, யுரிவைபோர்த் துடுத்தோன் பூசனைபுரிவாருளரொனி லாங்கவர் நோன்மை, யரிமுதலெவர்க்கு முரைப்பதற்கெளிதன் றெம்மனோ ரறைவதற்கெளிதோ, புரிசடையவனை யருச்சனைமரபிற் போற்றினோர்விழுப்பமார் புகல்வார். (கச)

முத்தவாணகையமுகின்முலைக்கௌரியைங்கரன்முருகவேள்வீர
பத்திரன்கணத்தோர்நந்திமாகாளர்வயிரவர்பரமனுக்கரிக்குப்
புத்திரனினையோர்மற்றுளோரொவரும்புராந்தகன்மலரடிபோற்றி
நித்தலும்பரவியருச்சனைவகுப்பாரின்னமுநிகழத்துவன்கேண்மின். ()

கன்னியர் கருப்பமகளிர நான்மறையோ ரின்னவர்க்கடுந்துயிர் செகுத்தோர், பொன்னவிர் சடையோன் சினகரம் புகுந்து நிதிகவர்புலையர் தங்குருவின், பன்னிகைப் பிடித்தோ ரிவரலாற்கொடிய பாதகராயினும் பரமன், றன்னடிப் பூசைக் குரியரோ லவரோ யரிமுத லவர்தொழுந் தலைவர். (கசு)

என்றுதென்புலத்தோ னெடுத்தவாக்குரைத்த யாவையு மெடுத்தனனியம்பிப், பொன்றிகழ்சடிலச்சூதமா முனிவனருந்தவர்க் கின்னமும் புகல்வான், கன்றுமானெடுத்த திருக்கரப்பெருமா னருச்சனைக் கடன்முறை புரிந்தோர்க், கொன்றுநன் கிழைப்பி னுங்கவரானுக் கொருமருங் கினிதிருந் துவபபார. (கஎ)

சூதமாமுனிவ னின்னணமிசைப்ப முழுதுண ரருந்தவத் தொல்லோர், ராதிநாயகன தருச்சனை மரபினதிகமீ தெனவுரைத்தருளென், றோதலும் பரமனுயிர நாமமுச்சரிப் பனவெனவுரைத்தான், கோதறுநாம்மெவ்வழித் தென்றுவினுயின ரருந்தவக் குலத்தோர். (கஅ)

பரந்துவண்டரற்றும் பசுந்துழாயலங்கற் பண்ணவ னெடுத்தெடுத் தேத்திப், புரந்தனனவற்றைப் பாரதகாதை புகல்வன காண்டிரொன்றருள, நிரந்தரமவற்றி னெறித்தலைநின்று நிமலனைப் பூசனை புரிந்தோ, ரரன்றிருவருளிற் பெற்றவாறுளவே லருளெனச் சூதனுங் கிசைக்கும். (கக)

கிருது சிவார்ச்சனைச்சருக்கம் முற்றிற்று.

---

ஆகச் சருக்கம் கரு-இு திருவிருத்தம் ௬௦அக.

---

## ௩௬-வது. இலக்குமிபூமிதேவி சகத்திர நாமார்ச்சனைச்சருக்கம்.

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

சேயகாலத்துவெங்கணசுரர்தங்குலத்துட்டீயோ
னுயவாலத்தையொப்பான்சலந்தரனலங்கற்குல்லை
மாயவன்றன்னையேற்றுமண்டமர்விளைப்பதானன்
போயதுபருவநூறுயிரமிடைபொருதுநின்றார். (௧)

புனத்துழாயலங்கற்றேளான்புறங்கொடுத்திரிந்துபோன
னினப்புயத்தினவுதீர்ப்பான்சலந்தரனெழுந்துபோந்து
சினப்புலியுரிவையார்த்தசெஞ்சடைப்புனிதன்றன்னை
முனைச்சமர்க்களத்துக்கூவியாரமர்முயல்வதானன். (௨)

வாலிளம்பிறைமென்கண்ணிமணிநகைபூத்துமெல்லென்
கால்கொடுவளைந்தநேமிப்படையொடுங்கழிந்தானவி
யேனுமக்காலந்தனினிருந்துழாயவனுமன்னேன்
மேலெழுமலர்க்காவெய்தியருந்தவம்விளைத்துநின்றான். (௩)

அவ்வனத்தசுரன்றேவியாமொழில்விருந்தையென்னுஞ்
செவ்வியணறும்பூக்கொய்வான்சென்றனண்முனிவற்கான
வவ்விதழ்க்கமலச்செங்கைகூப்பினள்வணக்கம்போக்கி
நவ்வியம்பேடைபோல்வாளினையனநவில்வதானள். (௪)

ஐயனேதவமேற்கொண்டவந்தணமற்றென்றேரா
மெய்யனேயளியேற்கொன்றுவிளம்புதல்வேண்டுமென்னுப்
பையராவணிந்தவேணிப்பண்ணவனுடனெங்கோமான்
மொய்யமர்விளைப்பச்சென்றானடுதிறன்மொழிதியென்றாள். (௫)

நின்னுயிர்க்கொழுநனன்னேனேமியாலிருகூறுகித்
தன்னுயிரொழியவீழ்ந்தானென்றலுந்தமியளாகி
யந்நிலையலறிச்செங்கைநெரித்தனளலறிவீழ்ந்தாள்
பன்னகமழலிட்டென்னப்புரண்டனள்பதையாநின்றாள். (௬)

பின்னருமுனிவற்போற்றிப்பெருந்தவத்தலைவனேநீ
சொன்னதுசரதமாயினவ்வுடற்றுணியிரண்டு
மிந்நிலையழைத்திநோக்கின்மெய்ம்மையென்றிரந்துசொற்றாள்
கொன்னிலைத்திகிரிக்கோமானுக்கதுகருத்துட்கொண்டான். (௭)

மாயமற்கடங்களாகவிரண்டுருவகுத்துநீவிர்
தாயரன்றிகிரிகீண்டசலந்தரனுருவயாக்கை
யாயவோரிரண்டுங்கொண்டுவருகிறொன்றருளவாங்குப்
போயவையிரண்டுங்கொண்டுபுகுந்தனவிருந்தைகண்டாள். (௯)

கண்டனள்விருந்தையென்பாள்கண்புடைத்தலறிமாழ்கி
விண்டனனெஞ்சுவெந்துவீழ்ந்தனள்வெதும்பலுற்றாள்
கொண்டவெந்துயர்க்கோரெல்லைகண்டிலள்குழைவதானு
டண்டவிலருந்தவத்தோற்பணிந்தனள்சரணம்போற்றி. (௯)

ஆருயிர்கொழுநற்போக்கியாவிகொண்டிருக்கமாட்டேன்
வார்குழலவர்க்குநீங்காமங்கலப்பிச்சைநல்கி
ஞோர்தவமதன்மேலுண்டோவாதுணர்ந்துரவோயீங்கெ
னேர்கெழுதுணைவனுவிதருகெனவிரந்துவீழ்ந்தாள். (௧0)

ஆயவளுருவநோக்கியந்நலநுகரவேண்டி
மாயவனவன்றனுக்கைபுகுந்தவன்வடிவுதாங்கிச்
சேயநாளவள்பாற்காமச்செருக்கொடுமயக்கமுற்றான்
பாய்திரைப்பரவைஞாலத்திதிமுறைபாரத்திலானுல். (௧௧)

அனையவளிளமென்கொங்கையணிநலநுகருமந்நாட்
புனைமலர்த்தவிசின்மாயோன்கன்படைபொருந்துங்காலை
வினைபுரிமாயம்போகமரகதவெறபினேனுங்கிச்
சினவுகைத்திகிரிசங்கிற்றுயில்வனதெரியக்கணடாள். (௧௨)

ஆவெனவரற்றியெங்கோனல்லனென்றலறிப்பாய்ந்து
வேவழற்புகுந்துமாண்டாள்விரைநறுந்துளவத்தண்ணல்
பூவையங்குதலைசெவ்வாய்விருந்தைபாற்புந்திபோக்கி
வாவிரும்புலங்கள்வேருய்க்காமத்தான்மயக்கங்கொண்டான். (௧௩)

அங்கவளடலைப்பூழ்திபுரண்டனன்மாயனந்நாட்
டேங்குநீருலகக்காவலொழிந்ததுசெழுந்தோட்டம்பொற்
பூங்கமழ்முளரிமேலோன்முதலினேர்கயிலைபுக்கா
ரீங்கிவன்றன்மைகூறியிரந்தனர்வழிபட்டேத்தி. (௧௪)

பம்புநீர்ச்சடிலப்பெம்மான்பணிமொழிப்பவளச்செவ்வா
யம்பிகைவதனநோக்கவரும்பியவதனவேர்வை
யும்பரிஞெருவித்தெய்தவெயர்வொடுமுகிரின்வாங்கி
நம்பரனளித்தான்றெய்வநான்முகக்கடவுடன்பால். (௧௫)

அங்குரமதனைக்குல்லையலங்கலோற்களித்தியென்னச்
செங்கண்மாலவற்குக்கொண்டுதந்தனன்றிசைமுகத்தோ

னங்கண்மாலதனைவாங்கியடலையினடுவினுய்த்தான்
பொங்குபூங்குழலிபச்சைத்துளவெனப்போதாகின்றாள். (கசு)

அடலைகின்றெழுந்துபோந்தவிருந்தைபாலுள்ளமாக்கித்
தடமுலைமுயங்கிப்போந்துகிடந்தனன்சங்கமேந்தி
மடவரற்பிரிவதோரானஃதுணர்மலர்ப்பூங்கோதை
நெடுநிலமடந்தையின்னோர்நெட்டுயிர்ப்பெறிவதானார். (கஎ)

துவாபரயுகத்துங்காமவேட்கையிற்றுயரங்கூரு
மவ்வாவொடுமயங்கியீரொண்ணாயிரமகளிரோடுந்
தவாநலனுகர்ந்தானெம்மைத்தணந்துபோய்த்தமியேமென்று
முவாமதியொழிந்தவாறேநன்னலமுருகினேமால். (கஅ)

சிந்தனைதிரிந்துவேறாய்த்தெருமருநெடுமோனம்பான்
வந்தருள்புரக்கவேண்டும்வருதியென்றவனியோடு
மெந்தையாரூரினெய்தியிருந்தனள்கமலப்பேதை
தந்தமிலுவகையோடுமருசசனைதருவதானார். (கக)

அரனடிக்கமலம்பூசித்தன்பினென்புருகநின்று
பரவிநாமங்களென்னுமாயிரம்பரிவினோதி
விரைநறுங்கமலமன்னகரத்தினர்விருப்பினின்றார்
புரமெரித்தவனுமன்னோர்க்கெதிரநின்புலப்படின்றான். (உ0)

கருதியதென்னையென்பாலருச்சனைக்கடன்களாற்றி
யுருகியதென்னையென்னாத்திருவருளுவந்துகேட்பத்
திருமகளவனிப்பேதையவளொடுஞ்செங்கைகூப்பி
யிருநிலவதனங்கோட்டிநின்றனளினையசொல்வாள். (உக)

ஆருயிர்த்தொகுதிகாட்டியைந்தொழிற்குரியையாகி
யோருயிர்க்கொருவனாகியமர்ந்தருளொருவமற்றை
வாரியுட்டுயிலுமாயோன்விருந்தையான்மயங்கப்பெற்றான்
சோர்வுறத்தணந்தானெம்மையத்துயர்துடைத்தியென்றாள். (உஉ)

அவ்வரமவர்க்குநல்கியளித்தனனமலனம்பொற்
செவ்வியடன்னேயீன்றபாற்கடனகரஞ்சேர்ந்தா
ளெவ்வமிலவனிப்பூவைமேருவைகுண்டத்தெய்தி
வெவ்வடுதுயரநீங்கியிருந்தனள்விருப்பினன்னாள். (உங)

வளர்திரைப்பரவைதுஞ்சுமாயவன்விருந்தையென்னு
மிளைநுசுப்பணங்கஞ்ஞைத்துறந்தனனெழுந்துசென்றான்
வளநகர்வைகுண்டத்துமாணிழையவரைக்காணா
னுலைதிரைகொழித்தவீங்குபாற்கடலகவையுற்றான். (உச)

வரிந்தகச்சறுத்துவீங்கும்வனமுலைக்கமலைதன்பாற்
புரிந்தபேரன்பினேடும்பொலங்குழைபோதியென்முன்
பிரிந்திடாவரம்பெற்றன்றிப்பெருநிலமடந்தையோடும்
பரிந்துநின்னிடத்துவைகேனென்றனள்பதுமப்பாவை. (உரு)

கணங்குழையுரைத்தமாற்றமயிர்த்தனன்கமலக்கண்ண
னணங்கராமிலைந்தவேணியரனடியருச்சித்தன்றி
யிணங்கிலரிவளொன்றெண்ணிக்காஞ்சிமாநகரமெய்தி
வணங்கினன்கயிலைப்பெம்மான்டரிபுரமலர்த்தாள்போற்றி. (உசு)

அருச்சனையருந்தோறுமாயிரந்திருநாமங்கள்
விரித்துநின்றிரந்துவாழத்திவெள்ளிவெண்கயிலைநின்றும்
புரித்தவார்சடிலமோலிவெள்விடையுகைத்துட்போந்தான்
றெரித்தநான்மறைகொண்டேத்திவழுத்தினன்செங்கண்மாயன். (உஎ)

நினைத்தநின்கருத்தின்வேட்கையென்னெனநிமலன்கூற
நனைப்பணிக்கமலத்தீளுநானிலத்தவளுமின்னே
யெனைக்கருத்துணாந்துபோதவேண்டினனிதுமற்றன்றி
முனைக்கடுந்திகிரியீவாயென்றனன்முளரிக்கண்ணன். (உஅ)

வரங்களோரிரண்டுமீந்துமணிநெடுங்கயிலைபுக்கான்
கரந்தைவார்சடையோனீலக்கார்மழைகமலம்பூத்துப்
புரிந்தனவுருவமாயோன்றனதுவைகுண்டம்புக்கா
னிரந்தவால்வளைக்கைநல்லாரிருவரந்நிலையிற்சென்றா. (உகூ)

அலங்குவால்வளைக்கைநல்லாராயிரநாமத்தண்ணல்
சிலம்படியருச்சித்தன்னுண்மாயனைச்சேரப்பெற்றார்
வலம்படுதிகிரியோனுமாங்கதன்மரபினின்று
பொலங்குழைமகளிர்தன்னைனபுணர்முலைபுணரப்பெற்றான். (௩௦)

## இலக்குமிபூமிதேவி சகத்திரநாமார்ச்சனைச்சருக்கம்

## முற்றிற்று.

---

**ஆகச்சருக்கம் ௩சு-இ திருவிருத்தம்-௪௧௧௯.**

---

## ௩௭-வது. சிவார்ச்சனை மான்மியச்சருக்கம்.

கலிநிலைத்துறை.

முன்னொர்காலத்துமுழுமலர்ப்பீடிகைமுதல்வ
னன்னநாமங்களாயிரத்தொடுமருச்சித்து
நன்னலத்தொடுஞ்சிறந்தகோகன்னமாநகரிற்
பின்னல்வேணியோன்றிருவுருபடெறுஞ்சிறப்படைந்தான் (க)

கண்ணொராயிரக்கடவுளுங்கண்ணுதலவற்குத்
தண்ணறுமலர்சாத்தினனுங்கவைசாத்தி
வண்ணவால்வளைப்புலோமசைமுகிண்முலைமருவி
விண்ணிவங்தெழுகறபகநீழல்வீற்றிருந்தான். (உ)

ஐயனுயிரநாமத்தினருச்சனைபுரிந்து
தெய்வமாக்கதியடைந்தவாச்செப்புவார்திரைநீா
மொய்கொள்வேலைநுண்மணலளந்தறிகுவர்முனிவீர்
கொய்யசிந்தையேனளவையினொடிதரற்பாற்றே. (௩)

எட்டுமேற்கொளுமாயிரமன்றிநூற்றெட்டுத்
தொட்டதிந்தமூவெட்டிரண்டாறிவைதொகுக்கப்
பட்டநாமஞ்சொற்றானடியருச்சனைபயில்வாா
கட்டுவார்சடையெம்பிரான்கயிலைவீற்றிருப்பாா. (௪)

உரைத்தநாமஞ்சொற்றருச்சனைபுரிகுவோருவப்பின்
விரைத்தபூவினாற்புல்லினால்வில்லத்தினுலு
மிரைத்தமென்புனற்கழுவுபச்சரிசிபச்சிலையா
னிரைத்தவார்சடைப்பரமனைத்தொழுவதுநெறியால். (௫)

சொற்றநூற்படியருச்சனைக்கிரியையிற்றெருத்தன்
மற்றைமானதபூசனைமனததொடுமதித்த
லுற்றபூசனையிரண்டுளவன்னவையுரைப்பிற்
பொற்றலத்துளோர்கண்ணுறப்புரிவதோர்பூசை. (௬)

அனையபூசனைக்கிரியையின்மெய்யயுர்ந்திருந்து
நினையலாவதுமானதபூசனைநிமலன்
புனையவேண்டுநைவேத்தியமுதலினபொருத்தி
வினையம்யாவையுமனத்தினுலியற்றுவர்மேலோர். (௭)

மனத்தினேத்தியபூசனைவான்முறைமாக்க
ணினைத்தபோதுமாங்காலைமாலையினுமாநினைத்த

வனைத்துமீசனுக்காக்கவெத்தலத்தினுமாமாற்
புனைத்தவார்சடைப்புனிதர்காண்மானதபூசை. (அ)

உருகுசிந்தையின்மானதபூசனையுஞற்றிக்
கருதிவேண்டினபெறுகுவர்கடைமுறைகயிலைப்
பெருவளம்பெறப்பெறுகுவரீங்கிதுபேசின்
மருவிநித்தலும்வழுக்குறுதியற்றுதன்மரபே. (கூ)

பரவைமாநிலத்துயிர்க்கெலாங்குருவெனப்பட்ட
வரனமர்ந்திடுமிலிங்கங்கள்பலவிதமவற்றிற்
குரவரோத்துறத்தோன்றினகொழும்புயல்வண்ணன்
மரபினாற்பிரதிட்டையின்மாநிலத்தமர்ந்த. (கo)

முனிவராற்பிரதிட்டையினமர்ந்தனமுயன்ற
மனிதராற்பிரதிட்டையினமர்ந்தனமற்றைப்
புனிதர்விஞ்சையரரக்கர்வாளசுரர்கிம்புருட
ரனையராற்பிரதிட்டையினமர்ந்தனவிலிங்கம். (கக)

சயம்புதிவ்வியமாரிடமானிடந்தரும்பே
ரியம்பியவ்வழிநிறைத்தனமீங்கிவையுணரக்
கயங்கடிந்துரித்தாத்தருள்கண்ணுதலவற்றின்
முயங்குசத்தியோடுறைகுவனுயினுமொழிவாம். (கஉ)

எழுதருந்தனிப்பவித்திரலிங்கத்திற்சயனம்
பழுதிறிவ்வியத்திருப்புமற்றுரிடபபகுப்பி
னெழுகுவார்சடைப்பணணவனிற்றல்மற்றுலகந்
தொழுதமானிடம்விநோதமற்றிவைதொகுத்துரைக்கேம். (கங)

ஆருயிர்த்தொகைபுரந்துறுமரசர்தங்கோயி
லோரிடத்தினிற்றுயில்வர்மற்றோரிடத்திருப்பர்
தேரின்மற்றையோரிடத்தினின்றுலவுவர்செல்லா
நேரினேரிடங்களின்விளைத்தகல்வரந்நெறிபோல். (கச).

வித்துமாலுமொத்தெங்கணுநிறைந்திடும்விமலன்
சத்தியோடுமற்றிலிங்கத்துத்தனித்தனித்தழுவி
யொத்துநின்றவாறென்னைகொலென்பிரோலுரைக்கே
முத்தியாருயிர்த்தொகைக்களித்தருளுவான்முயன்று. (கரு)

எண்ணுநெய்யுமொத்தெங்கணுநிறைந்தருளிவனைத்
திண்ணெடும்புவியிலிங்கத்தினருச்சனைசெய்வோர்
நண்ணருங்கதிநண்ணுவர்சத்தியநவின்றே
மொண்ணெடுஞ்சடைமுனிவிர்காளுண்மையீதுண்மை. (கசு)

உரைத்தகுதனற்கேட்டருண்முனிவருவகை
யிரைத்தசிந்தையராகிநின்றெம்மனோர்க்கெல்லாந்
திரைப்புனற்சடையெம்பிரானருச்சனைத்திறத்தை
வரைத்துணர்த்தினபோலுணர்த்தினையெனுமகிழ்ந்தார். (கஎ)

சிவார்ச்சனை மான்மியச்சருக்கம் முற்றிற்று.

ஆகச்சருக்கம் ௩எ-இற் திருவிருத்தம்-சகஙங.

## ௩அ-வது. குருமான்மியச்சருக்கம்.

குரவனின்னவனென்பதொன்றுணர்ந்திலங்குரைநீ
ரரவவார்சடையண்ணலோசக்கரத்தவனே
வரசரோருகத்தொருவனேதந்தையேமறநே
திரமுணர்ந்திலேமன்பதையின்னமுந்தெரியா. (க)

அன்னதன்மையையின்னதென்றருளுதியைய
தொன்னிலைக்குருவரம்பினின்றருச்சனைதொகுப்பா
னென்னமாதவரியம்பலுமென்னையாளுடையான்
பன்னருந்தவக்குரவர்தொன்மரபினைப்பகர்வான். (உ)

தேவர்கின்னரரியக்கர்கந்தருவர்கிம்புருட
ரேரவருந்திறற்கணதர்மற்றியோகிகளுரகர்
மேவுநால்வகைவருணத்தர்விஞ்சையரொழியாப்
பாவராயினுங்குருமுகப்படுவதுவேண்டும். (௩)

நெற்றியொள்ளெரிதுறந்துமன்மதனுடனீற்றுங்
கற்றைவார்சடையெம்பிரான்கயிலைவீற்றிருந்து
மற்றைமன்பதையாவுக்குந்திருவருள்வழங்கி
யுற்றிரங்கியகாலையினற்றமுற்றுணர்ந்தார். (ச)

இமயமீன்றருளெம்பெருமாட்டியீன்றெடுத்த
குமரனைங்கரக்குழவிமற்றரிமுதற்குணிக்கு
மமரர்நந்தியோடருந்தவத்தலைவர்கள்யாருஞ்
சமனைவென்றடுதிருக்கழன்முறைமுறைதாழ்ந்தார். (ரு)

வெள்ளமீக்கொளும்பிரளயத்தொடுமலர்வேத
னுள்ளிடப்படுதேவர்மற்றியாவருமொடுங்கி
கள்ளிருட்பெயர்காலையிற்றேன்றுவராதநா
ளெள்ளறீர்த்துபதேசமுற்றளித்தனையெந்தாய். (சு)

குரவனீயெமக்கருமறைக்குலமுழுதுணர்த்தித்
தரவிரும்பினேமென்பதுதிருச்செவிசாத்தி
யரவவார்சடையண்ணலக்கயிலையினருகு
பரவுநீண்முடிப்பனிமலர்ப்பருப்பதமடைந்தான். (எ)

சிகரநீண்முடித்தெக்கிணமூர்த்தமொன்றெடுத்துத்
தகரவார்குழலுமைக்கும்வேன்முருகற்குந்தந்திப்
புகர்முகத்தவன்றனக்குமோர்வடுகற்கும்புகர்வா
ணிகரில்பத்திரன்றனக்குமன்றருளினனிமலன். (அ)

பொய்யில்கேள்வியோர்க்குரியவாமத்தனிப்பொருப்பி
லையனவ்வுருமூர்த்தத்தினினிதெழுந்தருளி
வெய்யதிண்டிறற்காளாபிங்கிருடிமெய்ப்பொருளாற்
றுய்யசோமனந்திக்குமுற்றுணாத்தினன்றூய்மை. (கூ)

கோளமால்வரையுச்சியங்குவட்டெழுந்தருளி
வாளராவணைபவனுக்குமலரயன்றனக்கு
நீளிருஞ்சினைக்கற்பகநாடற்குநிமலன்
மூளநின்றெழுங்கருணையினருளினன்முறையால். (க0)

பெருந்தவத்துளோர்க்குரியபிச்சாடனப்பொருப்பி
னிருந்தவச்சனகாதியர்க்கினிதுவந்தருள
வொருங்குநின்றவேதாகமமுதலியவுணர்ந்தா
ரிருந்துகேள்விபெற்றனைவரும்பவித்திரஞ்சிறந்தார். (கக)

திங்களஞ்சடையெம்பிரான்றிருவருளடைந்த
பொங்குநால்வகைப்பொருப்பினோர்தம்மடிபோற்றி
யங்கண்மாதவத்தலைவாமற்றியாவருமடைந்தார்
தங்கடங்குறைகேள்வியினிரப்பினாதக்கோா. (கஉ)

தொல்லைநாள்பலகழிந்தனதுவாபரயுகத்தி
னெல்லைநான்மறையாகமபுராணங்களிறப்ப
வல்லைமாமுதற்றலைவர்பாற்கேட்டநான்மரபோ
ரல்லனீத்தவைநிறுத்துவானெடுநிலத்தடைந்தார. (கங)

இறந்தநான்மறையாகமபுராணங்களிவற்றை
பறந்தரப்படுஞ்சரியையேமுதலியவவற்றைச்
சிறந்தமேலவர்க்கம்முறையருளினர்திரைநீர்
நிறைந்தவேணியான்சைவவாகமந்தலைநிமிர்ந்த. (கச)

வரைகளுள்குளகுரவர்தந்திருப்பெயர்வழங்கிப்
புரைதவிர்த்தபிடேகமும்புரிந்தனர்போனூர்

திரைகொண்மாநிலத்தப்பரம்பரைசிறந்ததுவால்
விரதநால்வகைக்குரவராயொழுகினர்விரதர். (கரு)

அற்றைநாண்முதலின்றுகாறுருயிர்த்தொகைக்கும்
பெற்றமேறியோன்பதம்பெறற்கருளியபெரியோர்
கற்றைவார்திரைக்கடனிலங்கட்புலங்காண்பா
னுற்றுவந்தெழுந்தருளினரிருந்தவருவப்பின். (கசு)

குருபரம்பரையீதுபுன்கொடிச்சடைப்பெருமா
னொருவன்யாவர்க்குமுள்ளிருந்துணர்த்தியகுரவன்
கருணையன்பொடுமுணர்த்துமெக்குரவருங்கயிலைப்
பொருவிடைக்கொடியுயர்த்தியோன்றனிநிலைபுகல்வார். (கஎ)

ஆதலாற்சிவனருச்சனையாகமத்தடைவே
நீதினற்குருமொழிவழிசெயப்படவேண்டு
மோதுமஞ்செழுத்தாதியவுணர்த்துநரேர்றிப்
பேதபேதமிட்டோதினர்பிழைத்திடார்நரகம். (கஅ)

போயகாலத்துநிகழ்ந்ததோர்கதையதுபுகல்கே
மாயிரந்தலைச்சேடனுவாயிரத்தளந்து
பாயிரத்தலைப்படனுவன்முற்றுணர்ந்தனன்பரவித்
தாயசற்குருவழிப்படானக்கலைதொலைத்தான். (ககூ)

கலைச்செருக்கினுற்கண்ணனோடருங்கலைக்கடலை
நிலைத்தளந்தனைவாதியென்னெடுமெனநிகழ்த்தக்
குலைத்துழாயினேற்கருகுறுமாதவக்குலத்தோர்
சிலைக்கைமாயவற்கியம்புவாரிவனுடைச்செய்கை. (உ0)

ஒருவர்மற்றையோர்க்குணர்த்துதலருகுகேட்டுணர்ந்துங்
குருமொழிப்படியெழுதியதுணர்ந்துமிக்கொடியோ
னிருநிலக்கலையாவையுந்தோய்ந்தனனிவனைக்
கருதிற்கண்ணுறிற்கிடைப்பனகறைபடுநிரையம். (உக)

என்றுமாதவரியம்புறுமெல்லையிற்பொதியக்
குன்றிருந்தவனெய்தினன்பாற்கடல்குறுகி
நின்றசேடனதியற்கையைநிகழ்த்தலும்வினவி
மன்றலந்துழாய்மாயவற்கின்னணம்வலிப்பான். (உஉ)

குருவெனக்கெனநினைந்தொருகுரவனைப்போற்று
மிருநிலக்கலையாவையுங்கரந்தனனிவன்றன்
திருவிலாமுகநோக்கரிதிவனொடுஞ்செப்பி
னொருவிடாநெடுநிரையம்வீழ்க்குறுவதுதிண்ணம். (உ௩)

என்னமாயவற்கியம்பினன்சேடனையெதிர்ந்து
நின்னைநோக்குறிற்பாவமுண்டென்பதுநிகழ்த்தித்
தொன்னிலைக்கலைகாந்தனைகுருநெறிதொடராப்
புன்மையாளநிற்குணர்த்துவதுளதெனப்புகல்வான். (௨௪)

வரசரோருகன்முதலினோர்யாவர்க்குமதிக்குங்
குரவன்மாயவனிவனைநீகுருவெனக்கொண்டு
விரவுபல்கலையாவையும்விளங்குதியென்ன
வரவநாயகன்குருமுனிக்கின்னணமறைவான். (௨௫)

ஓதவேண்டுவயாவையுமொருங்குறவுணர்ந்தேன்
பூதலத்துளகுரவரீங்கெனக்கெதுபுகல்வார்
தீதின்முற்செனனக்குறைக்கலையெலாந்தெரிந்தே
ஞாதுணர்ந்திலையென்னைகொலருளினையையா. (௨௬)

எனத்தடுத்தனன்சேடனுங்குறுமுனியெதிர்ந்து
சினத்தசிந்தையன்சேடனீதெரிதருங்கலைக
ளனைத்துநீத்தனையாகிமற்றுயிராநாமப
புனத்துழாயவன்றுயில்பெறக்கிடவெனப்போனான். (௨௭)

வெருவிநின்றனன்சேடனும்விழுத்தவமுனியை
யிருபதந்தொழுதறிவிலாதிசைத்தனனிவற்றைப
பொருவில்சாபநீத்தொழிவதுபுகலுதியென்றான்
பருவரற்குடனுயினனடிக்கடிபணிந்தான். (௨௮)

என்றுமாயிரம்பெயரவற்கினவிழிதுயிற்றித்
துன்றுபாயலிற்கிடந்தவன்சொற்கலையுணர்ந்து
பின்றுநின்கலையாவையும்பெறுகுவையந்நா
ளின்றியாம்புகல்சாபநீத்தொழிகுவையென்றான். (௨௯)

சங்குசக்கரந்தாங்குகைத்தாமரைக்கண்ணன்
பொங்குபேரருளாற்சிவபூசனைபுரிந்து
கங்கைவார்சடைக்கண்ணுதற்பரமனைக்கருதி
யெங்கிருப்பினுமறக்கலையெனமுனியெழுந்தான். (௩0)

அனையதப்பரிசாதலினருயிர்த்தொகைக்கு
வினையொழித்துறக்குரவனைவேண்டுமால்விரிநீர்
புனைநெடுஞ்சடைப்புங்கவன்பூசனைபுனித
முனைவர்காணுமக்கறிந்தவாறின்னணமொழிந்தேம். (௩௧)

வேதநான்கெனப்பகுத்தருள்வியாதமாமுனிவ
னோதுமின்னருளாற்சிலவறிந்தனவுரைத்தே

